A

# DESCRIPTIVE CATALOGUE

OF THE

# TAMIL MANUSCRIPTS

IN THE

## Tanjore Maharaja Sarafoji's Saraswathi Mahal Library,

## Thanjavoor.

By

Pandit (Late) L. OLAGANATHA PILLAY,

Professor of Tamil, Sanskrit College, Tiruvaiyaru.

*

*Prepared under the orders of the*
*Administrative Committee of the Library.*

*

## Vol. I

1964

Price Rs. 5-50

# A DESCRIPTIVE CATALOGUE

OF THE

# TAMIL MANUSCRIPTS

IN THE

**Tanjore Maharaja Sarafoji's Saraswathi Mahal Library, Thanjavoor.**

BY

Pandit. Late L. OLAGANATHA PILLAY.

Professor of Tamil, Sanskrit College, Thiruvaiyaru.

---

*Prepared under the orders of the Administrative Committee of the Library.*

---

VOL. 1.



*Price Rs. 5-50.*

# முகவுரை

தஞ்சை அரசர்களால் பல நூற்றுண்டுகளாக ஏற்படுத்தப்பட்டு நீண்டகாலமாய்ப் பிரசித்தி அடைந்த இப்புத்தகாலயம் "தஞ்சை சரபோஜி மகாராஜா சரசுவதி மகால் நூல் நிலயம்" என்று இப்பால் வழங்கி வருகிறது. இதில், எவரும் இலவசமாகப் படித்துப் பயனடைதல் காரணமாகப் பற்பல பாஷா நூல்கள் சேகரித்து வைக்கப்பட்டுள்ளன. அவற்றுள், தமிழ் மொழி வழங்கும் இந்நாட்டில், தமிழ் நூல்களுக்கு காட்லாக் மிகவும் அவசியமானது என்றறிந்த நூல் நிலயக் கமிட்டியின் உத்திரவின்படி, இந்தத் தமிழ் காட்லாக் என்னும் தயார் செய்யப்பட்டு, ராவ் பகதூர் K. S. சீனிவாசபிள்ளையவர்களால் பார்வையிடப்பெற்றது.

இது, விஷயக்கிரமமாக வரிசைப்படுத்தி எழுதப் பெற்றது. இதைப்பார்த்தவர்க்கு இந்த நூல்நிலயத்தில் இத்தனை தமிழ்ச்சுவடிகள் இருக்கின்றன என்பது விளங்கத் தொடர்ந்த நம்பர் கொடுக்கப்பட்டது. அதை அடுத்துத் தடித்த எழுத்தில் காணப்படும் நம்பர் சுவடியின் நம்பராகும். ஒரு சுவடியில் ஒன்றுக்கு மேற்பட்ட நூல்கள் கோக்கப்பட்டிருப்பின், அவற்றிற்கு ஆங்கில சிறு எழுத்துக்கள் அடையாளமாக எழுதப் பட்டிருக்கின்றன. சுவடியின் நம்பர் இரட்டித்திருந்தால் அவைகளை அடுத்து ஆங்கில பெரிய எழுத்துக்கள் போடப்பட்டிருக்கும். ஓரிடத்திற் கூறிய நூலைப் பற்றியாவது ஆசிரியரைப்பற்றியாவது மீளவும் சொல்ல நேர்ந்தால், 'இதனை இன்ன நம்பரிற் காண்க' என்று சுட்டியுள்ளேன். அவ்வாறு சுட்டப்படும் நம்பர் சுவடியின் நம்பராகும்; தொடர்ந்த நம்பரன்று.

இந்தக் காட்லாக்கின் முதலாவது பாகத்தை விரைவாக வெளியிடவேண்டியிருந்தமையின், இதில் வந்துள்ள வைகட்குப் பொருளடக்கம் மாத்திரம் எழுதி இத்துடன் சேர்க்கப்பட்டது. ஏனையவை இரண்டாம் பாகத்தில் வரும்.

இதிற்காணும் குற்றங்கடிந்து குறைபெய்து வாசித்தல் கற்றறிந்த மாந்தர் கடன்.

1925-ஆம் ஜனவரி-மீ 12-உ

பண்டிதர் L. உலகநாத பிள்ளை,
சமஸ்கிருத காலேஜ், திருவையாறு.

# பொருளடக்கம்

பக்கம்

கதை :

## சைவ சமய நூல்கள் :

**1. சைவாகமங்களும் சைவசாத்திரங்களும் :**

---

# A DESCRIPTIVE CATALOGUE
OF THE
# TAMIL MANUSCRIPTS
IN THE
# THANJAVOOR PALACE LIBRARY.

---

### 1. No. 474 சேந்தன் திவாகரம்
### ஏடுகள் 96 ; Lines 8—11 in a page.

இது தமிழ் நிகண்டுகளுள் ஒன்று. அவைகள் எல்லாவற்றினும் காலத்தால் முற்பட்டது. சூத்திர யாப்பானமைந்த பன்னிரண்டு தொகுதிகளை உடையது. சேந்தன் என்பவனது வேண்டுகோட்கிணங்கித் திவாகரமுனிவராற் செய்யப்பட்டமையின், செய்தவர் செய்வித்தவன் ஆகிய இருவர் பெயரும் ஒருங்கே அமைய, இதற்குச் சேந்தன் திவாகரம் எனப்பெயர் வழங்கலாயிற்று எனத்தோன்றுகிறது. சேந்தன் என்பவன், சோழ நாட்டில் அம்பர் நகரை ஆண்டிருந்த ஒரு சிற்றரசன். வடமொழி தென்மொழிகளில் வல்ல புலவன் ; அன்றியும் மிக்க கொடையாளி. அவ்வையாற் பாடப்பெற்றவன். சம்பாதி என்னும் புகார் தெய்வத்திற்கு ஒரு அந்தாதியும், கோதண்டம், காண்டீபம், வேல் என்பவற்றைப் புகழ்ந்தும் பாடினவன். இவற்றினை இத்திவாகரத்தின் ஒவ்வொரு தொகுதியின் ஈற்றில் காணப்படும் சூத்திரங்களாலறியலாம். சேந்தனென்பவனைக் கல்லாடர் என்னும் புலவர் பாடிய செய்யுள் ஒன்று புறநானூற்றில் காணப்படுதலின் அச்சேந்தனே இவனெனக்கொண்டு இவனுடைய காலம் சங்ககாலமென்பர் ஒருசாரார். ஆனல், இத்திவாகரம் மக்கட் பெயர்த் தொகுதியில் 'வேள்புலவரசர் சளுக்கு வேந்தர்' என்னும் சூத்திரம்

காணப்படுகின்றது. சாளுக்கியர் ஆறும் நூற்றுண்டின் இடைப்பட்ட காலத்தில் தோன்றியவர். இவர்களைப் பற்றிக் கூறும் இந்நூல் அதற்குப் பிற்பட்ட காலத்தில் செய்யப்பட்டதாகுமே யல்லாது சங்ககாலத்ததென லமையாது. இந்தப் பிரதியில் 11ம் தொகுதியும் 12ம் தொகுதியில் 16 சூத்திரங்களுமில்லை, இது அச்சிடப் பட்டுள்ளது.

**Beginning :**

சிவன் பெயர் : -

சங்கர னிறையோன் காம தகனன்
கங்கா தரனே கறை மிடற் றண்ணல்
கூற்றை யுதைத்தோன் குன்ற வில்லி
ஏற்று வாகனன் திரியம்பகன் சோதி
நக்கன் சடையோ னுரி பாகன்

* * *

நந்தி நம்பன் நாதன் றற்பரன்
கண்ணுதல் மூர்த்தி கயிலை யாளியென்
றெண்ணிய நாம மின்னமும் பலவே.

**End :**

மாபற்பம் பத்துச் சங்க மாகும்
சங்கம் பத்தே சமுத்திர மாகும்
சமுத்திரம் பத்தே யத்திய மாகும்
அத்தியம் பத்தே மத்திய மாகும்
மத்தியம் பத்தே பராத்த மாகும்
பராத்தம் பத்தே பிரமகற்ப மாகும்.
செம்பொற் கொடையா னம்பர்ச் சேந்தன்
நன்ன ராள னலமிகு நாட்டத்தன்
பன்னிய சிறப்பிற் பன்னிரண் டாவது
பல்பொருட் கூட்டத் தொருபெயர்த் தொகுதி முற்றும்.
திவாகரம் பன்னிரண்டு தொகுதியு முடிந்தது.

---

தொகுதி பன்னிரண்டிற்கும் விவரம் பின் வருமாறு:—

முதலாவது தெய்வப்பெயர்த் தொகுதி.
இரண்டாவது மக்கட்பெயர்த் தொகுதி.
மூன்ருவது விலங்கின் பெயர்த் தொகுதி.
நான்காவது மரப்பெயர்த் தொகுதி.
அஞ்சாவ திடப்பெயர்த் தொகுதி.
ஆருவது பலபொருட்பெயர்த் தொகுதி.
ஏழாவது செயற்கை வடிவப்பேர்த் தொகுதி.
எட்டாவது பண்புபற்றிய பெயர்த் தொகுதி.
ஒன்பதாவது செயல்பற்றிய பெயர்த் தொகுதி.
பத்தாவது ஒலிபற்றிய பெயர்த் தொகுதி.
பதினேராவது ஒருசொற் பலபொருட் பெயர்த் தொகுதி.
பன்னிரண்டாவது பலபொருட் கூட்டத் தொரு பெயர்த் தொகுதி.

---

2. No. 475 சேந்தன் திவாகரம்.

ஏடுகள் 188 ; பூர்த்தி : Lines 4—7 in a page.

இது முன் பிரதி போன்றது. முழுவது மிருக்கிறது. சிதிலமாயிருப்பினும் முன்பிரதியைவிட மிகப்பழைய பிரதியாகக் காணப்படுகின்றது.

---

3. No. 476 சேந்தன் திவாகரம்.

ஏடுகள் 147 ; அபூர்த்தி. Lines 5—6 in a page.

இதுவும் முன்பிரதியைப் போன்றது. இடையிடையே சிதைந்திருப்பதோடு கடைசித் தொகுதியில் சில சூத்திரங்களுமில்லை. நூலின் ஆரம்பத்தில் பின்வரும் காப்புச் செய்யுள் எழுதப்பட்டுள்ளது.

தந்திமுகத் தெந்தை சதங்கைப் பதம்போற்றிச்
சிந்தை விளக்காந் திவாகரத்தை—வந்த
தொகுதியொரு பன்னிரண்டுஞ் சோராமல் நேரே
பகுதி யுறமனமே பற்று.

———

4. No. 477 சேந்தன் திவாகரம்

ஏடுகள் 150 ; பூர்த்தி Lines 5—8 in a page.

இது 475 நம்பரைப் போன்றது. பழய பிரதியாகக் காணப்படுகின்றது. அதிக சிதிலமாயிருக்கின்றது, இதில் முதலேட்டில்,

எண்ணிய வெண்ணிய வெய்துப கண்ணுதற்
கவளமால் யானை கழல்பணி வோரே.
தவளத் தாமரைத் தாதார் கோயி
லவனைப் போற்றுது மருந்தமிழ் குறித்தே.
சந்தனப் பொதியத் தடவரைச் செந்தமிழ்ப்
பரமா சரியன் பதங்கள்
சிரமேற் கொள்ளுதுந் திகழ்தரற் பொருட்டே.

ஆறு முகவனை
நாறு மலரொடு
கூறு மடியவர்
பேறு பெறுவரே.

எனும் செய்யுட்கள் எழுதப்பட்டிருக்கின்றன.

5. No. 478 சேந்தன் திவாகரம்.

ஏடுகள் 132 ; பூர்த்தி. Lines 4—7 in a Page.

இதுவும் முன்பிரதிபோன்றது. இதில் தெய்வப் பெயர்த் தொகுதியின் 2 வது சூத்திரம் முதல் பன்னிரண்டு தொகுதிகளும் இருக்கின்றன. சிதிலமாயிருக்கிறது.

**Colophon :**

பிரசோற்பதிஸ்ரீ வையாசிமீ 2வ குருவாரமும் திரியோதேசியும் கூடின தினத்திலே அதிராம் பட்டணம் சின்னப்ப செட்டியார் மகன் வழியாச்சிச்கு ஆபதுத்தாரண வாத்தியார் குமாரன் நல்லதம்பி படிப்பித்தது முற்றும். தவறிலு நல்லவன் துணை.

---

6. No. 479 சேந்தன் திவாகரம்.

ஏடுகள் 127; அபூர்த்தி Lines 4—7 in a Page.

இதுவும் முன் பிரதிபோன்றது. இதில் பன்னிரண்டு தொகுதிகளும் இருக்கின்றன. ஆனால் தெய்வப்பெயர்த்தொதியில் குமரன் பெயர்க்கு முற்பட்ட சூத்திரங்களில்லை. 1 முதல் 3, 17 முதல் 33, 35, 44 முதல் 54 நம்பர் ஏடுகள் இல்லை. அதிக சிதிலமாயிருக்கிறது.

**Colophon :**

துன்முகிஸ்ரீ தைமீ 28உ தாண்டவ நமச்சிவாயன் திவாகரம் எழுதி நிறைந்தது முற்றும்.

---

7, No. 430 (*a*) சேந்தன் திவாகரம்.
ஏடுகள் 103 ; அபூர்த்தி. Lines 4—7 in a Page.

இதில் 477 நம்பரின் ஆரம்பத்தில் எழுதப்பட்டிருக்கும் செய்யுட்கள் எழுதப்பட்டிருக்கின்றன.

இந்தப் பிரதியில் முதல் நான்கு தொகுதிகளே யிருக்கின்றன. மரப்பெயர்த் தொகுதியின் கடைசியில் இரண்டு சூத்திரங்களில்லை.

---

8. (*b*) தினகர வெண்பா.
Lines 5—6 in a Page.

இது 375-ம் நம்பரைப்போன்றது. இதனைப் பற்றிய விவரங்களை அதிற் காண்க. இதில் காப்புச் செய்யுள் தவிர 100 செய்யுட்கள் இருக்கின்றன. அச்சிடப்படவில்லை.

---

9. (*c*) உரிச்சொல் நிகண்டு.
Lines 5—6 in a Page.

இதுவும் நிகண்டுகளுள் ஒன்று. வெண்பாவாலமைந்தது.

இதில் வணக்கத்தைக் குறிக்குஞ் சொற்களில் 'சலாம்' என்னும் சொல்லும் காணப்படுதலின், மகம்மதியர் தென்னாட்டு ஆட்சியை கைக்கொண்ட காலத்திற்குப்பின் இந்நூல் செய்திருத்தல் வேண்டுமெனத் தோன்றுகிறது. இதனை இயற்றியவர் இம்முடிப்பட்டம் பெற்ற காங்கேயர் என்பவர். இவரைத் தொண்டை மண்டலத்தில் செங்குந்தர் மரபிற் பிறந்தவர் என்பர். இந்தப் பிரதியில் தெய்வப் பெயர்த்தொகுதி மாத்திரம் இருக்கிறது. இது அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning:**

திருமாலுஞ் செங்கமல மேயானுங் காணுப்
பெருமான் பிறைசூடும் பெம்மா—னருண்மூர்த்தி
நன்னெஞ்சி னைமறையோன் றில்லை நடம்
என்னெஞ்சின் மேய விறை [புரிவான்

**End:**

எல்லுத் திவசந் தினந்திவா வாம்பக
லெல்லி விபாவரி யாமினி—யல்லே
யிரசனின் கங்குல் நிசா நிசி நத்த
மிரவின் பே ராகு மிவை.
முதலாவது தெய்வப் பெயர்த் தொகுதி முற்றும்.

---

10. (*d*) அருணகிரி அந்தாதி.
Lines 5—6 in a Page.

இது 136 நம்பரைப் போன்றது. இதில் 68 செய்யுட்கள் இருக்கின்றன.

---

11. No. 481 சேந்தன் திவாகரம்.
ஏடுகள் 104: பூர்த்தி. Lines 5—7 in a Page.

இது 477-ம் நம்பர் போன்றது. அதைவிட பழம் பிரதியாகக்காணப்படுகிறது. ஆனால்சிதைந்துள்ளது.

---

12. No. 482 சேந்தன் திவாகரம்.
ஏடுகள் 98; அபூர்த்தி Lines 4—6 in a Page.

இது 479-ம் நம்பர் போன்றது. முழுவதுமிருக்கின்றது. ஆனால் தெய்வப் பெயர்த் தொகுதியில் ஈஸ்வரி பெயர்க்கு முன்னுள்ள சூத்திரங்களும் பன்னிரண்டாவது தொகுதி கடைசியில் சில சூத்திரங்களும் இல்லை. சிதிலமாயிருக்கிறது.

**13.** No 453 (*a*) சேந்தன் திவாகரம்.

ஏடுகள் 53; அபூர்த்தி. Lines 4—5 in a Page.

இதில் முதல் மூன்று தொகுதிகள் இருக்கின்றன. பிழையதிகமாய்க் காணப்படுகின்றன.

---

**14.** (*b*) அபிராமியந்தாதி.

Lines 4 in a Page.

இது 133-ம் நம்பரைப் போன்றது. இதிலுள்ள செய்யுட்கள் தொடர்ந்தவைகளாக இல்லை. இதில் 5 முதல் 8; 23 முதல் 37; 43 முதல் 49; 56, 57, 63, 65ம் செய்யுட்கள் மட்டும் இருக்கின்றன.

---

**15.** No. 484 (*a*) சேந்தன் திவாகரம்.

ஏடுகள் 37: அபூர்த்தி. Lines 4—10 in a page.

இதில் முன் ஏட்டில் 447-ம் நம்பரின் ஆரம்பத்தில் எழுதியுள்ள பாடல்கள் எழுதப்பட்டுள்ளன. இந்தப்பிரதியில் முதல் இரண்டு தொகுதிகளே இருக்கின்றன.

குறிப்பு:

தெய்வப் பெயர்த் தொகுதிக்கும் மக்கட் பெயர்த் தொகுதிக்கும் இடையில் 'சூதடி அல்லடி' என்னும் ஒரு சிங்கார பதமும் சில துறைகளும் எழுதிய ஏடொன்று சேர்க்கப்பட்டிருக்கிறது.

---

16. (b) தோத்திரத் திரட்டு.
Lines 4—8 in a page.

இதில், 'தோடுடைய செவியன்' 'பித்தா பிறை சூடி' என்னும் தேவாரங்களும், 'தொல்லை யிரும்பிறவி' 'நமச் சிவாய வாழ்க' என்கிற திருவாசகச் செய்யுட்களும், உமா தேவியார், முருகன் தோத்திரங்களும் இருக் கின்றன.

---

17. No. 485 சேந்தன் திவாகரம்.
ஏடுகள் 60; அபூர்த்தி. Lines 4—5 in a page.

இதுவும் முன் பிரதிபோன்றது. இதில் முதல் நான்கு தொகுதிகள் இருக்கின்றன. மரப்பெயர்த் தொகுதியில் 'உயிர்தரு மருந்தே யமிர்த சஞ்சீவினி' என்பதற்கு மேற்பட்ட சூத்திரங்களில்லை. சிதிலமாயிருக்கிறது.

---

18. No. 487 சேந்தன் திவாகரம்.
ஏடுகள் 28; அபூர்த்தி. Lines 4—5 in a page.

இதுவும் முன் பிரதிபோன்றது. இதில் முதலிரண்டு தொகுதிகளே இருக்கின்றன. மக்கட் பெயர்த் தொகுதி யில் பாதிக்கு மேற்பட்டில்லை. சிதிலமாயிருக்கிறது.

---

19. No. 488 சேந்தன் திவாகரம்.
ஏடுகள் 15; அபூர்த்தி. Lines 8—10 in a page

இதுவும் முன்பிரதிபோன்றது. தெய்வப் பெயர்த் தொகுதி மட்டும் இருக்கிறது. முதல் ஏட்டில்

'வாக்குண்டாம் நல்ல மனமுண்டா மாமலராள்
நோக்குண்டா மேனி நுடங்காது—பூக்கொண்டு
துப்பார் திருமேனி தும்பிக்கை யான்பாதந்
தப்பாமற் சார்வார் தமக்கு'

என்னும் மூதுரையின் காப்புச் செய்யுள் எழுதப்பட் டுள்ளது.

## 20. No. 519 பிங்கல நிகண்டு.

ஏடுகள் 91 ; Lines 7 in a page.

இது சூத்திரயாப்பான் அமைக்கப்பட்ட நிகண்டு களுள் ஒன்று. பிங்கல முனிவரால் இயற்றப்பட்டது. இவரைத் திவாகர முனிவரது புத்திரர் என்பர். இந் நூற்குப் பிங்கலந்தை எனவும் பெயர் வழங்கும். 'பிங் கலந்தை தன்னில் ஒருங்குள பொருளு மோர்ந்திட் டுரைத்தனன்' எனச் சூடாமணி நிகண்டும் 'பிங்கல முதலா நல்லோ ருரிச் சொலி னயந்தனர் கொளலே' என நன்னூலும் இந்நூலைக் கூறுதலால், இப் பிங்கலம் சூடாமணி நிகண்டிற்கும் நன்னூலுக்கும் காலத்தால் முற்பட்டதாகும். நன்னூலைவிடக் காலத்தால் முற்பட் டது சூடாமணி நிகண்டு (632ம் நம்பரிற் காண்க). சூடாமணி நிகண்டு பத்தாம் நூற்றுண்டிற் செய்யப்பட் டது (486ம் நம்பரைப்பார்க்க). ஆதலால், அத்னுற் கூறப்படும் இந்நூல் சூடாமணிக்கும் திவாகரத்திற்கும் இடைப்பட்ட காலத்திற் செய்யப்பட்டதென்று கொள் ளத்தக்கது. இது வான்வகை முதல் ஒரு சொற் பல் பொருள் வகை ஈருகப் பத்துவகைகளை உடையது. உரையுடன் அச்சிடப்பட்டுள்ளது.

**Beginning:**

ஆய கலைக ளறுபத்து நான்கினையு
மேய வுணர்விக்கு மென்னம்மை—தூய
வுருப்பளிங்கு போல்வாளென் னுள்ளத்தி னுள்ளே
யிருப்பளிங்கு வாரா திடர்.

இருங்கட லுடுத்தவிம் மாநிலம் வணங்க
வரும்பொரு ளுரைத்த வகன் றமிழ் வரைப்பி
னியற்சொற் றிரிசொற் றிசைச்சொல்
வடசொலென் று

* * * *

செங்கதிர் வரத்தரற் றிவாகரன் பயந்த
பிங்கல முனிவன் றன்பெயர் நிறீஇ
யுரிச்சொற் பகுதி யுரைக்குங் காலை
விருப்புட னிலைஇ வீறுசால் சிறப்பின்
வானின் வகையும் வானவர் வகையும்

* * * *

ஒருசொற் பலபொரு ளோங்கிய வகையுமென்
றிருளற வீரைந் தாக்கி
மருளற வகுத்தனன் மதியினில் விரைந்தே.

**End :**

நாளி கேரமுங் கேதகையுந் தாழை.
மூங்கிலுந் தாழையு முடங்க லென்ப.
ஓர்மரப் பெயருந் துகிலும் பாதிரி.
பழமுங் கிழங்கும் பலமென லாகும்.
மலருந் தளிரு மஞ்சரி யென்ப.

ஒரு சொற் பல பொருள் முடிந்தது முற்றும்.

ஓரா தெழுதினே னாயினு மொண்பொருளை
யாராய்ந்து கொள்க வறிவுடையார்—சீராய்ந்து
குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.

முற்றும்

பிங்கலர் நிகண்டு எழுதி முடிந்தது. முற்றுப் பெற்றது.

---

21. No. 520 பிங்கல நிகண்டு.
ஏடுகள் 92 ; Lines 6—8 in a page.

இது முற்பிரதி போன்றது. முழுவது மிருக்கிறது. ஆனால் ஏடுகள் முறிந்து சிதிலமாயிருக்கின்றன.

அச்சுப்பிரதிக்கும் இப் பிரதிகளுக்கும் பாடபேதம் காணப்படுகிறது.

பிங்கலர் நிகண்டு எழுதி முடிந்தது முற்றுப்பெற்றது. சுபமஸ்து. ஸ்ரீமந் நாராயணன் துணை. வாசுதேவன் துணை.

பாட்டு 600

---

22 No. 521 பிங்கல நிகண்டு.
ஏடுகள் 53 ; Lines 8—10 in a page.

இதுவும் முன்பிரதியைப் போன்றது. முழுவது மிருக்கிறது. ஆனால் பாயிரத்தில் 8 அடிகளில்லை.

இடையிடையே யுள்ள சூத்திரங்களுட் சில அரை குறையாக எழுதப்பட்டுள்ளன. வான்வகை முதலாக ஒருசொற் பல பொருளீருகத் திவாகரர் பயந்த பிங்கல முனிவராற் சொல்லப்பட்ட பிங்கலந்தை முடிந்தது முற்றும்.

---

23. No. 486 சூடாமணி நிகண்டு.
ஏடுகள் 52; Lines 4—7 in a page.

இதுவும் நிகண்டுகளுள் ஒன்று. இது, திவாகரம், பிங்கலம் என்னும் நிகண்டுகளை ஆராய்ந்து, திவாகரத்தைப்போலப் பன்னிரண்டு தொகுதிகளை அமைத்து வீரைமண்டலப் புருடன் என்பவரால் இயற்றப்பட்டது. இவரது ஆசிரியர் குணபத்திரன் என்பவர். இவற்றை,

"விரவிய தேவர் மக்கள் விலங்கொடு மரமிடம்பல்
பொருள் செயும் வடிவும் பண்பும் போற்றியசெய
லொலிப்பேர்
ஒருசொற் பல் பொருளினேடு முரைத்தபல் டெயர்க்
கூட்டந்தான்
வருமுறை திவாகரம்போல் வைத்துப் பிங்கலந்தை
தன்னில்''
"ஒருங்குள பொருளு மோர்ந்திட்டுரைத்தனன் விருத்தந்
தன்னில்

* * * *

பரந்தசீர் குணபத்திரன்ருள் பணிந்தமண்டலவன்ருனே''
என்பவற்ருன் அறிக.

இந் நூலாசிரிய ராகிய மண்டல புருடன், தொண்டை நாட்டில் குன்றத்தூரில், சமண மரபிற் பிறந்தவர்.

இவர், "படைமயக் குற்ற போதும் படைமட மொன்றி
லாதான்
மடைசெறி கடகத் தோளான் மதிகுடை
மன்னர் மன்னன்
கெடிமன்னர் வணங்குந் தாளான் கிருட்டின
ராயன் கைபோற்
கொடைமட மென்று சொல்ப வரையாது
கொடுத்த லாமே''

என, இந்நூல் செயல்பற்றிய பெயர்த் தொகுதி பத்தாவது செய்யுளில், கிருட்டினராயரது கொடைத் திறனைப் புகழ்ந்து கூறியுள்ளார். இக் கிருட்டினராயர், இராட்டிர கூடத்தரசராகிய இரண்டாவது கிருஷ்ணதேவ ராயராவர். இவர், கி. பி. 874 முதல் 914 வரை ஆட்சி செய்தவர். ஆதலால் சூடாமணி நிகண்டின் காலம் பத்தாவது நூற்ருண்டென்று கொள்ளத் தக்கது.

இந்தப் பிரதியில் ஏழாவது முதல் ஒன்பதாவது முடிய மூன்று தொகுதிகளே இருக்கின்றன. இந் நிகண்டு பலராலும் உரையுடன் அச்சிடப்பட்டுள்ளது.

**Beginning :**

முழுமதிக் குடை நிழற்கீழ் மூர்த்திதாள் போற்றி
செய்தே
யெழுவகையுலகந் தன்னி லேற்றமண் மரங்கள்
தன்னில்
பழுதறு தொழிலினலும் பலபல விதங்க ளாக
வழுவறுத் திடுஞ்செயற்கை வடிவுப்பேர்த்
தொகுதி சொல்வாம்.

**End :**

விம்மியே யுமிழ்தல் கான்றல் மேவுமுற்காரஞ் சத்தி
தும்மலே சுவாத மூச்சாங் கொட்டாவிவியர்வியத்த
லம்மவிச் செயல் பத்தும்பேர்க் கறுபத்தேழ்
விருத்தஞ் செய்தான்
மைமுகிலனையான் வீரை மன்னன் மண்டலவன்
ருனே 67
ஒன்பதாவது ஒலிபற்றிய பெயர்த்தொகுதி முற்றும்.

குறிப்பு :

இதில் பத்தாவது தொகுதியில் நான்கு செய்யுட்களும் திருவாரூர் கமலாம்பிகை தோத்திரத்தில் ஆறு செய்யுட்களும் கடைசியில் எழுதப்பட்டுள்ளன.

---

## 24 No. 489 சூடாமணி நிகண்டு

ஏடுகள் 134 ; பூர்த்தி. Lines 4—10 in a page

இது முன்பிரதி போன்றது. இதில் இந்நூல் முழுவதும் இருக்கின்றது. ஆனல் இடையிடையே பற்பல இடங்களில் மிகவும் சிதைந்துள்ளது. மிகப் பழமையான பிரதியாகக் காணப்படுகின்றது.

**Beginning :**

பொன்னுநன் மணியு முத்தும் புனைந்தமுக்
குடை நிழற்ற
மின்னுபூம் பிண்டிநீழல் வீற்றிருந் தவனை வாழ்த்தி
மன்னிய நிகண்டு சூளா மணியென வொன்று
சொல்வ
னின்னிலந் தன்னில்மிக்கோர் யாவரு மிருந்து
கேண்மின்.

* * * *

விரவிய தேவர் மக்கள் விலங்கொடு மரமி டப்பல்
பொருள் செயும் வடிவும் பண்பும் போற்றிய
செயலொலிப்பேர்
ஒருசொற்பல் பொருளி னோடு முரைத்தபல்
பெயர்க் கூட்டந்தான்
வருமுறை திவாகரம்போல் வைத்துப் பிங்கலந்தை
தன்னில்,
ஒருங்குள பொருளு மோர்ந்திட்டுரைத்தனன்
விருத்தந்தன்னி
லிருந்தவைநல்லோர் குற்றமியம்பிடா ரென்ப
தெண்ணித்
திருந்திய கமலமூர்த்தி திருப்புகழ் புராணஞ்
செய்தோன்
பரந்த சீர் குணபத்திரன் தாள் பணிந்த மண்டலவன்
தானே

**End :**

உலகிலாயிரத்து நூறு முப்பதின் னுமாக
விலகிடாப் பொருளை எல்லாம் வீரைமண்டலவன்
செய்தான்
அலகிலாச் சமயபேதம் ஆய்ந்துள்ள தவங்க
ளெல்லாந்
தலையில்வைதவமுந் தோற்றித் தாண்டவ
னெழுதினனே.

**Colophon :**

பவஹூ சித்திரைமீ 10௳ வேளா பிள்ளை தாண்டவ ராய பிள்ளை புத்திரன் வைத்தியநாதன் நிகண்டு முற்றும். அபிராமி ரட்சிக்க.

---

**25.** No. 490 சூடாமணி நிகண்டு.

ஏடுகள் 57 ; அபூர்த்தி. Lines 4—8 in a page.

. இதில், 11-ம் தொகுதி 5 ஆம் செய்யுள் முதல் 225-ம் செய்யுள் வரையில் இருக்கிறது. சிதிலமாயிருக் கிறது.

---

**26.** No. 491 சூடாமணி நிகண்டு.

ஏடுகள் 177 ; அபூர்த்தி, Lines 5—6 in a page.

இதில், முதல் பதினொரு தொகுதியும் 12ம் தொகுதி யில் 142 செய்யுட்களும் இருக்கின்றன. ஏடு சிதில மாயிருக்கிறது.

---

**27.** No. 492 சூடாமணி நிகண்டு.

ஏடுகள் 170 ; அபூர்த்தி. Lines 4—7 in a page,

இது முன் பிரதிபோன்றது. இதில் மூன்று நாலு ஆறு ஏழு எட்டு பதினொன்று பன்னிரண்டு ஆகிய இத் தொகுதிகளே இருக்கின்றன. ஆனல், பன்னிரண்டாந் தொகுதியில் சில செய்யுட்கள் இல்லை. பதினோராவது தொகுதியில் 163-ம் செய்யுள்வரை எழுதிய மற்றொரு பிரதி கடைசியில் சேர்க்கப்பட்டுள்ளது. மிகச் சிதல மாயிருக்கிறது.

---

28. No. 493 சூடாமணி நிகண்டு.

ஏடுகள் 121; அபூர்த்தி. Lines 6—7 in a page.

இது முன்பிரதி போன்றது. முன்னேட்டில்,

எண்ணிய வெண்ணிய வெய்துப கண்ணுதல்
பவள மால்வரை பயந்த
கவள யானையின் கழல்பணி வோரே.
தவளத் தாமரை தாதார் கோயி
லவளைப் போற்றுது மருந்தமிழ் குறித்தே.
அருந்தமிழ் கசடற வருளிய வரவோன்
திருந்தடி பரவுதுஞ் சித்திபெறற் பொருட்டே.

என்னும் செய்யுட்கள் எழுதப்பட்டுள்ளன.

இதில், தெய்வப் பெயர்த் தொகுதியில் 46 செய்யுட்களும் மூன்றும் தொகுதி முதல் பன்னிரண்டாம் தொகுதி முடியவும் இருக்கின்றன.

குறிப்பு :

நிகண்டுசூ ளாமணியி னின்ற முறையே
யகன்ற விருத்தங்க ளாய்ந்து—புகன்றவெலா
மீரைஞ்ஞூற் றீரைம்பா னீரெட்டு மூவேழுஞ்
சோர்வின்றி யாய்ந்த தொகை.

என்கிற செய்யுளும்.

இறந்திட வரினு மல்லா விடுக்கணென் றுறினுந் தம்பாற்
பிறந்திடு மானந் தன்னை விடுவரோ பெரிய ரானோர்
சிறந்திடு மிரண்டு நாளைச் செல்வத்தை நோக்கியானுந்
துறந்திடேன் பிடித்த கொள்கை சூரனென் றொருபேர்
பெற்றேன்.

என்ற கந்தபுராணச் செய்யுளும் கடைசியில் எழுதப் பட்டிருக்கின்றன.

---

29. No. 494 சூடாமணி நிகண்டு.
ஏடுகள் 114; அபூர்த்தி. Lines 6—8 in a page.

இதில் முதலிலிருந்து பதினொரு தொகுதிகள் இருக்கின்றன. சிதிலமாயிருப்பினும் சுத்தமாய் இருக்கிறது.

குறிப்பு:— பதினோராந் தொகுதியிற் சில செய்யுட்களில்லை.

"தவளத் தாமரைத் தாதார் கோயி
லவளைப் போற்றுது மருந்தமிழ் குறித்தே"
'அத்திமுகத்
துத்தமனை
நித்தம் நினை
சித்தமே'

என்னும் செய்யுட்களும் விபூதி ருத்திராக்ஷ மகிமையைக் கூறும் செய்யுட்களும் எழுதிய ஏடுகள் முன்னே கோக்கப்பட்டுள்ளன.

---

30. No. 495 சூடாமணி நிகண்டு.
ஏடுகள் 125; அபூர்த்தி. Lines 6—8 in a page.

இதில் முதலிலிருந்து பத்துத் தொகுதிகள் இருக்கின்றன.

---

31. No. 496 (*a*) சூடாமணி நிகண்டு.
ஏடுகள் 98; அபூர்த்தி. Lines 7—9 in a page.

இதில் பதினொரு தொகுதிகள் இருக்கின்றன. இதற்கு முந்திய நம்பர்களில் தெய்வப்பெயர்த் தொகுதியில் அருகன் பெயர் முதலாகக் காணப்படுகின்றது. இதில் "சங்கரன் இறையோன் சம்பு" எனச் சிவன் பெயர் முதலாக எழுதப்பட்டுள்ளது. மிகச் சிதிலமாயிருக்கின்றது.

32. (*b*) கம்ப ராமாயணம்.
Lines 8—13 in a page.

இதில் கிஷ்கிந்தா காண்டம் வாலிவதைப் படலத்தில்,
'வெங்கணாளியேறு மீளிமாவும் வெங்கணாகமும்'
என்னும் செய்யுள் முதற்கொண்டு
'புதல்வன் பேரன் மகுடம் பொ......ல்
முதல்வன் பேருவ கைக்கு முந்துவா
னுதவும் பூமகள் சேர வொண்மலர்க்
கதவஞ் செய்ய கரத்து நீக்கினான் '
என்னும் 176-ம் செய்யுள் முடிய இருக்கின்றது.

---

33. No. 497 (*a*) சூடாமணி நிகண்டு.
ஏடுக்கள் 105; அபூர்த்தி. Lines 4—6 in a page.

இதில், முதல் ஐந்து தொகுதிகள் இருக்கின்றன. ஆனால், மூன்றாவது தொகுதியில் கடைசி பத்து செய்யுட்கள் இல்லை.

---

34. (*b*) தனிப்பாடல்கள்.
Lines 4 in a page.

இதில் பல புலவர்கள் பாடிய செய்யுட்கள் இருக்கின்றன.

**Beginning :**

வெண்பா

ஆடல் புரியும் அரனென்று மூவர் தமிழ்ப்
பாடல் புரியும் பரனென்றும்—கூடலிலே
நன்னரிவா சிக்கு நடைபயிற்றி னானென்றும்
கின்னரிவா சிக்கும் கிளி.

பாக்குப் பலாவீனும் பச்சோலை முத்தீனும்
காக்கைக் கருவாழைக் கன்றீனும்—ஆக்கை
அருகேறி முட்டையிடும் அம்பலவர் தென்புலியூர்
குருகேறி முட்டையிடும் கொம்பு.
வண்டு மதுவீனும் வான்கமுகு கொக்கீனும்
கொண்டைக் குலாவிக் குரங்கீனும்-எண்டிசையில்
ஆனைமேல் செக்காடும் அம்பலவர் சன்னதியில்
பானைமேல் காய்க்கும் பலா.

கலித்துறை

தடங்கொண்டு விற்கொண்டு சந்திரோதயங்கொண்டு யிருகைய் தாளங்கொண்டு
குடங்கொண்டு தண்ணீர்க்குப் போறபெண்ணே உன் கொங்கைரெண்டும்
படங்கொண்டிறுக்கி சங்கிலி பூட்டி வைத்திருந்தால்
இடங்கொண்டு குத்தி மறுபுற மாக்கும் யுன்னிரு கொங்கையே ?

**End:**

விழுதுவிட் டேகிய குற்ருல நாதர் வியன்சிலம்பில்
பழுதுபட் டாவி பதைக்கு தய்யோ பஞ்ச......த்
தொழுதுவிட் டேன்வரச் சொல்லிவிட்டேன் வரச் சொல்லிச் சொல்லி
எழுதிவிட்டேன் தெய்வமே யினியோலைக் கிட மில்லையே.

---

35. No. 498 சூடாமணி நிகண்டு.

ஏடுகள் 50; அபூர்த்தி. Lines 8—9 in a page.

இதில் முதலாவது தொகுதி நீங்கலாக ஏனைய பதினொரு தொகுதியும் இருக்கின்றன. சிதிலமாயிருக்கிறது.

---

36. No. 499 சூடாமணி நிகண்டு
ஏடுகள் 113; அபூர்த்தி. Lines 4—6 in a page.

இதில் முதல் ஏழு தொகுதிகள் இருக்கின்றன. ஏழாவது தொகுதியில் 35 செய்யுட்குமேல் இல்லை. முதலேடு இல்லை. சிதிலமாயிருக்கிறது.

---

37. No. 500 சூடாமணி நிகண்டு.
ஏடுகள் 110; அபூர்த்தி. Lines 4—5 in a page.

இதில் முதல் ஆறு தொகுதிகள் இருக்கின்றன. சிதிலமாயிருக்கிறது.

---

38. No. 501 சூடாமணி நிகண்டு.
ஏடுகள் 72; அபூர்த்தி. Lines 5—6 in a page.

இதில் முதல் தொகுதி முதற்கொண்டு ஆறு தொகுதிகளும் ஏழாவது தொகுதியில் 25 செய்யுட்களும் இருக்கின்றன. சிதிலமாயிருக்கிறது.

---

39. No. 502 சூடாமணி நிகண்டு.
ஏடுகள் 50; அபூர்த்தி. Lines 5 in a page.

இதில் மூன்று தொகுதிகளே இருக்கின்றன. மூன்ருவது தொகுதியில் 58 செய்யுட்குமேல் இல்லை. இந்தப் பிரதியில் 14, 36, 40-ம் நம்பர் ஏடுகள் இல்லை.

---

40. No. 503 சூடாமணி நிகண்டு.
ஏடுகள் 60; அபூர்த்தி. Lines 5—7 in a page.

இதில் 1, 2, 12 இந்த மூன்று தொகுதிகள் இருக்கின்றன. முன் ஏட்டில் 'எண்ணிய வெண்ணி

யாங்கு, 'தவளத் தாமரை' 'சந்தனப் பொதிய' என்னும் செய்யுட்கள் எழுதப்பட்டுள்ளன.

---

41. No. 504 சூடாமணி நிகண்டு.

ஏடுகள் 65; அபூர்த்தி. Lines 4—6 in a page.

இதில் ஆருவது தொகுதியில் 31 செய்யுட்களும் பதினேராவது தொகுதியில் 137 செய்யுட்களும் இருக்கின்றன.

---

42. No. 505 சூடாமணி நிகண்டு.

ஏடுகள் 14; அபூர்த்தி. Lines 5—6 in a page.

இதில் பதினேராவது தொகுதியில் ககரவெதுகை முதல் வகரவெதுகை முடிய விருக்கிறது.

---

43. No. 506 சூடாமணி நிகண்டு.

ஏடுகள் 86; அபூர்த்தி. Lines 5—6 in a page.

இதில் பதினென்று பன்னிரண்டு ஆகிய இரண்டு தொகுதிகள் இருக்கின்றன.

---

44. No. 507 சூடாமணி நிகண்டு.

ஏடுகள் 47; அபூர்த்தி. Lines 5—6 in a page.

இதில் முதல் இரண்டு தொகுதிகள் இருக்கின்றன. முதல் தொகுதியில் மற்ருெரு பிரதி எழுதிக் கோக்கப்பட்டுள்ளது.

---

45. No. 508 சூடாமணி நிகண்டு
ஏடுகள் 27; அபூர்த்தி. Lines 4 in a page.

இதில் முதலாவது தொகுதியில் 83 செய்யுட்கள் இருக்கின்றன.

---

46. No. 510 சூடாமணி நிகண்டு.
ஏடுகள் 32. Lines 6—7 in a page.

இதில் பதினோராவது தொகுதி முழுவதும் இருக்கிறது.

---

47. No. 511 சூடாமணி நிகண்டு.
ஏடுகள் 17; அபூர்த்தி. Lines 6—7 in a page.

இதில் முதலாவது தொகுதியும் இரண்டாவது தொகுதியில் 42 செய்யுட்களும் இருக்கின்றன.

முதலேட்டில்

" திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம் "

என்னும் கந்தபுராணத்துக் காப்புச் செய்யுளும்,

" தவளத் தாமரைத் தாதார் கோயி
லவளைப் போற்றுது மருந்தமிழ் குறித்தே "

என்கிற செய்யுளும் எழுதப்பட்டுள்ளன.

---

48. 512 சூடாமணி நிகண்டு.
ஏடுகள் 70; அபூர்த்தி. Lines 5 in a page.

இதில் பதினோராவது தொகுதி 5வது செய்யுள் முதல் முடிய இருக்கிறது.

---

49. No. 513 சூடாமணி நிகண்டு.
ஏடுகள் 235; அபூர்த்தி. Lines 5—6 in a page.

இதில் முதலிலிருந்து 12 தொகுதியும் இருக்கின்றன. பன்னிரண்டாவது தொகுதியில் 115 செய்யுட்கள் இருக்கின்றன.

---

50. No. 514 சூடாமணி நிகண்டு.
ஏடுகள் 50; அபூர்த்தி. Lines 6—8 in a page.

இதில் பதினோராவது தொகுதி மட்டும் இருக்கிறது. ஆனால் கடைசியில் 4 செய்யுட்கள் இல்லை.

---

51. No. 515 சூடாமணி நிகண்டு.
ஏடுகள் 39; அபூர்த்தி. Lines 6—9 in a page.

இதில் முதலிலிருந்து நாலு தொகுதிகள் இருக்கின்றன.

---

52. No. 522 சூடாமணி நிகண்டு.
ஏடுகள் 160; அபூர்த்தி. Lines 4—6 in a page.

இதில் முதலிலிருந்து பத்துத் தொகுதிகள் இருக்கின்றன.

---

## 53. No. 524 அகராதி நிகண்டு.

ஏடுகள் 87: Lines 7—10 in a page.

இது நிகண்டுகளுள் ஒன்று. இதற்கு சூத்திர வகராதி எனவும் இரேவணுத்திரயர் சூத்திரம் எனவும் பெயர்களுண்டு. இதில் மொழிக்கு முதலாகும் எழுத்துக்கள் அகராதியாக சூத்திரயாப்பால் அமைக்கப்பட்டுள்ளன. இதிலுள்ள தொகுதிகள் பத்து. சூத்திரங்கள் மூவாயிரத்து முன்னூற்றறுபத்தெட்டு. இதனை இயற்றியவர் புலியூர்ச் சிதம்பர இரேவணசித்தர். வேளாண் குலத்தினர். இவற்றை இந்நூற் பாயிரம் இனிது விளக்கும். காலம் சகம் 1516 அதாவது கி. பி. 1594. ஆதலால் இந்நூல் பதினாறும் நூற்றாண்டில் செய்யப்பட்டதாகும். இந்தப்பிரதி மிகவும் சிதைவுற்றிருக்கிறது. சிற்சில ஏடுகளில் சிறுசிறு துண்டுகளே இருக்கின்றன. இது மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் அச்சிடப்பட்டுள்ளது. இந்நூலாசிரியர் இயற்றிய வேறுநூல் சிவஞானதீபம்.

**Beginning :**

உலகினர் பவமற மலைமக டவஞ்செயுந்
தேசுகொ டிருப்பட் டீசுரன் பதம்பணிந்
தொலியெழு கடல்சூ முலகினிற் றெரிக்கு
மியற்சொற் றிரிசொற் றிசைசொல் வடசொலென்
றுரைத்த சொற்க ளொருநான் கதனில்.

* * * *

மன்னு சூத்திர மூவாயிரத்துடனே
முன்னூற்றறுபத் தெட்டெனுந் தொகையாய்
வந்திடுந் தொகுதி யீரைந்தென வகுத்தே
யரிய சகாத்த மாயிரத் தைஞ்னூற்
றெருபத் தாறென வுரைத்திடு மாண்டினில்

* * * *

ஆதர வாலகராதி நிகண்டென
வோதினன் யாவரு முணர்ந்திட நினைந்தே.
அரனென் பதுவே சங்கர ஞகும்.
அம்பிகை யென்ப துமையவள் பெயரே.
அயனே வேத ஞமென நுவல்வர்.
அம்ப ணத்தியே துர்க்கை யாகும்.

* * * *

புலியூர் சிதம்பர ரேவண சித்தன்
சொலுமக ராதி நிகண்டினிற் ஞெடுத்த
வழுவி லகராதிப் பெயர்முதற் ஞெகுதி

* * * *

**End.**

வெளவால் [தானே யோர் பறவை யாகும்]
வெள முதலொ........................
மேழித் துவசன் விள[ங்கிய புலியூர்
வாழ் நற்] சிதம்பர ரேவணசித்த
[னீதியிற் றருமக ராதி] நிகண்டினிற்
பத்தாம் [ வகராதிப் பெயர்த்] தொகுதி

---

54. No. 525 அகராதி நிகண்டு.

ஏடுகள் 81; அபூர்த்தி. Lines 8—10 in a page.

இதுவும் முன்பிரதி போன்றது. இதில் முதல் ஏழு தொகுதிகளே இருக்கின்றன. ஏழாவதில் பதி ஞெரு சூத்திரங்கட்கு மேல் இல்லை.

---

## II. இலக்கணம்

### தொல்காப்பியம்

இது, தமிழில் மிகப் பழமை யுடையதாய்ச் சிறந்து விளங்கும் விரிந்த இலக்கணநூல். எழுத்ததிகாரம்,

சொல்லதிகாரம், பொருளதிகாரம் என்னும் மூன்று பிரிவையும் ஒவ்வோரதிகாரமும் ஒன்பது ஒன்பது இயல்களாக இருபத்தேழு இயல்களையும் உடையது. இதிலுள்ள சூத்திரங்கள் ஆயிரத்து அறுநூற்றுப்பத்து. இதற்கு சிறப்புப்பாயிரம் செய்தவர் இந்நூலாசிரியரோடு ஒருங்குகற்ற பனம்பாரனார் என்பவர். பொதுப் பாயிரம் பேராசிரியரால் பிற்காலத்தில் செய்யப்பட்டுள்ளது.

இந்நூலை இயற்றியவர் தொல்காப்பியனார். இவர் ஜமதக்கினி முனிவரது புதல்வர். திரண தூமாக்கினி என்னும் இயற் பெயருடையவர். இவர் பழைமைவாய்ந்த காப்பியக்குடியில் பிறந்தவராதலால் தொல்காப்பியரெனப்பெயர் பெற்றனர் என்பர். அகத்திய முனிவரது மாணுக்கர் பன்னிருவருட் சிறந்தவர்.

இத்தொல்காப்பியத்திற்கு உரை செய்தவர், இளம்பூரணர், கல்லாடர், பேராசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் என்ற ஐவராவர். அவருள் இளம்பூரணர் முதன் முதலில் உரை யெழுதியவராதலால், அவரை உரையாசிரியர் எனக் கூறுவர்.

---

## 55. No. 622 தொல்காப்பியம்

நச்சினார்க்கினியருரை யுடன

ஏடுகள் 269; Lines 7—14 in a page

இதில், பொருளதிகாரத்தில் அகத்திணையியல் முதல் மெய்ப்பாட்டியல் முடிய ஆறு இயல்கள் இருக்கின்றன. இடையிடையே சிதிலமாயிருக்கிறது. இவ்வுரையாசிரியர் நச்சினார்க்கினியர் மதுரையின்கண் பாரத்துவாச கோத்திரத்தில் அந்தணர் குலத்திற் பிறந்தவர். உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க்கினியர் எனப் புலவர்கள் புகழ்

பெருமை வாய்ந்தவர். உரையாசிரியர்கள் எல்லாருள்ளும் காலத்தாற் பிற்பட்டவர். தொல்காப்பியம் மூன்றதிகாரங்கட்கும் உரைசெய்தவர். அதுவன்றிச் சங்க நூல்கள் பலவற்றிற்கும் உரை எழுதிய பேருபகாரி. இவரது காலம் கி. பி. பதினுன்காம் நூற்றூண்டின் பிற்பகுதி என்பர். இவர் உரை எழுதிய நூல்களைக் கீழ்வரும்.

"பாரத்தொல் காப்பியமும் பத்துப்பாட் டுங்கலியு
மாரக் குறுந்தொகையு ளைஞ்ஞான்குஞ்—சாரத்
திருத்தகு மாமுனிசெய் சிந்தா மணிக்கும்
விருத்திநச்சி ஞர்க்கினிய மே." என்னும் செய்யு

ளிற் காண்க. இத்தொல்காப்பியப் பொருளதிகாரம் உரையுடன் அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning:**

[என்]பது சூத்திரம் நிறுத்த முறையானே...... யிலக்கண முணர்த்தினமையின் [பொருளதி] காரமென்னும் பெயர்த்தாயிற்று. இது, நாண்மீனின் பெயர் நாளிற்குப் பெயராயினாற் போல்வதோ ராகுபெயர். பொருளாவன: அறம் பொருளின்பமு மவற்றது நிலையின்மையு மவற்றினீங்கிய வீடுபேறுமாம். பொருளெனப் பொதுப்படக்கூறவே யிவற்றின் பகுதியாகிய முதல் கரு உரியுங் காட்சிப்பொருளுங் கருத்துப் பொருளு மவற்றின் பகுதி யாகிய வைம்பெரும் பூதமு மவற்றின் பகுதி யாகிய வியங்கு திணையு நிலைத்திணையும் பிறவும் பொருளாம். எழுத்துஞ் சொல்லுமுணர்த்தி, யச் சொற்றொடர் கருவி யாக வுணரும் பொருளுணர்த்தலின் மேலதிகாரத்தோடியைபுடைத்தாயிற்று. அகத்திணைக்க ணின்பமும் புறத்திணைக்க ணொழிந்த மூன்று பொருளு முணர்த்துப. இது வழக்கு நூலாகலின் பெரும்பான்மையும் நான்கு வருணத்தார்க்குரிய வில்லற முணர்த்திப் பின் றுறவற முஞ் சிறுபான்மை கூறுப..........................................

னிமித்தங் கூறவே யின்ப நிலையின்மையுங் கூறி காமஞ் சான்ற வென்னும் கற்பியற் சூத்திரத்தாற் றுறவறமுங் கூறினர். வெட்சி முதலா வாகையீருக வறனும் பொரு ளும் பயக்கு மரசியல் கூறி யவற்றது நிலையின்மை காஞ்சி கூறவே யறனும் பொருளு நிலையின்மை கூறி ஞர். அறு வகைப்பட்ட பார்ப்பனப்பக்கமு மென்னுஞ் சூத்திரத்தானில்லறமுந் துறவறமுங் கூறினர். இன் னிலையாமையானு மிவற்று......டிற்குக் காரணமுங் கூறி ஞர். இங்ஙனங் கூறவே இவ்வாசிரியர் பெரிதும் பயன் றருவதோ ரிலக்கணமே கூறினராயிற்று.

**End**

றே யெண்ணியதல்லதவையுணரு மாற்றுக்குக் கருவி கூறி யதிலங்ஙனமே பிறவுங் கூறிய திலனுகலா னதனே யொரு வாற்ருற் கூறுகின்றமையின் கண்ணு னுஞ் செவியானும் யாப்புற வறியு மறிவுடையார்க் கல்லது மெய்ப்பாட்டுப் பொருள்கோட லாராய்தற் கருமையுடைத் தென்றவாறு. மற்று மனத்து நிகழ்ந்த மெய்ப்பாட்டினைக்' கண்ணுனுஞ் செவியானு முணர்த லென்ப தென்னையெனின், மெய்ப்பாடு பிறந்தவழி யுள்ளம்பற்றி முகம் வேறுபடுதலு முரை வேறுபடுதலு முடைமையி னவை கண்ணுனுஞ் செவியானு முணர்ந்து கோடலவ்வத் துறைபோயினர தாற்றலென்பதுகருத்து. 'இரண்டறி கிளவிநங் காத லோளே—முரண் கொடுப் பிற் செவ்வேன் மலையென–முள்ளூர்க் கான நாற வந்து– நள்ளென் கங்குல் நம்மோ ரன்னள்—கூந்தல் வேய்ந்த விரவுமல ருதிர்த்துச்—சாந்துளர் நறுங்கதுப் பெண் ணெய் நீவி—யமரா முகத்த ளாகித்—தமரோ ரன்னள் வைகறையானே.' என்பதுள் அமரா முகத்தளாகுதலுந் தன்னேரன்னளாகுதலுந் தலைமகற்குப் புலனுகலினவை கண்ணுணர் வெனப்படும். 'ஒழிகோ யானெனவழி

தகக்கூறி' யென்புழித் தலைமகன் மனத்தி னிகழ்ந்த வழியெல்லாம் ஒழிகோ யானென்ற வுரையானே யுண [ரலாகா]மையி னது செவியுணர் வெனப்படும். இங்ஙன முணர்த லுணர்வுடையார்க்கன்றிப் பெரிது மரிதென்பா னெண்ணருங்குரைத் தென்றான் என்பது.

ஆருவது மெய்ப்பாட்டியல் முடிந்தது.

குறிப்பு:—

இப்பிரதியின் தொடக்கத்தில் நச்சினார்க்கினியருரை என்றெழுதியிருப்பினும் மெய்ப்பாட்டியலுரை பேராசிரியராலும் ஏனைய ஐந்தியல்களினுரை நச்சினார்க்கினியராலும் செய்யப்பட்டவையாகும். 235 ஆவது ஏட்டில் பாதி எழுதப்படவில்லை. இப்பிரதி பழமையானதாகக் காணப்படுகின்றது. ஏடுகள் இடையிடையே சிதைந்துள்ளன.

---

## 56. No. 623 தொல்காப்பியம்.
### நச்சினார்க்கினியருரையுடன்.

ஏடுகள் 359; பூர்த்தி. Lines 7—9 in a page.

இதில் தொல்காப்பியம், எழுத்தும் சொல்லும் நச்சினார்க்கினியர் உரையுடனிருக்கின்றன. இவை அச்சிடப்பட்டுள்ளன.

**Beginning :**

மதிபாய் சடைமுடித்து மாசுணப்பைம் பூட்டுச்
சதிபாய் குறுந்தாட்டுத் தான—நதிபா
யிருகவுட்டு முக்கட்டு நால்வாய்த்தென் னுள்ள
முருகவிட்டு நின்ற வொளி.

அத்தி முகத்
துத்தமனை

நித்தநினை
சித்தமே.

வடவேங்கடந் தென்குமரி
யாயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலி
னெழுத்துஞ் சொல்லும் பொருளு நாடி

* * * *

மல்குநீர் வரைப்பி னிந்திர நிறைந்த
தொல்காப் பியனெனத் தன்பெயர் தோற்றிப்
பல்புகழ் நிறுத்த படிமை யோனே.
என்பது பாயிரம்.

எந்நூலுரைப்பினு மந்நூற்குப் பாயிர முரைத்துரைக்க வென்ப திலக்கணம். 'ஆயிர முகத்தா னகன்ற தாயினும்—பாயிர மில்லது பனுவ லன்றே, என்றலின். பாயிர மென்பது புறவுரையை, நூல் கேட்கின்றான் புறவுரை கேட்டாற் கொழுச் சென்றவழித் துன்னூசி யினிது செல்லு மாறு போல வந்நூ லினிது விளங்கு தலிற் புறவுரை கேட்டல் வேண்டும்.

* * * *

மலையமாருடு மலாடென முதலெழுத் தொழிந்தன பலவுங் கெட்டு முடிந்தது. பொதுவிலென்பது பொதியி லென உகரந்திரிந்திகரமா யகர வுடம்படுமெய் பெற்று முடிந்ததுவும் பிறவு மிவ்வாறே திரிந்து மருவி வழங்குவன வெல்லா மிப்புற நடையா னமைத்துக்கொள்க. 77

ஒன்பதாவது குற்றியலுகரப் புணரியல் முற்றும். ஆசாரியன் பாரத்துவாசி நச்சினார்க்கினியான் செய்த வெழுத்துக் காண்டிகை முற்றும்.

**End:**

இங்ஙனஞ் சான்றோர் செய்யுட்களில் ஆசிரிய ரிங்ஙனங் கூறிய விலக்கணங்களு ளடங்காது போன்று கிடப்பன பிறவு முளவேனு நுண்ணுணர்வுடையோ ரவற்றின் பொருட் பயனை நோக்கி யொருவாற்று னிக் கூரிய விலக்கணங்களு ளடக்கிக் கொள்க. இச் சூத்திரத்தின் கருத் திவ்வதிகாரத் துட் சிலவற்றிற்கு விரித்துக் கூறாது நுண்ணுணர்வுடையா ருணருமாறு கூரிய விலக்கணங்களும் அவற்றிற்கு முதனூ லானும் விரித்துரையானுங் காண்டிகையானு முணர்த்துக வென்று கூறலாம். இங்ஙனங் கூறினூர் முடிந்தது காட்ட லென்னுந் தந்திரவுத்திக்கினமாக வென்றுணர்க. இங்ஙனங் கூறா தியான் கூறப்படு மிலக்கணங்களை முதனூல் களாற் கண்டு கொள்க வெனினது குன்றக்கூற லென்னுங் குற்றமா மென்றுணர்க. 67

ஒன்பதாவது எச்சவியன் முற்றும்.

**Colophon:**

சொல்லதிகாரத்திற் காசிரியன் பாரத்துவாசி நச்சினூர்க் கினியரையன் செய்த வுரையிடையிட்ட காண்டிகைமுடிந் தது.

பச்சைமா லனைய மேகம் பவ்வநீர் பருகிக் கான்ற
வெச்சினூற் றிசையு முண்ணு மமிர்தென வெழுநா
வெச்சின்
மெச்சிநா ஞளும் விண்ணோர் மிசைகுவர் வேதபோத
நாச்சினூர்க் கினியா னுவி னல்லுரை நுகர்வர் நல்லோர்.
பருவ ராலுகள் வாவிசூழ் மதுரையம் பதிவாழ்
பொருவ ராநச்சி னூர்க்கினி யானுரை புனையாங்
கருவ ராநெறி யுதவுதொல் காப்பியக் கடற்கே
வெருவ ராதுநின் றனமகிழ்ந் தேகுவான் விரைந்தே.
விநாயக சரண புண்டரீகமே துணை.

கிருத்திவாசன் றுணை.

இளங்கிளைவல்லிதுணை.
குறிப்பு:— 'பருவராலுகள்வாவி' என்னும் இச்செய்யுள் அச்சிட்ட பிரதிகளில் இல்லை.

---

57. No 626 (*a*) தொல்காப்பியம்.
நச்சினார்க்கினியருரையுடன்.
ஏடுகள் 157 ; Lines 7—10 in a page.

இது, முன் பிரதி போன்றது. இதில் எழுத்ததிகாரம் ஆரம்பமுதல் புள்ளி மயங்கியலில் 109 வது சூத்திரம் வரையிலும் உரையுடன் இருக்கின்றது. ஏடுகள் சிதிலமாயிருக்கின்றன. இது அச்சிடப்பட்டுள்ளது.

---

58. (*b*) தொல்காப்பியப்பொதுப்பாயிரம்.
உரையுடன்.
Lines 6—8 in a page.

இது, தொல்காப்பியத்திற்குப், பிற்காலத்தில், பேராசிரியர் செய்த பொதுப்பாயிரமாகும். இவரைப் பற்றிய விவரங்களை 628ம் நம்பரிற் காண்க. இப்பாயிரத்திற்கு உரைகண்டாரும் இவ்வாசிரியரே எனக் கூறுகின்றனர். இவ்வுரை மிகச் சிறந்ததாகக் காணப்படுகின்றது. இந்தப்பிரதியில் முதலாவது ஏடில்லை. ஏனையவைகளும் சிறிது சிதைந்துள்ளன. இப் பொதுப்பாயிரம் உரையுடன் அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning:**

இங்ஙனம் பொதுவுஞ் சிறப்புமென் றிருவகைப்பட்டது பாயிர மென்றார்க்குப் பாயிரமென்ற பொருண்மை யென்னை யெனின், புறவுரை யென்றவா றென்ப. பாயிர மெனினும் புறவுரை யெனினும் பெய்துரை யெனினும்

தந்துரை யெனினும் அணிந்துரை யெனினும் முகவுரை யெனினு மொக்கும். இவையெல்லாங் காரணப் பெயர். அப்பாயிரந்தா னூலோ நூலின் வேறோ வெனின் நூலின் வேறெனப்படும்.

* * * *

வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பு மென்பது = இலங்கு நீர்ப்பரப்பின் வளையமீக் கூறிய வலம்புரி பயந்த நித்திலம்போலச் சிறப்புடை மரபிற் பிறப்புமென்றவாறு.

**End :**

நடையறிந் தொழுகு நன்மாணுக்க ரென்பது—இச் சொல்லப்பட்ட விலக்கணங்களோ டுலகவழக்கு மறியு நன்மாணுக்கர் மூவகைப்பட்டா ரென்று சொல்லுவ ராசிரியரென்றவாறு. மண்மிசைத் தொன்னூற் பரவைத் துணிபுணர்ந்தோ ரென்பது உலகத்து பழைய நூற்பரப் புக்களிற் றுணிந்து பொருளுணர்ந்து துறைபோகுவா ரென்றவாறு.

ஈவோன் றன்மையு மீத லியற்கையுங்—கொள் வோன் றன்மையுங் கோடன் மரபுமென நான்கு மிப் பொதுப்பாயிரத்துள்ளே கண்டு கொள்க. ஒழிந்தன வுள வாயினு முறையிற் கொள்க. மற்றிப் பொதுப்பாயிர முற்றும்.

---

59. No. 627 தொல்காப்பியம்.

நச்சினார்க்கினியர் உரையுடன்.

ஏடுகள் 107 ; Lines 7—9 in a page.

இது 626a பிரதியைப் போன்றது. இதில் எழுத்ததிகாரம் நூன்மரபியல் 4வது சூத்திரமுதல் உயிர் மயங்கியலில் 79ஆவது சூத்திரம் வரையில் உரையுடன் இருக்கிறது.

---

6^. No. 628 தொல்காப்பியம்.
பேராசிரியர் உரையுடன்.
ஏடுகள் 151; Lines 4—9 in a page.

இதில் சொல்லதிகாரம் பேராசிரியர் உரையுடன் இருக்கிறது. இவ்வுரை மிகச் சிறந்தது. ஒவ்வொரு இயலின் கடைசியிலும் சூத்திர முட்பட வுரையினளவு கிரந்தவகையான் இத்துணை என்று எழுதப்பட்டுள்ளது. இக்கணக்கின்படி இப்பொழுது இல்லை. இந்தப் பிரதியின் ஆரம்பத்திலும் கடைசியிலும் அதிக சிதிலமாயிருப்பதுடன் இடையிலும் ஏடுகள் பாதிபாதியாக முரிந்தும், சிதைந்து முள்ளன. இவ்வாசிரியர் அந்தணர் குலத்தில் ஆத்திரேய கோத்திரத்தில் பிறந்தவராதலால் இவரை ஆத்திரேயன் பேராசிரியன் என்பர். இந் நூலின் கடைசியில் எழுதப்பட்டிருந்த இப்பெயரில், ஆத்திரேய கோத்திரத்து என்பது தவிர, பிற்பாகங்கள் சிதைந்து விட்டன. இவர், யாப்பியல் நூலும் இந்நூலுக்கு உரையுமியற்றிய பெரும் பேராசானுதலால், பேராசிரியர் எனப் பெயர் பெற்றனர் போலும். இவரது இயற்பெயர் மயேச்சுரர் என்பது. ஒட்டக்கூத்தர் தக்கயாகபரணி பாடிய போது பேராசிரியர் அவரைப் பாடியதாகத் தமிழ்நாவலர் சரிதையிற் 'செங்கால் மடவன்னம்' என்னும் செய்யுள் காணப்படுகின்றது. ஒட்டக்கூத்தரது காலம் பன்னிரண்டாம் நூற்றுண்டாகும். அப்பேராசிரியரே இவ்வுரையாசிரியர் எனப் பலரும் கூறுவது உண்மையாயின் இவ்வுரையாசிரியர் காலமும் பன்னிரண்டாம் நூற்றுண்டு என்று கொள்ளத்தக்கது. இவ்வுரை அச்சிடப்படவில்லை. இது அச்சிட்டு வெளிவரத்தக்கவைகளுள் ஒன்றாகும்.

**Beginning :**

[உயர்திணை யென்] மனுர் மக்கட் சுட்டே.
யஃறிணை யென்மனு ரவரல பிறவே
[யாயிரு திணையி னிசைக்குமன சொல்லே]

இவ்வதிகார மென்ன பெயர்த்தோ வெனின் மேற் சொல்லப்பட்ட.........சொற்களைப் பாகுபாடுணர்த்து தலாற் சொல்லதிகார மென்னும் பெ...... ......சொற் களைப் பொருணிலைமை நோக்கித் தொடர் மொழி தனி மொழி ம..................யல்வழித் தொடர்பு வேற்று மைத் தொடரென விருவகைப்படுத்......... நிகழ்தலா

* * *

கால முலக முயிரே யுடம்பே
பால்வரை தெய்வம் வினையே பூதம்
ஞாயிறு திங்கள் சொல்லென வரூஉ
மாயீ ரைந்தொடு பிறவு மன்ன
வாயின வரூஉங் கிளவி யெல்லாம்
பால்பிரிந் திசையா வுயர்திணை மேன.

உயர்திணை பொருட்க ணெஞ்சியதுணர்-ற்று. கால முதலாகச் சொல்லப்பட்டனவு மத்தன்மைய பிறவு மாகிய பொருட்கண்வருஞ் சொல்லெல்லா முயர்திணை யிடத்தன வாண்டுப்பால் பிரிந்திசையா எ.று.கால மென்பது, முன்னும் பின்னு நடுவுமாகி யென்று முள்ள தோர் பொருள். உலகமென்பது, மேலும் கீழு நடுவு மாகி யெல்லாவுயிருந் தோற்றுதற் கிடமாகிய பொருள். உயிர் என்பது சீவன். உடம்பென்பது, மனம் புத்தி யாங்காரமும் பூததன்மாத்ரையாகி வினையினுற் கட்டுப் பட்டு எல்லாப் பிறப்பிற்கு முள்ளாகி நிற்பதோர் நுண் ணிய வுடம்பு. மூலப்பகுதி யெனினுமாம். பால்வரை தெய்வ மென்பது, ஆணும் பெண்ணு மலியுமாகிய நிலைமையை வரைந்து நிற்கும் பரம்பொருள். வினை யென்பதூழ். பூதம் என்பது நிலம். எழுத்தினுனியன்று பொருளுணர்வது அச் சொல்லானியன்ற [மந்தி]ரம் விடமுதலாயின தீர்த்தலிற் றெய்வமாயிற்று. இந்நூல் செய்தான் வைதிக முனிவனுதலிற் சொல்லென்பது வேத மென்று கொள்ளப்படும். பிறவு மென்றதனுன், வியாழம் வெள்ளி முதலான கோண்மீனும், பரணி

கார்த்திகை முதலான நாண்மீனுந், தாரகையும், பூதம் பேயெனப்பாலுணர நில்லாத தெய்வப் பொருண்மை யுங் கொள்ளப்படும். உதாரண முன்னர்க் காட்டுதும்.

**End :**

செய்யுண் மருங்கினும் வழக்கியன் மருங்கினு
மெய்பெறக் கிளந்த கிளவி யெல்லாம்
பல்வேறு கிளவியி னூனெறி பிழையாது
சொல்வரைந் தறியப் பிரித்தனர் [காட்டல்]

இவ்வதிகாரத்தி லோதப்பட்ட வெல்லாச் சொற்கும் புறனடை யுணர்-ற்று செய்யுளிடத்தும் வழக்கிடத்தும் பொருளுணர...........ல்லப்பட்ட சொற்களெல்லா மீண் டோதி..............த்தான் முற்றுப் பெற்றிசைய வாசிரி யர் மதவிகற்பத்தான் வரு மிலக்கணத்திற் பிழையாமல் யாதாயினுமொரு.......பட வுணர்த்துதல் நூலுணர்ந் தோர்.....................க்கி...க் கிலக்கணம் வேறு வேண் டிற்று. 'வளியிடை வழங்கா வானஞ் சூடிய'......... மிருந் தொழுவ ரென்னும் பாட்டு முற்றுப் பெற்ற நிக..... ...............மாகொன்ற வென்வேலான் குன்றின்........ .........................படாதன் மொழித் தொகையாக்கிச் சான்றோர் செய்யுளகத்து வரினிச் சூத்திர............ தன்றே யென்பது நின்னுடைய வெ......பொருண்மைக் கண் ஒட்டியவா...... ..............மாறு பட்டு வருவன வுளவே லிச்சூத்திரத்தானமைத்துக்கொள்க. (64)

இவ்வோத்தினுட் சூத்திர முட்பட்டவுரையினதளவு கிரந்த வகையா னறுநூற்றிருபது. ஆத்திரேய கோத் திரத்து.........

---

61. No. 629 *(a)* தொல்காப்பியமூலம்.

ஏடுகள் *70*; Lines *6—10* in a page.

இதில் எழுத்து சொற்பொருள் என்னும் மூன்றதி காரமும் இருக்கின்றன. ஆனல் எழுத்ததிகாரத்தில்

குற்றியலுகரப் புணரியலுள் 'ஒன்பானிறுதி யுருவுநிலை திரியா' என்பது வரையிலும் இருக்கின்றது. சொல்லதிகாரத்தில் 'முதல் ஐந்து இயல்கள் இருக்கின்றன. ஆனால் பெயரியலில் 'அவைதாம், பெண்மை யியற் பெயராண்மை யியற்பெயர்' என்னும் சூத்திரத்திற்கு மேல் இல்லை. பொருளதிகாரத்தில் களவியல், 'பாங்க னிமித்தப் பன்னிரண்டென்ப' என்னும் சூத்திரமுதல் பொருளியல் முடிய இருக்கிறது. இத்தொல்காப்பிய மூலம் அச்சிடப்பட்டுள்ளது.

---

62. (*h*) தொல்காப்பிய மூலம்.

Lines 6—7 in a page.

இது முன்பிரதி போன்றது. இதில் சொல்லதிகாரம் முழுவதும் இருக்கின்றது. யாப்பருங்கலச் சூத்திரம் எழுதிய மிகச் சிதிலமான ஏடும் கடைசியில் கோக்கப் பட்டிருக்கிறது.

---

63. No. 630 தொல்காப்பிய மூலம்.

ஏடுகள் 57; Lines 7—9 in a page.

இது 631 (*i*) நம்பர் போன்றது. இதில் எழுத்துச் சொற்பொருள் மூன்றும் முழுவதும் இருக்கின்றன. தலைப்பிலும் நுனியிலும் ஏடுகள் சிதைந்துள்ளன.

---

64. No. 632 நன்னூல்

மயிலைநாதர் உரையுடன்

ஏடுகள் 218; சிதிலமாயிருக்கிறது.

Lines 4—10 in a page.

இது, தொல்காப்பியத்திற்குப் பின் இயற்றப் பட்ட இலக்கண நூல்களில் மிகச்சிறந்தது. இந்நூற்

பாயிரத்தால், எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்திலக்கணத்தையும் ஆசிரியர் செய்தன ரென்றூகிக்க இடமிருப்பினும் எழுத்ததிகாரம் சொல் லதிகாரம் என்னும் இரண்டதிகாரங்களே இப்பொழு துள்ளன. இந்நூலைச் செய்தவர் பவணந்தி முனிவர். சைன சமயத்தினர். கொங்கு நாட்டில் சீனபுரம் என வழங் கும் சனகாபுரம் இவரது ஊராகும். இவர் குவளால புரத் தில் (கோலாரில்) அரசு புரிந்த கங்க வம்சத்தரசனாகிய சீயகங்கன் வேண்டுகோளுக் கிணங்கி இந்நூலைச் செய் தனர் என்பது இந்நூற் சிறப்புப் பாயிரத்தால் விளங்கு கின்றது. சீயகங்கன், கி.பி. 1178 முதல் 1216 வரையில் அரசாண்ட மூன்றாங் குலோத்துங்க சோழன் காலத்தில் இருந்தவன். ஆதலால் நன்னூல் ஆசிரியராகிய பவணந்தி முனிவரது காலமும் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் கடைசி அல்லது பதிமூன்றாம் நூற்றாண்டின் ஆரம்பம் என்று கொள்ளத்தக்கது. இவ்வுரை இயற்றியவர் மயிலைநாதர் என்பவர். இவர் சைனமரபினர். இவ்வுரையால் நன் னூலார் இயற்றிய சூத்திரங்கள் இத்துணை என்பதும், அவர் மேற்கோளாக எடுத்தாண்டவை இன்னின்னவை என்பதும் விளங்குவதோடு பற்பல அரிய விஷயங்களும் வெளியாகின்றன. இதனால், இவ்வுரையாசிரியர் இலக் கண இலக்கியங்களையும் சைன சமய நூல்களையும் நன்கு ணர்ந்தவர் என்பது விளங்குகின்றது. நன்னூலுக்கு ஏற்பட்டுள்ள ஏனைய உரைகளிலும் இவ்வுரை பழமை யானது. நூலாசிரியர் காலத்தையொட்டி இவ்வுரை செய்யப்பட்டிருத்தல் வேண்டுமென ஊகிக்கின்றனர். மகாமகோபாத்தியாயர் உ. வே. சாமிநாதையரவர்கள் இதனை அச்சிட்டிருக்கின்றார்கள்.

**Beginning:**

மலர்தலை யுலகின் மல்கிரு ளகல
விலகொளி பரப்பி யாவையும் விளக்கும்
பருதியி னொருதா னாகி முதலீ
றொப்பள வாசை முனிவிகந் துயர்ந்த

பொன்மதிற் சனகை சன்மதி முனியருள்
பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி
யென்னு நாமத் திருந்தவத் தோனே.

* * * *

முதனூல் கருத்த னளவு மிகுதி
பொருள்செய் வித்தோன் றன்மைமுத னிமித்தினு
மிடுகுறி யானுநூற் கெய்தும் பெயரே.

இ-ள். இவ்வெட்டனுள் ஒன்று பற்றி வருவது நூற்குப் பெயரென்றவாறு. அவற்றுள் முதனூலாற் பெயர்பெற்றன, ஆரியப்படலம் பாரத முதலாயின. கருத்தனாற் பெயர் பெற்றன, அகத்தியம் தொல்காப்பிய முதலாயின. அளவினாற் பெயர்பெற்றன பன்னிரு படலம் நாலடி நானூறு முதலாயின. மிகுதியாற் பெயர் பெற்றன, களவியல் முதலாயின. பொருளாற் பெயர் பெற்றன, அகநானூறு முதலாயின. செய்வித்தோனாற் பெயர் பெற்றன, சாதவாகன மிளந்திரைய முதலாயின. தன்மையாற் பெயர் பெற்றன, சிந்தாமணி சூளாமணி நன்னூல் முதலாயின. இடுகுறியாற் பெயர் பெற்றன, நிகண்டு கலைக்கோட்டுத் தண்டு முதலாயின. (4)

**End:**

முழக்கிரட் டொலிகலி யிசைதுவை பிளிறிரை
யிரக்கமுழங் கியம்ப லிமிழ்குளி றதிர்குரை
கனைசிலை சும்மை கவ்வை கம்பலை
யரவ மார்ப்போ டின்னன வோசை

எ. சூ. னின் ஒலித்தற் றொழிற் பண்புணர்—ற்று இவ்விருபத்திரண்டு மிவை போல்வன பிறவு மொலித் தற்றொழிற்பண்பின்கண் வருமென்றவாறு. முழங்கு முன்னீர் முழுதும் வளைஇ. குடிஞை யிரட்டுங் கோட் டுயர் நெடுவரை. ஒல்லென வொலிக்கு மொழிபுன லூரற்கு. கலிகெழு மூதூர் கந்தங்கைவிட. பறையிசை யருவி முள்ளூர். தோறுவைத் தம்பிற் றுளைத் தோன்றுவ.

பிளிறுவார் முரசத்தானை. இரைக்கு மஞ்சிறைப்பறவை கள்............ .. இரும்பிழி மாரியழுங்கன் மூதூர். காலை முரசமதியம்ப.........

குறிப்பு :

இதில் எழுத்ததிகாரமும் சொல்லதிகாரத்தில் நான்கு இயல்களும் ஐந்தாவது இயலாகிய உரிச்சொல் லியலில் 13 சூத்திரங்களும் உரையோடு இருக்கின்றன. கடைசி மூன்று சூத்திரங்களில்லை.

---

## 65. No. 633 நன்னூல்

### மயிலைநாதர் உரையுடன்

ஏடுகள் *240*; பூர்த்தி. Lines *4—10* in a page.

இதுவும் முற்பிரதியைப் போன்றது. முழுவதும் இருப்பினும் மிகச் சிதிலதமாயிருக்கின்றது. இந்தப் பிரதியின் முன்னேட்டில்,

"எண்ணிய வெண்ணிய வெய்துப கண்ணுதல்
பவள மால்வரை பயந்த
கவள யானையின் கழல்பணி வோரே.
தவளத் தாமரைத் தாதார் கோயி
லவளைப் போற்றுது மருந்தமிழ் குறித்தே.
பந்த மகலப் பரஞானங் கைகூடுங்
கந்தனிரு பாதங் கருது.
சந்தனப் பொதியத் தடவரைச் செந்தமிழ்ப்
பரமா சாரியன் பதங்கள்
சிரமேற் கொள்ளுதுந் திகழ்தரற் பொருட்டே"

என்னும் செய்யுட்களும், கடைசியில் பின்வரும் செய்யுட்களும் எழுதப்பட்டுள்ளன.

இறுதிணை மூவிட நான்மொழி யைம்பா லறுதொகை
வருவழு பெட்டொன்ப தாகுந் தொகாநிலை [யேழ்
யாய்ந்தவெச்ச
மொருபது கோளெட்டு முப்பொழு தீரிட மீரியல்பால்
வருமொழி மூன்று முணரச்சொல் வன்மை வருந்திருவே.

பேரறுபத் தொன்றுவினை முப்பத் திரண்டுபொது
வேரறுபத் தெட்டிடையின் மூவேழின்—மேலொன்
றுரியிருபத் தொன்ருகச் சொற்சூத் திரத்தின்
விரியிருநூற் ரேரிரண்டாய் வேண்டு.
நன்னூலெழுத்துஞ் சொல்லுமாக விருவகை.........

---

66. No. 634 நன்னூல்
மயிலைநாதர் உரையுடன்.
ஏடுகள் 222; அபூர்த்தி. Lines 6—8 in a page.

இதுவும் முற்பிரதிபோன்றது. இதில் ஆரம்ப முதல் வினையியல் 23-ம் சூத்திரம் வரையும் உள்ள பாகம் உரையோடு இருக்கிறது.

---

67. No 635 நன்னூல்
மயிலைநாதர் உரையுடன்.
ஏடுகள் 135: பூர்த்தி. Lines 4—8 in a page

இதுவும் முன்பிரதி போன்றது. இதில்முழுவதும் உரையுடன் இருக்கிறது. ஆனல், மிகவும் சிதைந்துள்ளது.

---

68. No. 637 நன்னூல்
மயிலைநாதர் உரையுடன்
ஏடுகள் 36; அபூர்த்தி. Lines 5—6 in a page

இதுவும் முன்பிரதிபோன்றது. இதில், எழுத்ததிகாரம் ஆரம்பமுதல் மெய்யீற்றுப் புணரியல் 16வது சூத்திர முடிய உரையோடு இருக்கிறது.

---

69 No. 638 நன்னூல்

மயிலை நாதர் உரையுடன்.

ஏடுகள் 74; அபூர்த்தி ; Lines 7—8 in a page.

இதுவும் முன்பிரதிபோன்றது. இதில் சிறப்புப் பாயிர முதல் உயிரீற்றுப் புணரியலில் 17 ஆவது சூத்திரம் வரையில் உள்ள பாகம் உரையோடிருக்கிறது.

---

70. No. 640 நன்னூல்

மயிலைநாதர் உரையுடன்.

ஏடுகள் 41; அபூர்த்திLine 6—7 in a page.

இதுவும் முன் பிரதிபோன்றது. இதில் பாயிரம் முதல் எழுத்தியல் 19 சூத்திரம் வரையிலுள்ள பகுதி உரையுடன் இருக்கிறது.

---

71. No. 641 நன்னூல்

மயிலைநாதர் உரையுடன்.

ஏடுகள் 133; அபூர்த்தி. Lines 8 in a page.

இதுவும் முன்பிரதி போன்றது. இதில், பெயரியல் 3ம் சூத்திரமுதல் நூல் முழுவதும் உரையுடன் இருக்கிறது. சிதிலமாயிருக்கிறது.

---

72. No 631 (*a*) நன்னூல் மூலம்.

ஏடுகள் 257; Lines 7—8 in a page.

இது 635ம் நம்பர் போன்றது. இதில் இந்நூல் மூலம் முழுவது மிருக்கிறது.

---

## 73. (*b*) இறையனார் அகப்பொருள் மூலம்.

Lines 7—8 in a Page.

இது, அகப்பொருள் இலக்கணத்தை அறுபது சூத்திரத்தாற் சுருங்க உரைக்கும் நூலாகும். அகப்பொருள் என்றது இன்பத்தை. இதனை இயற்றியவர் இறையனார் இந்நூல் உரையுடன் அச்சிடப்பட்டுள்ளது. அவ்வுரை நக்கீரர் உரையென் றெழுதப்பட்டிருக்கிது. அது அவருரையன் றெனப் பலரும் மறுக்கின்றனர். இந்தப்பிரதியில் இந்நூல் முழுவது மிருக்கின்றது.

**Beginning:**

அன்பி னைந்திணைக் களவெனப் படுவ
வந்தண ரருமறை மன்றல் லெட்டனுட்
கந்தருவ வழக்க மென்மனார் புலவர் (1)

**End :**

முற்படக் கிளந்த பொருபடைக் கெல்லா
மெச்ச மாகிய வருவழி யறிந்து
கிளந்த வல்ல வேறுபிற தோன்றினுங்
கிளந்தவற் றியலா னுணர்ந்தனர் கொளலே. 61

இரண்டாவது கற்பியன் முற்றும்
இறைவனார் பொருள் முடிந்தது முற்றும்

இதன்கீழ் "கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி" என்னும் குறுந்தொகைச் செய்யுளும் "மதிமலி புரிசை மாடக்கூடல்" என்னும் பதினோராந் திருமுறையிலுள்ள பாசுரமும் எழுதப்பட்டுள்ளன.

---

## 74. (*c*) அகப்பொருள் விளக்கம் மூலம்.

Lines 7—8 in a page.

இதுவும், அகப்பொருளிலக்கணத்தை உணர்த்தும் நூல்களுள் ஒன்றாகும். இதனைச் செய்தவர் நாற்கவிராச

நம்பி என்பவர். இந்நூலைப் பற்றிய விவரங்களை 651ம் நம்பரில் காண்க. இது உரையுடன் அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning :**

பூமலி நாவன் மாமலைச் சென்னி
யீண்டிய விமயவர் வேண்டலிற் போந்து

* * * *

இருபெருங் கலைக்கு மொருபெருங் குருசில்
பாற்கடற் பல்புகழ் பரப்பிய
நாற்கவி ராச நம்பி யென்பவனே.

**End :**

துன்னு மிராக்கதஞ் சுரிகுழற் பேதையைத்
தன்னிற் பெறுதுந் தமரிற் பெறுதும்
வலிதிற் கோடல் மரபு காட்டும். (9)
அகப்பொருள் விளக்க முற்றும்.

ஏற்ற வகத்திணைச் சூத்திர நூற்றுப்பத் தேழதன் பின்
சாற்றுங் களவிய லன்பத்து நாலன்றிச் சார்வரைவு
போற்றுமிருபதினொன்பான்கற்பீரைந்து பொங்கொழிவு
கூற்றியல் நாற்பத்து மூன்று மகப் பொருட்
கொள்கையதே.

---

75. (*d*) யாப்பருங்கல மூலம்.
Lines 8 in a page.

இது யாப்பிலக்கணத்தைக் கூறும் நூல்களுள் ஒன்று. இதனை இயற்றியவர் அமித சாகரர். இவர் குண சாகரர் மாணாக்கர். இதுமிகச் சிறந்த விருத்தியுரையுடன் அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning :**

முழுதுல கிறைஞ்ச முற்றெருங் குணர்ந்தோன்
செழு மலர்ச் சேவடி சென்னியின் வணங்கிப்
பாற்படு தென்றமிழ்ப் பரவையின் வாங்கி
யாப்பருங் கலநனி யாப்புற வகுத்தோன்
றனக்குவரம் பாகிய தவத் தொடு புணர்ந்த
குணக்கடற் பெயரோன் கொள்கையின் வழாஅத்
துளக்கறு கேள்வித் துகடீர் காட்சி
யளப்பருங் கடர்பெயரருந்தவத் தோனே. பாயிரம்

**End :**

நிரல் நிரை முதலிய பொருள்கோட் பகுதியும்
அறுவகைப் பட்ட சொல்லின் விகாரமும்
மெழுத்தா விசையே யசைபெற வியத்தலும்
வழுக்கா மரபின் வகையுளி சேர்த்தலு
மம்மை முதலிய வாயிருந் தன்மையும்
வண்ணமும் பிறவு மரபுளின் வழா அமற்
றிண்ணிதி னடத்த றெளிந்தோர் கடனே .

ஒழிபியல் முற்றும்.
ஆகச் சூத்திரம் 97.
யாப்பருங்கலம் முற்றும்.

---

76. (*e*) யாப்பருங்கலக் காரிகை மூலம்.
Lines 8 in a page.

இதுவும், யாப்பிலக்கணம் உணர்த்தும் நூல்களுள் ஒன்று இதனை இயற்றியவர் அமிதசாகரர். இது குணசாகரர் உரையுடன் அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning** .

கந்த மடிவில் கடிமலர்ப் பிண்டிக்க ஞூர்நிழற்கீ
ழெந்த மடிக ளிணையடி யேத்தி யெழுத்தசைசீர்
பந்த மடிதொடை பாவினங் கூறுவன் பல்லவத்தின்
சந்த மடிய வடியான் மருட்டிய தாழ்குழலே.

**End :**

எழுத்துப் பதின்மூன் றிரண்டசை சீர்முப்ப
தேழ்தளையைந்
திழுக்கி லடிதொடை நாற்பத்து மூன்றைந்து
பாவினமூன்
றொழுக்கிய வண்ணங்கள் நூற்றொன்ப தொண்பொருள்
கோளிருமூ
வழுக்கில் விகாரம் வனப்பெட்டு யாப்புள் வகுத்தனவே

காரிகை முற்றும்.

---

77. (*f*) சிதம்பரப் பாட்டியல் முலம்.
Lines 8 in a page.

இது பாட்டியல் உரைக்கும் நூல்களுள் ஒன்று. இதனை இயற்றியவர் பரஞ்சோதி முனிவர். இவர், திருவிளையாடற்புராண மியற்றிய பரஞ்சோதி முனிவரினும் வேறுவர். இவர், சிதம்பர புராணப் பாயிரச் செய்யுளில்

" சூழுமாகடற் புடவியாள் சுடர்முடிச் சகற்கீ
ரேழு நூறுடன் முப்பஃ தியைந்தவாண் டெல்லை
தாழு மாமதிச் சடைமுடித் தனிமுத லென்றும்
வாழுமம்பலப் பெருமையை வழுத்தலுற் றனன்
யான்"

எனக் கூறுமாற்ருல், இவரது காலம், சகம் 1430 அதாவது கி. பி. 1518-ம் வருடமாதலால், பதினாரும் நூற்ருண்டென்று கொள்ளத்தக்கது. இவர் இயற்றிய வேறு நூல்கள் மதுரையுலாவும், சிதம்பரபுராணமுமாம். இப்பாட்டியல் அச்சிடப்பட்டுள்ளது.

**Beginning:**

எண்ணிய எண்ணிய வெய்துப கண்ணுதற்
பவள மால்வரை பயந்த
கவள யானையின் கழல்பணி வோரே.

* * * *

பூமன்னு பொழில் வெண்ணை மெய்கண்டான் கச்சிப்
புகழ்புனைதத் துவஞானப் பிரகாசமாய் வந்து
பாமன்ன வுரையென்ன வவனருளா லவன்றன்
பதம்பரவிச் சிதம்பரப் பாட்டியலெனப் பேர்வகுத்
மாமன்னு சிதம்பர புராணமுத னூலு [தான்
மதுரையுலாவும் பகர்ந்தோன் மருவுகுல மைந்தன்
றேமன்னு புராணகலை பலதெரி புராணத்
திருமலைநாய கனருளின் றேசுபூண் டோனே. (1)

**End:**

அகத்தியன் சொல் லெழுத்துமுதற் குற்றஞ் செய்யு
ளடையாமற் றொடை கொண்டா லடையுஞ்
மகத்துயர் நோயகலு மகலாது செல்வம் [செல்வ
வாணு மதிகமவர் வாழ்மரபு நீடுந்
தொகைக்குற்றம் பாட்டுறிற் செல்வம் போய்
சுற்றமறு மரணமுறுஞ் சோருங் காலைச் (நோயாஞ்
சகத்தவர்க ளன்றியே தேவர்க் காகில்
தப்பாதிப் பயன்கவிதை சாத்தி னூர்க்கே (20)
மரபியல் முற்றும். சிதம்பரப்பாட்டியல் முற்றும்.

---

78. (*g*) வெண்பாப்பாட்டியல் மூலம்.
Lines 8 in a page.

இது பாட்டியலை வெண்பா யாப்பினால் உணர்த்துவது. இதனை இயற்றியவர் குணவீரபண்டிதர். இப்பாட்டியல் அச்சிடப்பட்டிருக்கிறது. இதைப்பற்றிய ஏனைய விவரங்களை 645-ம் நம்பரில் காண்க.

**Beginning :**

மதிகொண்ட முக்குடைக்கீழ் வாமன் மலர்த்தா
டுதிகொண்டு நாளுந் தொழுது—நுதிகொண்ட
பல்கதிர்வே லுண்கண்ணாய் பாட்டியலைக் கட்டுரைப்பன்
தொல்லுலகின் மீது தொகுத்து. (1)

**End :**

நன்குணர்ந்தோ ராய்ந்த தமிழ்மூன்றி னன்னெறியை
முன்குணர்ந்து பாட்டியனூன் முற்றுணர்ந்து—நன்
குணர்ந்த
நல்லார்முன் னல்லாய் நலமார் கவியுரைக்க
வல்லார தன்றோ மதி. (30)

மூன்றாவது பொதுவியன் முற்றும்.
வெண்பாப்பாட்டியல் முற்றும்.

— —

79. (*h*) தண்டியலங்கார மூலம்.
Lines 8 in a page.

இது, தமிழில் அணியிலக்கணத்தைச் சூத்திர யாப்பாற் கூறும் நூலாகும். இதனைச் செய்தவர் தண்டியாசிரியர். ஏனைய விவரங்களை 710-ம் நம்பரிற் காண்க. இது உரையுடன் அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning :**

வடதிசை யிருந்து தென்றிசைக் கேகிய
மதிதவழ் குடுமிப் பொதிய மால்வரை
யிருந்தவன் றன்பா லருந்தமி ழுணர்ந்த

* * * *

பூவிரி தண்பொழிற் காவிரி நாட்டு
வம்பவிழ் தெரிய லம்பு (பி) காபதி
மேவருந் தவத்தினிற் பயந்த
தாவருஞ் சீர்த்தித் தண்டியென் பவனே.

**End :**

மெய்பெற விரித்த செய்யுட்டானு
மெய்திய நெறியு மீரைங் குணனு
மையேழ் வகையென் றறிவுறு மணியும்
அடியினுஞ் சொல்லினு மெழுத்தினு முயன்று
முடிய வந்த மூவகை மடக்குங்
கோமுத் திரிமுதற் குன்ரு மரபி
னேமுறக் கிளந்த மிறைக்கவி யிருபது
மிவ்வகை யியற்றுதல் குற்ற மிவ்வகை
யெய்த வியம்புத லியல்பென மொழிந்த
வைவகை முத்திறத் தாங்கவை யுளப்பட
மொழிந்தவு நெறியி னொழிந்தவுங் கோட
லான்ரோர் காட்சி சான்ரோர் கடனே.

நான்காவ தொழிபியல் முற்றும்.

தண்டியலங்காரம் சூத்திரம் 125. முடிந்தன முற்றும்.

---

80. (*i*) தொல்காப்பிய மூலம்.
Lines 8 in a page.

இது 630-ம் நம்பர் போன்றது. இதில் எழுத்து, சொல், பொருள் என்னும் மூன்றதிகாரங்களும் முழுவது மிருக்கின்றன.

---

81. (*j*) நேமிநாதம் மூலம்.
Lines 8 in a page.

இது, எழுத்திலக்கணத்தையும் சொல்லிலக்கணத் தையும் வெண்பா யாப்பினுற் கூறுவது. இதனைப்பற்றிய விவரங்களை 645-*c* நம்பரிற்காண்க.

**Beginning :**

பூவின்மேல் வந்தருளும் புங்கவன்றன் பொற்பாதம்
நாவினு ளுளு நவின்றேத்தி—யேவுமுடி
வெல்லா முணர வெழுத்தி னிலக்கணத்தைச்
சொல்லா லுரைப்பன் றெருத்து.

**End :**

தொல்காப் பியக்கடலிற் சொற்றீபச் சுற்றளக்கப்
பல்காற்கொண் டோடும் படகெனலாம்—பல்
கோமிகா மப்புலனை வெல்லுங் குணவீர [கோட்டுக்
னேமிநா தத்தி னெறி.

முற்றும்.

---

82. (*k*) சீவகசிந்தாமணி மூலம்.
Lines 8—9 in a page.

இது, தமிழ்க்காவியங்கள் ஐந்தினுள் ஒன்று. இதில் ஆரம்பமுதல் விலங்குகதி முடிய இருக்கிறது. ஆனால்

முத்தியிலம்பகத்தில் பெரும்பாகமில்லை. இதனை இயற்றியவர் திருத்தக்கதேவர். இதன் கடைசி ஏட்டில் சிறிது முரிந்திருக்கிறது. இது நச்சினார்க்கினியர் உரையுடன் அச்சிடப்பட்டுள்ளது. இதனைப்பற்றிய விவரங்களை 144-ம் நம்பரிற் காண்க.

**Beginning :**

மூவா முதலா வுலகமொரு மூன்று மேத்தத்
தாவாத வின்பந் தலையாயது தன்னினெய்தி
யோவாது நின்ற குணத் தொண்ணிதிச் செல்வ
னென்க
தேவாதி தேவ னவன்சேவடி சேர்துமன்றே. (1)

**End :**

மல்லல்மலைய... ... ... ... ... ...
... ... ... ... ...ரண்ணுப் பாவிகளு
மல்குல் விலைபகரு மாய்தொடிய ராதியர்
வில்பொரு தோண்மார்ப விலங்காய்ப் பிறப்பாரே (138)
விலங்குகதி முற்றும்.

---

83. No. 636 (*a*) நன்னூல் மூலம்,
ஏடுகள் 124; பூர்த்தி. Lines 7—9 in a page.

இது, 631-ம் நம்பர் பிரதிபோன்றது. முழுவது மிருக்கிறது.

இதில் இந்நூலோடு சம்பந்தமில்லாத பாடல்கள் எழுதப்பட்டிருக்கின்றன.

அவைகள் பின்வருமாறு :—

பூவாத காய்மரமும் காயாத பூமரமும்
பாஹூரி லீசன் படைமரமும்—ஓவாதே

போனவரம் பூடாடும் போவீரே யாமாகில்
கானவரம் பூடாடுங் காடு.
விதிபதிக்கு மால்பதிக்கு மின்முன் தனக்கும்
மதிமயங்கி மெய்யை மருமல்—அதிமதுரப்
பண்சேரும் மென்மொழியீர் பாரத்தை மேருவினில்
புண்செய்தார் கண்டீர்ப் பொது.

இவ்விரு செய்யுட்களே யன்றி 'எண்ணிய வெண்ணிய வெய்துப' 'தவளத்தாமரை' 'சந்தனப் பொதிய' என்னும் செய்யுட்களும் எழுதப் பட்டிருக் கின்றன.

---

**84. (*b*) அகப்பொருள் விளக்கம் மூலம்.**

Lines 7—9 in a page.

இது, 81ம் நம்பர் போன்றது. இதில் அகத்திணை இயலும், களவியலில் 27 சூத்திரமும் இருக்கின்றன.

---

**85. (*c*) யாப்பருங்கலம் மூலம்.**

Lines 8—9 in a page.

இது, 631ம் நம்பர் உட்பிரிவு (*d*) போன்றது முழுவதும் இருக்கிறது.

---

**86. (*d*) யாப்பருங்கலம் மூலம்.**

Lines 7—8 in a page.

இது, 631ம் நம்பர் உட்பிரிவு (*e*) போன்றது. முழுவதும் இருக்கிறது.

---

87. (*e*) சிதம்பரப்பாட்டியல் மூலம்.

Lines 8 in a page.

இது, 631ம் நம்பர் உட்பிரிவு (*f*) போன்றது. முழுவதும் இருக்கிறது.

---

88. (*j*) தண்டியலங்கார மூலம்.

Lines 7 in a page.

இது, 631ம் நம்பர் உட்பிரிவு (*h*)போன்றது முழுவதும் இருக்கிறது.

---

89. (*g*) நாலடியார் மூலம்.

Lines 8 in a page.

இது, 82ம் நம்பர் பிரதி போன்றது. முழுவதும் இருக்கிறது

---

90. No. 639 (*a*) நன்னூல் மூலம்.

ஏடுகள் 84; அபூர்த்தி. Lines 5 in a page.

இது, 631ம் நம்பர் உட்பிரிவு (*a*)போன்றது. இதில் எழுத்தியல் 22வது சூத்திரமுதல் நூல் முழுவதும் இருக்கிறது.

---

91. (*b*) அகப்பொருள் விளக்கம் மூலம்.

Lines 6—7 in a page.

இது, 631ம் நம்பர் உட்பிரிவு (*c*) போன்றது. இதில் அகத்திணையியல் முதல் ஒழிபியல் முடிய இருக்கிறது

---

92. (*c*) யாப்பருங்கலக்காரிகை மூலம்.
Lines 5—6 in a page.

இது, 631ம் நம்பர் உட்பிரிவு (*e*) போன்றது. முழுவதும் இருக்கிறது.

---

93. (*d*) தண்டியலங்காரம் மூலம்.
Lines 6 in a page.

இது, 631ம் நம்பர் உட்பிரிவு (*h*) போன்றது. முழுவதும் இருக்கிறது.

இதில் நக்ஷத்திர தியாச்சியம் எழுதிய இரண்டு ஏடுகள் கடைசியில் கோக்கப்பட்டுள்ளன.

94. No. 166 (*A*) நன்னூல் மூலம்.
ஏடுகள் 34; பூர்த்தி. Lines 5—9 in a page.

இது, 636ம் நம்பர் பிரதியைப் போன்றது. முழுவதுமிருக்கிறது.

---

95. No. 83 யாப்பருங்கலக்காரிகை
உரையுடன்.
ஏடுகள் 97; Lines 9—12 in a page.

இது யாப்பிலக்கணம் கூறும் நூலாகும். யாப்பருங்கலத்துக் கங்கமாய்க் கலித்துறையான் அமைக்கப்பட்டிருத்தலின் யாப்பருங்கலக்காரிகை எனப்பெயர் பெற்றது. உறுப்பியல், செய்யுளியல், ஒழிபியல் என மூன்று இயல்களை உடையது. இதனை இயற்றியவர் அமிதசாகரர் என்பவர். சைனமதத்தினர். இவர் இயற்றிய வேறுநூல்

யாப்பருகலம். இதற்கு உரைசெய்தவர் குணசாகரர். இந்நூல் உரையுடன் பலராலும் அச்சிடப்பட்டிருக் கிறது.

**Beginning :**

கந்த மடிவில் கடிமலர்ப் பிண்டிக்க ணூர்நிழற்கீ
ழெந்த மடிக ளிணையடி யேத்தி யெழுத்தசைசீர்
பந்த மடிதொடை பாவினங் கூறுவன் பல்லவத்தின் -
சந்த மடிய வடியான் மருட்டிய தாழ்குழலே.

தேனார் கமழ்தொங்கன் மீனவன் கேட்பத்
தெண்ணீரருவிக்
கானார் மலையத் தருந்தவன் சொன்னகன் னித்தமிழ்நூல்
யானு நடாத்துகின் றேனென் றனக்கே நகைதருமா
லானு வறிவி னவர்கட்கென் னுங்கொலென் னுதரவே.

இக்காரிகை நூற்சிறப்புணர்த்தி யவையடக்க முணர்த்துதனுதலிற்று. ஆசிரியனது பெருந்தன் மையுந் தனதுள்ளக் குறையு முணர்த்தியமுகத்தான் அவையடைக்க முணர்த்து—ற்று. இதனுற் போந்த பொருள். மதுநிரைந்து மணங் கமழாநின்ற மாலையினை யுடையபாண்டியன் வினவத்தெளிந்தநீரே தனக் கருவி யாகவுடைய காடார்ந்த பொதியமாமலையி லெழுந்தருளி யிருந்த வரிய தவத்தினையுடைய வகத்தியமாமுனி யருளா லருளிச்செய்யப்பட்ட வழுவிலாத தமிழ்நூல் யான் போலுஞ் சொல்லுகின்றே னென்றனக்கே சிரிப் பைத் தருதலா லமையாத வறிவினையுடைய புலவர்க் கென்னு மென்னுசைப்பா டென்றவாறு. (2)

**End :**

கந்தமுந் தேனுஞ் சுருக்கமுங் கற்ற குறில்குறிலே
சந்தம தீரசை தேமாவு………வுங்
கொந்தவிழ் கோதாய் குறள்திரை வெள்ளை யற
வெழுவா
யந்தமு மாவு மிருசீரு மோனையு………

குறிப்பு :—

இது பழமையான பிரதியாகக் காணப்படு கிறது. இதில் அசை, சீர், தளைகளுக்கு விவரம் எழுதிய முரிந்த மூன்று ஏடுகள் கடைசியில் கோக்கப் பட்டுள்ளன.

**Colophon:**

இது மூன்றும் காரிகை மூலபாடத்திற்கு முதனினைப்பு.
ஒழிபியல் எழுதி நிறைந்தது முற்றும்.

பிரமாதி ஞு மாருகழிமீ ...... வாரதினங் காரிகை ...எழுதி நிறைந்தது முற்றும். தேவிசகாயம். பழஞ்சிக் குறுக்கள் பாதமே துணை.

---

96. No. 642 யாப்பருங்கலக்காரிகை
உரையுடன்.
ஏடுகள் 129; Lines 5—7 in a page.

இதுவும் முன்பிரதியைப் போன்றது. உரையுடன் முழுவதுமிருக்கிறது. சிதிலமாயிருக்கின்றது.

முதலேட்டில்.

தன்றே ஞன்கி ஞென்றுகை மிகூஉங்
களிறுவளர் பெருங்கா டாயினு
மொளிபெரிது சிறந்தன் றளியவென் னெஞ்சே.

அத்திமுகத்
துத்தமனை
நித்தநினை
சித்தமே.

தவளைத் தாமரைத் தாதார் கோயி
லவளைப் போற்றுது மருந்தமிழ் குறித்தே.

வெள்ளைத் துகிலுடுத்து வெள்ளைப் பணிபூண்டு
வெள்ளைக் கமலத்தே வீற்றிருப்பாள்—வெள்ளை
யரியா சனத்தி லரசருட னெம்மைச்
சரியா சனத்தில்வைக்குந் தாய்.
என்னும் செய்யுட்கள் எழுதப்பட்டுள்ளன.

கடைசியில் :—

" இருபது பதினைந் தொன்பது காரிகை
உறுப்பியல் செய்யு ளொழிபிய லோத்தே."
என்னும் சூத்திரம் எழுதப்பட்டிருக்கிறது.

**Colophon :**

வயித்தியநாதபண்டாரம் படிப்பித்தார். புவனி விடங்கன் ஏடு புவனி விடங்கன் எழுத்து. அகோரமூர்த்தி யுடைய புண்ணியம். கமலாலையம்மை துணை.

---

### 97. No. 643 யாப்பருங்கலக்காரிகை உரையுடன்.

ஏடுகள் 85; Lines 6—9 in a page.

இதுவும் முன்பிரதி போன்றது முழுவது மிருக்கிறது.

ஆனால் கடைசி செய்யுள் உரையில் சிலபாக மில்லை. சிதிலமாயிருக்கிறது.

**Beginning :**

இந்தப்பிரதியின் முன்னேட்டில் எழுதப்பட்டுள்ள செய்யுட்கள் பின்வருமாறு.

எண்ணிய வெண்ணிய வெய்துப கண்ணுதற்
பவள மால்வரை பயந்த
கவள யானையின் கழல்பணி வோரே.
தவளத் தாமரைத் தாதார் கோயி

லவனைப் போற்றுது மருந்தமிழ் குறித்தே.
மாடகூ டங்கள்நிரை மல்குந் திருக்குடந்தை
ஆடவல்ல நாத னடியிணையை—நாடிநெஞ்சே
கள்ளத் திருக்கற்றுக் காதலுடன் எப்போது
முள்ளத் திருத்தா யுகந்து.

ஓதனத்தான் பொன்னுட ரோங்குவெள்ளை வாரணத்
ஓதனத்தான் போற்று முயர்குடந்தைச்—சீதமதி [தான்
வேணியான் றன்னை விரும்பினுல் நெஞ்சமே
காணியாம் பொன்னுலகு காண்.

கொண்டல் தவழுங் குளிர்சோலைத் தேனிழிந்து
கண்டல் நலங்கமழுங் கானலே—எண்டிசைக்கு
நாகைக்கா ரோணத்தான் ஞைகைக்கா ரோணத்தான்
ஞைகைக்கா ரோணத்தா னகர்.

---

98. No. 644 யாப்பருங்கலக்காரிகை
உரையுடன்.

ஏடுகள் 51; Lines 6—8 in a page..

இது முன்பிரதி போன்றது. இதில், உறுப்பியலின் இரண்டாவது செய்யுள்முதல் செய்யுளியலில், 'குறளடி நான்கினம்' என்னும் செய்யுள் வரையிலும் இருக்கின்றது. முதலில் 4 ஏடுகளில்லை. 5, 6, 7ம் ஏடுகள் மிகச் சிதைந்திருக்கின்றன.

---

99. No. 645 (a) வெண்பாப் பாட்டியல்
உரையுடன்.

ஏடுகள் 80; Lines 7 in a page.

இது வெண்பாயாப்பினுல் செய்யப்பட்ட பாட்டியலாதலின் வெண்பாப்பாட்டியல் எனப் பெயர்பெற்றது.

பாட்டுடைத்தலைவன் பெயருக்கும் அவனைப்பற்றிச்செய்யப்படும் நூலின் முதற்செய்யுளின் முதற்சீருக்கும் உரிய மங்கலப் பொருத்த முதற் கணப் பொருத்த மீருக தசப் பொருத்தங்களையும் பிரபந்த இலக்கணங்களையும் அந்தாதியாகக் கூறுவது. முதன் மொழியோத்து, செய்யுளியலோத்து, பொதுவியலோத்து என்று மூன்றியல்களை உடையது. இதனைச் செய்வித்தவர் வச்சணந்தியாசிரியராதலால், இது வச்சணந்திமாலை எனவும் வழங்கப்படும். இதனைச் செய்தவர் களந்தை குணவீரபண்டிதர். ஏனைய விவரங்களை இந்நம்பரின் உட்பிரிவாகிய (c)இல் காண்க. இந்தப்பிரதியில் முதற் செய்யுள்மட்டும் உரையுடனிருக்கிறது. "அசையடி முன்னர்" என்னும் காரிகைச் செய்யுட்கு உரையெழுதிய ஏடொன்று கடைசியில் கோக்கப்பட்டுள்ளது.

**Beginning :**

தொகுத்துரைத்த மங்கலஞ் சொல்லெழுத்துத் தானம்
வகுத்தபா லுண்டி வருணம்— பகுத்தநா
டப்பாக் கதிகணமெண் ணீரைந்தின் தன் மையினைச்
செப்புவதா முன்மொழியின் சீர். என்றது
பத்துக்கு, மங்கலம், சொல், எழுத்து, தானம், பால், உண்டி, வருணம், நாள், கதி, கணம் என்பது.

* * * *

**End:**

உண்டியென்பது க ச த ந ப ம வ அ இ உ எ இப்பதின்ஞென்றும் அமுர்த எழுத்து. மங்கல மொழிக்கு இந்த எழுத்திலே ஒரு எழுத்து முதலெழுத்தாக வந்தால் தேவர் அமுர்தப்பொசுப்பு. ய ர ல ள ன ஓ இந்த அஞ்சு எழுத்தும் மங்கல மொழிக்கு முதல் எழுத்தாக வந்தால் விஷம் என்பது.

## 100. (*b*) யாப்பருங்கல மூலம்.
Lines 6—8 in a page.

இது யாப்பிலக்கணத்தைச் சூத்திரயாப்பாலு ணர்த்துவது. 631 நம்பரின் உட்பிரிவாகிய (*d*) போன் றது.

---

## 101. (*c*) நேமிநாதம் உரையுடன்.
Lines 8—10 in a page

இது 631 (*g*) போன்றது. இதில் எழுத்தும் சொல்லுமாகிய இரண்டதிகாரங்களும் உரையுடன் இருக்கின்றன. இதனைச் சின்னூல் என வழங்குவர். இது, நன்னூலுக்கு முற்பட்டதெனினும், அது தோன் றியபின் இதைப்பயிலும் வழக்கு அருகியது போலும். இதை இயற்றியவர் குணவீரபண்டிதர் என்பவர். இவர்க்கு நேமிநாதர் எனவும் பெயருண்டென்பர். இவரது நாடு தொண்டைநாடு, ஊர் களந்தையம்பதி. சமயம் சமணசமயம் ஆசிரியர் வச்சணந்தி தேவர். இவரை, ஒட்டக்கூத்தர் தக்கயாகபரணி பாடியபோது உடனிருந்தவரெனத், தமிழ்நாவலர் சரிதை கூறு மாற்றால், இவரது காலம் பன்னி ரண்டாம் நூற்றாண்டாகும். இவர், இயற்றிய வேறுநூல் வெண்பாப்பாட்டியல். இந்நேமிநாதம், மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் உரையுடன் அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning :**

பூவின்மேல் வந்தருளும் புங்கவன்றன் பொற்பதத்தை
நாவினால் நாளும் நவின்றேத்தி—மேவுமுடி
வெல்லா முணர வெழுத்தி னிலக்கணத்தைச்
சொல்லா லுரைப்பன் றொகுத்து.

* * * *

பூவின் மேற்றொகுத்து என்பது என்—எனின், சிறப்புப்பாயிர முணர்த்து—று. என்னை, 'வணக்க மதி கார' மென்றிரண்டுஞ் சொல்லச்–சிறப்பென்னும் பாயிர

மாம் என்றுராகலின், ஆயிரத்தெட்டிதழையுடைய வர விந்த நாண்மலர்மே லெழுந்தருளிய வருகபரமனடி வணங்கி யாவருமுணர வெப்பெற்றிப்பட்ட எழுத்தின் முடிவுஞ் சுருங்கும் வகையாற் சொல்லுவே னென்ற வாறு. இது பொழிப்புரை யெனக்கொள்க.

**End :**

தொல்காப் பியக்கடலிற் சொற்றீபச் சுற்றளக்கப்
பல்காற்கொண் டோட்டும் பஃறியெனப்—பல்
கோட்டுக்
கோமிகா மப்புலனை வெல்லுங் குணவீர
நேமிநா தத்தனை நீ.

நேமிநாதஞ் சொல்லதிகாரமுடிந்தது. முற்றும்.

உண்ணுவி யான்றேங்கு மோதுதொடர் குறிலுந்தி
காட்டுயிரிறுதி
நண்ணகரத் திற்காவு நேர்ந்தமொழி மெய்யீறு மூன்று
நான்கு
வண்ணமுள்ள குற்றுகரங் குற்றெற்று வாய்ந்த வன்மை
மகரந்தானு
மெண்ணுமுரி நின்றமுதல் மெய்வுற்ற வியன்ற வைந்தா
றென்பானுமே.

---

102. No. 646 வெண்பாப்பாட்டியல் உரையுடன்.
ஏடுகள் 32; Lines 7—8 in a page.

இதுவும் முன்பிரதி போன்றது. இதில் முதலி லிருந்து 86 வெண்பாக்கள் உரையுடன் இருக்கின்றன. இந்தப் பிரதியின் ஆரம்பத்தில்,

' ஓத வினையகலு மோங்கு புகழ்பெருகுங்
காதற் பொருளனைத்துங் கைகூடுஞ்—சீதப்

பனிக்கோட்டு மால்வரைமேற் பாரதப்போர் தீட்டுந்
தனிக்கோட்டு வாரணத்தின் றுள்.' என்னும் செய்யுள் எழுதப் பட்டுள்ளது. இது இப்பாட்டியலைச் சேர்ந்ததன்று.

**Beginning :**

மதிகொண்ட முக்குடைக்கீழ் வாமன் மலர்த்தாள்
துதிகொண்டு நாளுந் தொழுது—நுதிகொண்ட
பல்கதிர்வே லுண்கண்ணாய் பாட்டியலைக் கட்டு
தொல்லுலகின் மீதே தொகுத்து. [ரைப்பன்

என்பது சூத்திரம். பாயிரம் இரண்டுவகைப் படும், அவைதான் பொதுவுஞ் சிறப்புமென. அவற்றுட் பொதுப்பாயிரம் நான்கு வகைப்படும். என்னெனில், 'ஈவோன் றன்மை யீத லியற்கை—கொள்வோன் றன்மைக் கோடன் மரபென—வீரிரண் டென்ப பொது வின் றொகையே'

* * * *

இந்நூல் செய்தாரியாரோ வெனின், கற்றவர் பரவுங் களந்தையம் பெரும்பதி—குற்றமில்வாய்மை குணவீர பண்டிதன்' என்பது................................ 'விளங்கெழின் மாடக் களந்தையம் பெருமாள்—வளங் கொள் ளூர்தி வச்சணந்திதேவ' ரென்னும் ஆசிரியர் செய் வித்தராகலின், வச்சணந்திமாலை யென்னும் பெயர்த்து.

**End:**

மன்னுந் திருமலை யாகு முதயத்து வச்சணந்தி
என்னுங் கடவுட் கதிரவன் தோற்ற மிருநில...
............னுந் தாரகைத் தொல்கணத்தான்
பன்னுந் துருநய நூலா......திரொடும் பாறியதே ?

———

103. No. 647 வெண்பாப்பாட்டியல்
உரையுடன்.
ஏடுகள் 25; Lines 6 in a page.

இது மேற்பிரதி போன்றது. இதில் முதலாவது இயலிலிருந்து மூன்ருவது இயலில் 18-ம் சூத்திரமுடிய உரையுடன் இருக்கின்றது.

---

104. No. 648 வெண்பாப் பாட்டியல்
மூலம்.
ஏடுகள் 10; Lines 7 in a page.

இது 631 (*g*) போன்றது. இதில் இப்பாட்டியல் மூலம் முழுவதுமிருக்கின்றது.

---

105. No. 649 (*a*) இலக்கண தீபம் மூலம்.
ஏடுகள் 26; Lines 7 in a page.

இது, இலக்கண அமைதியையுடைய செய்யுளின் தன்மை இன்னதெனக்கூறு முகத்தால் தமிழிலுள்ள ஐந்திலக்கணத்தையும் ஒன்பது விருத்தத்தால் மிகச் சுருங்க உணர்த்துவது. இதனைச் செய்தவர் இன்னவரென விளங்கவில்லை. இஃது அச்சிடப்படவில்லை.

**Beginning :**

எழுத்தென்ன வொலியொரு தொகைத்தா யிருந்து
முதல் சார்பிரு வகைத்தாயெழுந்
தீரிருவகைப்பேரி லிருவகைத்தாய்முறை யினத்தி
லெண்ணிரு வகைத்தா
யொழுக்கும் பிறப்பிடத்தீரிருவகைத்தா யுழப்பிலே ழிரு
வகைத்தா

யுள்ளவடி வம்புள்ளி புள்ளியில் லாதென்னு
முருபிலோ ரிருவகைத்தாய்
வழுக்கின்றி மாத்திரையி னைவகைத்தாய் மூன்று வழி
மொழியின் மூவகைத்தாய்
வந்துயி ருடற்போலி யிருவகைத்தாய்மூ வகைச் சாரி
கைத்தாய் நடந்
தழுக்கின்றி விரியொன்றி ஞனூறதாமெழுத் ததிகார லக்
கணமெலா
மறிந்து சொல்வதிலக் கணக்கவிதை யல்லாத தவலக்
கணக் கவிதையே. (1)

**End :**

ஈரிரு வகைச்செய்யுளுந்தொடர் நிலைக்கங்க மெழு
நான்கு மேகசூணமு
மெவ்வகைச் செய்யுட்கு மிருநெறியுமற்றவைக
ளெய்துங் குணங்கள் பதப்
பேரிடும் பொருளணிகள் முப்பத்து நாலுவிரி பெருகுமிரு
நூற்றிரண்டும்
பின்னையெழு வகைமடக் கடிநான்கி லும்மூன்று
பேதத்தி னூற்றஞ்சுமேற்
சேரவடி முழுதுமொரு சொலுமோ ரெழுத்துந் திருப்பிய
மடக்குமிருபான்
சித்திரமு மானசொல் லணி முழுதும் வழுவுமலை திரிய
வொன்பது மாறுமென்
ஞரியமொழிந்தபடி தமிழான் மொழிந்திடு மலங்கார
லக்கணமெலா
மறிந்து சொல்வ திலக்கணக்கவிதை யல்லாததவலக்
கணக் கவிதையே. (9)

இலக்கணதீபம் முற்றும்.

குருபாதம் : சித்திவிஞயகனே தெய்வம்.

---

106. No 650 (*b*) பன்னிருபாட்டியல்
Lines 7—8 in a page.

இது, பொருத்த இலக்கணம் பிரபந்த இலக்கணங் களைச் சூத்திரயாப்பாற் கூறுவது. சொல்லியல், செய்யுளியல் என்றிரண்டு இயல்களை யுடையது. இப்பாட்டியல் மதுரைச்சங்கத்தில் அச்சிடப்பட்டிருக் கிறது.

**Beginning**

அத்தி முகத்
துத்த மனை
நித்த நினை
சித்த மே.

சொல்லின் கிழத்தி மெல்லிய லிணையடி
சிந்தையில் வைத்து முன்னோர் பொருணெறி
கூட்டி யுரைப்பல் பாட்டியன் மரபே. (1)

பிறப்பும் வருணமுஞ் சிறப்புங் கதியு
மிருவகை யுண்டியு மூவகைப் பாலும்
பொருவி முனமுங் கன்னலும் புள்ளு
நயம்பெறு நாளு மியம்புதல் கடனே. (2)

**End :**

வளங்கெழு வேந்தன் வான்புகக் கவிஞர்
கலங்கி யுரைப்பது கையற நிலையே. (214)

கலியொடு வஞ்சி கையற முரையார். (215)

கையற நிலை முற்றும்.

சொற்றன வல்ல வேறு பிற தோன்றினு
மத்தகு மரபி. னடக்கினர் கொளலே. (216)

செய்யுள் வழக்கு முற்றும்.

ஓரா தெழுதினே னுயினு மொண்பொருளை
யாராய்ந்து கொள்க வறிவுடையோர்—சீராய்ந்து

குற்றங் களைந்து குணம்பெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.

செய்யுட் பாட்டியன் முற்றும்.
ஆகச் சூத்திரம் 407.

**Colophon:**

சித்திவினாயகனே தெய்வம். குருபாதமே துணை. துன்முகிஷு பங்குனிமீ 3உ எழுதி முடிந்தது. சொக்கலிங்கந்தாளே துணை. மீனாட்சியம்மன் துணை. முத்துக்குமரன் பாதாரவிந்தமே கெதி. மதுரை நாயகம் எழுத்து. குருசரணம்.

---

107. No. 651 அகப்பொருள் விளக்கம்.
உரையுடன்.

ஏடுகள் 154; Lines 6—9 in a page.

இஃது, அகப்பொருள் இலக்கணங்களைக் கூறும் நூலாகும். அகத்திணையியல், களவியல், வரைவியல், கற்பியல், ஒழிபியல் என்ற ஐந்து இயல்களை உடையது. இதனை இயற்றியவர் நாற்கவிராசநம்பி என்பவர். இவர், ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நாற்கவியினுள் வல்லவராதலின், இப்பெயர் பெற்றனர் போலும். அருக சமயத்தினர். இதற்கு உரைசெய்தவர் பெயர் முதலியவை விளங்கவில்லை. ஆரம்பத்திலும் இடையிலும் சிதிலமாயிருப்பினும், இப்பிரதியில் இந் நூல் முழுவதும் இருக்கிறது. காலம் குலசேகரபாண்டியன் காலம் என்று உரையால் தெரிகின்றது. இவனைப் பிற்காலத்திய பாண்டியருள் ஒருவனாக, அதாவது 15-ம் நூற்றாண்டிற்குப் பின்னிருந்தாருள் ஒருவனாகக் கருதுகின்றனர். இது அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning :**

பூமலி நாவன் மாமலைச் சென்னி
யீண்டிய விமையோர் வேண்டலிற் போந்து

* * * *

இருபெருங் கலைக்கு மொருபெருங் குரிசில்
பாற்கடற் பல்புகழ் பரப்பிய
நாற்கவி ராச நம்பியென் பவனே.

* * * *

அவற்றுட் கைக்கிளை·யென்ப தொருதலைக் காமம். என்னின் நிறுத்த முறையானே கைக்கிளைக்குரிய காமப் பொருளுணர் ...ற்று. மேற் சொல்லப்பட்ட வகப்பொருள் விகற்ப மாகிய வேழனுட் கைக்கிளை யென்பதனுடைய பொருளொருதலைக்காம மென்றவாறு. அவற்று ளென் பதனை மேல் வருகின்ற சூத்திர மிரண்டற்குந் தந்து ரைக்க.

**End :**

கூறிய வல்ல வேறுபிற தோன்றினுங்
கூறிய வற்றொடுங் கூட்டி மெய்கொளக்
கூறி யுணர்த்தல் குணத்தோர்க் கியல்பே.

என-சூம். தீதிற் பொருள் வேறே தோன்றின வாயினு மவற்றை யிதனுளே [டுத்] தோதப்பட்ட பொருள்களோடு கூட்டி யுண்மை புலப்படச்சொல்லிப் பிறர்க்குணர்த்துதல் குணமுடையோர்க் கிலக்கண மென்றவாறு.

ஐந்தாவ தொழிபியல் முற்றும்.

---

**108. No. 652 அகப்பொருள் விளக்கம் உரையுடன்.**

ஏடுகள் 133; Lines 7 in a page.

இதுவும் முன் பிரதியைப் போல முழுவதும் இருக் கிறது. பழம்பிரதியாகக் காணப்படுகின்றது. ஆனல் சிதைந்துள்ளது.

109. No. 653 அகப்பொருள் விளக்கம் உரையுடன்.

ஏடுகள் 74;. Lines 7—10 in a page.

இதுவும் மேற்பிரதியைப் போல முழுவதுமிருக்கிறது. இதில் 10, 28, 57, 70, 72, 109, 110 ஏடுகள் இல்லை.

---

110. No. 81 அகப்பொருள் விளக்கம் மூலம்.

ஏடுகள் 39; Lines 4—6 in a page.

இதில் களவியல், வரைவியல்களும் கற்பியலில் 7 சூத்திரங்களும் இருக்கின்றன.

---

111. No. 655 நேமிநாதம் உரையுடன்.

ஏடுகள் 51; Lines 6 in a page

இது 645 (c) போன்றது. இதிற் ஆரம்ப முதற் பெயர் மரபு 29-ம் செய்யுள் வரையில் உரையுடன் இருக்கின்றது.

---

112. No. 656 நேமிநாதம் உரையுடன்.

ஏடுகள் 18; Lines 10—16 in a page.

இது முன்பிரதிபோன்றது. இதில் ஆரம்பமுதல் பதவொலியியல் 17-ம் செய்யுள்வரை உரையுடன் இருக்கிறது.

---

### 113. No. 657 வீரசோழியம் உரையுடன்.

ஏடுகள் 194; Lines 7 in a page.

இது வடநூன் மரபும் தமிழ்நூல் மரபும் தம்மில் விரவிவர எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்திலக்கணத்தையும் கலித்துறையால் கூறும் இலக்கண நூல். வீரராஜேந்திர சோழன் என்னும் வீரசோழன் பெயராற் செய்யப் பட்டமையின், இது வீரசோழியம் எனப் பெயர் பெற்றது. இதனை,

"நாமே வெழுத்துச் சொன்னற் பொருள் யாப்பலங்கார
மென்னும்.
பாமேவு பஞ்ச வதிகார மாம்பரப் பைச்சுருக்கித்
தேமே வியதொங்கற் றேர்வீரசோழன் றிருப்பெயராற்
பூமே லுரைப்பன் வடநூன் மரபும் புகன்றுகொண்டே."

என்னும் இந்நூல் பாயிரச்செய்யுள் இனிது விளக்கும். இந்த நூற்குச் சிலகாலத்திற்கு முன்னரே தமிழ் இலக்கணத்தை ஐந்தாகப் பிரித்து வழங்கினூர் உளராயினும் நூலாகச் செய்தார் இல்லை. அவ்வாறு ஏற்பட்டவைகளுள், இதுவே முதலாகும். இதனைச் செய்தவர் புத்தமித்திரன் என்பவர். இவரைச் சிற்றரசருள் ஒருவர் என்பர். இவரது ஊர் பொன்பற்றியாகும்: இவர் பௌத்த மரபினர். வடமொழி தென்மொழிகளில் வல்லபுலவர். இங்குக் கூறப்பட்ட பொன்பற்றி, சோழநாட்டில் அறந்தாங்கி தாலூகாவில் பொன்பேத்தி எனவழங்கும் ஊர்தான் என்பது காலஞ்சென்ற வெங்கையா அவர்களின் அபிப்பிராயமாகும். (See Ep. Report 1899, pp.18—19.) பொன்பற்றி பாண்டி நாட்டகத்ததெனவும் கூறுவார் சிலர். வீரராஜேந்திர சோழன் கி. பி. 1063 முதல் 1070 வரை ஆட்சி புரிந்தவன். ஆதலால் இந்நூல் பதினோராம் நூற்றாண்டிற் செய்யப்பட்டதாகும். இந்நூற்கு உரைசெய்தவர்

பெருந்தேவனார் என்பவர். இவரும் பௌத்த மரபினரென்பதை இவர் எடுத்தாண்டுள்ள உதாரணச் செய்யுட்களால் நன்குணரலாம். இவ்வுரையாசிரியர் காட்டிய மெய்க்கீர்த்திகளிற் சில, நூலாசிரியர் காலத்திற்குப்பின்னிருந்த சோழர்க் குரியனவாக இருத்தலால், சிலர் கருதியவாறு, இவர் நூலாசிரியர் காலத்தினரல்லர். அவர்க்குப் பிற்பட்ட காலத்திருந்தவராவார். அதாவது பன்னிரண்டாம் நூற்றுண்டினர் எனக்கொள்வது குற்றமாகாது. பாரதம்பாடிய பெருந்தேவனார் எட்டாவது அல்லது ஒன்பதாவது நூற்றுண்டினராகக் கருதப்படுகின்றனராதலின், இவ்வுரையாசிரியர் அவரினும் வேறுவர் என்பன் சொல்லாமலே யமையும்.

இந்தப்பிரதியில், ஐந்தாவதாகிய அலங்காரப் படலம் இல்லை. இந்நூல் உரையுடன் அச்சிடப்பட்டுள்ளது.

**Beginning :**

மிக்கவன் போதியின் மேதக் கிருந்தவன் மெய்த்
தவத்தாற்
றெக்கவன் யார்க்குந் தொடரவொண் ணுதவன்
றாயனெனத்
தக்கவன் பாதந் தலையிற் புனைந்து தமிழுரைக்கப்
புக்கவன் பைம்பொழிற் பொன்பற்றி மன்புத்தமித்திரனே.
நாமே வெழுத்துச்சொன் னற்பொருள் யாப்பலங் .
காரமென்னும்
பாமேவு பஞ்ச வதிகாரப் பைச்சுருக்கித்
தேமே வியதொங்கற் றேர்வீர சோழன் றிருப்பெயராற்
பூமே லுரைப்பன் வடநூன்மரபும் புகன்றுகொண்டே.

**End :**

அகப்பாட்டு வண்ணமாவது முடியாது போல முடிவது. நலிவுவண்ணமாவது ஆய்தமுடைத்தாய் வருவது. அகைப்பு வண்ணமாவது, அறுத்தறுத்

தொழுகுவது. இயைபுவண்ணமாவது. இடையெழுத்து மிகுவது. சித்திரவண்ணமாவது குற்றெழுத்தும் நெட்டெழுத்தும் விரவி வருவது. தரவுவண்ணமாவது இடையிட்டுவந்த எதுகைத்தாவது. புறப்பாட்டு வண்ணமாவது முடிந்தது போன்று முடியாததாம்.

---

114. No. 170 (*a*) தண்டியலங்கார மூலம்.

ஏடுகள் 45; Lines 7 in a page.

இது, அணியிலக்கணத்தை தமிழிற் சூத்திரயாப் பாற்கூறும் நூலாகும். குணவணியியல், பொருளணியியல், சொல்லணியியல் என மூன்று இயல்களையுடையது. இதனை இயற்றியவர் தமிழ்த்தண்டி ஆசிரியர். வடமொழித் தண்டியாசிரியர் இயற்றிய அணியிலக்கணத்தை மொழிபெயர்த்து இந்நூல் இயற்றியமையின், இவர்க்கு இப்பெயர் அமைந்ததுபோலும். இவர், காவிரி நாட்டிலிருந்த அம்பிகாபதி என்பவரது அருந்தவப் புதல்வர் என்பதும், வடநூலுணர்ந்த தென்றமிழ்ப்புலவர் என்பதும், "வடநூலுணர்ந்த தமிழ் நூற்புலவன் -பூவிரி தண்பொழிற் காவிரிநாட்டு—வம்பவிழ் தெரிய லம்பிகா பதி—மேவருந் தவத்தினிற் பயந்த–தாவருஞ் சீர்த்தித் தண்டி யென்பவனே" என்னும் பாயிரத்தால் தெரிகின்றது. அம்பிகாபதியின் மகன் தண்டி என்பதைக் கொண்டு, கம்பரது மகன் அம்பிகாபதியின் புதல்வனே இத்தண்டி யெனக் கூறுவர். இவ்வாசிரியர் தாம் கூறியுள்ள, "சென்று செவியளக்கும்" என்னும் உதாரணச் செய்யுளில், "மலரிவருங் கூத்தன்றன் வாக்கு" என ஒட்டக்கூத்தரது பாட்டைப் புகழ்ந்துரைத்தலால், இவர், கூத்தர்காலத்திலோ அதனை அடுத்தோ இருந்தவராவார். இது உரையுடன் அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning :**

சொல்லின் கிழத்தி மெல்லிய லிணையடி
சிந்தைவைத் தியம்புவன் செய்யுட் கணியே. (1)

செய்யு ளென்பவை தெரிவுறக் கிளப்பின்
முத்தகங் குளகந் தொகைதொடர் நிலையென
வெத்திறத் தனவு மீரிரண் டாகும். (2)

**End :**

மெய்பெற விரித்த செய்யுட் டிறனு
மெய்திய நெறியு மீரைங் குணனு
மையேழ் வகையென் றறிவுறு மணியு
மடியினுஞ் சொல்லினு மெழுத்தினு மியன்று
முடிய வந்த மூவகை மடக்குங்
கோமுத் திரிமுதற் குன்று மரபி
னேமுறக் கிளந்த மிறைக்கவி யிருபது
மிவ்வகை யியற்றுதல் குற்ற மிவ்வகை
யெய்த வியம்புத லியல்பென மொழிந்த
வைவகைமுத்திறத் தாங்கவை யுளப்பட
மொழிந்த நெறியி னொழிந்தவுங் கோட
லான்ற காட்சிச் சான்றோர் கடனே. (37)

மூன்றுவது சொல்லணியியல் முற்றும்.

அலங்கார முற்றும்.

குறிப்பு :—631 நெ. பிரதியில் குணவணியியல் என்பது பொதுவணியியல் என்றுளது. சொல்லணியி யல் என்பது சொல்லணியியல், ஒழிபியல் என இரண் டியலாக இருக்கிறது. 712-ம் நம்பரில், சொல்லணி யியல் என்பது சொல்லணியியல், வழுவமை யியல் எனக்காணப்படுகின்றது.

115. (*b*) யாப்பருங்கல மூலம்.

Lines 7 in a page.

இது 681 நெ. உட்பிரிவாகிய (*d*) போன்றது. இந்தப் பிரதியில் இந்நூல் முழுவதும் மிருக்கிறது.

---

116. (*c*) குசலவர் கதை.

Lines 4—6 in a page.

இது 100-ம் நம்பரைப்போன்றது. இதில் 188 செய்யுட்கள் இருக்கின்றன.

---

117. No. 711 (*a*) தண்டியலங்காரம் உரையுடன்.

ஏடுகள் 134; Lines 8 in a page.

இது 710-ம் நம்பரின் உட்பிரிவாகிய (*a*) போன்றது. இதில் பொருளணியியல் 16வது சூத்திரமுதல் சொல்லணியியலின் கடைசி சூத்திரத்தின் ஒரு பகுதி வரையில் உரையுடன் இருக்கின்றது. ஏடுகள் மிகவும் சிதைவுற்று உதிரு நிலைமையில் இருக்கின்றது.

---

118. (*b*) திருவரங்கக் கலம்பகம் உரையுடன்.

Lines 5 in a page.

இது, 170-ம் நம்பர் போன்றது. முழுவதுமிருக்கிறது. ஆனால் பலவிடங்களிலும் சிதிலமாயிருக்கிறது.

---

119. No. 712 (*a*) தண்டியலங்காரம் உரையுடன்.

ஏடுகள் 125 ; Lines 7 in a page.

இது 710 (*a*) நம்பர் போன்றது. மூலமும் உரையும் முழுவதுமிருக்கின்றன. மற்றைய பிரதிகளைவிட இது சுத்தப்பிரதியாயிருக்கின்றது. சிற்சில இடங்களில் சிதைந்திருக்கிறது.

---

120. (*b*) பெரிய புராணம்.

Lines 7—10 in a page.

இது 253ம் நம்பரைப் போன்றது. இதில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனுர் புராணத்தில் முதல் 301 செய்யுட்கள் இருக்கின்றன. அச்சிடப்பட்டிருக்கிறது.

---

121. No. 713 (*a*) தண்டியலங்காரம் உரையுடன்.

ஏடுகள் 37 ; Lines 9—11 in a page.

இதுவும் 712ம் நம்பரைப் போன்றது. இதில் பொதுவியலும் பொருளணியியலில் 4 சூத்திரங்களும் உரையுடன் இருக்கின்றன. மற்றைய இரண்டியலும் இல்லை.

---

122. (*b*) திருவேங்கடமாலை.

Lines 4—5 in a page.

இது, திருப்பதி வேங்கடேசர் தோத்திரம். 100 வெண்பாக்களையுடையது. அஷ்டப்பிரபந்தங்களுள் ஒன்று. இதனை இயற்றியவர் பிள்ளைப்பெருமாளையங்கார்.

**Beginning :**

திண்பார் புகழுந் திருவேங் கடமாலை
வெண்பாவாய் நூறும் விளம்பவே—கண்பாராய்
நாரா யணனடியே நாடுந் தமிழ்வேத
பாரா யணசடகோ பா. (1)

**End :**

ஆதரவு வேங்கடமே யாயிரம்பே ரானிடமென்
றோதரிய வெண்பா வொருநூறுங்—கோதில்
குணவாள பட்டனிரு கோகநதத் தாள்சேர்
மணவாள தாசன்றன் வாக்கு (100)

---

# III. தருக்கம்.

## 123. No. 582 தருக்கபாஷை.

ஏடுகள் 53 ; Lines 8—10in a page.

இது, வேதாங்கம் ஆறில் ஒன்ருகும். இந்த சாத்திரம் வடமொழியில் மிக விரிவாக இயற்றப்பட்டுள்ளது. இந்த நூல், பிரமாணம் முதலிய பதினறு பதார்த்தங்களின் இலக்கணத்தைச் சுருங்கச்சொல்லி விளங்க உணர்த்துவது. இதற்குத் தர்க்க சூடாமணி எனவும் தர்க்கபரிபாஷை எனவும் பெயர் வழங்கும். இதனை வடமொழியிற் செய்தவர் கேசவமிசிரர் என்பவர். இதற்கு இருபத்து மூன்று வியாக்கியானங்கள் உண்டு என்பர். இதனைத் தமிழில் மொழிபெயர்த்தியற்றியவர் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள். இலக்கண இலக்கியங்களையும் ஞான சாத்திரங்களையும் நன்குணர்ந்து தமிழுக்குப் பேரிலக்காயுள்ள பெரும் புலவர்களில் இவர் ஒருவராவார். இளமையிலே துறவு பூண்டவர் ; வீரசைவக் கொள்கையர். இவராற் செய்யப்பட்ட நூல்கள், சிவப்பிரகாச விகாசம், சதமணிமாலை, வேதாந்த

சூடாமணி, சித்தாந்த சிகாமணி, பிரபுலிங்கலீலை, சோண சைலமாலை, நால்வர் நான்மணிமாலை, நிரஞ் சனமாலை, கைத்தலமாலை, வெங்கைக்கோவை, வெங்கைக்கலம்பகம், வெங்கையுலா, பிள்ளைத்தமிழ், நெஞ்சு விடுதூது, நன்னெறி, திருக்கூவப்புராணம், சீகாளத்தி புராணத்தின் ஒருபகுதி முதலிய வைகளாம். இவைகளில் ஒன்றாகிய பிரபுலிங்கலீலைக் கடைசியில், இவர்,

பார்கெழு சகாத்த முவைஞ் ஞூற்றெழு பானுன் காவ
தார்கெழு கரநாமங்கொ ளாண்டுறு விடைஞா யிற்றிற்
சீர்கெழு மல்ல மன்றன் றிருவிளை யாடற் காதை
கார்கெழு மிடற்றெங் கோமான் கருணைகொண் டியம்பி
னேனே.

எனக் கூறுமாற்றால் இவரதுகாலம் சகம் 1574 அதாவது கி-பி 1652 என விளங்குவதால், பதினேழாம் நூற்றுண்டென்று கொள்ளத்தக்கது. சிறிது சிதிலமாயிருப்பினும் பழைய பிரதியாகக் காணப்படுகிறது. இது அச்சிடப்பட்டிருக்கிறது. அச்சுப்பிரதிக்கும் இவ்வேட்டிற்கும் பேதங் காணப்படுகிறது.

**Beginning :**

நியாயநூலின் முயற்சியைச் சுருக்கிய கேள்வியினுலை [டைதலை மடியனுயும் வாஞ்சிக்கின்ற பாலனெவன் அவ]னுக் கென்னுலுத்தியோடு கூடிய விவ்வளவைநூல் சுருக்கி விளக்கப்படா நின்றது.

பிரமாணம், பிரமேயம், சம்சயம், பிரயோசனம், திட்டாந்தம், சித்தாந்தம், அவயவம், தர்க்கம் நி[ண்ண]யம், வாதம், செற்பம், விதண்டை, ஏத்துவாபாசம், சலம், சாதி, நிக்கிரகங்களது தத்துவஞானத்தா லுயர் சிறப்படைதல். இது நியாயத்தினது முதற் சூத்திரம்.

இதன் பொருள் பிரமாண முதலிய பதினறு பொருளி னுண்மை யறிவால் வீ[டடைதலு] ளதாமென்க. எவ்வளவும் பிரமாண முதலியவற்றி னுத்தேச லக்கண பரீக்ஷை ப[ண்ணப்ப]டாதவ்வளவும் அவற்றினுண்மை யறிவுண்டாகாது. எங்ஙனம் பாஷியகா[ரர் கூறினர்]அங்ஙனம் இந்நூலது வழக்கு மூன்று வகைத்து; உத்தேசம் இலக்கணம். பரிக்ஷையென

* * * *

ஈண்டுப் புகைக்குத் தீயுடனிகழ்ச்சியி லோரு பாதியு மின்று. உண்டாயினிப்போது நிலம்போலக் காணப்படு மாதலிற் காட்சியின்மையி னில்லையென்று தருக்கத் துணை யுடைய வுணர்வின்மையோடு கூடிய காட்சி யானே யுபாதியின்மை துணியப்படும். அங்ஙனமன்றே உபாதியின்மையிற் றோன்றிய வாசனையோடு கூடிய மறித்துக்காண்டலிற் றோன்றிய வாசனையோடு கூடிய வுடனிகழ்ச்சி கவரு ங் காட்சியானே புகைதீக்களது வியாத்தி துணியப்படும்.

**End:**

சித்தாந்தத்தின் கேடு அபசித்தாந்தம். பிரகிருதத்தில் அசம்பந்தமான பொருளுடைய சொல் அத்தாந்தரம். உத்திரத்தினது தோன்றாமை யப்பிரதிபை. தனக்குப் பிரதிகூலமாய்ப் பரனுக்குச் சம்மதமான வர்த்தத்தைத்தானே அங்கீகரித்தல் அப்பியனுஞ்ஞை மதானுஞ்ஞை. இட்டார்த்தபங்கம் விருத்தம். ஈண்டு வேண்டாமை யாகிய ரூபபேதங்களுக் கி ல க் கியங் கூறாமை குற்றமன்று, இவ்வளவிற் பாலனுக்கு விற்பத்தி சித்திக்கையால்.

சிவகேசவமிச்சிரனுற் கூறப்பட்ட தருக்கபாஷை தமிழாற் கூறப்பட்டது.

மணி நாவிருக்குந் தவளாம் புயத்தியை வாழ்த்துவாம்.

---

# IV. கணிதம்

## 124. No. 678 கணக்கதிகாரம்.

ஏடுகள் 33; பூர்த்தி. Lines 4—6 in a page.

இது, கணித சாத்திரங்களுள் ஒன்று. இதனைச் செய்தவர் காரி என்பவர். இது 88-ம் நம்பரின் உட்பிரிவாகிய (*b*) போன்றது. இதைப்பற்றிய விவரங்களை அங்குக்காண்க.

**Beginning :**

[இக்க]ணக்கி லொன்று மிடையூறு வாராமல்
பொக்கணவன் பெற்ற பொருகளிறே—[இக்கண]க்கு
நேரே விளங்கி நிகரன்றி நிற்கும்வண்ணம்
பார்மேல் விளங்கவே பார்.

பொன்னி [நாட்டுப் பொருந்திய] புகழோன்
மன்னர் கோமான் மனுமுத லுடையோன்
முத்தமிழ் சேரும் முகரியம் பெரும்பதி
குற்றமில் காட்சிக் கொறுக்கையர் பெருமான்
புத்தன் புதல்வன் காரியென் பவனே.

**End :**

| | | | |
|---|---|---|---|
| இந்த 5760—ல் | 3-ல் | 1-க்கு | 1920 |
| | 5-ல் | 1-க்கு | 1152 |
| | 6-ல் | 1-க்கு | 960 |
| | 8-ல் | 1-க்கு | 720 |
| | 10-ல் | 1-க்கு | 576 |
| | 16-ல் | 1-க்கு | 360 |
| | | ஆக முத்து | 5688 |
| | மிஞ்சின கோவை முத்து | | 72 |
| | | ஆகமுத்து | 5760 |

இப்படிச் சொல்வது.

குறிப்பு :

இத்துடன் பாம்பு மந்திரமும் சனிபகவான் அகவலில் 2 ஏடும் கடைசியில் கோர்க்கப்பட்டுள்ளன.

---

**125. No. 679 கணக்கதிகாரம்.**

ஏடுகள் 32; பூர்த்தி. Lines 5—6 in a page.

இது, 678-ம் நம்பரைப்போன்றது. இதில் முதலில் 3 ஏடுகள் பாதியாக இருக்கின்றன.

---

**126. 680 கணக்கதிகாரம்.**

ஏடுகள் 74; அபூர்த்தி. Lines 4—6 in a page.

இது முன்பிரதி போன்றது. இதில், 1, 72, 73, 74, 75, 78 இந்த நம்பர் ஏடுகள் இல்லை.

---

## V நீதிகாவியம்

**127. No. 68 (*a*) திருக்குறள் பரிமேலழகர் உரையுடன்.**

ஏடுகள் 293; Lines 7—10 in a page.

இது சங்கமருவிய பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. நீதியைக்கூறுவது. குறள் என்னும் ஒருவகைப்பாவால் இயற்றப்பட்டிருத்தலின் குறள் எனப் பெயர் பெற்றது. ஏனைய நூல்களிலும் மேம்பட்டதாகலின் 'திரு' என்னும் அடைமொழி புணர்க்கப் பட்டது. அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என மூன்று பால்களாகவும் இல்லறவியல், துறவறவியல், அரசியல், அங்கவியல், ஒழிபியல், களவியல்,

கற்பியல் என ஏழு வியல்களாகவும் 133 அதிகாரங் களாகவும் வகுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு அதி காரமும் பத்துப் பத்துக் குறள் வீதம் 1330 குறள் வெண்பாக்களைக் கொண்டது. சுருங்கச்சொல்லி விளங்க வைக்கும் அழகும் எல்லாச் சமயத்தார்க்கும் ஒப்பக் கூறும் இயல்பும் அமைந்தது. இதற்கு முப்பானூல், உத்தரவேதம், திருவள்ளுவர், பொய்யாமொழி, தமிழ் மறை, தெய்வநூல், பொதுமறை எனப் பல பெயர் வழங்கும். இதனை இயற்றியவர் தெய்வப் புலமைத் திருவள்ளுவநாயனார் என்பவர். இவர், திருமயிலையில் வள்ளுவர் மரபிற் பிறந்தவராதலால் திருவள்ளுவர் எனப் பெயர் பெற்றார் எனவும், காவிரிப்பாக்கத்தில் வசித்திருந்த மார்க்கசகாயர் மகள் கற்புக்கரசியாகிய வாசுகியம்மையை மணந்து ஏலேலசிங்கன் என்னும் வணிகரிடம் நூல்வாங்கி நெசவுத் தொழில் செய்து இல்லறம் நடத்திக்காட்டினார் எனவும் கூறுவர். இவருக்கு தேவர், நாயனார், முதற் பாவலர், தெய்வப்புலவர், பெருநாவலர், என்னும் பெயர் களுமுண்டு. குறளையும் வள்ளுவரையும் கூலவாணிகன் சாத்தனார் என்னும் சங்கப்புலவர் மணிமேகலையில் எடுத்துச்சிறப்பித்தலால், இந்நூலாசிரியரது காலம் சங்ககாலம் என்று கொள்ளத் தக்கது. இதற்கு உரை செய்தவர் தருமர்முதல் காளிங்கர் ஈருகப் பதின்மராவார் அவருள் ஒருவராகிய பரிமேலழகர் செய்தது இவ்வுரை. இவர் தொண்டை நாட்டில், காஞ்சிபுரத்தில், வைணவ குலத்துப் பிறந்த வேதியர். வடநூற்புலமையும் தமிழ்ப் புலமையும் ஒருங்கமைந்தவர். இவருரையே, நூலிற் பரித்த வுரையெல்லாம் பரிமேலழகன் தெரித்தவுரை யாமோ தெளி, எனப் புகழ்ந்துரைக்கும் மேம்பாடுடை யது. குறளுக்கன்றி எட்டுத் தொகையுள் ஒன்றாகிய பரிபாடலுக்கும் இவர் உரை செய்திருக்கின்றனர். திருக் குறள் பரிமேலழகர் உரையுடன் அச்சிடப்பட்டுள்ளது.

திருக்குறள் அறத்துப்பால் மணக்குடவர் உரையுடன் இப்பொழுது அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning:**

திருவாக்குஞ் செய்கருமங் கைகூட்டுஞ் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கு—முருவாக்கு
மாதலால் வாணேரு மாணை முகத்தானைக்
காதலற் கூப்புவர் தங் கை.

ஆய கலைக ளறுபத்து நான்கினையு
மேய வுணர்விக்கு மென்னம்மை—தூய
வுருப்பளிங்கு போல்வாளென் னுள்ளத்தினுள்ளே
யிருப்பளிங்கு வாரா திடர்.

இந்திரன் முதலிய விறையவர் பதங்களு மந்தமி லின்பத் தழிவில் வீடும் நெறியறிந்தெய்துதற் குரிய மாந்தர்க் குறுதியென வுயர்ந்தோரா லெடுத்தோதுதற் குரிய பொருணான்கு. அவை அறம் பொருளின்பம் வீடென்பது. அவற்றுள் வீடென்பது சிந்தையு மொழியுஞ் சொல்லா நிலைமைத் தாகலிற் றுறவறமாகிய காரண வகையாற் கூறப்படுவதல்லது இலக்கணவகையாற் கூறப்படாமையி னூல்களாற் கூறப்படுவன வேனை மூன்றுமேயாம்.

* * * *

திருத்தகு தெய்வத் திருவள் ளுவர் தங்
கருத்தருமை யெல்லாங் கருதி—விரித்துரைத்தான்
பன்னு தமிழ்தேர் பரிமேலழகனெனு
மன்னு முயர்நாமன் வந்து.

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு

என்பது அகரமாகிய முதலையுடைய வெழுத்துக் களெல்லா மதுபோல வாதி பகவானாகிய முதலையுடைத்

துலகமென்றவாறு. இது தலைமைபற்றிவந்த வெடுத்துக் காட்டுவமை. அகரத்திற்குத் தலைமை விகாரத் தானன்றி நாத மாத்திரையாகிய வியல்பாற் பிறத்தலானு மாதிபக வற்குத் தலைமை செயற்கை யுணர்வானன்றி யியற்கை யுணர்வான் முற்று முணர்தலானுங்கொள்க. தமிழெழுத்துக்கேயன்றி வடவெழுத்திற்கு முதலாத ஞெக்கியெழுத் தெல்லா மென்ருர். ஆதிபகவனென்னும் பெய ரிருபெய ரொட்டுப் பண்புத்தொகை, வடநூன் முடிவு.

**End:**

ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின்.

எ-து. இதுவுமது. காமநுகர்ச்சிக்கின்பமாவ ததனை நுகர்தற்குரியராவார் ஆராமைபற்றித் தம்முளூடுத லவ் வூடுதற்கின்பமாவததனை யளவறிந்து நீங்கித் தம்முட் கூடிமுயங்குதல் கூடுமாயி னம்முயக்க மென்றவாறு. கூடுத லொத்த வுணர்வினராதல். முதிர்ந்து துனியாய வழித் துன்பம் பயத்தலானுந் தாமுணராத புலவியாய வழிக்கலவி யின்பம் பயவாமையானு மிரண்டிற் குமிடை யாகிய வளவறிந்து நீங்குத லரிதென்பது பற்றிக் கூடி முயங்கப்பெறி னென்ருன். அவ்விரண்டின்பமும் யான் பெற்றே னென்பதாம்.

அஃதேல் வடநூலா ரிவற்றுடனே சாபத்திஞனுய நீக்கத்தினையுங் கூட்டிப் பிரிவினை யைவகைத் தென்ருரா லெனின் அஃதறம் பொரு ளின்பமென்னும் பயன்களு ளொன்றுபற்றிய பிரிவன்மையானு முனிவரா னையா ஞெரு காலத்துக் குற்றத் துளதாவதல்ல துல கியல்பாய் வாராமையானு மீண் டொழிக்கப்பட்ட தென்பதாம். (10)

250. காமத்துப்பான் முடிந்தது.

**Colophon :**

வைகாசிமீ 10உ மாணிக்கவாசகன் புத்திரன் சிதம்பர நாதன் எழுதி முடித்தான். முடிந்தது முற்றும். திரு வள்ளுவப்பயன் பரிமேலழகியார் உரை முற்றும் முடிந்தது.

ஞானப்பிரகாசன் திருவடித்தாமரையே துணை.
கந்தப்ப தம்பினு மத்தத்திலுலே எழுதி முடிந்தது.

குறிப்பு:

இது பிழையில்லாத சுத்தப்பிரதி. பழமையானது. தலைப்புகளிற் சிதிலமாயிருக்கிறது. இதில் 37 முதல் 44 வரையில் ஏடுகள் இல்லை. அச்சுப்பிரதிக்கும் இதற்கும் பாடபேதம் காணப்படுகிறது. இத்துடன் கோக்கப்பட்டுள்ளது வேறு நூல்கள்.

---

**128. (*b*) பூசைத்திருவகல்.**
Lines 5—8 in a page.

இதுசிவபூஜை செய்யும் விதம் கூறுவது. இதனை இயற்றியவர் கமலை ஞானப்பிரகாச பட்டாரகர். இது அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning:**

ஓசைச் சிவாகத்தி னுள்ளபடி கண்டமைத்த
பூசைத் திருவகவல் போற்றவே— யாசில்
பொருணயமுஞ் சொல்நயமும் போதத்து ணல்குங்
கருணைமத வாரணமே காப்பு.

பூங்கம லத்தயன் புண்டரி கக்கணன்
ஈங்கிவர் காணரு மிலிங்கம தாய
சங்கரன் றன்னைச் சாத்துதல் புரிவோ
ரங்கவன் றென்பா லாசனத் திருந்தே

யாச மனஞ்செய் தருங்கர நியாசமு
நேசமோ டங்க நியாசமுஞ் செய்து.

*　　*　　*　　*

**End :**

சொற்றமி ழகவலில் சொல்லல் வேண்டுமென
நற்றவ னுலக நாயகன் விளம்பச்
சிற்குண னுரைத்த சிவாகம நோக்கி
நற்கம லையில்வாழ் ஞானப்பிர காசன்
சொல்லிய பூசைத் தொகையினைப் பழுதற
வல்லவர் வீடுற வல்லவர் தாமே.

பூசையகவல் முற்றும்.

---

129. (*c*) முத்திரை இலக்கணம்.
Lines 7—8 in a page.

இது சிவபூசைக்கு அங்கமாகிய முத்திரைகளின் இலக்கணத்தை உணர்த்துவது. 29 சூத்திரங்கள் இருக்கின்றன. அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning :**

மண்டுநீர் பிடித்த வலக்கையை யிடக்கரங்
கொண்டுமேல் வளைப்பது கும்பமுத்திரையே. (1)

**End :**

பெறுகரங் கோத்தபின் பெருவிரல் நடுவிரல்
சிறுவிரல் நிமிர்ப்பது திரிசூல முத்திரையே. (29)

---

130. No. 69 (*a*) திருக்குறள்
பரிமேலழகர் உரையுடன்.
ஏடுகள் 239; Lines 9—13 in a page.

இது 68-ம் நம்பரைப் போன்றது. உரையுடன் முழுவதும் இருக்கிறது.

குறிப்பு :

மேற் பிரதிபோலவே ஆரம்பத்தில் 'திருவாக்கும்' 'ஆயகலைகள்' என்னும் செய்யுட்கள் எழுதப்பட்டிருந்தலோடு

ஒருமுருகா வென்றெனுள்ளங் குளிர வுகந்துடனே
வருமுருகா வென்று வாய்வெருவா நிற்பக்கையிஞ்ஞனே
தருமுருகா வென்று தான்புலம்பா நிற்கத்தையல்
முன்னே
திருமுருகாற்றுப் படையுடனே வருஞ்சேவகனே.

என்கிற செய்யுளும் எழுதப்பட்டிருக்கிறது.
காமத்துப்பால் முற்றும்.

கடைசியில்.

திருத்தகுசீர் வள்ளுவன் தெய்வப் பயனின்
கருத்தமை வெல்லாம் கருதி—விரித்துரைத்தான்
பன்னு தமிழ்தேர் பரிமே லழகனென
மன்னு முயர்நாமன் வந்து.

ஓரா தெழுதினே னுயினு மொண்பொருளை
யாராய்ந்து கொள்க வறிவுடையோர்—சீராய்ந்து
(குற்றங்) களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.

அற மறவற்க. அறமல்லது துணையில்லை.
ஆண்பாலே ழாறிரண்டு பெண்பா லவர்தம்மிற்
பூண்பா லிருபாலோ ராருகு—மாண்பமைந்த
காமத்தின் பக்கமொரு மூன்ருகக் கட்டுரைத்தார்
நாமத்து வள்ளுவனுர் நன்கு.

என்னும் செய்யுட்கள் எழுதப்பட்டுள்ளன.

---

131. (*b*) திருவள்ளுவமாலை.
Lines 9—10 in a page.

இது, குறளின் பெருமையைக்கூறும் சிறப்புப் பாயிரம். இதிற் பல புலவர்கள் இயற்றிய 50 செய்யுட்களிருக் கின்றன. இம்மாலை, நூலாசிரியர் காலத்திலே இயற்றப் பட்ட தன்றெனப் பலரும் கூறுகின்றனர்.

**Begining :**

நாடா முதனூன் மறைநான் முகனாவிற்
பாடா விடைப்பா ரதம்பகர்ந்தேன்—கூடாரை
யெள்ளிய வென்றி யிலங்கிலை வேன்மாற
வள்ளுவன் வாய (தென்வாக்கு). (1)

**End :**

வெள்ளி வியாழன் விளங்கிரவி வெண்டிங்கள்
பொள்ளென நீக்கும் புறவிருளைத்—தெள்ளிய
வள்ளுவரின்குறள் வெண்பாவிவ் வையகத்தா
ருள்ளிரு ளோட்டு மொளி. (50)

ஆசிரியர் நல்லந்துவனார்

**Colophon :**

ஹரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை.

விகாரி-ஞு மாசி-மீ 29-உ திருக்குராச்சேரியில் ததீ யனுடைய எல்லாறது நாயினார் வளவிலிருந்து வாத்தி யார் வில்லவனம் எழுதிமுடிந்த திருவள்ளுவர் முற்றும்.

குருபாதம் துணை.

---

132. No. 70 திருக்குறள் மூலம்.
ஏடுகள் 133; Lines 5 in a page.

இதில் திருக்குறள் மூலபாடமட்டும் முழுவது மிருக்கிறது. பிழையதிகமாயிருக்கின்றன.

**Beginning :**

ஆயிரத்து முன்னூத்து முப்ப தருங்குறளும்
பாயிரத்தி னேடே பகர்வீரேற்—(போயொ)ருத்தர்
வாய்க்கேட்க வேணுமோ மன்னு தமிழ்ப்புலவ
ராய்க்கேட்[க வீற்றிரு]க்க லாம்.

எண்ணிய வென்றியாங் கெய்துப கண்ணுதற்
பவள மால்வரை பயந்த
கவள யானேயின் கழல்பணி வோரே.

அத்தி முகத்
துத்தமனே
நித்த நினே
சித்தமே.

தவளத் தாமரைத் தாதார் கோவி
லவளைப் போற்றி யருந்தமிழ் குறித்தே.
ஒற்றை மருப்பன் கழல்வணங்கி யோதுவினேப்
பற்றறுக்கும் வள்ளுவர்முப் பா:

கடுகைத் துளைத்து எழுகடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்.

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே உலகு. (1)

**End :**

ஊடுதல் காமத்துக் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின். *(1330)*

---

133. No. 71 திருக்குறள் மூலம்.
ஏடுகள் 29; **Lines 5—6 in a page.**

இதில் முதலிலிருந்து 29 அதிகாரங்கள் மட்டும் இருக்கின்றன.

---

134. No. 72. திருக்குறள் மூலம்.
ஏடுகள் 133 ; Lines 5 in a page.

இதில் மூலப்பாடம் 70ஆம் நம்பரைப்போல முழுவதும் இருக்கிறது. சிதிலமாயிருக்கிறது.

---

135. No. 74 திருக்குறள் மூலம்.
ஏடுகள் 133 ; Lines 5 in a page.

இது 72 ஆம் நம்பரைப் போல முழுவதும் இருக்கிறது.

---

136. No. 75 திருக்குறள் மூலம்.
ஏடுகள் 133 ; Lines 5 in a page.

இது, 74 ஆம் நம்பரைப்போல முழுவதும் இருக்கிறது. சிதிலமாகவுமிருக்கிறது.

குறிப்பு : திருவள்ளுவர் துகை

அறத்துப்பால் அதிகாரம் 38க்கு 380
பொருட்பாலதிகாரம் 70க்கு 700
காமத்துப்பாலதிகாரம் 25க்கு 250
ஆக முப்பாலதிகாரம் 133க்கு குறள் 1330.

எழுதி முடிந்தது முற்றும்.

திருச்சிற்றம்பலம்.

---

137. No. 77 திருச்குறள்
பரிமேலழகர் உரையுடன்.
ஏடுகள் 320 ; Lines 6—9 in a page.

இது 68ஆம் நம்பரைப்போன்றது. பாயிரமுதல் உரையுடன் இருக்கிறது. அதிக சிதிலமாயிருக்கின்றது.

---

## 138. No. 331 B திருக்குறள் மூலம்.
ஏடுகள் 68 ; Lines 10 in a page.

இது 75ஆம் நம்பர் போன்றது. முழுவது மிருக்கிறது.

---

## 139. No. 693 (a) திருக்குறள் அதிகார அடைவு.
ஏடுகள் 112 ; Lines 4—5 in a page.

இது திருவள்ளுவநாயனர் இயற்றிய திருக்குறள் முப்பாலுள் ஒவ்வொருபாலும் இத்தனை அதிகாரம் உடையது, அவை இன்னின்னவை என நூற்பாவால் அடைவு படுத்துக் கூறுவது. ஆசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை. இது அச்சிடப்படவில்லை.

**Beginning :**

அறத்துப்பான் முப்பத் தெட்டவை தன்னுட்
பாயிர நான்கில் லறமிரு பத்தோ
டோதிய துறவற மொருபதின் மூன்று
மேதமி லூழொன் றெனவிசைத் தனரே.

பொருட்பா லெழுபதி லரசிய லையைந்
தமுக்கி லமைச்சிய லவையீ ரைந்தா
மரணிரண் டொருகூ ழடற்படை யிரண்டு
படர்தரு நட்புப் பதினே ழாகுங்
குடிமைபன் மூன்றெனக் கூறினர் புலவர்.

காமத் துப்பால் கருதிருபத் தைந்ததி
லேமுறு மாண்பா லேழவை யன்றிப்
பெண்பா லாறிரண் டாம்பொது விருமூன்
றன்பா னூற்று முப்பத்துமூன் றவையே.

* * * *

அறப்பான் முப்பா னெட்டவை தன்னுள்
மறைப்பொருட் கடவுள் வாழ்த்துவான் சிறப்பு
நீத்தார் பெருமை யறன்வலி யுறுத்தலென்
றுர்த்த நான்கு மறப்பாற் பாயிரம்.

**End.**

பொதுவதி கார மிருமூன் றவைதான்
குறிப்பறி வுறுத்தல் புணர்ச்சி விதும்பல்
நெஞ்சொடு புலத்தல் நீங்கரும் புலவி
புலவி நுணுக்க மூட லுவகையென்
றலகினு லறிஞ ரறைந்தன ரிவையே.

---

## 140. (*b*) கோயிற் புராணம்.

Lines 4 in Page.

இது 287 *b* நம்பர் போன்றது. இதில், வியாக்கிர பாதச்சருக்கம் 4வது செய்யுளிலிருந்து முடிய இருக்கின்றது. இதனை இயற்றியவர் தில்லைவாழந்தணருள் ஒருவராகிய உமாபதி சிவாச்சாரியார்.

**Beginning:**

,..........................................முளதவற்றில்
ஏலத்தா னடமார விடங்கொண்ட வெழிற்றில்லை
மூலத்தானத் தொளியாய் முளைத்தெழுந்த சிவலிங்கக்
கோலத்தா னின்பூசை கொள்வானென் றுரைசெய்து.
(4)

**End :**

'சொற்று னுறு பொருளாற்றல், என்னும் செய்யுள் முடிய இருக்கிறது.

---

## 141. (*c*) சட்டைநாதர் தோத்திரம்.

Lines 3—4 in a Page.

இது, சீகாழியின்கண் கோபுரத்தில் வீற்றிருக்கும் சட்டைநாத சுவாமி தோத்திரம். இதில் விருத்தம் கலித்

துறை வெண்பா வென்னும் மூன்று பாக்களும் விரவிவந்
துள்ளன.

**Beginning :**

சிங்காதனத்தி நம் மூகாம்பியென்னத் திருவுக்கொண்
டங்கா தரவுடன் கொச்சையின் மேவியடியவர்தம்
பங்காகவந்து வரங்கொடுக்கின்ற பரிசறிந்தேன்
சங்கக் குழைச்சடை நாதா அகுதி தயாபரனே. (1)

எடுத்தகைவாளும் பிடித்தகைத் தண்டும் இரத்தின
சிங்கா தனச்சிறப்பும்
கடுத்தரித் தகிலம் புரந்தகந் தரமுங் கனவிலு நனவிலு
மறவேன்
பொடித்த சந்திரனை முடித்த நாயகனே பூத வேதாள
நாயகனே
தடுத்தெனை யடிமை கொண்ட நாயகனே சண்பை
வாழ் சட்டை நாயகனே.

காவற் கடவுள் கமலா லயன்முதலாந்
தேவர்க்கும் வாழ்வு சிதையாமல்—யாவர்க்கும்
மிக்கவனே வேலைதனில் வெவ்விடத்தை
தக்கவனே சட்டை நாதா. [யுண்டருளத்

**End:**

வருமோ வினைகள் (வராது) வந்தாலும் வருத்தஞ்சற்றும்
தருமோ தராது சலசமம் போலவுந் தான்மருவும்
பெருமோகச் சங்கக் குழைக்காதனன்பர் பிழைபொறுத்
தோன்
அருள்மேவு காழிமலைச்சட்டை நாதனடிய[வர்க்கே].
(28)

---

**143.** *(d)* தனிப்பாடற்றிரட்டு.
Lines 3—5 in a page.

இதில் பல புலவர்கள் பல சந்தர்ப்பங்களில் பாடிய செய்யுட்கள் தொகுக்கப்பட்டுள்ளன, இவைகளில் அச்சிடப்பட்டவைகளே யன்றி அச்சிடப்படாத செய்யுட்களும் இருக்கின்றன.

**Beginning :**

தூசுதூ சாக்குவான் பாவை துணைவளைக்கை
யாசில் புகழ்க்கண்டி யூரணங்கைப்—பேசுங்கால்
கண்ணங்கை கொங்கைமுகங் காலுங் கடிக்கமலங்
கண்ணங்கை கொங்கைமுகங் கால்.

* * * *

கோரத்துக் கொப்போ கனவட்ட மம்மானை
கூறுவதுங் காவிரிக்கு வைகையோ வம்மானை
வீரற்கு நிகராவான் மீனவனே வம்மானை
வெற்றிப் புலிக்குநிகர் மீனமோ வம்மானை
யாருக்கு வேம்புநிக ராகுமோ வம்மானை
யாதித்தனுக்குநிக ரம்புலியோ வம்மானை
யூரும் புகார்க்கு நிகர் கொற்கையோ வம்மானை
யொக்குமோ சோணாட்டைப் பாண்டிநா டம்மானை.

* * * *

காளத்தி காளத்தி யென்னாத கன்னெஞ்சே
காளத்தி காளத்தி காண—காளத்தி
யென்கையிலே யென்கையிலே யென்கையிலே
யென்கையிலே
யென்கையிலே யென்கையிலே யென்.

**End :**

வாருடைப் பிடிங்கி மூடி வல்லிளங் கொங்கைமீது
நீருடைக்கண்கள்பாய நேரிழை யொருத்தி சென்று

ஆருடனகலச் சென்று ஆனனைத் தழுவிக்கொண்டா
ளாரெனு மறிகிலேனே யம்பலத்திசயமென்னீர்.

குறிப்பு :

பாட்டின் முதற் குறிப்பெழுதிய மூன்று ஏடுகள் கடைசியில் சேர்க்கப்பட்டுள்ளன.

---

143. No 78 நாலடியார் உரையுடன்.
ஏடுகள் 258 ; Lines 5—10 in a page.

இதுவும் பதினென் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்ருகும். நீதியை யுணர்த்துவது. திருக்குறளைப்போல அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று பகுப்பினைக் கொண்ட 40 அதிகாரங்களையும், அதிகாரம் ஒன்றுக்குப் பத்துப் பத்து வெண்பாவாக 400 வெண்பாக்களையும் உடையது. இதனைப் பாடியவர் எண்பெருங் குன்றத் திருந்த எண்ணுயிரம் சமண முனிவர்கள் என்பதும் அவர் பாடிய அச் செய்யுட்களை வையை யாற்றில் இட்டபோது அவற்றுள் எதிரேறிய 400 செய்யுட்களே இந்நாலடி வெண்பா நானூறும் என்பதும் 82-ம் நம்பரின் கடைசியில் எழுதப்பட்டுள்ள "எண்பெருங் குன்றத்து ளெண்ணுயிர முனிவருஞ் செய்த வையை யாற்றுக் கெதிராக நடந்த நாலடி நானூறும் முற்றும்" என்னும் வாக்கியத்தால் அறியக்கிடப்பினும் பொருத்த முடையதாகக் காணப்படவில்லை. சம்பந்தர் காலத்து நடந்தவற்றை ஒட்டி நிற்கின்றது. இந்தப் பிரதியில் சிதிலமதிகமாயிருக்கின்றது. இது உரையுடன் அச்சிடப்பட்டிருக்கிறது.

மாலின் மருகா மதகளிறே மா... .........
... ... ... ... ...வேன்—சாலவே
நாலடி நா னூறு நளுவாமல் என் மனத்தே
சீலமுட னிற்கத் தெளி.

சீல முனிவ ரிருந்து தெரிந்துரைத்த
நாலடி நானூற்றின் நற்பொருளைப்—பால்வகையே
கண்டான் பொருடான் பயனுரைத்தான் காதலித்துத்
தண்டார்ப் பொறைத் தருமன் தான்.

வெள்ளான் மரபுக்கு வேதமெனச் சான்ருேர்கள்
எல்லாருங் கூடி யெடுத்துரைத்துச்—சொல்லாய்ந்த
நாலடி நானூறும் நன்கிதா யென்மனதே
சீலமுட னிற்கவே செப்பு.

இவை முன்னேட்டில் எழுதப்பட்டுள்ளன.

**Beginning :**

வானிடு வில்லின் வரவறியா வாய்மையாற்
கானிலந் தோயாக் கடவுளை—யானிலஞ்
சென்னி யுறவணங்கிச் சேர்துமெம் முள்ளத்து
முன்னி யவைமுடிக வென்று.

என்பது வானிடு வில்லின் வரவறியா வாய்மை யால்—வானின் கண்ணே தோன்றிய வில்லினது தோற்றமு மிழப்பு மறியவரிது. அது போன்ற பிறப்பின் தியல்பையு மறியவரிது, இது உண்மையாதலால். கானிலந் தோயாக் கடவுளை—நிலத்தின் கண்ணே கால் தரியாத தோர் கடவுளை. யானிலஞ் சென்னியுற வணங்கி—யாம் நிலத்தின்கண்ணே சென்னி முதலாகிய வெட்டுறுப்புகளு மழுந்தும்படி...... வணக்கஞ்செய்து சேரக்கடவோம். எம் முள்ளத்து முன்னியவை முடிக வென்று மனத்து நினைவு யாதெனின் மாயையாகிய விப்பிறவி மாறும்வகை. வானிடு வில்லின் வரவறியா வாய்மையாலென்றதினுலே பிறப்பு மிறப்பும் யாவர்க் குந் தெரியாத துண்மை யெனக் கொள்வதெப்படியோ வெனில் அவையொருதலை விளக்க மென்னு மிலக்கண விதியால்,

**End :**

தலைவரைச் செலுத்தலாகிய வழியில்லையாயினிவை களாற் செய்யும் வருத்தமுமில்லை நமது தலைவரால் வந்த வருத்தமன்றி இவ்வகைத்தாலாய வருத்தமல்லவென்று கூறுதுபோற் கூறியதாம். இது பிரிவாற்றுத தலைமகள் தோழிக்குரைத்தது.

ஓராதே யானுரைத்தே னுயினு மொண்பொருளை
யாராய்ந்து கொள்வ ரறிவுடையார் —சீராய்ந்து
(குற்றங்) களைந்து குறைபெயர்த்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்

நாலடியார் எழுதி முடிந்தது முற்றும்.

**Colophon :**

வெற்றி வேலுற்ற துணை.
சுபானுஹூ சித்திரை மாதம் 25வ

அம்பலவாணன் றிருவடி வாழ்க. ரெகுநாயகன் திருவடி வாழ்க.

குறிப்பு :

இதில் முழுவதும் இருக்கிறது. இவ்வுரை சிறந்த தாகக் காணப்படுகிறது. 'சீல முனிவர்' என்னும் செய்யுளில் 'கண்டான் பொருடான் பயனுரைத்தான் காதலித்துத்—தண்டார்ப்பொறைத் தருமன் தான்' என வந்திருப்பதைக் கொண்டு இவ்வுரை செய்தவர் தருமன் என்பவர் என்று ஊகிக்கலாம். இவ்வுரை அச்சிடப் படவில்லை.

---

144. 79 நாலடியார் உரையுடன்.
ஏடுகள் 117 ; Lines 5—8 in a page.

இதுவும் முன் பிரதியைப் போன்றது.

இதிலுள்ள உரை 78ம் நம்பர் உரையினும் வேறு பட்டது.

**Beginning :**

ஆக இரண்டுரையு முன்னே போட்டுக்கொண்டு பதவுரைப்படி முன்னும் மொழிப்புரைப்படி பின்னுமாக வெழுதினது, செல்வ நிலையாமை இளமை நிலையாமை யாக்கை நிலையாமை யென்னு மதிகார வடைவுகளுக்கு மலைவா மஃதாவது யாதோவென்னின், முன்பு யாக்கை யுளதாய நிலையாமை யுணர்த்தி யது நின்றபி னிளமை நிலையாமையுணர்த்தியபின் அந்த விளமைப் பருவத் திலே முயன்றுண்டான செல்வத்தினிலையாமை யுணர்த்த வேண்டாமோ வென்னின் யாக்கைக்கு வயது நூறென்று மிளமைப்பருவத்து வயது முப்பத்திரண் டென்றும் ஒரு நியமங்களுண்டோ வென்னில் ...ன்று, இந்த செல்வத்துக்கு இத்தனை நாள் நிற்குமென்று அறுதியில்லாமையா லிப்படி யறுதி யில்லாத செல்வம் வந்தெய்திய பொழுதே மறுமைக்குறுதியான வறங் களைச் செய்யவேணு மென்றற்கு முன்பு செல்வ நிலையா மையை வைத்து... ..... ......

அறுசுவை யுண்டி யமர்ந்தில்லா ளூட்ட
மறுசிகை நீக்கியுண் டாரும்—வறிஞராய்த்
சென்றிரப்ப ரோரிடத்துக் கூழெனிற் செல்வமொன்
றுண்டாக வைக்கற்பாற் றன்று.

எ—து. அறுசுவை யுண்டி—அறுசுவையாகிய உண் டியை, அமர்ந்தில்லாளூட்ட-விரும்பி மனையா ளூட்ட, மறுசிகை நீக்கியுண்டாரும்—கறி சோறு முற்சிகை நீக்கி உண்டாரும். வறியராய்ச் சென்றிரப்ப ரோரிடத்துக் கூழெனில்—வறியராய் தாம் இருந்தவிடத்திலே தானே சென்று கூழையிரப்பர், செல்வமொன்றுண்டாக வைக் கற் பாற்றன்று-செல்வ மென்பதொன்று நிலையுண்டாக வைக்கும் பகுதியுடைத்தல்ல வென்றவாறு. அல்லதூ உம். அறு சுவை என்றது—கைத்தல் புளித்தல் காழ்த்தல்

உவர்த்தல் துவர்த்தல் தித்தித்தல். மறுசிகை—முன்னிட்ட சோறு. ஓரிடமென்றது முன்பு வாழ்ந்த இடந் தன்னிலே யிரத்தல். உண்டாரும் என்னும் உம்மை அங்ஙனம் செல்வச் செருக்கை உடையாரு மென்னும் சிறப்புர்மை. அயர்த்தல்—பொருந்திய வென்றுமாம்.

**End :**

ஆர்த்த பொறிய வணிகிளர் வண்டினம்
பூத்தொழி கொம்பின்மேற் செல்லாவா—நீர்த்தருவி
தாழா வுயர்சிறப்பிற் றண்குன்ற நன்னுடை
வாழாதார்க் கில்லை மதி.

எ—து. இயாப்புப் பொறிகளையுடைய அழகுமிக்க வண்டினம் பூத்தொழி கொம்பின்மேற் செல்லாவாகும். நீர்த்தருவி தாழாவுயர் சிறப்பிற் றண்குன்ற நன்னுடனே செல்வமுடையாராய் வாழாதார்க்குத் தமரில்லை யென்ற வாறு. ஆர்த்த பொறிய வணிகிளர் வண்டினம் நிலை பெற்ற பொறியை அணியாகவுடைய கிளர்ந்த வண்டினம். நீர்த்தருவி தாழா உயர் சிறப்பிற் றண்குன்ற நன்னுடனே—மிகவும் அருவி விடாமலொழுகுங் குளிர்ச்சி பொருந்திய மலை சூழ்ந்த குறிஞ்சி நிலத்திற் றேழனே என்பாருமுளர். (290)

மானம் அஃதாவது எவ்விடத்து மானம் சிதையாமற் காத்தொழுகுதலும் இயாதொரு வகையினாலும் காக்க முடியாது சிதையும்படி வரிற்றம் பிராணனை விட்டு மானத்தைக் காப்பதூஉமாகிய இயல்பு கூறப்பட்ட தென்றவாறு.

குறிப்பு :

இதில் முதலிலிருந்து 29 அதிகாரங்கள் மட்டும் உரையுடன் இருக்கின்றன. இவ்வுரையும் அச்சிடப் படவில்லை.

---

**145.** No. 80 நாலடியார் பதுமனார் உரையுடன்.

ஏடுகள் 115; Lines 5 in a page.

இவ்வுரை 78, 79 நம்பரிலுள்ள உரைகளிலும் வேறானது. சிதிலமாயிருக்கின்றது.

**Beginning :**

அறியாவென வறிந்தென்பதாயிற்று. வாய்மையாலென்றது, இறை.........ப் பொய்யாக வணங்க வேண்டுவதின்மையின். பிறப்பியல்பை.........என்பதாம். கானிலந்தோயாக் கடவுளை என்பது கடவுளரோடொத்தாருமிக்காரு மில்லாத விறைவற்கு கானிலந் தோயாமை சிறப்பில்லாமை......யவியல் பொன்றையுமே யிவற்குக் கூறும் பான்மை யல்லாமையும் பூவின்.

**End :**

தோணி யியக்குவான் றொல்லை வருணத்துக்
காணிற் கடைப்பட்டா ரென்றிகழார்—காணா
யவன் றுணையா லாறுபோ யற்றேநூல் கற்ற
மகன் துணை யாநூல் கொளல்.

எ–து. பழைய சாதிகளுள்ளாராயிற் றோணியைச் செலுத்துவான் கடைப்பட்டானென்று மற்றவனை யிகழாதவனே துணையாக சித்தமாகிய வாறுகளைக் கடந்து போவதே போலுமாற் காணாய் நூல்கற்ற மகன் றுணையாக நல்ல பொருளை மனத்தானறிந்து கொண.

குறிப்பு :

இதில் காப்புச் செய்யுள் உரையில் சிலபாகந்தவிர முதலிலிருந்து 14வது அதிகாரத்தில் 6ஆம் செய்யுள் உரையில் ஒரு பாகம் வரையில் இருக்கிறது. இவ்வுரையும் அச்சிடப்படவில்லை.

**146. No. 82 (*a*) நாலடியார் மூலம்.**

ஏடுகள் 89; **Lines 5—8 in a page.**

இதில் மூலமட்டும் முழுவதும் இருக்கிறது. சிதைந்துள்ளது.

**Beginning :**

வானிடு வில்லின் வரவறியா வாய்மையாற்
கானிலந் தோயாக் கடவுளை—யா நிலஞ்
சென்னி யுறவணங்கிச் சேர்து (மெ)ம் முள்ளத்து
முன்னி யவைமுடிக வென்று.

வெள்ளான் மரபுக்கு வேதமெனச் சான்றோர்கள்
எல்லாருங் கூடி எடுத்துரைத்துச்—சொல்லாய்ந்த
நாலடி நானூறு நன்கினிதா யென்மனத்தே
சீலமுட னிற்கவே செய்.

பரங்குன் றெரு.........மபப்பராம் பள்ளி
யிருங்குன்றம் பேராந்தை யானை—யருங்குன்ற
மென்றெட்டு வெற்பு மெடுத்தியம்ப வல்லார்க்குச்
சென்றெட்டுமோ பிறவித் தீங்கு.

**End :**

கண்மூன் றுடையானுங் காக்கையும் பையரவு
மென்னீன்ற யாவும் பிழைத்ததென்—பொன்னீன்ற
கோங்கருப் பன்ன முலையாய் பொருள்வயிற்
பாங்கனார் சென்ற நெறி. (10)

ஆக. 400.

எண்பெருங் குன்றத்து ளெண்ணுயிர முனிவருஞ் செய்த வைகையாற்றுக் கெதிராக நடந்த நாலடி நானூறும் முற்றும்.

**Colophon :**

அழகியநாதர் அபிராமி துணையாக வேணும். திருச் சிற்றம்பலம். வெகுதானிய-ஸ்ரீ ஆனி-மீ 20-உ ஆதி வார நாள் காஞ்சிபுரத்துக்கு மேற்கு காவேரிப்பாக்கத்துக்குக் கிழக்கு மூணு நாழி வழியிலே கருவிடுகளத்தூர் திருவேங்கட பிள்ளை குமாரன்.........பொன்னம்பலத்தா பிள்ளை கருப்பூர் வேளா பிள்ளை குமாரன் வயித்தினாத பிள்ளை எழுதிக் கொடுத்த நாலடி தேவர் எழுதி முடித்தான். அது அறியவும்.

குறிப்பு :

இப்பிரதியின் தலைப்பிலும் அதிகார அடைவு கூறுமிடத்திலும் இதனை எழுதியவர் இன்னவர் என்றுரைக்கும் இடத்திலும் நாலடிதேவர் என்று எழுதப்பட்டிருத்தலால், நாலடியார்க்கு நாலடித்தேவர் என்று பெயரிருந்ததாகத் தோற்றுகிறது.

---

147. (*b*) சீவகசிந்தாமணி மூலம்.

Lines 6—7 in a Page.

இது '44-ம் நம்பர் பிரதிபோன்றது. இதில் காந்தருவ தத்தையார் இலம்பகமாத்திரம் இருக்கின்றது. இதைப்பற்றிய விவரங்களை 144-ம் நம்பரில் காண்க.

**Beginning :**

இங்கிவர்க ளிவ்வா றிருந்தினிது வாழச்
சங்குவரு நீணிதியஞ் சாலவுடை நாய்கன்
பொங்குதிரை மீதுபொரு மால்களிறு போன்றோர்
வங்கமொடு போகிநிதி வந்துதர லுற்றான். (1)

**End :**

குங்குமமுஞ் சந்தனமுங் கூடியிடு கொடி......
வெங்கணிள முலையின் மிசை யெழுதி விளையாடிக்

கொங்குண்மலர்க் கோதையொடு குரிசில்செலும் வழிநா
ளங்கணகர்ப் பட்டபொருளாகியதை மொழிவாம். (360)
காந்திருவதத்தையாரிலம்பகம் முற்றும்.

**Colophon :**

சுக்கில-ஞு மாசி-மீ 2-உ புதவாரநாள் திருவேங்
கடம் எழுதினது.

---

148. No. 334 (*a*) கலியுகமாலை.

ஏடுகள் 14 ; Lines 4 in a page.

இது கலிகாலத்தில் நடக்கும் அநீதிகள் பலவற்றைத் தொகுத்து விளக்குவது. முதல் இரண்டு ஏடுகளில்லை. மற்றைப்பாகத்தும் சிற்சில இடத்தில் சிதைந்திருக்கிறது. இதில் 26 பாடல்களிருக்கின்றன. ஆசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை. சாதாரண நடை. அச்சிடப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை.

**Beginning :**

.........யைக் கெடுக்குங்காலம் அகுதியுடவுடமைபறித்
தக்குங்காலம்
கண்டறிய உடமையிட்டு மினுக்குங்.........
கலிகாலங் காணுமிந்தக் காலந்தானே—(6)

குண்டணியள் யிச்சை சொல்லி நடக்குங் காலங்
குருபாதம் பணிந்துதுதி கூறுக் காலம்
பெண்டுகள் பேச்சே மிகவுங் கேட்குங்காலம்
பிராமணரை உதாசனித்துப் பேசுங்காலம்
தொண்டுபண்ணப் பெரியோரென் றுரைக்குங் காலம்
சூதுபண்ணித் திரிவாரைத் துடருங் காலம்
கண்டுபிடித்தாலில்லையென்று சொல்லுங்காலம்
கலிகாலங் காணுமிந்தக் காலந் தானே. (7)

**End :**

இடங்கொடுத்த வீட்டில் ரண்டு நினைக்குங் காலம்
எல்லையில்லா எல்லை கட்டி யிறக்குங் காலம்

உடம்பிடியாய் எவரெவர்க்கும் உரையாக்காலம்
உத்தண்ட மாயடித்தே ஓட்டுங்காலம்

படம்விரிக்கும் பாம்புதன்னை அடிக்குங்காலம்
பலஸ்திரியைப் பெண்டெனவே படைக்குங்காலம்

கடன்படுத்தித் திரிவாரோ டிணங்குங்காலம்
கலிகாலங் காணுமிந்தக் காலந்தானே. (26)

மகா கணபதி துணையுண்டு. வெங்கடாசலமய்யன் கலியுக்மாலை படித்து வளர்கின்ருன். ஸ்ரீராமசெயம்.

---

149. (*b*) சீராமன் தாலாட்டு
Lines 3 in a Page.

இதில், இருபத்துநான்கு கண்ணிகளே இருக்கின்றன. செய்தவர் பெயர் தெரியவில்லை. அபூர்த்தி அச்சிடப்பட்டுள்ளது.

**Beginning :**

சீராமன் தாலாட்டைச் செப்பமுடன் நாம்பாடக்
காரானை மாமுகத்தோன் காப்பு.

அன்று மிகுத்த அயோத்தி யென்னும் பட்டணத்தே
சென்றங் கவதரித்த திருமாலைச் சொன்ருரோ (1)

தெள்ளுதமிழ்க் கொண்டாடுஞ் சீராமன் தெசரதற்குப்
பிள்ளைவிடாய் தீர்த்த பொருமானைச் சொன்ருரோ (2)

**End :**

.........றும் அரக்கர் பதிதானழியக்
கும்பகர்ணன் தன்னுடலைக் கொடுஞ்சரத்தா லெய்தா
ஞே (23)

மிமையவருந் தற்சூழ
வந்துமயோத்தி தனில் மகுடமுடி சூடினனே (24)

150. No. 337 தினகர வெண்பா.

ஏடுகள் 26; Lines 6 in a Page.

இது, முன்னிரண்டடிகளில் நீதியையும் பின்னடிகளில் வள்ளுவர் குறளையும் அமைத்துக் கோவைநகர்த் தினகரன் என்பவனை முன்னிலையாக்கிச் சொல்லும் நீதிநூல். இதில் காப்புச் செய்யுளை யல்லாமல் 116 வெண்பாக்கள் இருக்கின்றன. கோவைநகர் கோயம்புத்தூர். தினகரன் என்பவன் ஒரு கொடையாளி. இந்நூல் அச்சிடப்படவில்லை.

**Beginning :**

முன்பாதி புஞ்சொல் முழுத்தமிழின் பின்பாதி
யின்பாந் தினகரனை இங்கிதஞ்செய்-என்பாவில்
வள்ளுவர்வெண் பாக்குறளை வைப்பதற்கென் குற்ற
மெல்லாந்
தள்ளுவதா னைப்பெருமாள் தான்.

கடவுள் வாழ்த்து

உத்தமநூல் கற்று முமாபதிக் கன்பில்லாச்
சித்தருனக் கொவ்வார் தினகரா—எத்தனையுங்
கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவ
னற்ருடொழா அ ரெனின். (9)

பிரிவாற்ருமை

தற்பரனை யாறு சமயத்தையுங் கடந்த
சிற்பரனைப் போற்றுந் தினகரா—எற்பிரிந்து
செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை. (116)

---

151. No. 375 தினகர வெண்பா.

ஏடுகள் 12; அபூர்த்தி. Lines 3—4 in a page.

இதுவும் முன்பிரதிபோன்றது. இதில் 43 செய்யுட்களே இருக்கின்றன.

---

152. No. 348 நீதிசாரம் உரையுடன்.

ஏடுகள் 46; அபூர்த்தி. Lines 4—5 in a page.

இது வடமொழியிலுள்ள நீதிசாரத்தின் மொழி பெயர்ப்பு. விருத்தப்பாவில் செய்யப்பட்டுள்ளது. செய்யுள் நடை சிறந்ததன்று. இதனை இயற்றியவர் மூக்கப்பன் என்பவர். இதில் 97 செய்யுட்கள் உரையுடனிருக்கின்றன. பிழைகள் அதிகமாயிருக்கின்றன.

**Beginning :**

பருதி மதியிலகும் பார்மிசையோர்க் கெல்லாந்
தருமநெறி நீதிதனைச் சாற்ற—கருதியிடுந்
துங்கவேழத்தை பொருட சுந்தரபொற் செஞ்சடை
கங்கைசுற்றத் தந்திமுகன் காப்பு. [யிற்

சீர்பெரு தருமஞ் செய்கை தெரிந்ததின் வழியே சென்று
பேர்பெற புற்றிபண்ணித் தனக்கது பலித்திடாது
ஏர்பெறு கருமமெல்லாம் யாவற்கு மாகா தென்று
தேர்வுற விடுத்தறத்தை யொல்லையிற் செய்வர்தாமே.

என்றது. தறம.........வையெல்லாங் கேட்கக்கடவனுமாய்க் கேட்ட பொருளைப் புத்திபண்ணவல்லவனுமாய்த் தனக்காகாத காரியம் பிறருக்கு மாகாதென்று புத்திக்கடுத்த தற்மங்களைப் பண்ணுவான் என்றவாறு. (க)

**End :**

மாலையில் வெய்யில் காய்ந்து மகத்தொடுஞ்...மதும
தாலவே படவுஞ் செய்து தனக்கிணையான மின்னைக்
கோலமாய்க் கூடிராவில் குலவிய குளிர்ச்சியாயி
பாலை வாத்துண்டு வாயுள் வர்த்திக்கும் பகருங்
காலே.

என்றது. மாலையில் வெயில் காய்ந்ததிலும் ஓமப் புகைப்படுகையும் தன் வயசுக்கிளைய ஸ்ரீயளுடனே யனுவர்த்திக்கலும் ராத்திரிகாலம் பால்வாத்துண்கவும் அயிசுபரியம் வர்த்திக்குமென்றவாறு. 97

153. No. 349 நீதிசாரம் (கிரந்தம்)
தமிழுரையுடன்

ஏடுகள் 64; அபூர்த்தி, Lines 3—4 in a page.

இதில் 52 சுலோகங்கள் தமிழுரையுடன் இருக்கின்றன. சிதிலமாயிருக்கிறது

---

154. No. 350 நீதிசாரம் (கிரந்தம்)
தமிழுரையுடன்

ஏடுகள் 35; பூர்த்தி. Lines 4 in a page.

முன் பிரதியைப்போன்றது. இதில் 100 சுலோகங்கள் உரையுடன் இருக்கின்றன. சிதிலமாயிருக்கிறது.

---

155. No. 351 நீதிசாரம் (கிரந்தம்)
ஏடுகள் 57; பூர்த்தி. Lines 4 in a page.

முன் பிரதியைப்போன்றது. இதில் 10 சுலோகங்கள் உரையுடன் இருக்கின்றன. சிதிலமாயிருக்கிறது.

---

156. No. 352 நீதிசாரம் உரையுடன்.
ஏடுகள் 15; Lines 3—4 in a page.

இது 348-ம் நம்பர்போன்றது. அபூர்த்தியாயிருக்கிறது. சிதைந்துள்ளது.

---

157. No. 353 நீதிசாரம் (கிரந்தம்)

தமிழுரையுடன்.

ஏடுகள் 39; அபூர்த்தி Lines 4 in a Page.

முன் பிரதியைப்போன்றது. இதில் 79 சுலோகங்கள் உரையுடன் இருக்கின்றன. சிதிலமாயிருக்கிறது.

---

158. No. 354 நீதிசாரம் (கிரந்தம்)

தமிழுரையுடன்.

ஏடுகள் 15; Lines 3—4 in a page.

ஒரே சுலோகம் மணிப்பிரவாள நடையில் எழுதப்பட்ட விரிந்த உரையுடன் இருக்கிறது. சிதிலமாயிருக்கிறது.

---

159. No. 355 நீதிசாரம் (கிரந்தம்)

தமிழுரையுடன்.

ஏடுகள் 17; அபூர்த்தி Lines 4—5 in a page.

இதில் மூன்ருவது சுலோகமுதல் 73 சுலோகங்கள் உரையுடனிருக்கின்றன. சிதிலமாயிருக்கிறது.

---

160. No. 376 (*a*) நீதிவெண்பா

உரையுடன்.

ஏடுகள் 58; பூர்த்தி Lines 4—5 in a page.

இது நீதிகளை எடுத்துரைக்கும் 100 வெண்பாக்களை உடையது. செய்யுளும் உரையும் சிறந்த நடையிலிருக்கின்றன. ஆசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை. அச்சுப்பிரதிக்கும் இதற்கும் பாடபேதம் காணப்படுகின்றது. சிற்சில இடங்களில் சிதைந்திருக்கிறது. பிழையும் காணப்படுகின்றன. அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning :**

மூதுணர்ந்தோ ரோதுசில மூதுரையைப் பேதையேன்
நீதிவெண்பா வென்று நிகழ்த்தினேன்—ஆதிபான்
வாமாங் கருணை மணியுதரம் பூத்தமுதற்
கோமான் பெருங்கருணை கொண்டு.

தாமரைபொன் முத்துச் சவரங்கோ ரோசனைபால்
பூமருதேன் பட்டு புழுகுசவா—தாமழல்மற்
றெங்கே பிறந்தனவென் றெண்ணீரோ நல்லோர்க
ளெங்கே பிறந்தாலு மென்.

என்றது. தாமரைப்பூ சேத்திலே பிறக்கும். பொன் மண்ணிலே பிறக்கும். முத்துக் கிளிஞ்சியிலே பிறக்கும். சமரம் மிருகத்தினுடைய மயிர். கோரோசனை பசுவினுடைய வயித்திலே பிறக்கும். பசுவின்பால்...மண்ணினெச்சில் பூ. மலரிலே பிறக்கும் தேன் பல பூவிலுமிருக்கிற மதுவைத் தேனீய் கொண்டுவந்து வைக்கும். பட்டுச் சிலந்தி பூச்சியினுடைய குகத்திலே யுண்டாகிறது. புழுகு நாவிப் பிள்ளையினுடைய மதம். சவ்வாது சவ்வாது பிள்ளையினுடைய மதம். அழலென்று நெருப்பு .........லே யிருந்தாலும் தீட்டில்லை, யிதுகளெல்லாம் அசுத்தமான.........கு பிறுதியாளபடியினாலே......... ளெந்தச் சாதியிலே பிறந்திருந்தாலுமவர்களைக் குறைய மதிக்கப் போகா தென்றவாறு.

**End :**

பலாமரத்தைப்போல உத்தமர் கொடுக்கிற கொடை. மாமரத்தைப்போல மத்திமன் கொடுக்கிற கொடை. பாதிரி மரத்தைப்போல அதமன் கொடுக்கிற கொடை. பாதிரி மரத்தை உகமைசொல்லுவானேனென்றால் பாதிரிப்பூ மிகுதியும் வாசனையாயிருக்கும். அதினுடைய காயெப்படியோ பழமெப்படியோ வென்றி

ருப்பார்கள் அதின்காயும் பிரயோசனத்துக்கு வாராது. அதுக்குப் பழமுமில்லை யென்றவாறு.

நீதிவெண்பா நூறும் உரையுடன்
எழுதி முடிந்தது முற்றும்
சிவகுருநாதன் துணை.

---

## 161. (*b*) சனீஸ்வரன் தோத்திரம்.

Lines 4—5 in a Page.

இது சனிபகவானது தோத்திரம். அச்சிடப்பட்டிக் கிறது.

**Beginning:**

ஆதியே வேதாந்த முதலரிய......
அஞ்செழுத்தி னுள்பொருளே அயநெடுஞ்
சோதியே ஞான அம்பலத்துளாடும் சுடர்மணியே
நீபிடித்த தோஷத்தாலே
பாதிமதி சடைக்கணிந்து அரவம்பூண்டும்
பதியிழந்து சுடலைதனில் பாடியாடிச்
சாதிதனில் கடை வேடன் எச்சில் தின்றன்
சனியனே காக மேறும் தம்பிரானே. (1)

பாரறிய பகலவந்தன் பல்பிடிங்கிவைத்தாய்
பஞ்சவர்கள் தோற்றுவன மடைய வைத்தாய்
தாரணியில் தாடகை யிருவறகுமாகாத்
தம்பியையும் தமயனையும் பகையே செய்தாய்
சூரனென்னு மிலங்கை மன்னன் தங்கையான
சூர்ப்பனகை மூக்கிழந்தாள் நின் தோஷத்தாலே
சாரிணைத்தாள் யான்தொழுவே னெனைத்தொடாதே
சனியனே காகமேறும் தம்பிரானே (2)

**End :**

மண்லடத்தை யாண்டிருந்த நாளனைச் சென்று
வாசவன்தன் சொற்கேட்டு நீபிடிப்பக

... ... ... ... ...

கண்ட கண்ட வனங்களெல்லாம் நீதிரிந்தாய் சிறிதுகாலம்

... ... ... ... ...

தண்டரள மணிமாலை, ............

சனியனே காகமேறுந் தப்பிரானே,

---

162. No. 470 மணவாள நாராயண சதகம்.

ஏடுகள் 43 ; Lines 4—6 in a page.

இது திருவேங்கட நாதரை முன்னிலைப்படுத்தி நீதியைக்கூறுவது. இதனை இயற்றியவர் வெண்மணி என்னும் ஊரிலிருந்த நாராயணபாரதியார். களமூரிலிருந்தவனும் தம்மை ஆதரித்தவனுமாகிய மணவாள நாரயணன் என்னும் பிரபுவின் பெயரால் இதனை மணவாள நாரயண சதகம் எனச் செய்தனர். நூறு செய்யுட்களை யுடையது. இதில் 55 முதல் 72ம் செய்யுள் வரையில் இல்லை. பிழையதிகமாயிருக்கின்றன. அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning:**

செந்திருவாழ் மார்பன் திருவேங்கடசதகம்
பைந்தமிழால் நீ]திநெறி பாடவே— வந்தருளுங்]
கார்முகமஞ் சக்கரத்தான் கைதா மரையணிந்த
கார்முகமஞ் சக்கரத்தான் காப்பு

பூமேவு திசைமுகனையுந்திதனி லீன்றதும் புனிதவே தாகம மெலாம்

புருஷோத்த மன்றெய்வ மென்பதும் பூசுரர் பொருந்து மந்திர மென்பதும்

தேமேவு மலர்மங்கை மார்பில்வளர் சீருஞ்செகந்தனைக்
க்ாத்தருள் வதுந்
தேவர் நரர் மிருகசெந்து பட்சிசிலை மரஞ்செழிக்கப்
பதந் தருவதும்
பாமேவு பொருளலங் காரஞ் சிறப்பதும் பலவிதமு நீ
யென் பதால்
பரதெய்வ முண்டென்றிருப்பவர்களிந்நூல் படிக்க
விதமோவறிகிலார்
மாமேவு பைந்துளப மாலையணி மார்பனே மணவாள
நாரயணன்
மனதிலுறை . யலர்மேலு மங்கைமண வாளனே
வரத வேங்கடராயனே.

**End:**

அங்கமத்திரமான மாளுவமுங் கேகயமுமாரியப்பரம
லிங்கம்
அந்தரவிதேகமே கன்னடமிடங்கணமராடமே
கேதுகுகுதம்
கங்கைதிகழ் காஷ்த்திரஞ் சங்கீரதமுங்கஞ் சங்கடியாஞ்
சூரசேனம்
காம்போசி நிடதனே பாலசு தெஷசுனங்ககவேகுரு
குந்தளம்
கொங்கணம் போடமத்திரிகந்தம் புழிந்தம் குளிதங்
கடார மதங்
குச்சரம் பயிரவிற்ற பஞ்சுராபடிரங் கோசலஞ் சிந்து
கெயிளம்
வங்கமும்பணிகின்ற கெருடகிரிவாசனே மணவாள
நாராயணன்
மனதினுறை யலர்மேலு மங்கை மணவாளனே
வரதவேங்கடராயனே (100)

163. No. 471 நாராயண சதகம்
ஏடுகள் 24; பூர்த்தி. Lines 4—6 in a Page.

இது திருப்பதியில் வீற்றிருக்கும் திருமால் தோத்திரம். செய்யுள்தோறும் ஈற்றில் நாராயணா நாராயணா என்று முடிதலின் இப்பெயர் பெற்றது. இது 233ம் நம்பரைப் போல்வது. மணவாள நாரயண சதகத்தினும் வேறுபட்டது. இதில் 101 செய்யுட்கள் இருக்கின்றன இதனை இயற்றியவர் நாராயண 'தாசர் என்பவர். இடையிடையே சிதைந்துள்ளது. அச்சிடப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை.

**Beginning:**

நீர்கொண்டு தண்மலர் கொண்டு நன்னெறிகொண்டு நின் குறிகொண்டுவண்
சீர்கொண்டுவந் தனைச்செய்துச்சே...... பெறுவார் களோ
பேர்கொண்டிலன் பொறிகொண்டிலன் பெரியோர்களாலருள் கொண்டிலன்
நா.........ண்டருள் சோதியே நாராயணா நாராயணா (1)

**End.**

நனிவாழி நின் பல நூலெலாந் தனிவாழி நின் னடியாரெலாம்
தனிவாழிநின்......... வாழி நின் வடவேங்கடந்
தனிவாழி நின் கவிகற்றபேர் தனிவாழி நின்தாளென்னவ
நனிவாழி நின் பனுவல்......நாராயணா நாராயணா (100)

திருப்பணி வெங்கிடச் சிகரத்து நாராயண வென்றவர்
நூரும்படிப்பவர்பன்னு... நாறும் புகுந்துலகாண்டு பொன்
பேறும் பிள்ளைப்பேறும் பெரும்பேறும் பெறப் பெறுவிப்பையே
நாறுந்துழாயணி மார்பனே......நாராயணா (101)

நாராயண சதகம் எழுதி முடிந்தது முற்றும்.

164 No. 472 நாராயண சதகம்.

ஏடுகள் 11 ; அபூர்த்தி. Lines 4—5 in a Page.

இது முன் பிரதிபோன்றது. ஆனால் 53 செய்யுட்களே இருக்கின்றன. சிற்சில ஏடுகள் முறிந்துவிட்டன.

---

165 No. 473 நாராயண சதகம்.

ஏடுகள் 22 ; பூர்த்தி : Lines 4—5 in a page.

இதுவும் முற்பிரதிபோன்றது. முழுவது மிருக்கிறது. இதில் பின்வரும் காப்புச் செய்யுள் காணப்படுகிறது.

நல்லவட வேங்கடத்து நாராயணசதகஞ்
சொல்ல வெனக்குத் துணையாமே—மல்லற்
பணையான திண்புயத்துப் பாண்டவர்க்கு முன்னந்
துணையான பாதந் துணை.

குறிப்பு:—

இதில் தஞ்சை வெள்ளை விநாயகர் தோத்திரப்பா ஒன்றும், சரபோஜீ மகாராஜாவின் மீது இரண்டு செய்யுள்களும் வேங்கடாதிரி பூபாலன் மீது ஒருசெய்யுளும் எழுதிய நாலு ஏடுகள் கோக்கப்பட்டுள்ளன.

---

166. No. 650 புறத்திரட்டு.

ஏடுகள் 119: அபூர்த்தி. Lines —7 in a Page.

பொருள், அகம் புறமென்று இருவகைப்படும். அவற்றுள் இன்பத்தை அகமெனவும் அறத்தையும் பொருளையும் புறம் எனவும் கூறுவர். அவற்றுள் புறத்தின் பகுதியாகிய அறத்தையும் பொருளையும் பற்றிச் சொல்லும் செய்யுட்களைப் பல நூல்களினின்றும் எடுத்துத்

தொகுக்கப்பட்டிருத்தலின் இதுபுறத்திரட்டு எனப் பெயர் பெற்றது. 'குறள்' நாலடிகளைப் போல அதிகாரப் பாகுபாடமைந்தது. தொகுத்தாரும் தொகுப்பித்தாரும் இன்னவரென்று தெரியவில்லை. ஒவ்வொரு செய்யுளின் கீழ் இன்ன நூலினின்றும் எடுக்கப்பட்டது என்பது விளங்க நூலின் பெயர் குறிக்கப்பட்டுள்ளது. இந்தப்பிரதியில் அறத்துப்பாலும் பொருட்பாலின் பெரும் பகுதியும் இருக்கின்றன. இப் புறத்திரட்டில் சிறு பகுதி அச்சிடப்பட்டுள்ளது.

**Beginning :**

தன்றேர் ணென்கினு மொன்றுகை மிகூஉங்
களிறுவளர் பெருங்கா டாயினு
மொளிபெரிது சிறந்தன் றளியவென் னெஞ்சே.

மன்னிய நாண்மீன் மதிகனலி யென்றவற்றை
முன்னம் படைத்த முதல்வனைப்— பின்னரு
மாதிரையா ணதிரையா னென்றே யறையுமா
லூர்திரை நீர் வேலியுலகு. (1)முத்தொள்ளாயிரம்.

கடவுள் வாழ்த்து:

மதிமன்னு மாயவன் வாழ்முக மொக்குங்
கதிர்சேர்ந்த ஞாயிறு சக்கர மொக்கு
முதுநீர்ப் பழனத்துத் தாமரைத் தாளி
னெதிர்மலர் மற்றவன் கண்ணொக்கும் பூவைப்
புதுமல ரொக்கு நிறம். நான்மணிக்கடிகை.

* * * *

நீல நெடுங்கொண்மூ நெற்றி நிழனுறிக்
காலை யிருள்சீய்க்குங் காய்கதிர்போல்—கோல
மணித்தோகை மேற்றோன்றி மாக்கடற்சூர் வென்று
னணிச்சே வடியெம் மரண். இரும்பலகாஞ்சி.

**End:**

அற்றவர் வருத்த நீக்கி யாருயிர் கொண்டு நிற்குந்
துற்றவி மீதல் செய்யிற் துறக்கத்திற் கேணியாகு
மற்றுயி ரோம்பித் தீத்தே னாரொடு துறக்குமாயின்
மற்றுரை யில்லை விண்ணு மண்ணுறும்
மடியிதன்றே— சிந்தாமணி

மண்டு மெரியுண்ண மரந்தடிந் திட்டற்றுற்
கொண்ட கொடுஞ்சிலையன் கோறெரியக்-கண்டே
யடையார் முனையலறவை இலைவேற் காளை
விடையாயங் கொள் கென்றான் வேந்து.
(புறப்பொருள் வெண்பாமாலை)

---

**167. No. 718 (*a*) பழமொழி விளக்கம்.**
ஏடுகள் 65; Lines 5 in a Page
இது நீதி நூல்களுள் ஒன்று.

சோழ நாட்டில் தண்டலை நீணெறி என்னும் தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானை முன்னிலைப் படுத்தி இறுதியடிதோறும் ஒவ்வொரு பழமொழி அமைத்துப் பாடப்பட்டிருக்கிறது. இதனைத், 'தண்டலை யார்சதகம் என்கிற பழமொழி விளக்கம்' எனக்கூறுவர். 100 விருத்தங்களை உடையது. அறத்துப்பால், பொருட் பால், காமத்துப்பால் எனப் பகுக்கப்பட்டுள்ளது. ஆனால் இந்தப்பிரதியில் 44 செய்யுட்களே இருக் கின்றன. இதனை இயற்றியவர் சாந்தலிங்கக் கவிராயர். இது அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning:**

சீர்கொண்ட கற்பகத்தை வாதாவி விநாயகனைத் தில்லை
வாழுங்
கார் கொண்ட கரிமுகனை விகடசக்ர கணபதியைக்
கருத்துள் வைப்பாம்

பேர்கொண்ட ஞானநா யகியாகர் நீணெறியெம்
பெருமான் மீதி
லேர்கொண்ட நவகண்ட மிசைந்த பழமொழி விளக்க
மியற்றத்தானே.

காணவருந் தமிழாற்ப ளுதனுயர் தண்டலையார் கருணை
யாலே
பானவிலுஞ் சுவை மதுரம் பழுத்தபழ மொழிவிளக்கம்
பலருங் கேட்பத்
தானபரன் பாகைவரு செயராமலிங்கதுரை சமுகந்தன்னில்
மானமிகுஞ் சொக்கப்பன் வரிசைசெய்ய வரங்கேத்தி
வளம் பெற்றேமே.

**End:**

நேற்றுள்ளா ரின்றிருக்க நிச்சயமோ வாதலிற்று
னினைந்தபோதே
யூற்றுள்ள பொருளுதவி யைத்தேடி வைப்பதறி
வுடைமையன்றே
கூற்றுள்ள மலையவருந் தண்டலையா ரேசொன்னேன்
குடபால் வீசுங்
காற்றுள்ள பொழுதெவருந் தூற்றிக்கொள் வதுநல்ல
கருமந்தானே.

குறிப்பு :

இந்நூலின் கடைசியில் 8 வெற்றேடுகள்
கோக்கப்பட்டுள்ளன.

---

168. (*b*) மூதுரை.
Lines 3 in a Page.

இது நீதிகளைக்கூறும் நூல்களில் ஒன்று. இதனை வாக்குண்டாம எனவும் வழங்குவர். இதனை இயற்றியவர்

அவ்வையார். அச்சுப்பிரதிக்கும் இதற்கும் பாட பேதம் காணப்படுவதோடு அதில் இல்லாத சில செய்யுட்களும் இதில் இருக்கின்றன. இதில் வந்துள்ள 'ஓடம்விட்ட' என்னும் செய்யுள் நல்வழியிலும் வந்துள்ளது.

**Beginning :**

நன்றி யொருவர்க்குச் செய்தக்கா லந்நன்றி
என்று தருங்கொல் செனவேண்டா—நின்று
தளரா விளந்தெங்கு தானுண்ட நீரைத்
தலையாலே தான்றருத லான்.

விதியால் வருவதல்லால் வேதத்தோர் தங்கள்
மதியினல் வாழ்வதொன் றில்லை—பதிதோறுஞ்
சங்கரனு மையமெடுத் துண்டான் றடங்கடல்சூழ்
மங்கையுடன் காடுறைந்தான் மால்.

* * * *

**End :**

ஓடம்விட்ட வாறங் கடிசுடுமா றெக்குமே
நாடுவிட்டுக் காடுறைந்தா ரைணனுந்—
தோடவிழுஞ்
செந்தா மரையோன் சிரமேந்திச் செஞ்சடையோன்
வந்தான் பலிக்கு மகிழ்ந்து.

---

163. (*c*) நல்வழி.

Lines 3 in a page

இதுவும் நீதி நூல்களில் ஒன்று. காப்புடன் 41 செய்யுட்களை உடையது. இதனை இயற்றியவர் அவ்வை யார். இதில் அச்சுப்பிரதியில் இல்லாத செய்யுட்களும் பாடபேதமும் காணப்படுகின்றன.

**Beginning :**

பாலுந் தெளிதேனும் பாகும் பருப்பவலு
நாலுங் கலந்து(னக்கு) நான்றருவேன்—கோலஞ்சேர்
துங்கக் கரிமுகத்துத் துய்யமணி யேயெனக்குச்
சங்கத் தமிழ்மூன்றுந் தா.

* * * *

புண்ணியமாம் பாவம்போம் போனநாட் செய்ததவ
மண்ணிற் பிறந்தார்க்கு வைத்தபொரு—ளெண்ணுங்
கோலீதொழிய வேறில்லை யெம்மதத்த நூலோர்
தீதொழிய நன்மை செயல்.

* * * *

எல்லா மலைகளிலு மில்லை யிருமணிகள்
நல்லோர் களுமில்லை நாடுதொறுங்—கொல்யானைக்
கோடுதொறு மில்லை குளிர்முத்தஞ் சந்தனமுங்
காடுதொறு மில்லையாங் காண்.

**End :**

மானங் குலங்கல்வி வன்மை யறிவுடைமை
தானந் தவமுயர்ச்சி தாளாண்மை—தேனின்
கசிவந்த சொல்லியர்தங் காமுறுதல் பத்தும்
பசிவந் திடப்போம் பறந்து.

நல்வழி நாற்பதும் முற்றும்.

**Colophon :**

செய-ஞ ஆடி-மீ 25-உ

குறிப்பு :

இவைகளையல்லாமல் இந்தப் பிரதியில் புள்ளிருக்கு வேளூர்ப்பதிகமும் திருவையாற்றுப் பதிகமும் வடிவுடையம்மைப் பிள்ளைத் தமிழில் 12 செய்யுட்களும் கௌளி சாஸ்திரமும் நூற்றெட்டுத் திருப்பதி யந்தாதியும் இருக்கின்றன.

# VI. பிரசித்த காவியம்

---

## 170. No. 144 சீவகசிந்தாமணி மூலம்.

ஏடுகள் 86; அபூர்த்தி. Lines 6—8 in a page.

இது, தமிழ் மொழியில் சிறந்து விளங்கும் பழைய காப்பியங்கள் ஐந்துள் மேம்பட்டது; சொல்வளம் பொருள் நயம், சந்த வின்பம் முதலியனவும் பலவகைப் பட்ட வருணனைகளும் அமைந்துள்ளது. சைனர்களால் பெரிதும் பாராட்டிப் பாராயணஞ் செய்யப்பெறுவது. சீவகன் என்னும் சைன அரசன் பிறந்தது முதல் முத்தி பெற்றது இறுதியாகவுள்ள கதையைக் கூறுவது. புலவர்கள் சிந்தித்தவற்றைத் தருதலின் சிந்தாமணி எனப் பெயர் பெற்றது எனவும், இந்நூற் கதாநாயகனாகிய சீவகன் பிறந்தவுடன் அவன் தாய் விசயை என்பவள் அவனைச் ' சிந்தாமணியே ' எனப் பாராட்டினபடியால் சிந்தாமணி என்பது முதலில் அவனுக்குப் பெயராய்ப் பின்பு அவன் சரிதமாகிய இந்நூலுக் காயிற்று எனவும் கூறுவர். இப்பெயருள்ள நூல்கள் இன்னும் சில இருத்தலால், அவற்றினின்றும் இதனை வேறு படுத்தற் பொருட்டுச் சீவக என்னும் அடைமொழியுடன் இந்நூல் வழங்குவதாயிற்று. நாமகள் இலம்பகம் முதல் முத்தி யிலம்பகம் ஈறாகப் பதின்மூன்று இலம்பகங்களை உடையது. இலம்பகம் நாலுறுப்பு.

---

### இதன்கண்ணுள்ள இலம்பகங்கள்

1. நாமகளிலம்பகம் 2. கோவிந்தையாரிலம்பகம்
3. காந்தருவதத்தையாரிலம்பகம் 4. குணமாலையாரிலம்பகம்

5. பதுமையாரிலம்பகம் 6. கேமசரியாரிலம்பகம்
7. கனகமாலையாரிலம் பகம் 8. விமலையாரிலம்பகம்
9. சுரமஞ்சரியாரிலம்பகம்
10. மண்மகளிலம்பகம் 11. பூமகளிலம்பகம்
12. இலக்கணையாரிலம் பகம் 13. முத்தியிலம்பகம்.

இதனை இயற்றியவர் திருத்தக்க தேவர் என்னும் சைன முனிவர். வடமொழி தென் மொழிகளில் வல்வவர். சோழ நாட்டிற் பிறந்தவர். இளம் பருவத்தில் துறவறம் பூண்டவர். இவரது காலம் கி. பி. பத்தாவது நூற்றுண்டின் துவக்கமெனக்கூறுவர்.

இந்நூலுக்கு உரை செய்தவர் ஆசிரியர் நச்சினர்க்கினியர். இவர் பாண்டிய நாட்டில் மதுரையில் பிராமண குலத்தில் பாரத்துவாசகோத்திரத்திற் பிறந்தவர். உச்சி மேற் புலவர் கொள் நச்சினர்க்கினியரெனப் பாராட்டப் பெற்றவர். இந்நூலுக்கேயன்றி இன்னும் பல நூல்களுக்கும் உரைசெய்திட்டவர். அவற்றை 622 ஆம் நம்பரில் காண்க. இவரது காலம் 14ஆம் நூற்றுண்டு. இந்நூல் நச்சினர்க்கினியர் உரையுடன் மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாதையரவர்களால் அச்சிடப்பட்டுள்ளது.

**Beginning :**

மூவா முதலா வுலகமொரு மூன்று மேத்தத்
தாவாத வின்பந் தலையாயது தன்னினெய்தி
யோவாது நின்ற குணத்தொண்ணிதிச் செல்வனென்ப
தேவாதி தேவ னவன்சேவடி சேர்து மன்றே.

**End :**

வந்துதரன் கூறியவிவ் வாய்மொழியு மன்றி
முந்துவரன் மொழிந்தபொருண் முற்றும்வகை நாடிப்
பந்துபுடை பாணியெனப் பாயுங்கலி மான்றே
ரெந்தைதிற முன்னமுணர்ந் தின்னணம் விடுத்தேன்.
(354)

எள்ளுநர்கள் சாயவென தோளிரண்டு நோக்கி
வெள்ளிமலை முழுதுங் கொடியெடுத்ததிக லேத்திக்
கள்செய்மலர் மார்பனுறுங் காப்பிகழ்தலின்றி
யுள் ... ... — ... ... (355)

குறிப்பு :

இதில் நாமகளிலம்பகமும் கோவிந்தையாரிலம் பகமும் முழுவதுமிருப்பதோடு காந்தருவதத்தையாரிலம் பகத்தில் 355 செய்யுட்களும் இருக்கின்றன.

---

171. No. 145 சீவக சிந்தாமணி
நச்சினார்க்கினியர் உரையுடன்
ஏடுகள் 230; Lines 5—9 in a page.

**Beginning :**

வாளிரண்டு மாறுவைத்த போன்மழைக்கண் மாதரார்
நாளிரண்டு சென்ற வென்றுநைய மொய்ய காவினுட்
டோளிரண்டு மன்ன தோழர் தோன்றலைப்
புணர்ந்தபின்
றுளிரண்டு மேத்தி நின்றுதையனும் வேண்டினார்.

எ-து, மாறு-எதிர். மாதரார்-கூடவந்தவர். காவி டத்து மாதரா ரிரண்டு நாள் கழிந்த தென்றும் வருந்தா நிற்க வவ்விடத்தே தோழர் தோன்றலைச் சேர்ந்தபின் பவன் மணக்கோலங்கண்டு ஏத்தி நின்று நீர்மணஞ் செய்ததையனுமத்தை யெமக்குக் கூறுக வென்றாரென்க இனி விமலையிடத் தொருநாளைக் கூட்டமே யுளதென் பார்க்கு மாதரார் நையும்படி தோழர் நாமம் வேண்டினா ரென்க. என்றதிவர் கேட்டது கொண்டு சுரமஞ்சரி யைச் சீவகன் கூட வேண்டுமொழி புத்திசேனன் கூற வவன் மற்றை நாளு மவரைப்பிரிதலினவர்க்கு நாளி ரண்டு சென்றதென்று நைந்தார்க்குக் காரணமாயிற்றுத் தோழர் நாமம் வேண்டிய தென்றவாறு. (1)

**End :**

செய்வினை யென்னு முன்னீர்[த்தி]ரையிடை முளைத்த தேங்கொள்
மைவினை மறுவிலாத மதியென்னுந் திங்கள்மாதோ
மொய்வினை யிருள்கண்போழ முக்குடை மூர்த்தி பாதங்
கைவினை செய்த சொற்பூக் கைதொழு தேத்தினேனே.

எ-து, முன் செய்த நல்வினை மைவினை-மறு-தீவினை யாகிய மறு. மொய்வினை யிருண்—செறிந்த விருவினை யாகிய விருள். கைவினை செய்த-ஆராய்ந்த. நல்வினை வென்னுங் கடலிலே முளைத்தினிமை கொண்ட நன்கறி யென்கின்ற திங்களாலே நீ கைவினை செய்த செய்யு ளாகிய பூவை யான் கைக்கொண்டு மூர்த்தி பாதத்தே தூவித்தொழு தேத்தினே னென்று தேவர் குருக்களை நோக்கிக் கூறினு ரென்க. இதனது கருத்து. வினை செய்கின்ற கடலிலே முளைத்து புத்தியென்கின்ற சந்திர ஞலே கைசெய்யப்பட்ட செய்யுளென்னும் பூக்களை அருக பரமேஸ்வரனுடைய ஸ்ரீ பாதங்களை அர்ச்சித்து நமஸ்கரித்தே னென்றவாறு. ஓம்படை முற்றும். ஆகச் சிந்தாமணியிலெண்ணிக்கண்ட விருத்தம் 3142. நமொஸ்து. பதின் மூன்ருவது முத்தியிலம்பக முற்றும். 'தத்தை குணமாலை' யென்னுங் கவியும் 'பகைமாற்' றென்னுங் கவியுங் கந்தியார் கூற்று. இதனுள் மூவாயி ரத்து முந்நூற்றிருபத்தைந்தென்றதேனு மிக்காலத்து வழங்குகின்றன. மூவாயிரத்தொருநூற்று நாற்பத் தொன்பதென்றுணர்க. அல்லனவழங்குமேது முணர்க. ஆசிரியன் பாரத்துவாசி நச்சினுர்க்கினியான் சிந்தாமணிக் கெழுதின உரை முடிந்தது. கையிழை கண்டிடு கற்றுவல் லோரே.

ஓரா தெழுதினே ஞயினு மொண்பொருளை
யாராய்ந்து கொள்க வறிவுடையோர்—சீராய்ந்து
குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.

**Colophon :**

நமோஸ்து : விருஷபஜி நம: || ஸ்ரீலஸ்ரீ ஸ்ரீசகாப்தம் 1550-க்கு மேல் செல்லா நின்ற ஈஸ்வர௵த்து தை மீ'த்து அபரபக்ஷத்து திரிதியையும் பெற்ற ஆதித்திய வாரநாள் எழுதிமுடிந்த பிரதியோடு பார்த்து சகாப்தம் 1625-க்கு மேல் செல்லாநின்ற சுபானு௵த்து சித்திரை மீ'த்து அபரபக்ஷத்து துவாதசி 5வ துவாதசி வெள்ளிக் கிழமை நாள் எழுதி முகிந்தது. இந்தச் சுவடி கண்ணங் குடை பொன்னம்பலத்தா பிள்ளை புத்திரர் முத்தையா பிள்ளை யவர்கள் சிந்தாமணி எழுதி முகிந்தது முற்றும்.

குறிப்பு :

இந்தப்பிரதி கி. பி. 1628-ல் எழுதப்பட்டிருந்த பிரதியைப்பார்த்து கி. பி. 1703ஆம் வருடத்தில் எழுதப் பட்டிருக்கிறது. இதில் ஒன்பதாவது இலம்பகத்தி லிருந்து 13ஆவது முத்தியிலம்பகம் முடிய இருக்கிறது. முதலிலிருந்து எட்டு இலம்பகங்கள் இல்லை.

---

**172. No. 146 சீவகசிந்தாமணி மூலம்.**
**ஏடுகள் 265; அபூர்த்தி. Lines 5—11 in a page.**

இது 144-ம் நம்பர் போன்றது. இதில் நாமகளிலம் பகத்திலிருந்து முத்தியிலம்பகம் ஈருகப் பதிமூன்று இலம்பகங்களும் இருக்கின்றன. ஆனல் முத்தியிலம் பகத்தில் 543வது செய்யுட்கு மேற்பட்டவை இல்லை. 245, 246-ம் ஏடுகளில் பாதியே இருக்கின்றன. மிகவும் சிதிலமாய் இருக்கிறது.

**Beginning :**

திங்கள் மும்மாரி பெய்கத் திருவறம்வளர்கச் செங்கோல்
நன்கினி தரசனுள்க நாடெல்லாம் விளைக மற்று

மெங்குள வறத்திஞேரு மினிதூழி வாழ்க வெங்கள்
புங்கவன் பயந்த நன்னூல் புகழொடும் பொலிக மிக்கே.

**End :**

புருவச் சிலேநுதற் பொன்றுஞ் சுமல
ருருவ...யிடையா ரூடலுறுப்பாக்கித்
திருவிற் றிகழ்காமத் தேன்பருகித் தேவர்
பொருவிற் கரிய புலக்கடலுள் மாதோ.

---

173. No. 147 சீவக சிந்தாமணி.
நச்சிஞர்க்கினியர் உயைரடன்.
ஏடுகள் 239; Lines 6—8 in a page.
இது, 145ம் நம்பர் போன்றது.

இதில் நாமகள் இலம்பகம் முதல் கனகமாலேயார் இலம்பகம் 197வது செய்யுள் வரையிலும் இருக்கின்றது. மிகவும் சிதிலமாயிருக்கிறது.

---

174. No. 148 சீவகசிந்தாமணி மூலம்.
ஏடுகள் 255; Lines 6—12 in a page.

இது 146-ம் நம்பர் பிரதிபோன்றது. இதில் நாமகளிலம்பகம் முதல் பூமகளிலம்பகம் முடிய இருக்கிறது. சிதிலமதிகமாயிருக்கிறது. ஏடு மிகப் பழமையாகக் காணப்படுகின்றது.

---

175. No. 516 சீவகசிந்தாமணி
நச்சிஞர்க்கினியர் உரையுடன்.
ஏடுகள் 236; Lines 10—12 in a page·

இது, 147ம் நம்பர் போன்றது. இதில் நாமகள் இலம்பகமுதல் கனகமாலேயார் இலம்பகத்தில் 'தாமரை

மலர் தலையடுத்து' என்னும் செய்யுள் முடிய உரை யுடன் இருக்கிறது.

---

176. No. 517 சீவகசிந்தாமணி மூலம்.
ஏடுகள் 105; Lines 6—7 in a page.

இது, 148-ம் நம்பர் போன்றது. இதில் நாமகள் இலம்பகமுதல் குணமாலையாரிலம்பகம் 155-ம் செய்யுள் முடிய இருக்கிறது. சிதிலமாயிருக்கிறது.

---

177. No. 177 நைடதம் உரையுடன்.
ஏடுகள் 277; Lines 5 in a page.

இது, நிடததேசத்தரசனுகிய நளனது சரிதத்தைச் சொன்னயமும் பொருணயமும் தோன்ற விருத்தப் பாவால் விரித்துரைப்பது. தமிழ் கற்கப்புகுவோர் யாவரும் முதன் முதலில் விரும்பிக் கற்கும் பெருமை வாய்ந்தது. இதனை இயற்றியவர் அதிவீரராமபாண்டியன் என்பவர். இவர் பட்டத்திற்கு வருவதற்கு மூன்று வருடங்கட்கு முன்னரேயே, அதாவது கி. பி. 1559-ம் வருடத்திலேயே, மதுரை, நாயக்கர்களின் ஆட்சியிலி ருந்தமையின், இவரை மதுரையை ஆண்டிருந்த பாண் டியருள் ஒருவராகக் கொள்வதற் கிடமில்லை. பிற்காலத் தில் பாண்டி நாட்டில் கீர்த்தி பெற்றிருந்த பாண்டியருள் இவர் ஒருவராகக் கொள்ளத்தக்கவர். தமிழ்ப்புலமை யிற் சிறந்தவர். அன்றியும் சிவபக்திமான். சுவாமி தேவன் என்பவரிடத்தில் சிவதீக்ஷை பெற்றவர். இவர்க்கு ஜடிலவர்மனென திரிபுவன சக்ரவர்த்தி கோனேரின் மைகொண்டான் பெருமாள் அழகன் பெருமாள், அதிவீர ராமனென ஸ்ரீவல்லபதேவன் என்னும் விருதுப் பெயருண்டு. இவர் ஆட்சி செய்திருந்தகாலம் கி. பி. 1562 முதல் 1610 வரையுமாகும் (See Topographical List of the Inscriptions of the Madras Presidency pp. 1484).

ஆதலால், இவருடைய காலம் பதினாறாம் நூற்றாண்டின் பிற்பகுதியும் பதினேழாம் நூற்றாண்டின் துவக்கமு மென்று கொள்ளத்தக்கது. இவர் இயற்றிய வேறு நூல் கள், காசிகாண்டம், கூர்ம புராணம், திருக்கருவை யந்தாதிகள் முதலியன. இது நான்கு சம்புடமாகத் தொடர்ந்தெழுதப்பட்டுள்ளது. இந்தப்பிரதியில் நாட் டுப்படல முதல் அன்னத்தைத் தூதுவிட்ட படலமுடிய இருக்கிறது. சிதிலமாயிருக்கிறது. இந்நூல், திருத் தணிகை சரவணப் பெருமாளையர் இயற்றிய உரையுடன் அச்சிடப்பட்டுள்ளது. இந்தப் பிரதியிலுள்ள உரையை இயற்றியவர் இன்னவரெனத் தெரியவில்லை.

**Beginning :**

தழைவிரி கடுக்கை மாலை தனிமுதற் சடையிற் சூடுங்
குழவிவெண் டிங்களிற்ற கோட்டது குறையென் றெண்ணிப்
புழைநெடுங் கரத்தாற் பற்றிப் பொற்புற விணைத்து நோக்கு
மழைமதக் களிற்றின் செய்ய மலரடி சென்னி வைப்பாம்.

என்றது. தழைத்து விசாலம் பொருந்திய கொப்புக் களை யுடைத்தாகிய மாலையை யணிந்த வொப்பில்லாத வஸ்துவாகிய சிவனுடைய மகுடத்திலே தரித்த வினிமை பொருந்திய வெள்ளை நிறமான சந்திரனை முன்பு பாரதக்கதை யெழுதுகிறதுக்காக முறித்த கொம் பினுடைய துண்டாக்கிலுமென்று யோசனைபண்ணித் துளைகளையுடைய நீண்ட கையினாலே யெடுத்துத் தம்முடைய ஒற்றைக் கொம்புக் கருகாக வழகுபெறும் படிக்கு நேரே வைத்துப் பார்த்து விளையாடுகிறவராய மழைபோல மதங்களொழுகப் பட்ட வானை முகனாகிய விக்கினேசுரன் சிவந்த பாதாம் புயத்தை யென் சிரசின் பேரிலே வைத்து வணங்குவேனிந்த நளன்கதை பாடு வதற்கு வேறே விக்கினம் வராமலிருக்கும் பொருட்டாக வென்றவாறு. (1)

**End:**

என்றது அன்னஞ் சொன்ன வினிமையாகிற சொற் களினாலே சீவனிருக்கிறதே யல்லாமல் வேறில்லை யென்று செல்லத்தக்கதா யுயிர்பிழைத்திருக்கிற விராசா வானவர் திரும்பவு மந்த வன்னத்தைப் பார்த்து வாரா யன்னமே மடமைபொருந்திய மானாகிய தமையந்தி யுடைய ரூபலாவணிய சவுந்தரியமு மவளுக் கென்பேரி லே யிருக்கிறவாசையு முன்னுடனே யவள் சொன்ன சேதியு மின்னஞ் சொல்லு சொல்லென்று கேட்டுக் கொண்டு நளச்சக்கிர வர்த்தியானவ ரவடத்திலேயே யிருந்தாரது. நிற்க. இனிமேல் மின்னைப்பார்க்க நுன்னி தாக விருக்கிற விடையையுடைய தமயந்தி விகாரமு மதற்குமேல் நடந்த காரியமுஞ் சொல்லுகிறேன்.

அன்னத்தைத் தூதுவிட்டபடலம் முற்றும்.

---

178. No. 178. நைடதம் உரையுடன்.
ஏடுகள் 227; Lines 5 in a page.

இது முன்பிரதிபோன்றது. இதில் கைக்கிளைப்படல முதல் நளன்றூதுப் படல முடிய இருக்கிறது.

**Beginning :**

கொங்குவிம்மு கோதையோடுகோதைதாழ வாண்முகம்
பங்கயத்தை மற்றோர்பங்க யத்துவைத்த பான்மைபோ
லங்கை சேர்த்தி மைக்கணீல வாலிசிந்த வைகிய
மங்கைமென் முலைத்தடத்து மாரன்வாளி தூவினான்.

**End:**

போகச்சே தமையந்தியுடைய மனதையும் வெட்கத் தையும் திருடிக்கொண்டு போனான். அப்படிப் போன வன் பெலத்த வில்லைக் கையிலே பிடித்துக்கொண்டு

சுத்த வீரனாகிய நளன் தேவாதிகள் முன்னே போய் வணங்கியந்தப் பெண்ணிடத்திலே தான் றூதுபோனது முதலாக திரும்பி வருகிற வரைக்கும் நடந்த சேதிக ளெல்லாமொன்று விடாமற் சொன்னு னப்படிச் சொன்னவுடனே தேவேந்திரன் முதலான நாலுபேரு நளராசாவின் பேரிலே அனேகஞ் சந்தோடமானார்.

நளன்றூதுப் படலம் முற்றும்.

---

179. No. 179 நைடதம் உரையுடன்.
ஏடுகள் 256; Lines 5 in a page.

இதுவும் முன்பிரதிபோன்றது. இதில் சுயம்வரப் படலமுதல் மணம்புரிபடலம் 63வது செய்யுள் முடிய இருக்கிறது.

**Beginning:**

இன்னவை நிகழும் வேலை யெழுகடல் வரைப்பின்மேல
மன்னவர் குழாமும் விண்ணோர் தொகுதியு மணிச்செஞ்
சூட்டுப்
பன்னக நாட்டு வேந்தின் வெள்ளமும் பரித்தேர் வீமன்
கன்னியம் புரிசை சூழ்ந்த கடி நகர்க் கெழுந்த வன்றே.

என்றது. இப்படி யிதுமுதலான காரியங்கள் நடந்து கொண்டிருக்கிற வேளையிலே யலைகளடிக்கப்பட்ட சமுத்திரஞ் சூழ்ந்த பூலோகத்திலுள்ள ராசாக்கள் கூட்ட முந்தேவர்கள் கூட்டமும் இரத்தின மணிகளைச் சிரசிலே சூடாகதரித்த நாக லோகத்தி ராசாக்களாகிற பிரளயமு மேகமாய்க் கூடிக் குதிரையை நடத்துகிற தேர்ப்படை யையுடைய வீமன்மகளாகிய தமையந்திக்கு சுயமர மண்டபங்கட்டி யிருக்கிற குண்டின புறத்திலே வந்து கூடினார்கள்.

**End:**

பொருதிரைப் புணரி யீன்ற பொலங்கொடி யனைய
செல்வி
யரிவைய ரிருபத் தய்யா யிரவர்நல் லணங்கி னோடு
வருமுலைப் பவளச் செவ்வாய் வனிதைய ரெழுநூற்
றெண்ம
ரிருபது கோடி செம்பொ னினிதினில் வழங்கி னானே.

என்பது அல்லாமற் பின்னும் வீமராஜனவ னலைக ளடிக்கப்பட்ட சமுத்திரம் பெற்ற மகாலட்சுமிபோ லழகாயிருக்கிற பெண்களிருபத்தய்யாயிரம் பேரு மவர் களுக்குத் தலைமையழகாய் வளர்ந்து வருகிற முலையும் பவழம் போன்ற சிவந்த வாயையுமுடைய பெண்களிலே எழுநூற்றெட்டு பேரு மிருபதுகோடி செம்பொன்னு.

---

180. No. 180 நைடதம் உரையுடன்.
ஏடுகள் 244; சிதிலம். Lines 5 in a page.

இதுவும் முன்பிரதிபோன்றது. இதில் சுயம்வரப் படலத்தில் 64-ம் செய்யுள்முதல் அரசாட்சிப் படல முடிய இருக்கிறது.

**Beginning :**

ஸ்ரீ சந்தோடமாகத் தமையந்திக்குச் சீதனமாகக்
கொடுத்தான்.
பொழிகதிர் மணிசெய் கட்டிற் புனைமலர்ப்பாயற்
பைம்பொ
னிழைபயில் வன்னப் பேழை யினியசாந் தாற்றி யோடு
திழலவிழ் மணிக்கண் ணாடி நித்தில முகடு வேய்ந்த
வொழுகொளிக் கவரி யின்ன உலப்பில நல்கி னானே.

**End:**

ஆழி சூழ்புவி முழுவது மாழியொன் றுருட்டி
வாழி நல்லறம் புரிந்தரு மகம்பல வாற்றிச்
சூழி மால்வரைப் பிடருறு சுமையொழித் தாறப்
பாழி யம்புயத் துலகெலாம் பரித்தினி திருந்தான்.

என்பது அந்த நளச்சக்ரவர்த்தியானவர் பின்னுஞ் சமுத்திரஞ் சூழ்ந்த பூலோகமெல்லாந் தன்னுடைய வாக்கினுச் சக்கிரத்தை நடத்தியும் நல்ல தருமங்கள் வாழ்ந்திருக்கும்படி செய்து வரிதாகிய யாகங்களைச் செய்து முகபடாத்தை யுடைய பெரிதாகிய திக்குக் கயங்களின் பிடறியிலே சுமந்து கொண்டிருக்கும் பூமி பாரந்தீர்த்து அந்த யானைகளினைப்பாற பெருமையு மழகும் பொருந்திய தன்னுடைய தோள்களிலுலக மெல்லாந் தாங்கி மகிழ்ந்திருந்தான்.

அரசாட்சிப்படல முற்றும்.
ஆகப்படலம் 28-க்கு விருத்தம் 1169.

படல அட்டவணையும் செய்யுட் டொகையும் வருமாறு:—

| படலம் | செய்யுள் | படலம் | செய்யுள் |
|---|---|---|---|
| 1. நாட்டுப்படலம் | 27 | 17. இளவேனிற் படலம் | 10 |
| 2. நகரப்படலம் | 42 | 18. போது கொய் படலம் | 14 |
| 3. அன்னத்தைக்கண்ணுற்ற படலம் | 74 | 19. புனல் விளையாட்டுப்படலம் | 19 |
| 4. அன்னத்தைத் தூது விட்ட படலம் | 133 | 20. சூதாடுபடலம் | 28 |
| 5. கைக்கிளைப்படலம் | 23 | 21. நகர்நீங்கு படலம் | 49 |
| 6. மாலைப் படலம் | 12 | 22. கான்புகு படலம் | 21 |
| 7. நிலாத் தோற்று படலம் | 20 | 23. பிரிவுறு படலம் | 37 |
| 8. சந்திரோபாலம்பனப் படலம் | 37 | 24. வேற்றுருவமைந்த படலம் | 18 |
| 9. மன்மதோ பாலம்பனப் படலம் | 16 | 25. வீமன் தேடவிட்ட படலம் | 19 |
| 10. இந்திரப் படலம் | 21 | 26. கலி நீங்கு படலம் | 17 |

| | | | |
|---|---|---|---|
| 11. நளன்றூதுவிட்ட படலம் | 36 | 27. தேவியைக் கண்ணுற்ற படலம் | 29 |
| 12. சுயம்வரப்படலம் | 175 | 28. அரசாட்சிப்படலம் | 15 |
| 13. போர்புரி படலம் | 78 | ஆக படலம் 28-க்கு | |
| 14. மணம்புரி படலம் | 68 | கவி:—1167 பாயிரம் | 2 |
| 15. மீட்சிப் படலம் | 15 | | —— |
| 16. கலிதோன்று படலம் | 14 | | 1169 |
| | | | —— |

---

**181.** No. 181 நைடதம் உரையுடன்.
ஏடுகள் 269; Lines 5—6 in a page.

இது முற்பிரதி போன்றது. 3 சம்புடமாக எழுதப்பட்டுள்ளது. இதில் பாயிரமுதல் இந்திரப்படலத்தில் 18வது செய்யுள் வரையும் இருக்கின்றது. சிதிலமாயிருக்கிறது.

---

**182.** No. 182 நைடதம் உரையுடன்.
ஏடுகள் 228; Lines 5—6 in a page.

இதுவும் முற்பிரதிபோன்றது. இதில் இந்திரப்படலம் 18-ம் செய்யுள் முதல் போர்புரி படலத்தில் 67 செய்யுள் வரை இருக்கிறது. அதிக சிதிலமாயிருக்கிறது.

---

'**183.** No. 183 நைடதம் உரையுடன்.
ஏடுகள் 141; Lines 5—7 in a page.

இதுவும் முற்பிரதி போன்றது. இதில் போர்புரி படலம் 67-ம் செய்யுள் உரைமுதல் பிரிவுறுபடலத்தில் 11வது செய்யுள் வரை இருக்கின்றது. சிதிலமாயிருக்கிறது.

---

184. No. 184 நைடத மூலம்.

ஏடுகள் 99; Lines 7—10 in a page.

இதில் நைடதம் மூலபாடம் முழுவதும் இருக்கிறது. சிதிலமாயிருக்கிறது.

---

185. No. 185 நைடத மூலம்.

ஏடுகள் 188; Lines 4—9 in a page.

இது மேற்பிரதி போன்றது. இதில் பாயிரமுதல் கலிநீங்கு படலம் முடிய இருக்கிறது. சிதிலமாயிருக்கிறது.

---

186. No. 186 நைடத மூலம்.

ஏடுகள் 141; Lines 6—8 in a page.

இதுவும் முன்பிரதியைப் போன்றது. இதில் பாயிர முதல் தேவியைக்கண்ணுற்ற படத்தில் 21வது செய்யுள் வரையிலும் இருக்கின்றது. சிதிலமாயிருக்கிறது.

---

187. No. 187 நைடத மூலம்.

ஏடுகள் 135; அபூர்த்தி. Lines 5—9 in a page.

இதுவும் மேற்பிரதியைப்போன்றது. இதில் பாயிர முதல் சுயம்வரப்படலம் முடிய இருக்கிறது. சிதிலமாயிருக்கிறது.

---

188. No. 188 நைடத மூலம்.

ஏடுகள் 62; அபூர்த்தி. Lines 5—7 in a page.

இதுவும் மேற்பிரதிபோன்றது இதில் பாயிரமுதல் மன்மதோபாலம்பனப் படலம் முடிய விருக்கிறது. சிதிலமாயிருக்கிறது.

---

189. No. 189 நைடத மூலம்.

ஏடுகள் 30; அபூர்த்தி. Lines 5—7 in a page.

இதுவும் மேற்பிரதியைப் போன்றது. இதில் பாயிர முதல் அன்னத்தைத் தூதுவிட்ட படலத்தில் 30 ஆம் செய்யுள் முடிய இருக்கிறது. வெற்றேடுகள் கடைசியில் கோக்கப்பட்டுள்ளன. சிதிலமாயிருக்கிறது.

---

190. No. 190 நைடத மூலம்.

ஏடுகள் 11; அபூர்த்தி. Lines 5—8 in a page.

இதுவும் மேற்பிரதியைப் போன்றது. இதில் முதலி லிருந்து நகரப்படல முடிய இருக்கிறது.

---

190. No. 191 நைடத மூலம்.

ஏடுகள் 35; அபூர்த்தி. Lines 4—5 in a page.

இது முற்பிரதிபோன்றது. இதில் பாயிரமுதல் அன்னத்தைத்தூதுவிட்ட படலத்தில் 26வது செய்யுள் வரையிலும் இருக்கிறது.

---

191. No. 300 நைடதம் உரையுடன்.

ஏடுகள் 26; அபூர்த்தி. Lines 10 in a page.

இது 177-ம் நம்பர் போன்றது. இதில் அன்னத் தைக் கண்ணுற்ற படலத்தில் 95வது செய்யுள் முதல் சுயம்வரப்படலம் 148-ம் செய்யுள் வரையும் இருக்கின் றது. இடையிடையே சில ஏடுகளுமில்லை. இந்திரப் படலமும் உரையுடனிருக்கிறது.

**Beginning:**

.........பிணிப்பிற் றெள்ளமுதத் திருவேயுன்
றந்தைபிறர்க் களித்திடிலென் வாய்மைதவ றுகாதோ.

என்பது. பெண்ணே தெளிந்த தேவாமுதத்துடனே பிறந்த லெட்சுமி யவதாரமாக விருக்கிற தமையந்தியே தன்னைக் கட்டியிருக்கிற தூணினுடனென் பூணணிந்த கொம்பையு முடைத்தாய்க் கரும்பைக் கையிலே சுற்றிப்பிடிங்கித் தின்கிற மதயானையாகிய மந்தரகிரியிலே சத்துருக்களாகிய சமுத்திரத்தைக் கடையப்பட்ட வெற்றி பொருந்திய நளச்சக்ரவர்த்தியுடைய மனதை யுன்னிடத்திலே பிணைத்துப் போடுவேனப்படிக்கி வல்லமையுண்டு. நானப்படிச் செய்ததின்பேரிலே யுன்தகப்பனுன்னை வேறே யொருத்தருக்குக் கலியாணம் பண்ணிக் கொடுத்தாலென்னுடைய வார்த்தைத் தவறுபட்டுப் போகாதோ வென்றவாறு.

**End:**

கழையெனத் திரண்ட மென்றோட் காமரு குவளையுண்
பொழிகதிர் முத்த மூரற் பூங்கொடி யீங்கு வைகு [கட்
மழிகவுட் கடாத்த சீற்றத் தண்ணலங் களிறு போல்
மழையக டுருஞ்சு மாட மலிகுருநாடர் கோவே. [வான்

---

193. No. 323 நைடதம் உரையுடன்.

ஏடுகள் 87: Lines 9—10 in a page.

இதில் நாட்டுப்படலம் முதல் இந்திரப்படலத்தில் 19 செய்யுட்களும் நளன் தூதுப்படலத்தில் 100-ம் செய்யுள் முதல் 123-ம் செய்யுட்களும் உரையுடன் இருக்கின்றன.

குறிப்பு:—

இப்பிரதியில் 53 முதல் 65; 98 முதல் 115 வரையில் உள்ள ஏடுகளில்லை. படல அட்டவணை எழுதிய ஏடு ஒன்றும் பாட்டுக்களின் முதற் குறிப்பு எழுதிய ஏடு ஒன்றும் கடைசியில் சேர்க்கப்பட்டுள்ளன.

194. No. 192 நளவெண்பா மூலம்.
ஏடுகள் 91; மிகச் சிதிலமாயிருக்கிறது.
Lines 4 in a page.

இது நளனுடைய சரிதத்தை வெண்பாவினுல் கூறும் நூல். சுயம்வரகாண்டம், கலிதொடர் காண்டம், கலிநீங்கு காண்டம் என மூன்று காண்டங்களை உடையது. இதனை இயற்றியவர் புகழேந்திப்புலவர். இவர் செங்கற்பட்டு ஜில்லாவிலுள்ள பொன் விளைந்த களத்தூரிற் பிறந்தவர். 'வெண்பாவிற் புகழேந்தி' என்பதனுல், வெண்பாப் பாடுதலில் இவர் மிகச் சிறந்தவராவர். இவரும் ஒட்டக்கூத்தரும் ஒருகாலத்திருந்தவராதலால் இவருடைய காலம் பன்னிரண்டாம் நூற்றுண்டாகும். இதில் அச்சுப்பிரதியிலுள்ள செய்யுளைவிட செய்யுட்கள் அதிகமாயிருப்பதோடு பாடபேதமும் காணப்படுகின்றது. இது உரையுடன் அச்சிடப்பட்டுள்ளது.

**Beginning :**

தவளநிற மேனியாய் தாவுதிரை தந்த
பவளநிற மேனியாய் பாவாய்—துவளநிற
முன்னைப் பலகாலு மேத்துவே னேங்குதமிழ்
தன்னைப் பலகாலுந் தா.

ஈங்கெ னுளத்தா மரையணிந்தே னிந்துநுதற்
றேங்குமுத வாயா டிருநயனம்—பூங்குவளைக்
கண்ணிறந்தாள் சாமக் கருநிறத்தாள் பைங்கூந்தல்
வெண்ணிறத்தாள் செந்திறத்தாள் மேல்.

ஆதித் தனிக்கோல மானு னடியவற்காய்ச்
சோதித் தனித்தூ ணிற் றேன் றினுன்—வேதத்தின்
முன்னின்றுன் வேழ முதலே யெனவழைப்ப
வென்னென்று னெங்கட் கிறை.

**End :**

கார்பெற்ற தொகையோ கண்பெற்ற வாண்முகமோ
நீர்பெற் றுயர்ந்த[நிறைபுலமோ—பார்]பெற்று
மாதோடு மன்னன் வரக்கண்ட மானகருக்
கேதோ வுரைப்ப தெதிர்.

வாழ்க மலைநாடு வாழ்கவளஞ் சோணாடு
வாழ்க வழுதி வளநாடே—வாழ்கவே
முன்னீர் ..............................
நன்னீர் வயற்றொண்டை நாடு. (120)

---

## 195. No. 303 அரிச்சந்திர புராணம்.

ஏடுகள் *200*; பூர்த்தி. Lines 5—7 in a page.

இது அரிச்சந்திரனது சரிதத்தைக் கூறுவது. செய்யுள்நடை சிறந்தது. இதில், சோகரசத்தைக் கூறும் பாகம் மிகச் சிறப்புடைத்து. இதனை இயற்றியவர் நல்லூர் வீரகவிராசன் என்பவர். இவரது காலம் சகம் 1446 அதாவது கி. பி. 1524. இவற்றை "விதியின்வழி யரசிழந்த வரிச்சந்திரன்" என்னும் அடியிற்கண்ட செய்யுளிற்காண்க. இப்பிரதியிலுள்ள ஏடுகள் இடையிடையே முரிந்திருப்பதோடு சிதிலமாயிருக்கின்றன. இந்நூல் உரையுடன் அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginging :**

சீர்கொண்ட செழுங்கமலத் திசைமுகனு நெடுமாலுஞ்
சிவனுமென்னும்
போர்கொண்ட மூவுருவு மீருருவு மோருருவாய்ப்
பிறங்குந் தொல்லை
நீர்கொண்ட வண்டத்துந் தாவரத்துஞ் சங்கமத்து
நிறைந்து நின்றோன்
தார்கொண்ட கரிமுகவன் தாளிணைக ளன்பினொடுந்
தலைமேற்கொள்வாம்.

தண்கவிகைக் குரிசிலரிச் சந்திரன் றன் சரிதைதனைத்
தரணியோர் வியப்பெய்த
வண்கவிஞர் வகைவகையே வகுத்துரைத்த
வடமொழியுந் தென்மொழியும் வழுவில்லாமல்
வெண்கவிகள் கண்டிரங்கி மாதராடல் விதங்கேட்டு
மழையெனவே வெகுண்டுசோலைக்
கண்கவிகள் குதிபாயு நெல்லூர் வீரன் கவிராச னேவிருத்தக்
கவிசெய்தானே.
விதியின்வழி யரசிழந்த வரிச்சந்திரன் வியன்கதையை
விருத்தமாக்கி
யதிவிதமாங் கலியுகத்தில் வருஞ்சகாத்த மாயிரத்து
நானூற்று நாற்பத்தாறில்
சதுமறைதேர் புல்லாணித் திருமால் முன்னே சக்கரதீர்த்
தக்கரையில் மண்டபத்திற்
கதிதருசீர் நெல்லூர்வாழ் வீர னுசு கவிராசன் கவியரங்க
மேற்றினனே.

**End :**

ஈசன் வாழ இமையவர் வாழ்ந்திடத்
தேசம் வாழ்ந்திடச் செங்கதிர் வாழ்ந்திட
மாசி லாத வரிச்சந் திரன்கதை
வீசி யெங்கும் விளங்கி யிருக்கவே.

உத்த மத்துவ முலகு வாழ்ந்திட
முத்தமிழ் வல்லவர் மழையு மோங்கிடச்
சத்தி யம்பொயா வரிச்சந்தி ரன்கதை
எத்திசை தன்னினும் விளங்கி யிருக்கவே.

இதிலுள்ள காண்டங்களும் செய்யுட்களும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நாட்டுச் சிறப்பு | செய்யுள் | 70 | மிருககாண்டம் | செய்யுள் | |
| நகரச் சிறப்பு | ,, | 20 | | | 136 |
| அரசியற்காண்டம் | ,, | 10 | பிரவேசகாண்டம் | ,, | 25 |
| சுயம்வரகாண்டம் | ,, | 307 | இராச்சியதான காண்டம் | ,, | 87 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| இந்திரகாண்டம் | ,, | 45 | நகர்நீங்கு காண்டம் | | |
| விலேகண்டம் | ,, | 60 | அல்லது வனவாச | | |
| குமாரன் மரண | | | காண்டம் | ,, | 159 |
| காண்டம் | ,, | 63 | மீட்சி காண்டம் | ,, | 34 |
| மாயானகாண்டம் | ,, | 63 | உத்தரகாண்டம் | ,, | 28 |
| காட்சி காண்டம் | ,, | 40 | ஆககாண்டம் | | |
| வஞ்சனைகாண்டம் | ,, | 67 | 16க்கு | ,, | 1214 |

---

**196. No. 304 அரிச்சந்திர புாரணம்.**
**ஏடுகள் *242*; அபூர்த்தி. Lines *4—6* in a page.**

இதுவும் முற்பிரதிபோன்றது இதில் ஆரம்பமுதல் காட்சி காண்ட முடிய இருக்கிறது. மிகவும் சிதைந்துள் ளது.

---

**197. No. 305 அரிச்சந்திர புராணம்.**
**ஏடுகள் *70*; அபூர்த்தி. Lines *4—6* in a page.**

இதுவும் முற்பிரதியைப்போன்றது. இதில் முதலேடில்லே. சுயம்வரகாண்டத்தில் *240*ம் செய்யுள் வரையிலும் இருக்கின்றது. தொடுவதற்குத் தகுதியற்ற விதமாகச் சிதிலமாயிருக்கிறது.

---

**198. No. 306 (*a*) அரிச்சந்திர புராணம்.**
**ஏடுகள்; *135* அபூர்த்தி. Lines *5* in a page.**

இது *304*ஆம் நம்பரைப்போன்றது. இதில் மிருக காண்டதகில் *29*ஆம் செய்யுள் முதல் உத்தர காண்ட முடிய இருக்கிறது.

---

199. (*b*) சிலப்பதிகார மூலம்.

Lines 5 in a page,

இதில் இந்நூற் பாயிரமட்டும் இருக்கிறது. இதைப் பற்றிய விவரங்களை 417(*b*)இல் காண்க.

---

200. No. 307 அரிச்சந்திர புராணம்.

ஏடுகள் 315; பூர்த்தி. Lines 5 in a page.

இதில் ஆரம்ப முதல் முழுவது மிருக்கிறது. இது 303ம் நம்பரைப் போன்றது.

---

201. No. 308 அரிச்சந்திர புராணம்.

ஏடுகள் 143; பூர்த்தி. Lines 7 in a page.

இது 307-ம் நம்பரைப்போல முழுவது மிருக்கிறது.

---

202. No. 309 அரிச்சந்திர புராணம்.

ஏடுகள் 113; அபூர்த்தி. Lines 4—5 in a page.

இது 306-ம் நம்பரைப்போன்றது. இதில் நகர் நீங்கு காண்டமுதல் மயான காண்டம் முடிய இருக்கிறது. நகர் நீங்கு காண்டத்தில் 51 செய்யுட்களை மீளவும் எழுதிய ஏடுகள் கடைசியில் கோக்கப்பட்டிருக்கின்றன. அடியிற்கண்ட செய்யுள் முதலேட்டில் காணப்படுகின்றது. அது இந்நூலைச் சேர்ந்ததன்று.

சீர்தந்துந் தமிழ்தந்துந் திருமாதின் அருள்தந்தும்
வேர்தந்து மருள்தந்தும் வேண்டியதெல்லாந்தந்தும்
நீர்தந்த கடதடப நெடுந்தாரை கண்பனிப்பக்
கூர்ந்த தனிமருப்புக் குஞ்சரமே யஞ்சலென்னுய்

---

203. No. 310 அரிச்சந்திர புராணம்.
ஏடுகள் 61; அபூர்த்தி. Lines 5—6 in a page.

இதில் நாட்டுச் சிறப்பில் 20-ம் செய்யுள் முதல் சுயம்வரகாண்ட முடிய இருக்கிறது.

---

## VII. பிரபந்தங்கள்.

---

i. அகப்பொருட்கோவை.
104. 385 ஆரூர்க்கோவை.
ஏடுகள் 55; அபூர்த்தி. Lines 10—11 in a page.

கோவை யென்பது, காட்சி முதலிய துறைகள் முறையே கோக்கப்பட்ட நூல் என்று பொருள்படும். இது, எழுத்து, சொல், பொருள் என்னும் மூவகை இலக்கணங்களுள், பொருளின் பகுதியாகிய அகப்பொருள் இலக்கணத்திற்கு இலக்கியமாய்க் குறிஞ்சி முதலிய ஐந்திணைக்கு முரிய முதல் கரு உரிப்பொருள்கள் முகமாகத் தலைவன் தலைவிகளின் ஒழுக்கங்களை, உலக வழக்கு செய்யுள் வழக்கு என்னும் இருவகை வழக்கிற்கும் ஒப்ப உணர்த்துவது. கட்டளைக் கலித்துறையால் நானூற்றுக்குக் குறையாமல் கடவுள்மீதும் பிரபுக்கள் மீதும் பாடப்படுவது. தமிழில் வழங்கும் தொண்ணூற்றுவகைப் பிரபந்தங்களுள் இதுவும் ஒன்றாகும்.

ஆரூர்க்கோவை என்பது திருவாரூரில் கோயில் கொண்டுள்ள தியாகராஜப் பெருமானைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு பாடப்பட்ட கோவையாகும். சொற்சுவையும் பொருணயமும் வாய்ந்த கோவைகளுள் இதுவும் ஒன்று. இந்தப்பிரதி மிகவும் சிதைந்திருத்தலால் செய்யுட்டொகை இத்துணை யென்றறிய முடிய

வில்லை. இதனை இயற்றியவர் சைவ எல்லப்ப நாவலர் என்பவர். இது அச்சிடப்படவில்லை.

**Beginning:**

**காட்சி :**

தேர்கொண்ட காமன் கவிகையும்.........
..................ண்டொரு புற்றிடத்தே
வேர்கொண்டிருப்பவ ராரூரர் வீதி விடங்கர் வெற்பிற்
கார்கொண்...ருபசுந் தோகையென் கண்ணுற்றதே.

**துணிவு**

கார்க்குன் றுரித்தவர் செம்பொன் றியாகர் கமலையன்னூர்
வார்க்குன் றிரண்டினும் வேரோட்டும் வல்லியும் வள்ளை தனிற்
சேர்க்கின்ற தோடும் பிறைமே லிருக்கும் திலதமுநாம்
பார்க்குந் தொறுமிவர் பாரா ரென்றென்று பகர்கின்றதே.

**End:**

படவா ளரவல்குல் மின்னே யுதவிக்கெம் பார்த்தி
நடவாத கான ... ... ... ... யிலாம் [பனூர்
விடவா ளரவணி யாரூரர் வீதி விடங்கர் வெற்பின்
மடவார் தமக்கரசே.........

---

205. 409 அம்பிகாபதிக் கோவை.
ஏடுகள் 81; Lines 5—7 in a page.

இது அம்பிகாபதி என்பவரால் பாடப்பட்ட கோவை யாகலின், அம்பிகாபதிக் கோவை எனப்பட்டது. அம்பிகாபதி யெனப் பெயர் வாய்ந்தவர் பலரிருந்தனர். ஆதலால், இவரை அவருள் இன்னவரெனத் தெரிந்துகொள்ள முடியவில்லை. கல்வியிற் பெரியாராகிய கம்பரது மகனே இவர் எனச்சிலர் கூறுகின்றனர். இக்கோவையில், "புன்கவிக்கு நாட்டுந்

தலைவனு மில்லை'' என அவையடக்கத்து வந்துள்ளதைக் கொண்டு ஆராயுமிடத்துப் பாட்டுடைத் தலைவனும் கிளவித் தலைவனு மின்றிப் பாடப்பட்ட அகப்பொருட் கோவை இதுவென விளங்குகின்றது. இதில் 501 கட்டளைக் கலித்துறைகள் இருக்கின்றன. இந்தப் பிரதியில், இந்நூல் முழுவதுமிருப்பினும் சிதைந்துள்ளது. இது அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning:**

அருளம்பி காபதி பொன்னடித் தாமரை யப்பொருளின்
பொருளம்பி காபதியும் புனைந்தே னிப்புனைந்த புன்சொற்
றெருள ..........போதுள்ளந் தப்புரையார்
மருளங்குழவி மழலைக்குண்டோ பொருள் மற்றிங்
கொன்றே.

பாட்டுந் துறையும் பதினெண்கணக்கும் ......
காட்டும் பனுவலுங் கற்றறியேன் சொற்ற புன்கவிக்கு
நாட்டுந் தலைவனு மில்லையென் றுரின் றென் னுவில்
நின்று
கோட்டுங் கலைமகள் ............குறையுமென்றே.

காட்சி :

மாவின் கொழுதளிரீன்றுபொற் கோங்கிடை வந்தரும்பி
மேவுங் கமல மலர்ந்தல்லி வாய்விம்மு தேன்பொதிந்து
தாவுஞ் சிலைவரி வண்டினங் கொண்டு தளையவிழ்பூங்
காவும் புறம்படர் வல்லிகண் டேகண் களி கொண்டதே 1

கண்டோரயிர்த்தல்

கருவார் புயலொன்று கண்டறி யாதவிக் கானகத்தே
வருவார் சிலரிவர் மற்றிவர் யாவர்கொல் வாரிதந்த
திருவா மெனிவர் செங்கையிற் பங்கய மில்லைசெல்வன்
மருவார் துளவணி மாலே நின்மார்பில் மறுவில்லையே.
331

**End:**

அல்லொடு நண்பக லும்புல னுலரும் போகந்துய்த்து
வல்லியு மல்லல் வளவய லூரனும் மாதருமே

சொல்லிய ... மலி ...... முடி ... துணைவியரோ
டில்லறங் காத்துத் துறவறந் தாங்க ளியைந்தனரே 501

206. No. 410 அம்பிகாபதிக் கோவை
ஏடுகள் 35; அபூர்த்தி. Lines 7 in a page.

இதுவும் மேற்பிரதியைப் போன்றது. இதில் 240 செய்யுட்களிருக்கின்றன. 241 ஆவது பாட்டில் மூன்றடிகளே இருக்கின்றன.

207. No. 414. அம்பிகாபதிக் கோவை.
ஏடுகள் 127; அபூர்த்தி. Lines 4—7 in a page.

இதுவும் மேற்பிரதிபோன்றதே. இதில் முதல் மூன்றுஏடுகளில்லை. 479 செய்யுள் இருக்கின்றன. ஆனால் மேற்பிரதிகளில் உள்ள வரிசையில், இதிலுள்ள செய்யுட்கள் இல்லை. இப்பிரதி மிகவும் சிதைந்திருக்கிறது.

208. 411 திருச்சிற்றம்பலக் கோவையார்
உரையுடன்.
ஏடுகள் 110; Lines 5—11 in a page.

இது, நடராஜப் பெருமானைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு, திருவாதவூரடிகளாகிய ஸ்ரீமந் மாணிக்கவாசகர் திருவாய்மலர்ந்தருளியது. கோவைகளுள் இதுவும் ஒன்றெனினும், 'கோவையார்' என ஆர் விகுதி கொடுத்துச் சிறப்பிக்கும் மேம்பாடுடையது. இதனது அருமை பெருமைகளை நோக்கியே நடராஜப் பெருமானும் தமது அருமைத் திருக்கரத்தால் இதனை எழுதி, 'திருச்சிற்றம் பலமுடையார்' எனத் தம் கையெழுத்திட்டனர் என்பர். இந்நூலாசிரியர், இக்கோவையாருள்,

பாண்டியன் வரகுணனை இரண்டிடத்துக் கூறியிருக்கின்றனர். அவன் சிங்காதனம் ஏறியகாலம் கி.பி.862ம் ஆண்டாகும். ஆதலால் இவரது காலம் ஒன்பதாம் நூற்றாண்டுக்கு முன் கொள்வதற்கிடமில்லை என்ப. இவரைப்பற்றிய ஏனையவிவரங்களைத் திருவாசகக் குறிப்பிற்காண்க. இந்நூல், உரையுடன் ஆறுமுக நாவலரால் அச்சிடப்பட்டுள்ளது. இவ்வுரை செய்தவர், நச்சினார்க்கினியர் எனப்பலரும், பேராசிரியரெனச் சிலரும், இவ்விருவருமல்லாத வேறொருவரென மற்றுஞ் சிலரும் கூறுவர். இவ்வுரையையல்லாமல், விசாகப் பெருமாளையர் எழுதிய உரையும் அச்சிடப்பட்டுள்ளது. இந்தப் பிரதியிலுள்ள உரை இவ்விரண்டுரையினும் வேறுபட்டது. இதனைச் செய்தவர் இன்னவரெனத் தெரியவில்லை. இவ்வுரை அச்சிடப்படவில்லை.

**Beginning :**

*திருவளர் தமரை சீர்வளர் காவிக ளீசர்தில்லைக்*
குருவளர் பூங்குமிழ் கோங்குபைங் காந்தள்கொண்
டோங்குதெய்வ
மருவளர் மாலையொர் வல்லியி னெல்கி அனநடைவாய்ந்
துருவளர் காமன்றன் வெற்றிக் கொடிபோன் றொளிர்
கின்றதே.

எ-து திருவளர் தாமரை—அழகுமிக்க தாமரைப் பூவையும், சீர்வளர் காவிகள்—சிறப்புடைய நீலப் பூவையும், ஈசர் தில்லை— சிவனுடைய சிதம்பரத்தில், குருவளர் பூங்குமிழ்—நிறமிகுந்து பொலிவினையுடைத்தாகிய குமிழம் பூவையும், கோங்கு—கோங்கரும்புகளையும், பைங்காந்தள்—செவ்விக் காந்தாள் பூக்களையும், கொண்டு—இந்தப்புற்(ட்)பங்களை அவயவமாகக் கொண்டு, எங்ஙனென்னில், தாமரைப் பூவை முகமாகவும், செங்கழுநீர்ப் பூவைக் கண்களாகவும், குமிழ் மலரை நாசியாகவும், கோங்கரும்புகளை முலைகளாகவும் செவ்விக் காந்தட் பூவைக் கரங்களாகவும், இப்படி

அவயவமாகக் கொண்டு, ஓங்கு தெய்வ மருவளர் மாலை யொர்வல்லியினொல்கி—உயர்ந்த தெய்வ வாசனை மிக்க மாலை ஒருவல்லிசாதக் கொடிபோல நுடங்கி, அன்ன நடை வாய்ந்து — அன்னத்தின் நடைபோல நடையும் வாய்ந்து,உருவளர் காமன்றன்-வடிவு மிகுந்த மாரவேள், வென்றிக் கொடி போன்று — வெற்றிக் கொடியை யொத்து, ஒளிர்கின்றது—விளங்காநின்ற தென்னவதி சயமே-மதிவாணுதல் வளர் வஞ்சியைக் கதிர்வேலவன் கண்ணுற்றது—பிறையை யொத்தொளி சிறந்த நெற்றி யினையுடைய விளைய வஞ்சிக் கொம்பை நிகரானவளை ஒளி சிறந்த வேலினையுடையவன் கண்டது. (க)

**End :**

காரணி கற்பகங் கற்றவர் நற்றுணை பாணரொக்கல்
சீரணி சிந்தா மணியணி தில்லைச் சிவனடிக்குத்
தாரணி கொன்றையன் றக்கோர்தஞ் சங்க நிதிவிதிசே
ரூருணி யுற்றவர்க் கூரன்மற் றியாவர்க்கு மூதியமே.

இரும்பரிசி லேற்றவர்க்கருளி — விரும்பினர் மகிழ
மேவுத லுரைத்தது. ஊதிய மெடுத்தூடறணி வித்தல் 400

கோவை முற்றும்.

ஸ்ரீராமராயநம : சிவாய நம ; ஹரிஓம்.

---

209. 415 திருச்சிற்றம்பலக்கோவையார்
உரையுடன்.

ஏடுகள் 407; Lines 5 in a page.

இதுவும் முற்பிரதிபோன்றது. பலவிடங்களிலும் சிதைந்திருக்கின்றன. இவ்வுரை நாவலர் அச்சிட்டுள்ள உரைபோன்றது.

**Beginning :**

திருவளர் தாமரை சீர்வளர் காவிக ளீசர்தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்குபைங்காந்தள் கொண்
டோங்குதெய்வ
மருவளர் மாலையொர் வல்லியி னொல்கி யனநடைவாய்ந்
துருவளர் காமன்றன் வென்றிக் கொடிபோன் றொளிர்
கின்றதே.

மதிவாணுதல் வளர்வஞ்சியைக்
கதிர்வேலவன் கண்ணுற்றது.

என்றது. திருவளருந் தாமரைப்பூவையு மழகு வளரு நீலப்பூக்களையுமீசர்தில்லை வரைப்பினுண்டாகிய பூங்குமிழினது நிறம்வளரும் பூவினையுங் கோங்கரும்பு களையுஞ் செவ்விக்காந்தட் பூ வி னை யு முறுப்பாகக் கொண்டு மேம்பட்ட தெய்வமணம் வளரு மாலை யொரு வல்லி [ே]பால் நுடங்கி யன்னத்தினடை-போலு நடை வாய்ந்து வடிவுவளருங் காமனது வெற்றிக் கொடி போன்று விளங்கா நின்ற தென்னவியப்போ வென்ற வாறு. [திருவெ]ன்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கென்றவாறு. திருமகடங்குந் தாமரை யெனினு மமையும். பூங்குமிழென்பது முதலாகிய தன் பொருட் கேற்றதோ ரடையடுத்து நின்றதோ ராகு பெயர். 'தளிபெறு தண்புனத்துத் தலைப்பெயற் கரும்பீன்று.'

**End :**

காரணி கற்பகங் கற்றவர் நற்றுணை பாணரொக்கல்
சீரணி சிந்தா மணியணி தில்லைச் சிவனடிக்குத்
தாரணி கொன்றையன் றக்கோர்தஞ் சங்கநெதிவிதிசே
ரூருணி யுற்றவர்க் கூரன்மற் றியாவர்க்கு மூதியமே.

இரும்பரிசி னேற்றவர்க்கருளி—விரும்பினர் மகிழ மேவுதலுரைத்தது.

எ-து. ஊரன் வரைவின்றிக் கொடுத்தலிற் காரோ டொக்கும் வேண்டக் கொடுத்தலினழகிய கற்பகத்தோ

டொக்கும் நுண்கல்வியனுதலிற் கற்றவர்க்கு நல் லுசாத் துணை யோடொடுக்கு மிசையுணர்வானுங் கெழுத கைமை யானும் பாணர்க் கவர் சுற்றத்தோடொக்கும் நினைத்தவை கொடுத்தலாற் சீரையுடைய சிந்தா மணியோ டொக்கு மழகு பொருந்திய தில்லைச் சிவனு டைய திருவடிக்குத் தாராகியவனுலணியப்படுங் கொன்றை மாலைத் தன்மையையுடையான் சான்றோர்க் குத் தொலையா...யாயிருத்தலிற் சங்கநிதியோ டொக்கும் நட்டார்க்கும் பகைவர்க்குந் தப்பாதபயன் கொடுத் தலின் விதியோடொக்குஞ் சுற்றத்தார்க் கவர்வேண் டிற்றுச் செய்ய விருத்தலின் ஊரணித்தாகிய வூரணியோ டொக்கு மகனுல் வரைவின்றி யெல்லார் தகுதிக்கும் பெறுபயனென்றவாறு. தாரணி கொன்றையனென்பது குரங்கனென்பது போல வுவமைப் பொருட்டா நின்ற தெனினுமமையும். விதிசே ரென்பதற்கு முறைமையாற் சேரப்படு மூருணியெனினு மமையும். தக்கார்க்குஞ் சுற்றத்தார்க்குங் கொடுத்தல் வண்மையினவரை வெறுப்பியாது கூறினர். ஊடநீர்த்துக் கூடிய வழி தலை மகட்கு சிவப்பொரு காரணத்தாற் சிறிது புலப்பட.

---

### 210. No. 416 திருச்சிற்றம்பலக்கோவையார் உரையுடன்.

ஏடுகள் *300*; பூர்த்தி. Lines *5* in a page.

இதுவும் முற்பிரதி போன்றது. இடையிடையே சிதைந்துள்ளது. இதில் *343* செய்யுட்களே இருக் கின்றன.

---

### 211. No. 417 (*a*) திருச்சிற்றம்பலக்கோவையார் உரையுடன்.

ஏடுகள் *221*; Lines *5* in a page.

இது மேற்பிரதியோடு தொடர்ந்த பிரதி. இதில் 344வது செய்யுள் முதல் *400*-ம் செய்யுள் முடிய இருக் கிறது.

212. 417 (*b*) சிலப்பதிகார மூலம்.

Lines 5 in a page.

இது, தமிழ்க்காவியங்கள் ஐந்தனுள் இரண்டாவது. ஆனால் அவைகள் எல்லாவற்றினும் காலத்தால் முற்பட்டது. இயல், இசை, நாடக மென்னும் முத்தமிழ்க்கும் இலக்கிய மாயிருப்பது. இதன்கண் உரைநடையும் இடையிடையே விரவிவருவதால் இதனை உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளென்பர். சோழர்களின் இராஜதானிகளில் ஒன்றாகிய காவிரிப்பூம் பட்டினத்தில் பெருங்குடியர் என்னும் வணிகமரபில் மாசாத்துவான் என்றொருவன் இருந்தான். அவனுக்கு மகன் கோவலன். இவன் மனைவி கண்ணகி என்பவள். இக்கண்ணகியின் காலணியாகிய சிலம்பு காரணமாக நிகழ்ந்த வரலாற்றைக் கூறுதலின், இது சிலப்பதிகாரம் எனப் பெயர் பெற்றது. இக்கதை, தமிழ் நாட்டு மூவேந்தரின் இராஜதானிகளாகிய புகார், மதுரை, வஞ்சி என்னும் மூன்றிடத்தும் நிகழ்ந்ததாகலின், இந்நூல் புகார் காண்டம் மதுரைக்காண்டம் வஞ்சிக்காண்டம் என்னும் மூன்று காண்டமாகப் பகுக்கப்பட்டுள்ளது. புகார்—காவிரிப்பூம் பட்டினம்.

இதனை இயற்றியவர், இளங்கோவடிகள் என்பவர். இவர், இக்கதை நிகழ்ந்த காலத்தில் சேரநாட்டை ஆண்டிருந்த சேரன் செங்குட்டுவனுக்குத் தம்பியாவர். சேரலாதன் என்பவனது இளைய குமாரர். முத்தமிழின் துறை போகிய வித்தகர். இளமைப்பருவத்திற்றானே அரச செல்வத்தை வெறுத்துத் துறவுபூண்டவர். இதற்குச் சிறந்த உரை செய்தவர் அடியார்க்குநல்லார் என்பவர். இதுவன்றி செயங்கொண்டார் செய்த அரும் பதவுரையும் உண்டு. இந்த நம்பரில் முதல் இரண்டு காதைகளும் வஞ்சிக்காண்டத்தில் நடுகற் காதையும்

முடிய இருப்பதோடு வாழ்த்துக் காதையிற் சிறு பகுதி யும் இருக்கின்றது. இது உரையுடன் மகாமகோபாத்தி யாயர் உ. வே. சாமிநாதையரவர்களால் அச்சிடப்பட் டுள்ளது.

தன்றே ஞென்கி ஞென்றுகை மிகூஉங்
களிறுபளர் பெருங்கா டாயினு
மொளிபெரிது சிறந்தன் றளியவென் னெஞ்சே.

**Beginning :**

குணவாயிற் கோட்டத் தரசுதுறந் திருந்த
குடக்கோச் சேர லிளங்கோ வடிகட்குக்
குன்றக் குறவ ரொருங்குடன் கூடிப்
பொலர்பூ வேங்கை நலங்கிளர் கொழுநிழ
லொருமுலை யிழந்தாளொர்திருமா பத்தினிக்
கமரர்க் கரசன் றமர்வந் தீண்டியவள்
காதற் கொழுனற் காட்டி யவளொடெங்
கட்புலங் காண விட்புலம் போய
திறும்பூது போலு மறிந்தரு ளீயென
வவனுழை வந்த தண்டமிழ்ச் சாத்தன்
யானறி குவனது பட்டதென் றுரைப்போன்

* * * *

பாகமோ வகுத்த பத்தினிக் கோட்டத்
திமையோ ருறையுஞ் சிமையச் சென்னி
தெய்வம் பரசிக் கைவினை முற்றிய
வித்தக ரியற்றிய விளங்கிய கோலத்து
முற்றிழை நன்கல முழுவதும் பூட்டிப்
பூப்பலி செய்து காப்புக்கடை......

வேள்வியும் விழாவும் நாடொறும் வகுத்துக்
கடவுண் மங்கை செய்கென வேவினன்
வடதிசை முருக்கிய மன்னவ ரேறென
நடுகற்காதை முற்றும்.

**End :**

காவல் வேந்த னிடம்புகக் கண்ணகி
கண்ணீர் கண்டு மண்ணரசர் பெருந்தோன்ற
லுண்ணீ ரற்றுயி ரிழந்துமா மறையோன்
சொற்கேட்டு மாசாத்து வான்றுறக்கவு
மக்கிளைழத்தி யுயிரிழப்பவு
மெனைப்பெருந் துன்ப மெய்திய காவற்
பெண்டு மறந்தோழியுங்
கடவுட்சாத்தனுட னுறைந்த தேவந்தியு
முடன்கூடிச்சேயிழையைக்காண்டுமென்று
மதுராபுரிபுகுந்து முதிரா முலைப்பூசல் கேட்ட

* * * *

ஊரன் யாவர்க்குமூ தியமாதலா னன்பானன்றி யருளாற் பரத்தையர்க்குந் தலையளி செய்யுமன்றே யதனுணிப் புலத்தற்பாலையல்லை யென்று கூறிப் பின்னர்த் தோழி சிவப்பாற்றுவித்தல். 400

சிவமயம். தேவிசகாயம். திருச்சிற்றம்பலம்.
குருபாதந்துணை.

திருச்சிற்றம்பலக்கோவை யெழுதி நிறைந்தது.
முற்றும்.

---

213. No. 417 திருச்சிற்றம்பலக்கோவையார் உரையுடன்.

ஏடுகள் 136; Lines 8—9 in a page.

இதுவும் மேற்பிரதியைப் போன்றது. இந்தப்பிரதியில் இந்நூல் முழுவது மிருக்கிறது. சிற்சில இடங்கள் தவிர முழுவதும் நல்ல நிலைமையில் இருக்கிறது.

214. No. 419 திருச்சிற்றம்பலக்கோவையார் உரையுடன்.

ஏடுகள் 270 ; Lines 5—9 in a page.

இதுவும் முன் பிரதிபோன்றது. முழுவது மிருக்கிறது. ஆனால் அதிகமாகச் சிதைந்துள்ளது. மற்றப் பிரதிகளிலில்லாத இரண்டு செய்யுட்கள் இதிற் காணப்படுகின்றன. அவைகளை அடியிற்காண்க.

எண்ணிறந்த தில்லை யெழுகோ புரந்திகழக்
கண்ணிறைந்து நின்றருளுங் கற்பகமே—நண்ணியசீர்த்
தேனூறுஞ் செஞ்சொற் றிருக்கோவை யென்சிந்தை
நானூறு நிற்கவே நல்கு.

ஆரணங் காணென்ப ரந்தணர் யோகிக ளாகமத்தின்
காரணங் காணென்பர் காமுகர் காமனன் னூலதென்ப
ரேரணங் காணென்ப ரெண்ண ரெழுத்தென்ப ரின்புலவோர்
சீரணங் காய்நின்ற சிற்றம்பலக் கோவையைச் செப்பிடினே.

---

215. No. 420 திருச்சிற்றம்பலக்கோவையார் மூலம்.

ஏடுகள் 107; பூர்த்தி. Lines 4—6 in a page.

இதுவும் முற் பிரதிபோன்றது. மூலபாடமட்டு முள்ளது. சிதிலமாயிருக்கிறது.

---

**216.** No. 421 திருச்சிற்றம்பலக்கோவையார் மூலம்

ஏடுகள் *90*; பூர்த்தி. Lines 6—8 in a page.

இதுவும் முற்பிரதியைப் போன்றது. சிதிலமாயிருக்கிறது.

---

**217.** No. 422 திருச்சிற்றம்பலக்கோவையார் மூலம்.

ஏடுகள் *98*; அபூர்த்தி. Lines 5—6 in a page.

இதில் ஆரம்பமுதல் 287 செய்யுட்களும் அதன் பின் 308 முதல் 310 வரையிலுள்ள செய்யுட்களும் இருக்கின்றன.

---

**218.** No. 423 தஞ்சைவாணன் கோவை மூலம்..

ஏடுகள் 61; பூர்த்தியாயிருக்கிறது.

Lines 7—8 in a page.

இது, தஞ்சை வாணனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு, பாடப்பட்டதாகலின், தஞ்சைவாணன் கோவை எனப்பட்டது. தஞ்சைவாணன் என்பவன் பாண்டிநாட்டில் மதுரை நகரை யடுத்த தஞ்சாக்கூரில் அரசு புரிந்திருந்தவன், இவனை, 'மாவலி வாணன்,' 'மல்லையிற் போர் வென்றவன்' என இக்கோவை கூறுவதால், இவன் வாண வம்சத்திருந்த ஒரு சிற்றரசனெனத் தெரிகின்றது. இவனுக்குச் சந்திரவாணன் எனவும் வரோதயன் எனவும் பெயருண்டு. இவனை, மதுரை திருநெல்வேலிகளை ஆட்சிபுரிந்த பாண்டியர்களுக்கு அமைச்சனும் சாமந்தனுமாக இருந்தவன் என்பர். இக்

கோவை, நம்பியார் அகப்பொருள் இலக்கணத்திற்கு இலக்கியமாகப் பாடப்பட்டதெனக் கூறுவர்.

இதனைப் பாடிய பொய்யாமொழிப் புலவர் தொண்டை நாட்டில் செங்காட்டங் கோட்டத்தில் உறையூரில் பிறந்து கல்வியிற் சிறந்து விளங்கிய பெருமபுலவர் எனவும் கண்டியூர் சீனக்க முதலியாருடைய நண்பர் எனவும், இம் முதலியாரைப் பிரிந்திருக்க மனஞ் சகியாமல் அவர் வேகும் சிதையில் தாமும் அவருடன் படுத்து உயிர் நீத்தனர் எனவும் கூறுவர். இப்பாட்டுத்தலைவன் கி. பி. பதினாறும் நூற்றாண்டின் கடைசியில் இருந்தவனா தலால், இவனைப்பாடிய இப்புலவரது காலமும் பதினாறும் நூற்றாண்டின் கடைசி அல்லது பதினேழாம் நூற் றாண்டின் தொடக்கம் என்று ஊகிக்கலாம். இதற்கு உரை செய்தவர் குன்றத்தூர் சொக்கப்ப நாவலா் என்பவர். இந்தப்பிரதியில் 424 செய்யு ளிருக்கின்றன. இந்நூல் உயையுடன் அச்சிடப் பட்டிருக்கிறது.

ஆய கலைக ளறுபத்து நான்கினையு
மேய வுணர்விக்கு மென்னம்மை—தூய
வுருப்பளிங்கு போல்வாளென் னுள்ளத்தி னுள்ளே
யிருப்பளிங்கு வாரா திடர்.

**Beginning:**

காட்சி

புயலே சுமந்து பிறையே யணிந்து பொருவிலுடன்
கயலே மணந்து கமல மலர்ந்தொரு கற்பகத்தி
னயலே பசும்பொற் கொடிநின்ற தால்வெள்ளை
யன்னஞ் சென்னல் (ந்நெல்)
வயலே தடம்பொழில் சூழ்தஞ்சை வாணன்
மலையத்திலே. (1)

தலைவிக் கவன்வரல் பாங்கி சாற்றல்

நெஞ்சுக வாய்மல ரன்னகண் ணீர்மல்க நின்ற
வஞ்சொற்
கிஞ்சுக வாய்மொழி கேட்டரு ணீயொண் கிளைத்
தமிழோர்
தஞ்சுக வாய்மொழி நெஞ்சுடையான்றஞ்சை வாணன்
வெற்பில்
மஞ்சுக வாய்கவர் காவலர் தேரின் மணிக்குரலே (150)

**End:**

தலைமகளோடிருந்த தலைமகன்
கார்ப்பருவம் கண்டுவந்து சொல்லல்

கொத்தல ரோதியங் கொம்பரன் னுள்பொங்கு
கொங்கை விம்ம
முத்தல ராக முயங்கினம் யாமுழு நீர்விழிபொன்
மைத்தல நீல மலர்வயல் சூழ்தஞ்சை வாணன்வண்மை
கைத்தல மான வுழிபொழி யாநின்ற கார்ப்புயலே(424)
வாணன் கோவை எழுதி நிறைந்தது முற்றும்.

---

219. No. 424 தஞ்சைவாணன் கோவை
மூலம்.

ஏடுகள் 86; பூர்த்தி. Lines 6—9 in a page.

இதுவும் மேற் பிரதியைப் போன்றது. ஆனால் அதைப்பார்க்கிலும் பழைமையாகக் காணப்படுகிறது. அடியிற்கண்ட செய்யுள்மட்டும் இதில் அதிகமாயிருக்கிறது.

போதச் செழும்பாலும் பொல்லா விருணீரும்
பேதப் படுத்தும் பெடையன்ன—மேதக்க
வள்ளக் கமலத்தோன் வாய்க்குடம்பைத் தேனுமென
துள்ளக் கமலத்தே யுண்டு.

**Colophon:**

வாணன் கோவை எழுதி நிறைந்தது முற்றும். செல்வ விநாயகர் துணை. விஜயஹூ புரட்டாசிமீ 11வ கண்ணங் குடைப் பெரியபிள்ளை சுவடி. வாணன் கோவை முடிந்தது. கவிராசா அய்யா தன்மம்.

நடராயன் அய்யா படிச்ச சுவடி குரோதிஹூ ஆனிமீ 27வ படித்து முடிந்தது. முற்றும்.

---

220. No. 509 (*a*) இராசைக் கோவை.
ஏடுகள் 26 ; Lines 5—7 in a page.

இது மன்னார்கோயிலில் வீற்றிருக்கும் இராஜ கோபால சுவாமியைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு பாடப்பட்டதாகலின் இப்பெயர் பெற்றது.

இதில் முன்னும் பின்னுமின்றிச் சில ஏடுகள் மட்டும் இருப்பதால் இதனை இயற்றியவர் இன்னாரென்பதும் செய்யுள் இத்தனை என்பதும் விளங்கவில்லை. இராசை என்பது இராசமன்னார் கோவில் என்பதன் மரூஉ. இந்தப் பிரதியில் 6 முதல் 23 வரையிலுமுள்ள ஏடுகள் மட்டும் இருக்கின்றன.

**Beginning** .

முக்கணருள் நால்வாய் முறச்செவினன் கோர்கரஞ்சேர்
தக்கமத மாவேநின் ருள்தொ[ழுதேன்]—புக்கபொருட்
சொன்னதமிட் கோவைத் துறைவழுவா தென்னாவில்
நன்னய மாக நவில்

தந்த வரமுந் தமிழ்க்கோவை யுந்தழைத்துப்
புந்தி யுலகிற் புகழோங்கச்—சந்ததமு

மாலா மியல்பொழிசெவ் வாக்குத்தந் தாள்கதிரை
நீலா மயில்வேலா நீ

பிரிந்து வருகென்றல்

கெண்டைகள் தாவியம் போருகமீதிற் கிடக்கக் கெற்சித்
தொண்டொடி மாதர் கனல்பாய்ந்த தொக்கு.........
விண்டொடு சாரற்றென் சீராசை வெற்பினில் மெல்லி நல்லீர்
வண்டமர் சோலை யொளிவிளை யாடி வருகுவனே

**End :**

தலைவி பாங்கியை முனிதல்.

பயிர்கான்ற வாவன்று தோய்ந்தவர்க் காகப்பரிந்துபரிந்
துயிரான பாங்கியுவந்திரந்தா னென்னு மோமலின்றே
செயிராகப் பெற்றனமென்னோ பலித்த செவ்வாய் மலர்ந்து
தயிர்வாரி யுண்ட பிரான்றென்னி ராசைத் தடவரைக்கே.

---

221. (*b*) கந்தரனுபூதி.
Lines 4—5 in a Page.

இது *389a* நம்பர் போன்றது. இதில் காப்பு முதல் 23 செய்யுட்களும் 31 முதல் 41-ம் செய்யுள் முடியவும் இருக்கின்றன. நாலாவது ஏடில்லை.

---

ii. வருக்கக்கோவை.
222. No. 332 நெல்லை வருக்கக்கோவை.
ஏடுகள் 12; Lines 6—7 in a page

இது, திருநெல்வேலியில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமான்மீது மொழிக்கு முதல்வரும் எழுத்துக்களை முதலெழுத்தாகக் கொண்டு துறைப்பொருளமையப்

பாடப்பட்டிருத்தலின் வருக்கக்கோவை எனப் பெயர் பெற்றது. இது காப்புச்செய்யுள் உட்பட 99 கலித்துறைகளை யுடையது. செய்யுள் நடை சிறந்தது. இதற்கு நெல்லை மாலை எனவும் பெயருண்டு.

இதனை இயற்றியவர் அம்பிகாபதி என்பவர். இவர் பாண்டியநாட்டில் வேம்பற்றூரில் வேதியர் குலத்தில் பிறந்தவர். இவற்றினை, இந்நூலின் கடைசிச் செய்யுளாகிய, 'கண்ணூறு சாத்தும்' என்பதில் காண்க. காலமுதலியவை தெரியவில்லை. 5ம், 6ம், ஏடுகள் பாதியாக முரிந்துள்ளன. இப்பிரதி சிற்சில இடங்களில் சிதைந்துமிருகிறது. இது அச்சிடப்படவில்லை.

தேரோடும் வீதியெல்லாஞ் செங்கயலுஞ் சங்கினமும்
நீரோடு லாவிவரு நெல்லையே—காரோடு
கந்தரத்த ரந்தரத்தர் கந்தரத்த ரந்தரத்தர்
கந்தரத்த ரந்தரத்தர் காப்பு.

அத்தி முகத்
துத்த மனை
நித்தம் நினை
சித்தமே.

**Beginning :**

காட்சி

அமிழுங் கயலும் புயலுந் தனியரக் காம்பலுந்தே
னுமிழும் பொசியவெண் முல்லையுமா யொழியாமறையுந்
தமிழுந் தெருமணக் கும்நெல்லை நாதர் தடஞ்சிலம்பில்
கமலும் பொழில்வளர் வல்லிக்கண் டேகண் களிகொண்
டதே

நெஞ்சொடுபுலம்பல்

ஔவவர் சீலம் பலகாலுஞ் சீலத் தறிந்தபின்னை
எவ்வவர் நட்புங் கொளப்பெற்றி லோமிம வாரணங்கை

வவ்விய கோலத்தர் நெல்லையஞ் சாரல் வரையில்வல்லி
நவ்வியங் கண்ணினை போல் தடுமாறிய நன்
னெஞ்சமே (12)

**End :**

கண்ணூறு சாத்து மரியயன் போற்றுங் கழைமுத்தற்குப்
பண்ணூருஞ் சொல் வருக்கக்கோவை தனைப் பரிவு
டனே
வெண்ணீறணி யம்பிகாபதி வீரையில் வேதியன் சொற்
றெண்ணூறுமெட்டும் படிப்பார் தமக்கில்லைத் துன்பங்
களே (99)

நெல்லைமாலை எழுதி முடிந்தது முற்றும்.

---

223. No. 333 நெல்லை வருக்கக்கோவை.
ஏடுகள் 33; அபூர்த்தி Lines 4 in a page.

இதுவும் முற்பிரதியைப் போன்றதே. இதில் 92 செய்யுளே இருக்கின்றன. 29 வது ஏட்டில் பாதியில்லை.

---

iii. அந்தாதிகள்.

224. No. 125 திருவரங்கத்தந்தாதி மூலம்.
ஏடுகள் 20; அபூர்த்தி. Lines 8—9 in a page.

ஒரு செய்யுளின் அந்தம் அடுத்த செய்யுளின் ஆதியாகப் பாடப்படுவது அந்தாதியாகும். அது யமகவந்தாதி, திரிபந்தாதி என்றிருவகைப்படும். இது திருவரங்கம் சீரங்கநாதர் விஷயமாகப் பாடப்பட்ட யமகவந்தாதி. இதனை இயற்றியவர் பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் என்பவர். இவர்க்கு மணவாளதாசர் எனவும் பெயருண்டு இவரை மதுரையில் அரசு புரிந்த திருமலை நாயக்கரிடம் இராயச வேலையில் இருந்தவர், பின்னர் அதனை விடுத்துத் திருவரங்கமடைந்து பல பிரபந்தங்களைப் பாடிப்

பகவத் பக்தியில் ஈடுபட்டிருந்து பரமபத மடைந்தவர் என்ப. இவ்வந்தாதி, இவர் பாடியுள்ள அஷ்டபிரபந்தங் களுள் ஒன்ருகும். இவரும் சைவஎல்லப்ப நாவலரும் ஒரு சாலை மாணவரென்பர். இவ்வந்தாதி அச்சிடப்பட்டிருக் கிறது. திருமலை நாயக்கர் காலத்தவராகிய இவரைப் பதி ணெட்டா நூற்ருண்டினர் எனவும் பன்னிரண்டா நூற் ருண்டினர் எனவும் கூறுவார் கூற்று பொருத்தமாகக் காணப்படவில்லை.

**Beginning:**

ஓராழி வெய்யவன் சூழல கேழுவந் தேத்தரங்கர்
காராழி வண்ணர் பெருமாளந் தாதிக்குக் காப்புரைக்கிற்
சீராழி யங்கையிற் பொற்பிரம் பேந்திய சேனையர்கோன்
கூராழி சங்கு திருக்கதை நாத்தகங் கோதண்டமே.

திருவரங் காவுறை மார்பா திசைமுகன் சேவிப்பக்கந்
திருவரங் காதரித் தின்னிசை பாடத் திருக்கண்வளர்
திருவரங் காவுன் பழவடி யேற்கருள் செய்யவெழுந்
திருவரங் காதலித் தேனுனக் கேதொண்டு செய்வ
தற்கே.

**End:**

நிலமெண் குணவாள பட்டருக் கேழேழ் பிறப்பு.........
......வாளதாதன் வழுவிலந்தாதிச் சொல்மாலை

---

**225. No. 126 திருவரங்கத்தந்தாதி**
**உரையுடன்.**

ஏடுகள் 93; பூர்த்தி. Lines 5 in a page.

இதுவும் முன்பிரதியைப் போன்றது. இதில், 100 பாடலும் உரையு மிருப்பினும் சிதிலமாயிருக்கின்றன.

**Beginning:**

ஓராழி......கோதண்டமே.

எ-து. ஒற்றையாழி யுருளையுடைய தேரையுடைய சூரியன் சுற்றப்பட்ட உலகமேழும் விசுவாசமாகித் தோத்திரம் பண்ணு நின்ற சீரங்கத்தையுடைய பெருமாள் கறுத்த கடல்போலும் நிறத்தையுடையவன் அந்தாதியாகிய பிரபந்தத்தைக் காப்பாரைச் சொல்லுமிடத்துச் சிறப்புப் பொருந்தின மோதிரத்தையுடைய அழகிய கையிலே தங்கப் பிரம்பு கொண்ட சேனை முதலியாருமுனையுடைய சக்கரமுஞ் சங்குஞ் சிறந்த தடியும் வாளும் வில்லும் என்றவாறு. வண்டி.........தேரென்றதும் காப்பாரைக் காப்பென்றது மாகுபெயர். மண்ணுலகேழும் தொழு மெனவே விண்ணுலகேழுந் தொழுமெனவாம். 'ஒரு மொழி யொழி தன்னினங் கொளற்குறித்' தென்பதினால் • சிறப்புடைய மோதிரமாவது முத்திரை மோதிரம். 'பைம் பொனாழி தொட்டான் படைகாட்டி' என்றார் சிந்தாமணி யினும். அந்தாதியாவன முற்பாட்டினுடைய கடையிற் பாட்டது எழுந்தாலுஞ் சீராலு மசையாலு மடியாலும் தொடையிற் சீராலும் அந்தாதிக்கப்படும். அவற்று ளிந்த பிரபந்தம் எழுத்து முதலிய மூன்றந்தாதியும் வந்தவாறு ஆங்காங்குணர்க. இது நிலை வாழ்த்து. அலங்காரஞ் சொற்பின் வருநிலை.

திருவரங்கா........ ......செய்வதற்கே

எ-து பெரிய பிராட்டியருளுமனையாக நீங்காத மார்பையுடையானே, பிரமதேவன் சேவிக்கவும் யாம தேவரவ்விடத்து விசுவசித்து இனிய சங்கீதம் பாடவுஞ் சிறந்த கண்ணுறங்கா நின்ற சீரங்கத்தையு டையானே, உன்னுடைய பூருவதாசனை எனக்குக் கிருபைபண் ணுவாயாக வெழுந்திருப்பாய்; பெருமைக் கொடையை விரும்பினே னுன்னிடத்திற் கயிங்கிரியம் பண்ணுவதற் கென்றவாறு. திருவரங்கா வுனக்கே தொண்டு செய் வதற்கு வரங்காதலித்தே னுன்பழவடியேற் கருள

செய்ய வெழுந்திருவெனக்கூட்டுக. சிவனயன் சேவிக்க வென்பது பாடமாயின் சிவனும் பிரமனுஞ் சேவிக்கவு மென்க வென்னுநா...ம வருவிக்கவும். கொள்வார்க்குக் கொடுப்பாரிருந்து கொடுத்தல் வெகுமானம். ஆகை யால் எழுந்திரு வென்றுரென்க.

**End :**

இதனுட் பாட்டுத் தோறுந் துறையு மலங்காரமும் கண்டு எழுதாதது ஒரு துறையுட் பலப்பட்டு வருத லாலும், ஓரலங்காரத்தால் பலப்பட்டு வருதலாலும், அவையடைவாய் வாராது கலந்து வருதலாலும், பொழிப்பு முடிவுந் துணிவுங் கண்டெழுதினோம். துறையு மலங்காரமும் வேறேயெடுத்து அடிவரை யிட்டது பிறிதாக எழுதினதுங் காண்க. இந்தச்சொற் றொடர் நிலைச் செய்யுளுள் மொழி முதலாகாதன மொழி முதலாக்கினர். தொல்காப்பியனர் சகார வரியுள்ளும் யகார வரியுள்ளும் ஓகார வரியுள்ளும் மொழி முதலா காதவற்றை......... வழக்குபற்றி மொழி முதலாக்கினது போலாம். அல்லதூஉமிச் செய்யுள் செய்தார் வாக் கியாதலின் ஆ...ட பாலியென அமைப்பதுமாம்.

**Colophon :**

அரங்கத்தந்தாதி எழுதி நிறைந்தது முற்றும்.

ஓரா தெழுதினே னுயினு மொண்பொருளை
ஆராய்ந்து கொள்வ ரறிவுடையோர்—சீராய்ந்து
குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்

சீயர் திருவடிகளே சரணம்.
திருவேங்கட தாசன் கையாலெழுதினது.

முற்றும்.

---

226. No. 280 திருவரங்கத்தந்தாதி மூலம்.
ஏடுகள் 25; Lines 5 in a page.

இது 125ம் நம்பர் போன்றது. இந்தப்பிரதியில் நூறு செய்யுட்களும் இருக்கின்றன. கடையேட்டின் தலைப்பு முரிந்துள்ளது.

**Colophon :**

சீயர் திருவடிகளே சரணம்.
வேங்கடகிருஷ்ண குருவே நமா.

---

227. No. 127 சித்தரந்தாதி.
ஏடுகள் 4; Lines 5— in a page.

இது அம்பிகை தோத்திரம். பார்ப்பதற்குக் கொஞ்சமும் தகுதியற்றதாய்ச் சிதைந்து துண்டு துண்டாய்க் கிழிந்து கிடக்கின்றது. முதல் நடு இறுதி ஒன்றும் காண முடியவில்லை. இதைப்பற்றியவிவரங்களை 128-ம் நம்பரிற் காண்க.

---

228. No. 128(*a*) சித்தரந்தாதி உரையுடன்.
ஏடுகள் 23; Lines 6—8 in a page.

இது திருவானைக்கா அகிலாண்டேஸ்வரி தோத்திரம். கலித்துறையான் அமைந்த 22 செய்யுட்களை உடையது. இதனை இயற்றியவர் சித்தர் என்பவர். இவற்றினை 129-ம் நம்பரில் வந்துள்ள 'சுத்தரந்தாதி' என்னும் செய்யுளால் அறிக. இதற்கு இரண்டு உரைகளுண்டு. இது அச்சிடப்படவில்லை.

எப்போ தகத்தும் நினைவார்க் கிடரில்லைக்
கைப்போ தகத்தின் கழல். விநாயகாயநம :

**Beginning :**

பாரடை யப்பதந் திக்கடை யப்பரி வட்டந்தொங்கல்
காரடை யக்கொங்கை வெற்படையக்கடுக் கைச்சடைக்
காட்
டூரடை யப்பகி ரண்டத்தி னெல்லேவல் லிக்குகாந்த
நீரடை யத்தண் ணளிதிருக் கோயிலென் னெஞ்சகமே.

என்பது. வல்லிக்கு பூமி முழுதுஞ் சீபாதம். திக்கு முழுதுந் திருப்பரிவட்டம். மேகமுழுதுந் திருமாலே. மலைமுழுதுங் கொங்கை. பரந்த பகிரண்டத்தின் முடிவு முழுதுந் திருக்கொண்டை........................டைத்தாகிய கருணையித் தன்மையெபெ...............த்தாயினுந் திருக் கோயிலென் னெஞ்சக மென்றவாறு. வல்லிக்கென்ற சொல்லே யெல்லாவற்றோடுங் கூட்டுக. ஊரென் பதனைப் பரந்த சடைக்கா டென்றுரைப்பினு மமையும். பாரடையப்பதமென்ருர், எல்லாப் பொருளேயும் விளேயும் வண்ணஞ் செய்தலான். திக்கடையப்பரிவட்ட மென்ருர், வளேயச் சூழ்ந்து கிடத்தலான். காரடையத் தொங்க லென்ருர், பன்னிறம் பெற்றெழுக்கத்திேைடு குளிர்ச்சியையுடைத்தாதலான். வெற்படையக் கொங்கை யென்ருர், பெருமையினுன். பரந்த பகிரண் டத்தினெல்லே யடையக் கடுக்கைச் சடைக்காடென்ருர், பொன்னிறம் விளங்கி யளவிறந்த வந்தம் பெறலான். உகாந்த நீரடையத் தண்ணளியென்ருர், மிகுதியோடு குளிர்ச்சி யுடைத்தாதலான். இந்தப் பிரளயத்தைத் தண்ணளி யென்ருராகலின், ஊழித்தீயாற் பல்லுயிர் களும் வெந்து பாழ்படுவதன் முன்னம் பூமியந்தர சுவர்க்கம் புதையப் பிரளேயங் கோக்கும் வண்ணஞ் செய்து பல்லுயிர்களேயுந் தன்னுடைய திருவடிக்கே சேர்த்திக்கொண்டு அக்கூடு சங்காரமானபின்பு மீட்டுந் தோற்றும் வண்ணஞ் செய்து தண்ணளி செய்யாநின்ற வாறு போலுங் கருத்து. திருக்கோயி லென்னெஞ்சக மென்ருர். கருவிகளிற் புரிதலின்றி யொருங்குதல் பயப்பி

னென்னுடைய நெஞ்சகமே யகமாகுமென்றார். வ...அடைய வென்பதற்கு வல்லிக் கவ்விடங்கட் கேற்ற செயலடுத்து நின்றவப் பொருள்க ளுகாந்தத் தின்க ணவ்விடங்கடோறுமமையு மென வொரு பொருட்டோன்றியவாறு கண்டு கொள்க.

**End :**

வேணும் பெறவென் றிருக்கான வுள்ளத்து மேவிமிக்க
நாணுங் கொடுமையும் நல்குரவுஞ் செற்ற நாயகியே
சேணுந் தலமுந் திசையெட்டு மாகிய சிற்சத்தியே
பாணு மறையும் பரவுந் திருவடிப் பாரடைவே. (22)

---

229. (*b*) திருவெழுக்கூற்றிருக்கை
உரையுடன்.

Lines 6—7 in a page.

இது திருஞான சம்பந்த மூர்த்தி நாயனுர் இயற்றிய பாசுரங்களில் ஒன்றும். இதில் சிதைந்த ஏடுகள் 6 இருக்கின்றன. இது அச்சிடப்பட்டுள்ளது.

---

230. No. 129 சித்தரந்தாதி உரையுடன்.
ஏடுகள் 20; Lines 5 in a page.

இதுவும் முன் நம்பரைப்போன்றது. ஆனுல் முன் நம்பர் பிரதிக்கும் இதற்கும் பாடபேதம் காணப்படுகின் றது. இந்நூலை இயற்றியவர் சித்தர் என்பதும் இது இருபத்திரண்டு செய்யுளாலமைந்தது; என்பதும் திரு வானைக்காவில் கோவில் கொண்டருளிய அகிலாண்ட நாயகி தோத்திரம் என்பதும் இந்நூலின் தொடக்கத்தில் எழுதப்பட்டுள்ள 'குத்தரந்தாதி' என்னும் செய்யு ளானும், கடைசியிலுள்ள 'மூலையில்வாழும்' என்னும் செய்யுளாலும் விளங்கி நிற்றல் காண்க. இதற்கு உரை செய்தவர் இன்னரென்பது தெரியவில்லை. இவ்வுரை 128-ம் நம்பர் உரையினும் வேருனது.

குத்தரந் தாதிப் பிறவிக் கடலைக் குலைத்துநெஞ்சே
முத்தரந் தாதித் துறைபெற லாமுதி ராமுலையாள்
அத்தரந் தாதி யகிலாண்ட நாயகி யம்மையுட
சித்தரந்தாதி இருபத்திரண்டையுஞ் செப்பிடவே.

**Beginning :**

பாரடை யப்பதந் திக்கடை யப்பரி வட்டங்கொண்டை
காரடை யக்கொங்கை வெற்படை யக்கடுக்
கைச்சடைக்கா
டூரடை யப்பகி ரண்டத்தி னெல்லைவல் லிக்குகாந்த
நீரடை யத்தண் ணளிதிருக் கோயிலென் னெஞ்சமே.

என்றது. நிலமேழுஞ் சூழ்வரு நீரேழுங் கீழ்ப் பாதலமேழு மேலேழு கம்பங் குலகிரிகளெட்டு நடு மேருகிரி யேமகடகஞ் சூழப்பட்டுள்ளதோ ரண்டப் பரிசு. இப்படி யோரண்டமாகத் தனது பராசக்தி மூர்த்தமான திருமேனியிலுதர நாபியிலுதித்த எல்லை யற்ற அகிலாண்ட கோடிகளில் தோற்றப்பட்ட பாரடங் கலும் பதபுண்டரீகமாகவும், திக்கடங்கலும் பரிவட்ட மாகவும், கொண்டலடங்கலுங் கொண்டையாகவும், வெற்படங்கலும் ஸ்தனபாரமாகவும், கொன்றைமாலை பொருந்திச் சிவந்த சடாடவித்தலம் அண்டரண்ட பகிரண்டங்களினது முடிவு எம்மட்டுச் சென்றது அம்மட்டாகவும், எல்லையற்ற உலகங்கள் முடியுங்காலங் கோக்கு மேகோதகமான பிரளயமடங்கலுந் தனது கிருகிருபைக் கடலாகவும் உடைத்தான வல்லிக்கு எனது யானென்னுஞ் சுட்டற்று அகண்ட பரிபூரணமாய் நிறைந்து போக்கு வரவு புணர்ச்சியற இருந்த எனது நெஞ்சகமே திருக்கோயிலாமென ஆனந்தாச்சரியமா யெழுந்தருளி இருந்தார் என்றவாறு. கொண்டை யென்றுஞ் சடைக்கா டென்றுங் கூறியது ஏதோ வென்னில், ஒருத்திதானே தேவியான அவதரத்துக்குக்

கொண்டை யென்றும் அம்மையான அவதரத்துக்குச் சடைக் காடென்று மவதர விசேடங் கூறினரென்ற வாறு.

**End :**

வேணுங் கதியென் றிருப்பார் மனத்துள் விரும்பியவர்
நாணுங் கொடுமையும் நல்குரவுஞ் செற்ற நாயகியே
சேணுந் தலமுந் திகழொளி யான சிவசத்தியே
பாணும் மறையும் பரவநின் ருயென்னைப் பாரடையே

என்றது. கதிவேணுமென்று கருதி இருக்கும் பெரியோர்கள் மனத்துள் விருப்பஞ் செய்து அவர்கள் வீரம் அச்சம் இழிவு வியப்பு காமம் அவலம் ரவுத்திரம் நகையென்னும் எண்வகைக் குண ஈனமும், நாணமும் கொடுமையும் நல்குரவும் நினது ஞான நாட்டத்தாலே நோக்கிப் பற்மீகரமாக்கிப், பெருங்களஞ்செய்து, அவர்களுள்ளக் கோயிலுள்ளே எழுந்தருளியிருக்கும் நாயகியே, அகிலாண்டங்க ளெங்கும் நிறைந்து அகண்ட பரிபூரணமாய் போக்குவரவு புணர்ச்சியற நின்று பேரொளிப்பிரபை வீசும் சிவானுபவ சக்தியே பாணுகிய இயலிசைகளாலும், மறையாகிய வாத்தியக் குழாங்களாலும், வேதாகம புராணங்களாலும் துதிக்கக் கண்டு திருவுளக்கருணை செய்திருக்கும் அம்மே, அடியேனையும் நினது கிருபா திருஷ்டியினுலே அடையப் பார்த்தருளுவாயாக வென்று அம்மை சன்னதியிலே குறைச்சலுடனே விண்ணப்பஞ் செய்தருளினுர் என்றவாறு.

மூலையில் வாழுங் கிழவியை முற்றத் தழைத்தவடன்
மேலுற வாகமம் வேதாந்தந் தன்னில் விரித்த அத்தங்
கோலிமுன் சித்த ருரைத்தவந் தாதியைக் கூறிநித்தம்
ஞால மிருப்பவர் பானம னுர்செல்ல நாணுவரே.

**Colophon :**

உருத்திரோற்காரிஞூ ஆடிமீ 20வ சித்தரந்தாதி உரையுடனேகூடி செம்பரம்பாக்கம் கறுப்ப முதலியார் புத்திரன் ஆறுமுகம் எழுதி நிறைந்தது முற்றும். வேலுமயிலும் துணை. சுப்பிரமணிய சுவாமி ரக்ஷிக்கக் கடவர்.

கரியுரி யாடைக் கடவுளுங் கார்நிற வண்ணங்கொண்ட
அரிபிர மாதிநின் ஞசனக் காலகி லாண்டம் பெற்று
திரிபுரை யம்மை சிவகாம சுந்தரி சிற்றடிக்கீழ்ப்
பரிபுர சில்லொலி யாயே கிடக்கும் பகிரண்டமே.

---

231. No· 138 அபிராமியந்தாதி மூலம்.
ஏடுகள் 16; Lines 6 in a page

இது, திருக்கடவூரில் கோயில் கொண்டிருக்கும் அபிராமியம்மை தோத்திரம். கலித்துறையானமைந்த செம்பகமான இனிய நூறு செய்யுட்களை யுடையது. இவ்வூர் தஞ்சாவூர் ஜில்லா மாயூரந் தாலூகாவிலுள்ளது. சிவபெருமான் மார்க்கண்டேயர் பொருட்டு யமனை உதைத்தருளிய இடமாதலின், இது அட்ட வீரட்டங்களுள் ஒன்ருகும். இந்நூலாசிரியர் திருக்கடவூர் அபிராமிபட்டர் என்பவர். ஒரு புரோகிதர். சக்தி உபாசகருட் சிறந்தவர். பக்தி வசப்பட்டிருந்த இவர் ஒரு அமாவாசி தினத்தைப் பௌர்ணமி என்றுரைத்து அதற்கேற்ப அம்மையின் அருளினுல் அமாவாசை இரவில் பூர்ணச் சந்திரோயத்தை யாவரும் காணச் செய்தனர் என்பர். இவருடைய காலம் 18ஆம் நூற்ருண்டு. இவ்வந்தாதி அச்சிடப்பட்டுள்ளது.

**Beginning :**

தாரமர் கொன்றையுஞ் சண்பக மாலையுஞ் சாத்துந் தில்லை
யூரர்தம் பாகத்துமைமைந்த னேயுல கேழு மெண்ணுஞ்

சீரபி ராமியந் தாதியெப் போதுமென் சிந்தையிலே
கார் நிற மேனிக் கணபதி யே நிற்கக் கட்டுரையே.

உதிக்கின்ற செங்கதி ருச்சித்திலத முணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்க மாதுளம் போது மலர்க்கமலை
துதிக்கின்ற மென்கொடி மின்கொடி குங்கும
தோயமென்ன
விதிக்கின்ற மேனி யபிராமி யென்றன் விழித்துணையே.

**End :**

குழையத் தழுவிய கொன்றையந் தார்கமழ்
கொங்கைவல்லி
கழையைப் பொருத திருநெடுந் தோளும் கருப்பு
வில்லும்
விழையப் பொரும்விறல் வேரியம் பாணமும்
வெண்ணகையு
முழையப் பொருதான் னெஞ்சிலெப் போது
முதிக்கின்றவே.

---

232. No. 132 அபிராமியந்தாதி மூலம்.
ஏடுகள் 14; Lines 6—8 in a page

இது முன்பிரதி போன்றது. ஆனால் சிதிலமா யிருக்கிறது.

**Colophon :**

கிட்டின்னப்பன் படித்து முடிந்தது முற்றும்.
குருபாதமே துணை. தையல் பாகர் பாத துணை.

---

233. No. 134 அபிராமியந்தாதி மூலம்.
ஏடுகள் 26; Lines 4—5 in a page.

இதுவும் முன்பிரதிபோன்றது. ஆனால் காப்புச் செய்யுளுக்குப் பிறகு முதற் செய்யுளாக.

'ஆத்தாளை யெங்க ளபிராம வல்லியை யண்டமெல்லாம்
பூத்தாளை மாதுளம் பூநிறத் தாளைப் [புவியடங்கக்]

[காத்தாளே] யங்கையிற் பாசாங்குசமுங் கருப்புவில்லுஞ்
சேத்தாளே முக்கண்ணியைத் தொழுவார்க்கொரு
தீங்கில்லையே'

என்ற செய்யுள் காணப்படுகின்றது. இதில் ஓர முழுவதும் சிதைவுற்றிருக்கிறது.

---

234. No. 135 அருணகிரியந்தாதி மூலம்.
ஏடுகள் 15; Lines 4—6 in a page.

இது திருவண்ணுமலையில் கோயில் கொண்டுள்ள சிவபெருமான் தோத்திரம். இவ்வந்தாதி வெண்பா அந்தாதியாகும். இதனை இயற்றியவர் குகை நமச்சிவாய மூர்த்திகள். இவர் ஒரு சித்தர். திருவண்ணுமலைக் குகைகளில் ஒன்றில் தூங்கும் ஊஞ்சலிட்டு அதனில் சயனித்த வண்ணமாக நிஷ்டை புரிந்திருந்தனராதலால் இப்பெயர் பெற்றனர் என்பர். இவரது மாணுக்கர் குருநமச்சிவாயர். இப்பிரதியில் முதலேடில்லை. 2 முதல் 4 ஏடுகள் முதலும் கடைசியும் முரிந்துள்ளன. 29-ம் செய்யுளிலிருந்தே தெரியக் கூடிய நிலையிலிருக்கின்றன. இதில் 98 வெண்பாக்களே இருக்கின்றன. காலம் பதினெட்டாம் நூற்ருண்டென்பர்.

**Beginning :**

கருத்தறிந்த மெய்யடியார் கண்காண வெள்(ளை)
எருத்தில்வருஞ் சோணகிரி யீசா—பெருத்த
அலங்கார நால்வேதன் ஐந்தலையி லொன்றை
கலங்காமல் நீயறுத்தாய் கண்டு. (29)

நீயே வரவேணும் நின்னைப்போ லானதுணை
நாயேனுக் காருண்டு நாடுங்கால்—தாயகமாய்
அண்ணு மலைமேவு மப்பனே யென்பிறவிப்
புண்ணு மலையாற்றும் போது. (48)

**End :**

சங்கையற்ற பாவந் தனை ... ... ... ...
... ... ... ...யிற் போய்க் காயத்தை—அங்கே
நனைக்கமுத்தி தென்னருணை நாதா நீ... ... ...
... ... ... ...தே நின்று. (98)

**Colophon :**

கிட்டினனப்பன் அருணகிரியந்தாதி படித்து முடிந்தது.

---

235. No. 136 அருணகிரியந்தாதி மூலம்

ஏடுகள் 8; Lines 6—7 in a page.

இது முற்பிரதிபோன்றது. இதில் 102 செய்யுட்களிருப்பினும் சிதைந்துள்ளது.

**Colophon :**

அருணகிரியந்தாதி எழுதி முடிந்தது. சுபமஸ்து. தாருணஸ்ரு ஆவணிமீ 10உ அம்மையப்பன் எழுத்து.

---

236. No. 137 அருணகிரியந்தாதி மூலம்

ஏடுகள் 25; Lines 3—4 in a page.

இது முன்பிரதிபோன்றது முதல் மூன்று ஏடுகள் சிதிலமாயிருக்கின்றன. கடைசியில் அடியிற்கண்ட செய்யுள் எழுதப்பட்டுள்ளது.

அருணகிரி யந்தாதி யழகுவெண்பா நூறுங்
கருணையுடன் கற்றோரைக் கண்டால்—அருணையண்ணல்
வீறுன பொன்னுலகை வேந்தனுக்கு மாற்றியங்கே
மாறுமல் வைப்பார் மகிழ்ந்து. (102)

அழகியநாதர் அபிராமி துணை.

---

**237. No. 138 திருப்புகலூர் அந்தாதி மூலம்.**
**ஏடுகள் 12; Lines 8 in a page.**

இது, சோழ நாட்டில் நன்னிலந் தாலூகாவைச் சார்ந்த திருப்புகலூரில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமான் தோத்திரம். கட்டளைக் கலித்துறையான் அமைந்த திரிபந்தாதி. இதனை இயற்றியவர் நெற்குன்றைவாணர் என்பவர். இவர் தொண்டைநாட்டில் நெற்குன்றம் என்னும்ஊரில், வேளாளர் குலத்தில் உதித்தவர். கல்வியினும் செல்வத்தினும் மேம்பட்டிருந்தவர். இவரது காலமும் காளமேகப்புலவர் காலமும் ஒன்றென்பர். அஃதுண்மையாயின் இவரது காலம் பதினைந்தாம் நூற்றாண்டாகும். இது உரையுடன் அச்சிடப் பட்டிருக்கிறது.

**Beginning :**

உரைசெய் மறைக்குந் தலைதெரி யாவொரு கொம்பனென்றே
பரசு மவற்குப் பெருநிழ லாகும் பழனமெல்லாந்
திரைசெய் கடற்றுறைச் சங்க முலாவுந் திருப்புகலூர்
அரசினிடத்தில் மகிழ்வஞ்சி யீன்றதோ ரத்தி நின்றே.

பூக்கம லத்து விழிவளர் வானென்றும் போற்றியவூர்
மாக்க மலத்து மகிழ்கின்ற வூர்மது வானிறைந்த
தேக்க மலத்து வழியே பரக்குந் திருப்புகலூர்
நோக்க மலத்துயர் சோதிநெஞ் சேநம்மை நோக்குதற்கே (1)

**End :**

பொற்குன்றனைய முலையுமைபங்கற்குப் புண்ணியற்குச்
சிற்குன்றனைய திருப்புகலூரற்குச் செந்தமிழால்
நெற்குன்ற வாணனுரைத்த வந்தாதியை நீணிலத்திற்
கற்கின்ற தன்றிக் கவிபாட யாவர்க்குங் கற்பல்லவே
(102)

ஹரி ஓம் புகலூரந்தாதி முற்றும்.

238. No. 139 குடந்தை அந்தாதி மூலம்.
ஏடுகள் 15 ; Lines 5—6 in a page.

இது, கும்பகோணத்தில் கோயில் கொண்டுள்ள சாரங்கபாணியாகிய ஆராவமுதப் பெருமாள் விஷயமாகப் பாடப்பட்ட திரிபந்தாதி. இதில் 102 கலித்துறைகள் இருக்கின்றன. இதைச் செய்தவர் இன்னாரெனத் தெரியவில்லை. ஏடுகள் முரிந்தும் சிதைந்தும் இருக்கின்றன. அச்சிடப்படவில்லை

**Beginning :**

கரதலந் தாமரை கண்கள்செந் தாமரை காமனுந்திப்
பரதலந் தாமரை பாதமுந் தாமரை பண்டைங்கப்
பொருதடந் தாமரை பொற்கைசெந் தாமரை பொற்குடந்தை
மரகதந் தாமரை மார்புஞ்செந் தாமரை மாயனுக்கே.

* * * *

ஆரணத் தந்தத்து மன்னை யசோதை கரத்து மன்னைக்
காரணத் தந்த வனத்து மலர்வன கஞ்சன் விட்ட
வாரணத் தந்த முறித்தே குடந்தையின் மாமறைநூல்
பூரணத் தந்தணர் போற்றும் பிரானடிப் போதுகளே

**End :**

பழவினை யும்பவ முங்கெடு மாறுநின் பாதங்கள்யான்
தொழுநினை யும்படி கண்டரு ளாததென் தொல்லைமண்மேல்
குழவினை யும்படி யீன்று ளெடாத குழவியுண்டே
விழவினை யுந்து குடந்தையில் நாகணை மேலவனே.

மேலப் படுக்கை நிரைத்திலங் கேசனைக் கொள்க
சீலப் படுக்கையராகவ ளும்நவ தீர்த்தங்களா [வென்ற
மோலப் படுக்கை மறவாக் குடந்தையினுட்கிடந்த
வாலப் படுக்கை யவ் வாரா வமுதென் கண் ணாரமுதே.

**Colophon :**

வேலுமயிலுந்துணை. துந்துமி வருஷம் அற்பிசிமீ 14வ குடந்தை அந்தாதி ஆறுமுகம் எழுதி நிறைந்தது முற்றும்.

---

239. No. 141 மருதூரந்தாதி உரையுடன்.
ஏடுகள் *99*; சிதிலம். Lines 5 in a page.

இது, பாண்டியநாட்டில், இக்காலத்தில் நயினார் கோயில் எனவழங்கும் மருதூரில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்மீது பாடிய யமகவந்தாதி. இதனைச்செய் தவர், தலைமலை கண்டதேவர். இவர், சேது நாட்டினர். அந் தகர், கல்வியில் சிறந்தவர். மறவர் குலத்தினர். இவர் மணஞ்செய்து கொள்வதற்கு வேண்டிக் களவு செய்வ தற்காகத் திருப்பூவணத்திலுள்ள ஒரு தாசிவீட்டில் அவ ளது படுக்கை அறைக்கண் இருந்த கட்டிலடியில் பதுங்கி யிருந்தனர். அந்த தாசி திருப்பூவண நாதர்மீது செய்யுளொன்று பாடி முடித்துப் பின் உறங்கும் வழக்க முடையவள். அன்று வழக்கம்போல அவள் பாடத் தொடங்கிய செய்யுள் முடிவு பெறவில்லை. அதனால் அவள் மயங்குகையில் கீழே ஒளிந்திருந்த தேவர் அதனைப் பாடிமுடித்தனர். அப்பொழுது தாசி திடுக்கிட்டு நீர் யார் என்ன? தன் வரலாற்றினைக்கூறிப் பொன் பெற்றுவந்து மணமுடித்துக் கொண்டன ரென்பர். இந்நூற்கு உரை செய்தவர் இன்னாரெனத் தெரியவில்லை. ஆனால் இது யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறு முகநாவலரியற்றிய உரையுடன் சென்னைசைவப் பிரகாச

வித்தியாசாலையில் அச்சிடப்பட்டிருக்கிறது. இவ்வுரை நாவலர் உரையினும் வேருனது.

**Beginning :**

ஒருகொம் பிருபத மும்மத நால்வாயோ ரைந்துகரம்
பெருகுஞ்செவிசிறு குங்கண் புகர்முகம் பெற்றதந்தி
முருகன்றமையனுமைமைந்த ஊைந்துமுகன் மகன்மால்
மருகன் றுணை நம்மருநூரந்தாதிவருவிக்கவே.

திருப்பங்கயத் தனம்மாதுக் களித்தவன் செந்துவர்
வாய்த்
திருப்பங்கயத்தன்புகூர் மருதூரன் றிரை யெழுந்த
திருப்பங்கயத் தனவாகத்தனுன் முகன் செவ்விமழுத்
திருப்பங்கயத் தனிருப்பனென் னெஞ் சிற்றிருக்கறவே.

எ-து. —திருப்பங்கயத் தனமாதுக் களித் தவன்— அழகிய திருமேனியோர் பங்கயத்தன் மாதாகிய பாருபதியார்க்குக் கொடுத்தவன். செந்துவர்வாய்த் திருப்பங்கயத் தன்புகூர் மருதூரன்—சிவந்த பவளம் போன்ற வதரத்தை யுடைய லட்சுமியன்புகூரும் பூவினையுடைய தாமரை யோடை சூழும் மருதூரமர்ந்தவன். திரை யெழுந்ததிருப் பங்கயத்தன்ன வாகத்தன் —திரையான தெழுந்துமதிரவுப்பிணையு முடைத்தாய, அம்-அழகிய, கயத்தன்ன-கயமாகிய நிலையற்றிருக்குஞ் சமுத்திரச் சலம் போன்றிருக்குந் திருமேனியையுடைய விட்டுணு—னு(நா)ன்முகன்—பிரம்மா இவர்களால் காணவரிதா யிருப்பவன்--என்னெஞ்சிற்றிருக் கறவே- இருவர்க்கு மரிதாயிருப்பவனுன செவ்விமழுத் திருப்டங் கயத்தன்—பங்கயமலரன்ன திருக்கரத்தின் செவ்வி யோடுங் கூடிய மழுவாயுதத்தைத் தரித்த சுவாமி— திருக்கறவே — திருக்காகிய மெஞ்ஞான நீங்குப்படிக்கு என்னெஞ்சத்து எழுந்தருளி யிருப்பானென்ற வாறு. (க)

**End:**

மாவினலங் ககலச் செற்ற மால் தங்கும்வாம...கர்
மாவினலங் கனிநீர் சென்னற் பாய்மருதூர்மலை
மாவினலங்க வளைத்தவர் பாதம் வணங்கினற்கு
மாவினலங்கலங்கற்ருேளில் வாழ மலர்த்திருவே (100)

எ-து. மா—யானை. அதனிட இன்னல்—துயர மானது. அங்ககல-அந்த வாவியினிடத்தே யகலும் படிக்குச், செற்ற — முதலையைக்கொன்ற விட்டுணு தங்கப்பட்ட வாம பாகத்தை யுடையவர். மாவினலங் கனிநீர்—மாவின் மிகுந்து அழகிய கனியினீர் சென்னற் குப்பாயும் வளப்பம் பொருந்திய மருதூரர், மலைமா விலங்க வளைத்தவர்—மகத்தான மாலையான மகமேரு வைக் கையினுலே வில்லாகவளைத்தவர், அவரிட பாதம் வணங்கினர்க்கு மாவினலங்கலங்க — அலங்கல் பொருந்து மகத்தான அங்கமுந் திடம்பெறத் தோளிலே யெப்போதும் பிரியாமல் மலரினிருக்குந் திரு வானவளி ருக்கப்பெற்று வாழ்வரென்றவாறு.

**Colophon:**

வேலுமயிலுந்துணை. விசையஹு மார்கழிமீ 24உ ஆதித்தவாரநாள் தஞ்சைநகரஞ் சுந்தரலிங்க முதலியார் குமா ரன் வேலாயுதமுதலி யெழுதினது. மருதூரந் தாதியுரை முடிந்தது முற்றும். சுவாமி நாயகன்றுணை. வெற்றி வேலுற்ற துணை. சரவணபவனிரட்சிக்கக்கடவது. சண்முக சகாயம்.

---

**240. No. 142 மருதூரந்தாதி யுரையுடன்.**
**ஏடுகள் 80 ;Lines 5—7 in a page.**

இதுவும் முன்பிரதியைப் போன்றது. உரையுடன் முழுவது மிருக்கிறது.

**Colophon:**

வேலுமயிலும் துணை. இரத்தாட்சிஸு அற்பசிமீ 10வ சனிவார நாள் செம்பரம்பாக்கம் சறுட்பமுதலியார் புத்திரன் ஆறுமுகம் மருதூரந்தாதி உரை எழுதி நிறைந்தது. முற்றும். சரவணபவர் ரெட்சிக்கக்கடவர்.

---

241. No. 143 மருதூரந்தாதி யுரையுடன். ஏடுகள் 148 ; மிகவும் சிதிலம். Lines 5—6 in a page.

இதுவும் முன்பிரதியைப் போன்றது. ஆனுல், 141, 142, நம்பர் உரையினும் இந்த நம்பரின் உரை வேறுபட்டது.

**Colophon:**

பிரமாதீசஸு மாசிமீ 20வ தாண்டவமூர்த்தி முதலியார் புத்திரன் அய்யாறன் மருதூரந்தாதி படித்து முகிந்தது முற்றும் எழுதிப்படிச்சது கனகசபாபதிபண்டாரம் முருகன் துணை.

---

242. No 698 மருதூரந்தாதி உரையுடன் ஏடுகள் 18; அபூர்த்தி. Lines 6—7 in a page.

இதில் 24ம் செய்யுள்முதல் 43ம் செய்யுள்வரை உரையுடனிருக்கிறது. இவ்வுரை 141, 142ம் நம்பர் உரை போன்றது.

---

243. No. 243 (*a*) அழகரந்தாதி மூலம். ஏடுகள் 212; Lines 4—5 in a page.

இது பாண்டிய நாட்டில் அழகர்மலை என வழங்கும் திருமாலிருஞ்சோலையில் வீற்றிருக்கும் திருமால் விஷயமாகக்கலித்துறையா னமைந்த திருபந்தாதி. இதில் 101 செய்யுட்கள் இருக்கின்றன. இதனை இயற்றியவர் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார். அவர் பாடிய அஷ்டப்

துள் இதுவும் ஒன்று. இந்தப் பிரதியில் 74, 96-ம் செய்யுட்களின் இரண்டாம் அடியும் 100-ம் செய்யுளில் 3-ம் 4-ம் அடிகளும் இல்லை. இது அச்சிடப்பட்டுள்ளது.

நீராழி வண்ணனைப் பாலாழி நாதனை நின்மலனைச்
சீராழி யங்கைத் திருமகள் கேள்வனைத் தெய்வப்புள்ளூர்
கூராழி மாயனை மாலலங் காரனைக் கொற்றவெய்யோ
ஞேராழித் தேர்மறைத் தானையெஞ் ஞான்று முரை
நெஞ்சமே.

புரந்தர ஞமெனப் பூபதி யாகிப் புகர்மதமாத்
துரந்தர சாளிலெ னல்குர வாகிலென் றெல்புவிக்கு
வரந்தர மாலிருஞ் சோலைநின் ருற்கென் மனத்திஞுள்ளே
நிரந்தர மாயலங் கார...ங் காட்பட்டு நின்ற
பின்னே. (5)

மாலைக் கரும்புஞ் சிறுகால் துகைப்ப வருந்துமெங்க
ளாலைக் கரும்புதன் ஞைசயெல் லாஞ்சொல்லி லாயிரந்
தோட்
டோலைக் கரும்புண் படுமுடு மாமதி யூர் குடுமிச்
சோலைக் கரும்புய லேயரு ளாயுன் றுளவினையே (98)

**End :**

அலங்கார ருக்குப் பரமசு வாமிக் கழகருக்குக்
கலங்காரப்பெருநக ரங்காட்டு வாற்குக் கருத்தன்பிஞ
னலங்காத சொற்றெடை யந்தாதி யைப்பற்ப நாப
பட்டன்
விலங்காத நீதி மணவாள தாசன் விளம்பினனே (101)

---

### 244. (b) நாராயண சதகம்

### Lines 4—5 in a Page.

இது 471-ம் நம்பர் போன்றது. இதில் 98 செய்யுட்களிருக்கின்றன.

---

## 245. (*c*) திருப்பதிக் கோவை

Lines 4—5 in a page.

இது திருமாலுக்குரிய திருப்பதிகளேயும் அவற்றி லுள்ள தீர்த்தமுதலிய விஷேடங்களேயும் கூறுவது.

**Beginning :**

மூவாறு மாதமாய் மோகித்தொர் பாசுரத்திற்
காவாவி தென்னென் றதிசயித்து—நாவீற
னெத்திற மென்றெண்ணி யிருந்ததிருக் கோலமே
வைத்துவக்கு மென்றன் மனம் (1)

திருவரங்கம்.

சீரார்ந்த திருவரங்கம் பெரியகோயில்
சிறந்த பிரணவமானந் திருவரங்காத்
தாரார்ந்த திருவரங்கச்செல்வி புன்னேத்
தருசந்திர புட்கரணி தகுந்தென்வாச
லோரார்ந்த வீடணர் கொண்டிட்ட பொட்டத்
தகந்தனந்த சயனத்தி லிலங்கு சோதிக்
காரார்ந்த திருவுருவங் கமலக்கண்கள்
கண்டுவனு தினமுளத்திற் கருது வேனே (1)

**End :**

பெரும்பூதூர்.

பூதபுரிமா நகரில் வாசவிலக் குமியார்
புகழ்பிரணவ கோடி விமான மேவி
யாதிகே சவனருகே யமர்கோ லத்தை
யாதி காலத்தினி ராமானுச புட்கரணிச்
சீதநீராடி யெதிர் சிகாமணியைப் போற்றித்
திருமணிட்டுத் திருமணித்தாவடமணிந்து
மாதிர கோபுர பூருவ வாயினின்றும்
வாழ்த்துவார் வாழ்வர்திரு மாமணி மண்டபமே(2)

ஆக திருப்பதி 108-க்கு கவி 133.

### 246. (*d*) நம்மாழ்வார் திருத்தாலாட்டு
Lines 4—6 in a Page.

இது 350 கண்ணிகளை யுடையது. அச்சிடப்பட்டுள்ளது.

**Beginning :**

சீர்பூத்த நீண்மதிளுஞ் செம்பொன்செய் கோபுரமுங்
கார்பூத்த மாளிகையுங் கற்பகக்காவுஞ் செறிந்த (1)
திருவண்பரிசாரத் தேவேசனையே
மருவ வரவிந்தத்தில் வாழ்திருவாழ் மார்பன் (2)
கற்றெடுத்த கல்விக் கடலாளருந் தவத்தாற்
பெற்றெடுத்த பெண்கள் பெருமாளுடைய நங்கை (3)
பருவங் குறித்துநந்தம் பாக்கியத்தாற் றேன்றுந்
திருவின் வடிவுக் கேற்ற செல்வமணவாளன் (4)

**End :**

மாரிமாறுது மகிழ்ந்து வரங்கொடுக்க
வாரிமாதெ புவிவாழ்ந்த தென வாழ்ந்தனனே (347)
தன்னின் மனமகிழ்ந்து தன்னிலே பூரித்து
நன்னிலையனுகிநின்ற நாதமுனிவன் வாழி (348)
வாழிகுருகூரன் வாழி திருக்கோளூரன் (349)
வாழி பெரும் பூதூரன் வாழியென வாழ்ந்தனனே(350)

ஆழ்வார் திருத்தாலாட்டு முற்றும்.

திருஞான முத்திரைத் தேசிகன் திருவடிகளே சரணம்.

---

### 247. (*e*) திருவரங்கத்தமுதனார் திருப்பதிக்கோவை.
Lines 4 in a Page.

ஓங்குதிருவரங்கர் தாமுகந்த வொண்பதிகண்
மூங்கிற் குடியமுதன் முத்தமிழா—னீங்காத

வன்பர் தமர் வாழ வருள்செய்த வந்தணர்கோன்
றன்பதுமத் தாளே சரண்.

**Beginning :**

பங்கயத்தோணிக்கு வரவுக்குப்பண்டளிப்பப்
பொங்குமயோத்திப் புரிசைநகர்—தங்கிச்
சிலநா ளினிதமர்ந்து தென்னிலங்கைக் கோமான்
குலம்வாழக் கொண்டேகும் வேலை—நலமார்ந்த
சென்னி வளவன் வளநாட்டுத் தெய்வநதிப்
பொன்னி நடுவுட் புளினத்துப்—பன்னரிய
விந்து மடுக்கரைக்கே யின்பமுற வைத்தருளிச்
சந்தி செயக்கருதிச் சாருங்கால்.

**End :**

சோழ மண்டல நாற்பத்திரண்டுடன்
றுய்ய பாண்டி பதினெட்டுஞ் சொல்லியே
வாழு மாமலை யாளமீ ரேழுடன்
வாணர் போற்றிய வாழ்தொண்டை. மண்டல
மேழுமூன்று மிதன்மா றிரண்டுட
னிதன் வடக்குப்பதி னொருபாற்கட
லாழியான் பதி நூற்றெட்டு மோதுவார்க்
கன்று செய்வினை யன்றே யகலுமே.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

248. (*f*) உபதேச ரத்தினமாலை
Lines 4—5 in a Page.

இது, ஆழ்வார்கள், அவர்கள் இயற்றிய பிரபந்தங்கள், அவற்றை உலகில் பரவிடச் செய்த ஆச்சாரியர்கள் ஆகிய இவர்களின் வைபவங்களைக் கூறுவது. இதனை இயற்றியவர் மணவாள மாமுனிகள். இது அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning:**

முன்னந் திருவாய்மொழிப்பிள்ளை தாமுப தேசித்தநேர்
தன்னின் படியைத்தணவாத சொன் மணவாளமுனி
தன்னன்புடன் செயுபதேச ரத்தினமாலை தன்னைத்
தன்னெஞ்சு தன்னிற்றரிப்பவர் தாள்கள்
சரணமக்கே (1)

எந்தை திருவாய்மொழிப்பிள்ளை யின்னருளால்
வந்த வுபதேச மார்க்கத்தைச்—சிந்தைசெய்து
பின்னெவருங் கற்கவுப தேசமாய்ப் பேசுகின்றேன்
மன்னியசீர் வெண்பாவில் வைத்து (2)

கற்றோர்கடாமுகப்பர் கல்விதனி லாசையுள்ளோர்
பெற்றோ மெனவுகந்து பின்புகற்பர்—மற்றோர்கண்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னெஞ்சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு (3)

**End :**

மன்னுயிர்கா ளிங்கே மணவாள மாமுனிவன்
பொன்னடியாஞ் செங்கமலப் போதுகளை—யுன்னிச்
சிரத்தாலே தீண்டில மானவ னம்மைக்
கரத்தாலே தீண்டல் கடன்.

எந்தை கற்றோராழ்வார் பொய்கை......பூருவாசாரியர்க
ளிந்த வுபதேச மன்னுயிர்காள்.

ஆழ்வார் திருவடிகளே சரணம். சீயர் திருவடிகளே சரணம். ஆயனுர் வேங்கிட கிற்(ஷ)ணகுருவே நமா.

---

249. (g) புல்லை யந்தாதி
Lines 5 in a page.

இது, திருப்புல்லாணி என வழங்கும் தர்ப்பசயனத்தில் வீற்றிருக்கும் திருமால் விஷயமான அந்தாதி. நூறு விருத்தங்களாலமைந்தது. ஆசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை. அச்சிடப்படவில்லை.

**Beginning:**

சீர்பூத்த மணிமார்புங் கமலக் கையுஞ்
சிலைவாடண்டாழி சங்கஞ் சிறக்க மேவும்
வார்பூத்த முலைத்திருமான் களிக்குங்கோமான்
மருவுபுல்லை யந்தாதி வழுத்த நாளுந்
தார்பூத்த மார்வினரா யுயிர்க்கங் கங்காய்ச்
சராசரமாய் வெறு வெளியாய்த் தனியாயெங்குங்
கார்பூத்த மேனியாய் நிறைந்து நிற்குங்
கைமலைச்செம் மலையிருத்திக் கருத்திற் சேர்ப்பாம்.

பொன்மருவும் புல்லாணிப் பதிக்கிரைவா வெணையாளும் புனிதமாலே
மின்மருவு மணிமார்புங் குழைக்காது மலர்முகம் விளங் குந்தோளும்
பன்மணிப்பூ ணிலவெறிப்பக்கலுழன் மிசை யெதிர் தோன்றிப் பரிவுகூர்ந்தென்
றன்மனதிற் குடியாகி யெக்காலு மகலாமற்றங்கு வாயே (1)

தங்கமலை முலையார்கள் மாயவலைக்காளாகித் தயங்கியே யென்
னங்கமலை யாம லெந்நாளுன்னடியார் தனடியாளு வேனய்யா
சங்கமலை வாயின் முத்தம் கொழித்திடு சக்கரதீர்த்தத் தடஞ் சூழ்ந்தென் றுஞ்
செங்கமலை மேவுதிருப்புல்லாணி மருவிவளர் செங்கண் மாலே (2)

**End.**

ஓநமோ நமவாதி யானவாசகமும் வேதஞேதுநான் மறைகடேடுபெருமாளே
மாநமாதவர்கணுடு சோதியே சரணமாதி மூலமே கிருபை யேசெய்யென்மீதே
சாநகிரமண ராமராகவ வகலிகமாது சாபமோசனவேநா ளுமென் மேலும்

வாநரர்தேடிய புல்லாணி வாழ்க மாநிலமும் வாழவே
யருள் குலாவு பொன்மாலே (100)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.
சீயர் திருவடிகளே சரணம்.
புல்லை யந்தாதி முற்றும்.

---

250. (*h*) திருவேங்கடத் தந்தாதி மூலம்
Lines 4—7 in a page.

இது, திருவேங்கடம் என்கிற திருப்பதியில் வீற்றிருக்கும் திருமால் விஷயமானது. கட்டளைக் கலித்துறையானமைந்த திரிபந்தாதி. 101 செய்யுட்களை உடையது. இதனை இயற்றியவர் மணவாளதாசன் என்னும் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார். இவரது ஊர் சிறுவெண்மணியகரம் என்பது. இவர் இயற்றியுள்ள அஷ்டப் பிரபந்தங்களுள் இதுவும் ஒன்று. இந்நூல் அச்சிடப்பட்டுள்ளது.

**Beginning :**

நல்லவந்தாதி திருவேங்கடவற்கு நான் விளம்பச்
செல்லவந்தாதி விழுப்பொருள் சோர்வின்றிச் செவ்வி
தரும்
பல்லவந்தாதிசை வண்டார்குருகையிற் பல்சமயம்
வெல்லவந்தாதி மறைதமிழாற்செய்த வித்தகனே (1)

திருவேங்கடத்து நிலைபெற்று நின்றன சிற்றன்னையால்
தருவேங்கடத்துத் தரைமேனடந்தன தாழ்பிறப்பி
னுருவேங்கடத்துக்குளத்தேயிருந்தன வுற்றழைக்க
வருவேங்கடத்தும்பியஞ்சலென் றேடினமால்கழலே.

மாலை மதிக்குஞ்சி யீசனும் போதனும் வாசவனு
நூலைமதிக்கு முனிவருந் தேவரு நோக்கியந்தி
காலைமதிக்குள் வைத்தேத்துந் திருமலை கைமலையால்
வேலைமதிக்கும் பெருமானுறை திருவேங்கடமே.

**End:**

மட்டலை தண்டலை சூழ்வட வேங்கட வாணனுக்குத்
தொட்டலை யுண்டபிரானுக் கனபாற் பட்டர் தூய
பொற்று
ளுட்டலை செய்த மணவாளதாசனுகந்துரைத்தான்
கட்டலைசேர்திருவந்தாதி நூறுங் கலித்துறையே.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.
வேங்கிட கிருஷ்ண குருவே நமா.

**Colophon:**

சுவாமி திருமாலிருஞ் சோலையழகார் பரமசுவாமிக்குச் சிறு வெண்மணியகரத்துப் பிள்ளைப் பெருமாளையங்காரருளிச் செய்த கலித்துறை அழகரந்தாதி முற்றும்.

ஆயனுர் திருவடிகளே சரணம்.

---

251. No. 438 (*a*) நூற்றெட்டுத்
திருப்பதி யந்தாதி
ஏடுகள் 54 ; Lines 7 in a page.

இது, திருமாலின் நூற்றெட்டுத் திருப்பதிகளைக் கூறும் அந்தாதி. இதனை இயற்றியவர் பிள்ளைப் பெருமாளையங்கார். இது 434ம் நம்பர் (*c*)உட்பிரிவு போன்றது.

---

252. (*b*) நூற்றெட்டுத் திருப்பதிக் கோவை
Lines 7 in a page.
இது 434ம் நம்பர் (*a*) உட்பிரிவு போன்றது.

---

253. (*c*) கந்தரந்தாதி மூலம்
Lines 4—8 in a page.

இது, முருகக்கடவுள் விஷயமாகப் பாடப்பட்ட யமகவந்தாதி. இதனை இயற்றியவர் அருணகிரி நாதர்.

இதற்குப் பாரதம்பாடிய வில்லிபுத்தூரார் உரை செய் திருக்கின்றனர். காப்புள்பட 101 செய்யுட்களை உடையது. இந்நூல் உரையுடன் அச்சிடப்பட்டுள்ளது. இந்தப் பிரதியில் 100 செய்யுட்களிருக்கின்றன. காப்புச்செய்யுளில்லை.

**Beginning :**

திருவாவி னன்குடி பங்காள ரெண்முது சீருரைத்த
திருவாவி னன்குடி வாஞர் பரங்குன்று சீரலைவாய்
திருவாவி னன்குடி யேரகங் குன்றுதோ ருடல்சென்ற
திருவாவி னன்குடி கொண்டதன் கார்வரை செப்புமினே
(1)

செப்புங் கவசங் கரபாலக தெய்வ வாவியம்பு
செப்புங் கவசங் கரிமரு காவெனச் சின்னமுன்னே
செப்புங் கவசம் பெறுவார் கணுந்தெய்வ யானைதனச்
செப்புங் கவசம் புனைபுயன் பாதமென் சென்னியதே(2)

**End :**

செல்வந் திகழு மலநெஞ்ச மேயவன் றெய்வமின்னூற்
செல்வந் திகழு நமதின்மை தீர்க்கும்வெங் கூற்று
வற்குச்
செல்வந் திகழுந் திருக்கையில்வேல் தினைகாத்தசெல்வி
செல்வந் திகழு மணவாளர் நல்கு திருவடியே (100)

**Colopohon:**

கீலகஷு வையாசிமீ 2௳ புதன்கிழமை தினம் திருவாரூர் ஆறுமுகம் கந்தனந்தாதி எழுதி நிறைந்தது.
முற்றும். வெற்றிவேலுற்ற துணை.

---

iv ஆற்றுப்படை

254. No. 227 திருமுருகாற்றுப் படை

ஏடுகள் 25; அபூர்த்தி. Lines 6—7 in a page.

இது சங்கப்புலவர்களால் தொகுக்கப்பட்ட பத்துப் பாட்டுக்களில் முதலாவது பாட்டு. முருகன்துதி. இதனை

இயற்றியவர் மதுரைக் கணக்காயனூர் மகனூர் நக்கீரனூர். இதற்கு உரை செய்தவர் நச்சினூர்க்கினியர். இதில் முருகனது ஆறுபடை வீடுகளில் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், என்னும் நான்கிற் குரிய பாகமட்டும் இருக்கின்றன. இதுஉரையுடன் அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning:**

ஒருமுருகா வென்ற னுள்ளங் குளிரவுவந்துடனே
வருமுருகா வென்று வாய்வெருவா நிற்பக்கையிங்ஙனே
தருமுருகா வென்று தான்புலம்பா நிற்பத்தையன்
முன்னே
திருமுருகாற்றுப்படையுடனே வருஞ் சேவகனே.

உலகமுவப்ப-உலகமென்பது முதல் கணவ னென்னுந்துணையு மொருதொடர்—உலகமென்பது பலபொருளொரு சொல்லாய் நிலத்தையு முயிர்களையு மொழுக்கத்தை யுமுணர்த்தி நிற்குமேனு மீண்டுவப்ப வென்றதனூன் மண்ணிடத்து வாழுஞ் சீவாத்துமாக்களை யுணர்த்திற்று. ஏர்புவலன் றிரிதரு—எழுந்து மகாமேருவை வலமாகத் திரிதலைச் செய்யும்-பலர் புகழ் ஞாயிறு—எல்லாச் சமையத்தாரும் புகழும் ஞாயிற்றை. கடற் கண்ட அங்கு—கடலிடத்தே கண்டாற் போல—இது வினையெச்சவுவமம், 'விரவியும் வரூஉ மரபினவென்ப' என்பதனூற் றொழிலுவமமும் வண்ணவுவமமும் பற்றிவந்தது. என்னை? ஞாயிறிருளைக் கெடுக்குமாறு போலத் தன்னை மனத்தானேக்குவார்க்கு மாயையைக் கெடுத் தலிற் றொழிலுவமமும் தன்னைக் கட்புலனூல் நோக்குவார்க்குக் கடலிற் பசுமையு ஞாயிற்றின் செம்மையும் போல மயிலிற் பசுமையுந் திருமேனியிற் செம்மையுந் தோன்றலின் வண்ணவுவமுங்கொள்ளக்கிடந்தமையின்.

**End:**

......ஞக்கினி காருகபத்திய மென்னு மூன்று தீயாலுண்டாஞ் செல்வத்தினையுமுடைய, இருபிறப்பாளர்-

உபனயனத்திற்கு முன்பொருபிறப்பும் பின்பொரு பிறப்புமாகிய விருபிறப்பினையுமுடைய வந்தணர், பொழுதறிந்து நுவல— தாங்கள் வழிபடுங் காலமறிந்து தோத்திரங்களைக் கூற, ஒன்பது கொண்ட மூன்று புரி நுண்ஞாண்— முந்நூற் கொண்டு முப்பிரியாக்குதலி னென்பதாகிய நூலைத் தன்னிடத்தே கொண்டவொரு மூன்றாகிய நுண்ணிய பூணூல் ஞாணினையும் கொள்கை யினையும் செல்வத்தினையு முடைய விருபிறப்பாள ரென்க.

புலராக் காழகர்— புலராவுடை.

---

v. எழுகூற்றிருக்கை

255. No. 553 திருவெழுகூற்றிருக்கை.

ஏடுகள் 3 ; பூர்த்தி. Lines 7—9 in a page.

இது, சீர்காழியைப்பற்றிய தேவாரங்களுள் ஒன்று. இதனை இயற்றியவர் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். இது தமிழ்ப்பிரபந்தங்களுள் ஒன்று. இது உரையுடன் அச்சிடப்பட்டுள்ளது.

திகட சங்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர விண்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்.

உச்சியின் மகுடமென்ன வொளிர்தர நுதலினோடை
வச்சிர மருப்பி னொற்றை மணிகொள் கிம்புரி வயங்க
மெய்ச்செவி கவரிதூங்கா வேழமா முகங் கொண்டுற்ற
கச்சியில் விகடசக்கிரக் கணபதிக் கன்பு செய்வாம்.

(இவ்விரண்டும் கந்த புராணத்துக் காப்புச் செய்யுள்)

திருச்சிற்றம்பலம்

**Beginning:**

ஒருரு வாயினை மானுங் காரத்
தீரியல் வாயொரு விண்முதல் பூதல
மொன்றிய விரிசுட ரும்பர்கள் பிறவும்
படைத்தளித் தழிப்பமும் மூர்த்திகளாயினை
யிருவரோ டொருவ னாகி நின்றனை
யோரா னீழ லுன்கழ லிரண்டு
முப்பொழு தேத்திய நாலவர்க் கொளிநெறி காட்டினை
நாட்ட மூன்றுகக் கோட்டினை
யிருநதியரவமோ டொருமதி சூடினை
யொருதா ளீரயின் மூவிலைச் சூல
நாற்கால் மான்மறி யைந்தலையரவ மேந்தினை
காய்ந்த நால்வாய் மும்மதத்திரு கோட்டொரு
கரியீடழித் துரித்தனை
யொருதனு விருகால் வளையவாங்கி
முப்புரத்தொடு நானிலமஞ்சக்
கொன்று தலத்துற வவுணரையறுத்தனை
யைம்புல நாலா மந்தக் கரண
முக்குண மிருவளி யொருங்கிய வானோரேத்த
நின்றனை.

* * * *

**End :**

யையுறுமமணரு மறுவகைத் தேரரும்
மூழியு முணராக் காழி யமர்ந்தனை
யெச்சனே ழிசையோன் கொச்சையை மெச்சினை
யாறு பதமும் மைந்தமர் கல்வியு
மறைமுதனான்கும் மூன்று காலமுந் தோன்ற நின்றனை
யிருமையு மொருமையு மொருமையின் பெருமையும்
மறுவிலா மறையோர் கழுமல முதுபதிக் கவுணியன்
கட்டுரை

கழுமல முதுபதிக் கவுணிய னறியு
மனைய தன்மையை யாத லின்னை
நினைய வல்லவ ரில்லைநீ ணிலத்தே.

திருச்சிற்றம்பலம்.
அகவல் முற்றும்.

---

vi. உலா

256. No. 194 விக்கிரம சோழன் உலா

ஏடுகள் 17 ; Lines 6—7 in a page.

உலா என்பது இளமைப் பருவமுற்ற தலைமகனைக் குலம் குடிப் பிறப்பு முதலியவற்ருல் இன்னுன் என்பது தோற்ற, வீதியில் பவனிவரக்கண்ட பேதை, பெம்துமை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்கிற எழுவகைப் பருவ மகளிரும் தம் நிலைகலங்கி அவன்பாற் காதல் கொண்டதாக நேரிசைக் கலிவெண் பாவாற் கூறுவது. இது தொண்ணூற்றறுவகைத் தமிழ்ப் பிரபந்தங்களுள் ஒன்ருகும்.

விக்கிரம சோழனுலா என்பது விக்கிரம சோழனைப் பற்றிக் கூறும் உலாவாகும். இதனுல் பாட்டுடைத் தலைவனது அரியசெயல்களும் இவனுக்கு முன்னிருந்த சில சோழர்களின் அருமை பெருமைகளும் இனிது விளங்கும். விக்கிரம சோழன் என்பவன் முதலாங் குலோத்துங்கனுக்கு மகனுவான். அவன் பன்னிரண்டாம் நூற்ருண்டின் முற்பகுதியில் சோழநாட்டை ஆட்சி செய்தவன். இந்தப்பிரதி அபூர்த்தியாக இருக்கிறது.

இதனை இயற்றியவர் ஒட்டக்கூத்தர். இவரைப்பற்றிய விவரங்களை நெ. 1(*b*)ல் காண்க. இவ்வுலா மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் அச்சிடப்பட்டுள்ளது.

அத்தி முகத் துத்தம[னை
நித்த]நினை சித்தமே.

தவளத் தாமரைத் தாதார் கோயில்
அவளைப் போற்றுது மருந்தமிழ் குறித்தே. சுபமஸ்து

**Beginning :**

சீர்தந்த தாமரையாள் [கேள்வன்] திருவுருவக்
கார்தந்த வுந்திக் கமலத்துப்—பார்தந்த
வாதிக் கடவுட் டிசைமுகனு மாங்கவன்றன்
காதற் குலமைந்தன் காசிபனு—மேதக்க
மையறு காட்சி மரீசியு மண்டிலஞ்
செய்ய தனியாழித் தேரோனும்—மையல்கூர்

* * * *

மாகவி மானந் தனையூர்ந்த மன்னவனப்
போக புரிபுரந்த பூபதியும்—யாகத்துக்
கூற லரிய மனுக்கொணர்ந்து கூற்றுக்குத்
தேற வழக்கு ரைத்த செம்பியனும்.

**End**

சாருந் திகிரி தனையுருட்டி யோரேழு
பாரும் புரக்கும் பகலவனே—சோர்வின்றிக்
காத்துக் குடையொன்று லெட்டுந் திசைகவித்த
வேற்றுக் குலகிரியின் மேருவே—போர்த்தொழிலா
லேனைக் கலிங்கங்க ளேழினையும் போய்க்கொண்ட
தானைத் தியாக சமுத்திரமே—மானப்போ
ரிம்ப ரெழுபொழில் வட்டத் திகல்வேந்தர்
செம்பொன் மவுலிச் சிகாமணியே—பைம்பொன்னின்
பாரிற் படுவன பன்மணியு நின்கடலி
னீரிற் படுவன நித்திலமும்—நேரிய நின்
வெற்பில் வயிரம் வெந்த... . ...

### 257 No. 195 தில்லையுலா

ஏடுகள் 20; அபூர்த்தி. Lines 4—5 in a page.

இது தில்லையின்கண் கோயில் கொண்டருளிய நடராஜப் பெருமான் விஷயமானது. இதில் பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை என்னும், நான்கு பருவங்களே இருக்கின்றன. ஏனைய பருவங்கள் இல்லை. ஆசிரியர் பெயர் முதலியன தெரியவில்லை. அச்சிடப் படவில்லை.

**Beginning:**

சீர்கொண்ட செல்வச் சிவகாம சுந்தரிபைந்
தார்கொண்ட கொன்றைநறுந் தாழ்குழலாள் — ஏர்
கொண்ட
வேத மொருநாலும் விண்முதல் அய்(ஐ)ந்தும்
படைற்ற(த்த)
பேதை யறமளக்கும் பேராட்டி — ஆதினுள்
தானே செழுங்கனகத் தாளம் பிடித்தருளித்
தானே யறிந்துதொழுந் தாண்டவத்தை—ஞானவிழிக்
கொண்டு தொழுது குலமுனிவ ரோடிருவர்
தண்டுளப மாயனுடன் தாமரையோன்--எண்டிசையிற்
பல்லுயிருங் காணப் படிமேல் நடித்தருளென்
றெல்லையுள காலமெல்லா மேத்துதலும் — தில்லை
ஆய்ந்த பொருளான அஞ்செழுத்தைச் செங்கனகப்
பூந்தகடு தோறும் புறத்தொழுதி — மேய்ந்து
திசைவிளங்கு நாமத் திருவம் பலத்தே
யிசைவிளங்க நின்றுடு மீசன் — மிசைவேங்கைப்

**End :**

கருது மவரன்றிக் காமனுக்குத் தீட்ட
வரிய மடமா தரிவை — மரகதத்தால்
பத்தி நறுமுளரி பார்சடைசே ரோடையென
வைத்த தொருகனக மண்டபத்துச் — சித்திரமலர்
ஆணிக்க...ன அழகிருந்த வல்லியென
மாணிக்க வேதிகைமேல் வந்திருந்து — வேணியரன்

தன்பால்முன் சென்று தடம்பயிலும் தன்பழைய
அன்பால் வரைந்தேகு மன்னமும் — அன்பிலார்
ஆரும் பி(பு)றங் கொடுப்ப வீசனைக்கண் டப்பொதுதே
வாரென்று விட்ட மதுகரமும் — மேருச்
சிலையா னடிவணங்குச் சிற்றம் பலத்தே
நிலையாய் வரமறந்த நெஞ்சும் — பலகலைய
ஆரநெடுந் திண்டோள் அணியும் பசுங்கொன்றை
வேரிநறுந் தார்கொண்டு மீளுமெரி — தாரும்
அணியார் கலனும் அணிவளையும் பட்டும்
அணியாத பாதமின. மோ — மணிமிடத்
தோன் (ற்றேன்)

தில்லைப் பதிசூழ்ந்த தெண்டிரைநீர் வாருதியில்
மல்லத் திரை ..................... மவார.

---

258 No. 196 திருவானைக்கா வுலா.

ஏடுகள் 33 ; அபூர்த்தி. Lines 4—6 in a page.

இது திருச்சிராப்பள்ளியைச் சார்ந்த ஜம்புகேச்சரம் என்னும் திருவானைக்காவில் கோயில் கொண்டருளிய சிவபெருமான் விஷயமானது. இதனை இயற்றியவர் காளமேகப் புலவர். இவர் சோழநாட்டில் கும்பகோணத்தில் நந்தி புரத்தில் வைணவ வேதியர் குலத்தில் பிறந்தவர். இவரது இயற்பெயர் வரதன் (தமிழ் நாலவர் சரிதையிற் காண்க) திருவானைக்கா ஆலயத்திற் பரிச்சாரகம் செய்திருந்த இவர், அகிலாண்டேசுவரியின் திருவருள் பெற்றுக் கவிபாடுந் திறமையில் மேகத்தை ஒத்து விளங்கினமையின் காளமேகப் புலவர் எனப் பெயர் பெற்றனர் என்பர். இவர் ஆசுகவியும் சிலேடையுமேயன்றி வசை பாடுவதிலும் வல்லவர். இவர் திருமலைராயன் என்னும் அரசனை,

" இந்திரன் கலையா யென்மருங் கிருந்தா னக்கினியுதரம்
விட்டகலான்
யமனெனைக்கருதா னரனெனக் கருதி நிருதிவந்
தென்னையென் செய்வான்
அந்தமாம் வருண னிருகண்விட் டகலான் அகத்தினின்
மக்களும் யானும்
அநிலமதாகு மமுதினைக் கொள்வோம் யாரெதி
ரெமக்குளாருலகிற்
சந்ததமிந்த வரிசையைப் பெற்றுத் தரித்திர ராசனை
வணங்கித்
தலைசெயு மெம்மை நிலைசெய் சற்கீர்த்திச்
சாளுவகோப் பையனுதவும்
மந்தரப் புயத்தான் திருமலைராயன் மகிழ்வொடு
விலையிலா வன்ஞேன்
வாக்கினுற்குபேர ருக்கினு னவனே மாசிலீ சான
பூபதியே "

எனப் புகழ்ந்து பாடியதாக ஒரு செய்யுள் தமிழ் நாவலர் சரிதையிற் காணப்படுகின்றது. இச்செய்யுளில் கூறப்பட்டுள்ள சாளுவகோப்பையன்மகன் திருமலை ராயன் என்பவன், விஜய நகரத்து அரசர்களாகிய மல்லி கார்ச்சுனராயர், விருபாக்ஷராயர்களின் பிரதி நிதியாகத் தென்னுட்டை ஆட்சி செய்தவன். இவன் சம்புகேசுர ருக்குத் திருவாபரண மொன்று அளித்ததாகத் திரு வானைக்காக் கோயில் தென் சுவரிலுள்ள கல் வெட்டி ஞல் தெரிகின்றது. இச்சாசனம் ஏற்பட்ட காலம் சக வருடம் 1375 அதாவது கி. பி. 1453-ம் வருடமாகும். இவனது ஆட்சிக்காலம் கி. பி. 1453 முதல் 1468 வரை யிலுமாம். ஆதலால் இவனைப்பாடிய காளமேகப் புல வரது காலம் பதினைந்தாம் நூற்ருண்டு என்று கொள்ளத் தக்கது. இவர் பாடியவேறு நூல் பரப்பிரம்ம விளக்கம்,

சித்திரமடல் என்பன. இந்தப்பிரதி அபூர்த்தியாயிருக்கிறது. இவ்வுலா அச்சிடப்பட்டிருப்பினும் கிடைப்பதரிது.

**Beginning :**

சீர்பெற்ற தரபரமாச் சிற்பரமாய்ச் சிற்பரத்தின்
வேற்பெற்ற நாதமாய் விந்துவாய்—பேர்பெற்ற
சோதியாய் மும்மைச் சுரூபமாய் ஐம்பூதத்
தாதியா யெய்வுயிரு மாயினன்—வேதத்து

**End :**

ஐந்து மரமு மமர்ந்து கிளர்காவில்
வந்துவளர் தேமாவை மாமகிழை—முந்தியகல்
லாலை வடத்தை யருச்சுனத்தை யாத்தியினைப்
பாலையை வேயைப் பலாதன்னை—நீலியைப்
புன்னையைக் கூவிளையைப் புன்கைப் புனக்கடம்பை
வன்னியைக் கொன்றையை வண்டளவு—தன்னைச்
சினைதரு பாதிரியைத் தில்லையைக் காயாவைப்
பனையை யிலந்தையைப் பாடலத்தைப்—புனைகுருந்தை
நெல்லியை நோக்கினுள் நித்தருறை நீழலெனச்
சொல்லி யவற்றைத் தொழுதிட்டாள்—எல்லை
அறிந்தாற் றவறுமோ வப்பதிக டோறுஞ்
செறிந்தா ரெனக்களித்தாள் சித்தம்—புறந்தழைத்த
நன்னுவல் கண்டாளவ் வெண்ணுவ லாய்கொண்டு
தன்னுவல் தீரத் தழுவினர்—என்னுயன்.

குறிப்பு :

திருவரங்கக் கலம்பகத்திலுள்ள
'அரவில் நடித்தானும்' என்னும் பாடல் எழுதிய ஏடு கடைசியில் கோக்கப்பட்டுள்ளது.

---

## 259. No. 197 திருவானைக்கா வுலா.

ஏடுகள் 49; அபூர்த்தி, Lines 5 in a page.

இது, முன்பிரதிபோன்றது. அடியிற்கண்ட இரண்டு வெண்பாக்களும் ஆரம்பத்தில் எழுதப்பட்டுள்ளன. இடையிடையே ஏடுகள் முரிந்தும் சிதைந்தும் இருப்பதோடு பிழையும் அதிகமாகக் காணப்படுகின்றன. முதல் 2 ஏடுகளின் தலைப்பு சிதைந்தும் 18-ம் ஏடு மிகப்பழுதாயுமிருக்கிறது. கடைசியில் 42 வெற்றேடுகள் கோக்கப்பட்டுள்ளன.

ஏரானைக் காவிலுறை யென்றானைக் கன்றளித்த
போரானைக் கன்றுதனைப் போற்றினால்—வாராத
புத்திவரும் பத்திவரும் புத்திரசம் பத்துவருஞ்
சத்திவருஞ் சித்திவருந் தான்.

தேனுலர்த்துந் தாரான் திருவானைக் காவாற்கு
யானுலாப் பாட விசைக்கின்றேன்—பானு
வழிகண் டறியாத வானைமரக் காலாற்
பொழியென் றளப்பாரைப் போல்.

---

## 260. No. 199 திருவுலா.

ஏடுகள் 12; Lines 6—7 in a page.

இது, சிவபெருமான் விஷயமானது. இதற்கு ஆதியுலா, தெய்வீகவுலா, ஞானவுலா, திருவுலாப்புறம் எனவும் பெயர் வழங்கும். இவ்வுலா கைலாசத்தில் சிவபெருமானது சந்நிதானத்தில் அரங்கேற்றப்பட்டதென்பதும், இதனை இயற்றியவர் சேரமான் பெருமாணயனார் என்பதும், இவர் அறுபத்து மூன்று நாயன்மாருள் ஒருவர் என்பதும், இவர்க்குக் கழறிற்றறிவார் என்னும் பெயருமுண்டு என்பதும், இவர் சுந்தரமூர்த்தி நாயனருடன் கைலைக்குச் சென்றனர் என்பதும் பெரிய

புராணத்தால் அறியக்கிடத்தலால், சுந்தரமூர்த்தி நாயனாரது காலமாகிய ஒன்பதாம் நூற்றுண்டே இவரது காலமாகக் கொள்ளத்தக்கது. இவர் இயற்றிய வேறு நூல்கள் பொன்வண்ணத்தந்தாதி, திருவாரூர் மும்மணிக்கோவை. இவர் இயற்றியவை யாவும் பதினோராந் திருமுறையின் பகுதியாக அமைக்கப்பட்டுள்ளன. இந்தப் பிரதியில் 21 முதல் 32 வரையிலுள்ள 12 ஏடுகளே இருக்கின்றன. அவற்றுள் 22, 23, 29-ம் நம்பர் ஏடுகள் சரிபாதியாக முரிந்து துண்டாக இருக்கின்றன. இது அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning :**

திருமாலும் நான்முகனுந் தேர்ந்துணரா தன்று
கருமா லுறவழலாய் நின்ற—பெருமான்
பிறவாதே தோன்றினன் காணுதே காண்பான்
றுறவாதே யாக்கை துறந்தான்—முறைமையா
லாழாதே யாழந்தா னகலா தணுகினு
னூழா லுயராதே யோங்கினன்—சூழொளிநூ
லோதா துணர்ந்தா னுணுகாது நுண்ணியான்
யாது மணுகா தணுகியா—னுதி
யரியாகிக் காப்பா னயனுய்ப் படைப்பா
னரனு யழிப்பவனுந் தானே—பரனுய

**End :**

கட்டுரைத்து மெய்வெளுத்துக் கைசோர்ந் தகமுருகி
மட்டிவரும் பூங்கோதை மால்கொண்டாள்—
தொட்டிமைசேர்
பண்ணுரும் இன்சொற் பணைபெருந்தோட் செந்துவர்
வாய்ப்
பெண்ணுர வாரம் பெரிதென்று—விண்ணேங்கி
மஞ்சடையு நீள்குடுமி வாணிலா வீற்றிருந்த
செஞ்சடையான் போந்த தெரு.

பெண்ணீர்மை காண்மின் பெருந்தோ ளிணைக்காண்மின்
உண்ணீரு மேகலையும் உள்படுமின்—எண்ணீர்மின்
காரேறு கொன்றையந்தார் காபாலி கட்டங்க
னூரேறு போந்தா னுலா.

உண்ணுமலையம்மை ரக்ஷிக்க.

---

## 261. No. 200 ஏகம்பநாதருலா.

ஏடுகள் 45; அபூர்த்தி. Lines 6 in a page.

இது, காஞ்சிபுரத்தில் எழுந்தருளியிருக்கின்ற ஏகாம்பர நாதர் விஷயமானது. இதனை இயற்றியவர் இரட்டைப் புலவர். இவர்களில், இளையவர் அந்தகர் மூத்தவர் முடவர் என்றும், இளையவராகிய அந்தகர் மூத்தவரை முதுகிற் சுமந்து பலதலங்களுக்கும் சென்று வருவ ரென்றும். இவர்கள் தெய்வவருளால் தமிழ்ப் புலமை நிரம்புற்று, முன்னிரண்டடி ஒருவரும் பின்னிரண்டடி மற்றவருமாகச் செய்யுள்பாடும் திறமுடையவரென்றும், இவருக்கு இளஞ்சூரியர், முதுசூரியர் எனவும் பெயருண்டு என்றும், தமிழ் நாவலர் சரிதை கூறுகின்றது. 'கலம் பகத்துக் கிரட்டையர்கள்' என வழங்குவதால், இவர் கள், கலம்பகம்பாடுவதிற் சிறந்தவர் என்பது விளங்கும்.

இனி. இப்புலவர்கள்,

"சாணர்க்கு முன்னிற்கு மாட்கொண்டநாயன்தமிழ்க் கொங்கர்கோன்
பாணுற்ற வரிவண்டு சேர்வக்கை நகராதி பக்கத்திலே
யூணுக்கு வாரா திருப்பாய் விருப்பாகி யுயர்வானிலே
வீணுக்கு நின்ருக மெலிகின்ற தெவ்வாறு வெண்டிங்களே."

என, வக்கைபாகையிலிருந்த கொங்கர் குலாதிபனுகிய வரபதியாட்கொண்டானைப் புகழ்ந்து பாடிய செய்யுள்

தமிழ் நாவலர் சரிதையிற் காணப்படுகின்றது. அவ் வரபதியாட்கொண்டான், திருப்புகழ் ஆசிரியராகிய அருணகிரிநாதரோடு வாதமியற்றிய வில்லிபுத்தூராழ் வாரைக் கொண்டு பாரதம் பாடுவித்தவன் என்பர். அவனது காலம் பதினைந்தாம் நூற்றூண்டாகும் (திருப் புகழ்க் குறிப்பைப்பார்க்க). ஆதலால், அவனைப்பாடிய இப்புலவர்கள் காலமும் பதினைந்தாம் நூற்றூண்டென்று கொள்ளத்தக்கது.

இன்னும், இப்புலவர்கள் தலயாத்திரை செய்து கொண்டு திருவாரூருக்கு வந்தபோது "நாணென்றால் நஞ்சிருக்கு நற்சாபங் கற்சாபம்" என்னும் வெண்பாவை பாடத் தொடங்கி முடிவு பெருமையால், இவ்வடியைக் கோயில் மதிற்புறத்து எழுதிவிட்டு, வேண்டு மிடங் கட்குச் சென்று திரும்பி அவ்வழியே மீண்டபோது, தாம் எழுதிச்சென்ற வெண்பா,

"பாணந்தான் மண்டின்றபாணமே—தாணுவே
சீராரூர் மேவுஞ் சிவனேநீ யெப்படியோ
நேரார் புரமெரித்த நேர்"

என முடிந்திருப்பக்கண்டு, இவ்வாறு முடித்தவர் காளமேகப்புலவர் என்பதைக் கேட்டுணர்ந்து, அவரைக் காண்பதற் கெழுந்த விருப்பத்தால் திரு வானைக்காவிற்குச் சென்றபோது, அப்புலவர் அன்று தான் இறந்துபட்டு இடுகாட்டில் வேகுதல் கண்டு மனம் வருந்தி,

"ஆசு கவியா லகில வுலகெங்கும்
வீசு புகழ்க்காள மேகமே—பூசுரா
விண்கொண்ட செந்தழலாய் வேகுதே யையையோ
மண்டின்ற பாணமென்ற வாய்"

எனப் பாடினார்கள் என்பது உண்மையாயின் இரட்டைப் புலவரும் காளமேகப் புலவரும் ஒருகாலத்

திருந்தவர் என்று கொள்ளத்தக்கது. காளமேகப்புலவர் பதினைந்தாம் நூற்றாண்டினரென்று முன்னமே முடிந்ததாகலால் (196ம்நம்பர் குறிப்பைப் பார்க்க) அவரைப் பாடிய இரட்டைப் புலவர்கள் காலமும் பதினைந்தாம் நூற்றாண்டென்று கொள்ளக்கிடத்தல் காண்க. இதனால், இரட்டைப்புலவர், காளமேகம், அருணகிரிநாதர், வில்லிபுத்தூரார் ஆகிய இந்நால்வரும் ஒரேகாலத்திருந்தவர் என்று அறியத்தக்கது. இந்தப்பிரதியில், இந்நூல் அபூர்த்தியாயிருக்கிறது. 42 முதல் 45வரையுமுள்ள ஏடுகளில் பாதிமாத்திரம் இருப்பதோடு மற்றைய ஏடுகளிலும் இடைஇடையே பூச்சரித்திருக்கின்றது. இவ்வுலா அச்சிடப்பட்டிருப்பினும் கிடைப்பதரிது.

**Beginning :**

நிலம்போற்றும் பைந்துளப நீலப் பொருப்பும்
புலம்போற்றும் போதிற் பொருப்பும்—நலம்போற்று
மேருப் பொருப்பதென வெள்ளிப் பொருப்பிலிரண்
டாரப் பொருப்புடைய வன்னமுடன்—சேர
விருந்து மனமகிழ்வுற் றெப்பொழுது மின்பம்
பொருந்தி யுறைகின்ற போதிற்—கரந்தையினி
தேர்ந்த[ந்து]முடி யாருடனே யின்பநகை யாடினைக்
காந்தளிணை கொண்டுதிருக் கண்புதைப்ப—வாய்ந்த
படியும் விசும்பும் பருதிமதி காணு
தடைய மிடையிருளே யாகி—நெடிதூழி
காலஞ் சிறிது பொழுதிற் கழிதலாற்
சீல முனிவர்க்குந் தேவர்க்குஞ்—சால
மறையவர்க்கும் வேதம் வகுத்த தொழிலெல்லாங்
குறைவுபட்ட தென்றிறையுட் கொண்டு—செறியகை

**End :**

துண்ணெனவே யாழிபுகுஞ் சோமுகனைச் செற்றிடுமீன்
கண்ணிணை யுகிராற் களைந்தவரார்—கண்ணனு

ராமைவடி வந்தனிலு மாதிவரா கந்தனிலு
மாமுதுகோட் டைக்கரத்தால் வாங்கினரார் — தூமறை
பேசரிய சிம்புளாய்ப் பேரா டகணையடுங் [யிற்
கேசரியை வள்ளுகிராற் கீன்றவரார்—கூசா
வடருஞ் சலந்தரனை யன்ருழி சூட்டி
யுடலம் பிளந்தவர்வே றுண்டோ—யடிவிண்
முழுதளந்த மாயோன் முதுகெலும்பைச் செந்நீ
ரொழுகவே வாங்கினர் வேறுண்டோ—நெடு

---

## 262. No. 201 ஏகம்பநாதருலா

ஏடுகள் 18; Lines in a page.

இது முன்பிரதிபோன்றது. முதலும் கடைசியும் இல்லாமல் மிகச் சிதைந்துள்ளது. ஏடுகளில் பாதி முரிந்துவிட்டன.

---

### vii. உலா மாடல்

## 263. No. 222 வருணகுலாதித்தன் மடல்

ஏடுகள் 15 ; Lines 4 — 7 in a Page.

இது நாகப்பட்டினத்தில் செல்வத்திற் சிறந்திருந்த காத்தான் வருணகுலாதித்தன் விஷயமானது. உலாமட லென்பது தாம் கொண்டவேட்கை மிகுதியைப் பலரும் அறியும் வண்ணம் தம்மால் விரும்பப்பட்டாரது உரு வரைந்த கிழியைக் கையிற் பிடித்துப் பனைமடற் குதிரைமீது செல்வதென்பர். இது கலிவெண்பாவாற் கூறப்படும். தொண்ணூற்றறுவகைப் பிரபந்தங்களுள் இதுவும் ஒன்ருகும். இதனைப்பாடியவர் ஒரு பெண்பாற் புலவர் எனக்கூறுவர். செய்யுள்நடை மிகச் சிறந்தது. இது சிதைந்த அபூர்த்தியான பிரதி. அச்சிடப் பட்டிருக்கிறது.

**Beginning :**

நீர்கொண்ட மேக நிறங்கொண்ட மேனியான்
பார்கொண்ட வேதப் பரந்தாமன் — சீர்கொண்ட
உம்பருக்கு மாலெழுப்பி ஓங்குநெடு மத்தாகச்
செம்பொற் கிரியைத் திரித்ததுவு—மம்பரத்து
வீசுமதி தூணுக மேனிமெலி வித்ததுவும்
வாசுகியை நாணு வருத்தியது—மோசையலை
தன்னைக் கடைத்ததுவுந் தண்ணமுதத் தோடுதித்த
மின்னைத் தழுவியது மெண்ணுமல்—பன்னித்
திரம்பேசுங் கோவலர்பாற் சென்றுபதி னுரு
யிரம்பேர் மணம்புணர்ந்தா னென்றும்—பெருங்கனக
வல்லார்க்குங் கொங்கை மடவார் முதலாக
எல்லார்க்கு மாலாகி னுனென்றும்—சல்லாபச்
சிந்தனமற் றோர்பாலிற் செல்லா வசீகரிக்க
வந்துலகி லுற்பவித்த மாமாது—அந்தரத்தில்

**End:**

கடுங்கா னிடைநடந்து கல்லைப்பெண் ணுக்கி
யடுங்கான வெம்பணியி லாடி—நெடுங்கோட்டு
மாமருதஞ் சாய்த்து வணங்குவார் நெஞ்சுறைந்து
தாம மணியின் சகடுதைத்தும்—பூமியெனும்
மின்னை யளந்து விளங்கித் தலைநாளில்
தன்னையும் போத..............
..............செந்தமிழ்க்கு
மாருத செங்கை வருணகுலா தித்தனென்று
கூறு தவர்போற் குழைவுற்றுப்—பேருன
சங்கந் திகழ்நாகைத் தாருவைச்சே ராதவர்போர்
பங்கம் புனைந்து பயமெய்திப்—பொங்குதுழாய்

---

264. No. 223 வருணகுலாதித்தன் மடல்
ஏடுகள் 48 ; Lines 4 in a page.

இதுவும் முற்பிரதிபோன்றது. நூல்முழுவதுமிருக்கிறது. ஆனால் 1—4 ஏடுகளும் இடையிடையே சிற்சில ஏடுகளும் சிதைந்திருக்கின்றன.

---

265. No. 225 வருணகுலாதித்தன் மடல்
ஏடுகள்40; Lines 5—6 in a page.

இதுவும் மேற்பிரதிபோன்றது. முழுவது மிருக்கிறது

**Colophon :**

ஹரிஓம் நன்றாகக் குருவாழ்க குருவேதுணை·
வருண குலாதித்தன் உலாமடல் எழுதி முடிந்தது முற்றும்.

---

viii. கலம்பகம்

266. No. 167 காசிக் கலம்பகம்
ஏடுகள் 44 ; Lines 3— 4 in a Page.

இது காசியின்கண் எழுந்தருளியிருக்கின்ற விசுவநாதசுவாமி விஷயமானது. கலம்பகமென்பது தொண்ணூற்றறுவகைப் பிரபந்தங்களுள் ஒன்று அது புயவகுப்பு, அம்மானை முதலிய பதினெட்டுறுப்பும் இயைய பாவும் பாவினங்களும் விரவிவர அந்தாதித் தொடையாகப் பாடு மிடத்து தேவர்க்கு நூறும் அந்தணர்க்குத் தொண்ணூற்றைந்தும் அரசருக்குத் தொண்ணூறும் வைசியர்க்கு ஐம்பதும் ஏனையோர்க்கு முப்பதுமாகப் பாடப்படுவது.

இதனை இயற்றியவர் குமரகுருபரசுவாமிகள். இவரைப் பற்றிய விவரங்களை 449ம் நம்பரிற்காண்க. இந்தப்பிரதி

யில் 100 செய்யுட்களும் இருக்கின்றன. ஏடுகள் சிதைந்தும் ஒடிந்தும் இருக்கின்றன. இக்கலம்பகம் அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning :**

பாசத் தளையறுத்துப் பாவக் கடல்கலக்கி
நேசத் தளைப்பட்டு நிற்குமே—மாசற்ற
காரார் வரைமீதில் கன்னிப் பிடியீன்ற
வோரானை வந்தெ னுளத்து. மகாலிங்கந்துணை.

நீர்கொண்ட கடலாடை நிலமகளுக் கணியான
கார்கொண்ட பொழிற்காசிக் கடிநகரங் குளிர்தூங்க
இடமருங்கிற் சிறுமருங்குற் பெருந்தடங்கண்ணின்ன முதஞ்
சடைமருங்கில் நெடுந்திரைக்கைப் பெண்ணமுதந்தலை சிறப்பக்
கண்கதுவுங் கடவுண்மணி தெரிந்தமரர் கம்மியன்செய்
விண்கதுவும் பொலன்குடுமி விமானத்தின் மிசைப் பொலிந்தோய்

நிற்பனவுந் தவழ்வனவு நடப்பவுமாய் நீணிலத்துக்
கற்பமள வினகண்டு முறுகளைகண் காணது
பழங்கணுறு முயிர்கடுயர்க் கடனந்து பரங்கருணை
வழங்குபர மானந்த மாக்கடலில் திளைத்தாட
உரையாத பழமறையின் முதலெழுத்தி ேனன்பொருளை
வரையாது கொடுத்திடுநின் வள்ளன்மை வாழ்த்து துமே. இவை யிரண்டுந்தரவு

**End :**

அகவல்.

உடைதிரைக் கங்கை நெடுநதித் துறையின்
வலம்புரி யெனவாங் கிடம்புரி திங்கள்
வெள்ளிவீ ழன்ன விரிநிலாப் பரப்ப
பொன்வீ ழன்ன புரிசடைக் கடவுள்

முடவுப் படத்தக் கடவுட னுடற்பூண்
கறங்கெனச் சுழலுங் கால்விசைக் காற்ரு
வுமிழ்தரு குருதித் திரடெரித் தாங்குத்
திசைதொறுந் தெரித்த திரண்மணிக் குலங்கள்

* * * *

தடமலர்ப் படப்பைத் தண்டலைக் காசிக்
கடிநகர் புரக்குங் கண்ணுதற் செல்வன்
வேம்புங் கடுவுந் தேம்பிழி யாகச்
செஞ்செவி கைப்பயான் றெரித்த சின்மொழியுஞ்
செவிமடுத் தாங்களித் தனனம்ம வதனுல்
வேத்தவை வியப்ப விரைத்தேன் பில்குந்
தேத்தமிழ் துளிக்குஞ் செந்நாப் புலவீர்
மண்மகன் கவிகைத் தண்ணில முற்றும்
புரவுபூண் டிந்திரத் திருவொடு பொலிந்து
முடியினு முடியா முழுநலங் கிடைக்குஞ்
சொன்னெறி விரவுதி ராயி னின்னிசைப்
பாத்தொடுத்துப் பரஞ்சுடரை
நாத்தழும் பிருக்க வேத்து மன்னீரே (100)

**Colophon :**

மகாலிங்கம் துணை. திருச்சிற்றம்பலம்.

(நந்)தனஹு சித்திரைமீ 26உ சனிக்கிழமை மந்த வாரநாள் திருவிடை மருதூரிலிருக்கும் பெரியபிள்ளை குமாரன்..................காசிக்கலம்பகம் படித்து முகிந்தது முற்றும் சிதம்பரம் திருச்சித்தம்பலம்.

---

267. No. 168 A காசிக் கலம்பகம்

ஏடுகள் 33 ; பூர்த்தி. Lines 6 in a page.

இதுவும் முன்பிரதியைப்போன்றது. முழுதும் இருக்கிறது. ஆனல் சிற்சில ஏடுகள் முரிந்தும் சிதைந்தும் இருக்கின்றன.

### 268. No. 169 காசிக் கலம்பகம்

ஏடுகள் 40; பூர்த்தி. Lines 6—9 in a Page.

இதுவும் முன்பிரதியைப்போன்றது. முழுதும் இருப்பினும் இடையிடையே சிதைந்துள்ளது.

---

### 269. No. 170 திருவரங்கக் கலம்பகம்.

ஏடுகள் 47 ; Lines 4—6 in a page.

இது, திருவரங்கத்து வீற்றிருக்கும் திருமால் விஷயமானது. இதனை இயற்றியவர் மணவாளதாசர் என்னும் பிள்ளைப் பெருமாளையங்கார். இதற்குக் கோயிற் கலம்பகம் எனவும் பெயருண்டு. இந்தப்பிரதி பலவிடங்களில் சிதைந்திருக்கிறது. இதில் 93 செயுட்களே இருக்கின்றன. இது அச்சிடப்பட்டுள்ளது.

**Beginning:**

மறைப்பாற் கடலைத் திருநாவின் மந்தரத் தாற்கடைந்து
துறைப்பாற் படுத்துத் தமிழாயிரத்தின் சுவையமுதங்
கறைப்பாம் பணைப்பள்ளி யானன்ப ரீட்டங்களித்தருந்த
நிறைப்பான் கழலன்றிச் சன்மவிடாய்க்கு நிழலில்லை
யே.

சீர்பூத்த செழுங்கமலத் திருத்தவிசின் வீற்றிருக்கும்
நீர்பூத்த திருமகளும் நிலமகளும் மடிவருட
சிறைப்......ப்பச் சேனையர்கோன் பணிகேட்க
நறைப்படலைத் துழாய்மார்பில் ஞாயிறுபோல் மணி
விளங்க
அ......டிந்த வைம்படையும் புடைதயங்கக்
கரியமால் வரைமுளரிக் காடீன்னு கிடந்தாங்கு

பாயி......ப் பாற் கடலிற் பருமணிச் சூட்
டாயிரவாய்ப் பாம்பணேமே லறிதுயிலினினிதமர்ந்தோய்

**End :**

வடியாத பவக்கடலும் வடிந்துடல மாய்கைகடந்தப்பாற்
போய் வைகுந்தஞ்சேர்ந்
தடியார்கள் குழாங்கூடி யுனதடிக்கீழ் அடுமைசெய்யு
மக்கால மெக்காலந்தான்
கொடியாடும் மணிமாட அயோத்தி மூதூர் குடிதுறந்
தாய் திருவரங்கக் கோயில்கொண்ட
நெடியோனே அடியேனல்...........ன்றி நின்னருளே
பார்த்திருக்கும் நீசன்றனே. (9?)

---

270. No. 171 B திருவரங்கக் கலம்பகம்.
ஏடுகள் 38; Lines 5 in a page.

இது முன்பிரதிபோன்றது. பூர்த்தியாயிருக்கிறது. ஆனால் சில ஏடுகள் ஒடிந்தும் சிதைந்துமிருக்கின்றன.

**Colophon :**

ராமனெனப் பாவம்போம் ராமனெனச் சோபம்போம்
ராமனெனச் சென்மசென்ம மீடேறும்—ராமனென
சிந்தாகுலம் விலகுஞ் சேர்ந்தோரெல் லாம்வாழ
வந்தான் தசரதரா மன்.

கோவில் கலம்பகம் முடிந்தது முற்றும்.
வேலப்பன் கையெழுத்து.

---

271. No. 172 திருவரங்கக் கலம்பகம்.
ஏடுகள் 28 ; Lines 4—5 in a page.

இது முன்பிரதிபோன்றது. பூர்த்தியாயிருக்கிறது. ஆனால் சில ஏடுகள் ஒடிந்தும் சிதைந்துமிருக்கின்றன.

இதன் கடைசியில், நடராஜர் வண்ணத்தில் சிறி தெழுதிய ஏடு ஒன்று சேர்க்கப்பட்டுள்ளது.

**Colophon :**

விகாரி ஸூ சித்திரை மீ 8உ கோவில் கலம்பகம் முற்றும்.

ஹரி ஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை.

---

272. No. 173 திருவரங்கக் கலம்பகம்.
ஏடுகள் 15 ; Lines 8—10 in a page.

இது முன்பிரதிபோன்றது. பூர்த்தியாயிருக்கிறது. ஆனால் சிதிலமாயிருக்கிறது.

ஹரி ஓம் நன்ருகக் குருவாழ்க குருவே துணை.
கோவில் கலம்பகம் சுபமஸ்து.

---

273. No. 174 திருவரங்கக் கலம்பகம்.
ஏடுகள் 26 ; Lines 4—5 in a page.

இது, முன்பிரதிபோன்றது. அபூர்த்தியாயிருக்கிறது.

---

274. No. 440 திருவரங்கக் கலம்பகம்.
ஏடுகள் 32 ; Lines 4—5 in a page.

இது, முன்பிரதியைப் போன்றது. இதில் 92 செய்யுட்களே இருக்கின்றன. இந்தப்பிரதி தொட்டால் ஒடியத்தக்க நிலைமையிலிருக்கிறது.

---

275. No. 175 மதுரைக் கலம்பகம்.
ஏடுகள் 32; Lines 4—5 in a page.

இது மதுரையின்கண் கோயில் கொண்டுள்ள சோம சுந்தரக் கடவுள் விஷயமானது. இதனை இயற்றியவர்

குமர குருபர சுவாமிகள். இந்தப்பிரதியில் 98 செய்யுட்களே இருக்கின்றன. இது அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning :**

புந்தித் தடத்துப் புலக்களி றோடப் பிளிறு தொந்தித்
தந்திக்குத் தந்தை தமிழ்க்குத வென்பதென் றண்
மலர்தூஉய்
வந்திப்பதுந் தனிவாழ்த்து வதுமுடி தாழ்த்துநின்று
சிந்திப் பதுமன்றிச் சித்திவி நாயகன் சீறடியே.

மணிகொண்ட திரையாழி சுரிநிமிர மருங்கசைஇப்
பணிகொண்ட முடிச்சென்னி யரங்காடும் பைந்தொடி
யும்
பூந்தொத்துக் கொத்தவிழ்ந்த புனத்துழாய் நீழல்வளர்
தேந்தத்து நறைக்கஞ்சத் தஞ்சாயற் றிருந்திழையும்
மணக்கிழவன் றிருமார்பும் மணிக்குறங்கும் வறிதெய்த்த்
தனக்குரிமைப் பணிபூண்டு முதற்கற்பின் றலைநிற்ப
அம்பொன்முடி முடிச்சூடும் அபிஷேக வல்லியொடுஞ்
சொம்பொன்மதி ......கூடற்றிருநகரம் பொலிந்தோய்
கேள்.

விண்ணரசும் பிறவரசுஞ் சிலரெய்த விடுத்தொருநீ
பெண்ணரசு தரக்கொண்ட பேரரசு செலுத்தினையே.

**End :**

உடையதோர் பெண்கொடி திருமுக மண்டல மொழுகு
பெரு.........
ல் கயல் பொரு மொய்ர்புள கடவுணெடும்பதி
யாம்
புடைகொள் கெங்க.....................பைங்கொடியா
வடகலை தென்கலை பலகலை யும்பொலி மதுரை வளம்பதி
யே 98

---

276. No. 176 திருவாமாத்தூர்க் கலம்பகம்.
ஏடுகள் 16; Lines 6—7 in a page.

இது தொண்டைநாட்டில் திருவாமாத்தூரில்

கோயில் கொண்டுள்ள சிவபெருமான் விஷயமானது. இதனை இயற்றியவர் இரட்டைப்புலவர். இவரைப் பற்றிய விவரங்களை 200-ம் நம்பரில் காண்க. இதில், 3, 4, 7, 8, 9, 10, 11, 13, 17, 18, 19, 21, 23, 24, 27, 32, 33 நம்பர் ஏடுகள் இல்லை. இது அச்சிடப் பட்டுள்ளது.

**Beginning :**

தஞ்சமென்றமரர் கெஞ்சத் தானவர தனில் விஞ்ச
வஞ்சவே வருநஞ்சுண்ட வழகரா மாதை யாற்கு
மஞ்சுசேர் பொழில் சூழ்பம்பை மாதுயரந்தீர்த்தானைக்
கஞ்சமா மலர்கொண் டேத்திக்கலம்பகஞ் செய்வோம்
யாமே.

பூமேவு சதுமுகத்துப் பொலிமறையோன் சடங்கியற்ற
மாமேவு பசுந்துளப மாயனுத கம்பொழிய
வீராறு விளக்கெடுப்ப விமையவர்பல் லாண்டிசைப்ப
பாரேழு பாலிகையுட் பல்லுயிரு மங்குரிப்பக்
குலகிரிக்காற் பகிரண்ட கூட நெடுங் காவணத்தே
யுலகனைத்து மீன்றவளை யுயர்மணஞ்செய் தருளினையே
அப்போது மணக்கோலத் தபிராமங் கண்டன்றோ
வெப்போதும் வானவர்க ணிமையாம லிருந்தார்கள்.

**End :**

லுங் கடைந்தார்களுய நஞ்ச முண்டார்களே
முகமொக்க வழுதாக வுண்டார்கள் மு(ப்ப)த்து முக்
கோடி தேவர்தாமே (100)

**Colophon :**

திருவாமாத்தூர்க்கலம்பகம் புகல் எழுதி முடிந்தது.

இரட்டையர் பாடியது என்று அறியவும்.

தாருண ௵ தைமீ 19௳ வியாழக்கிழமை இன் உத்திராட நட்ஷேத்திரமும் சதுர்தேசியிலும் எழுதி முடிந்தது.

முற்றும். திருச்சிற்றம்பலம்.

237—15

## ix. காதல்.

### 277. No. 95 கூளப்பநாயக்கன் காதல்.
### ஏடுகள் 31; பூர்த்தி Lines 5—7 in a Page.

காதல் என்பது, ஒரு நாயகி ஒரு சோலையினிடத்தில் எதிர்ப்பட்டுத் தன்னைக் காதலித்த நாயகன் பிரிந்ததனால், தனக்குண்டாகிய வருத்தத்தை தன் தோழிக்கு உணர்த்துமுகத்தால் அவனது வரலாற்றை எடுத்துரைத்து, அவள் வாயிலாக அவனை மீளவும் கூடி இன்புற்றிருந்ததாகக் கூறுவது. இதனை தூதுப் பிரபந்தத்தின் ஒரு பகுதியாகக் கொள்வர்.

கூளப்ப நாயக்கன் காதலென்பது, கூளப்ப நாயக்கன் மீது பாடப்பட்ட காதலாகும். கூளப்ப நாயக்கன் என்பவன், மதுரைஜில்லா, நிலக்கோட்டை தாலூகா, நவபுரி எனப்படும் பெஞ்சை யென்னும் ஊரிலிருந்த ஒரு ஜமீன்தார். இவன் புலவர் பாடும் புகழ் படைத்தவன். அவரைப் பெரிதும் ஆதரித்தவன். இவனுக்குக் கூளேந்திரன், பெரிய நாகேந்திரன் என்னும் பெயர்களுமுண்டு. இவற்றை, 'பொற் கோட்டை யென்னும் புகழு நிலக்கோட்டையினன்' எனவும், 'இட்டகொடியாடை யிடைசூழ் நவபுரியான்' எனவும், 'பாவுக்கே றிக்கனகப் பல்லக்கே றும்புலவர்—நாவுக்கேறும் பெரிய நாகேந்திரன்' எனவும், 'ஐந்தருவுமைந்துவிர லாகத் தருவதெனச்—செந்தமிழ்க்கு நல்கு மலர்ச் செங்கையான்' எனவும், 'பேராரும் பெஞ்சைப் பெரிய நாகேந்திரன்' எனவும், 'சிந்தம கூளேந்திரன் செகராசன் கண்மணிபோல்—வந்ததுரை சிங்கமெங்கள் மால் பெரிய நாகேந்திரன்' எனவும் வருவனவற்றால் நன் கறியலாம். நவபுரி என்பது ஒன்பதூர்.

இனி, இவன்மீது பாடப்பட்டுள்ள விறலிவிடுதூது (நம்பர் 96) என்னும் பிரபந்தத்துள், இவனது சிறப்புக்

கூறுமிடத்தில், 'திக்கெல்லாங் கொண்டாடுஞ் செங்கோல் விசயரங்க சொக்கநாதேந்த்ர துரைராசன்—சத்ரபதி—சேதுபதி பாண்டியகுல தெட்சணசிம் மாசன நராதிபதி மெச்சு மனபாயன்' என்று கூறப்பட்டுள்ளது. நிலக்கோட்டையைச் சார்ந்த ஒரு கிராமத்தில் எட்டு வகுப்பினர்க்குப் பிரதிநிதியாக ஏற்பட்ட எட்டுப் பேர்கள் கி. பி. 1719ஆ'ம் வருடத்தில் உடன்படிக்கைச் செப்புப்பட்டயம் எழுதிக்கொடுத்திருக்கின்றனர். அது அரமனை ஏஜண்டுகள் சபையின் சம்மதியின்பேரில், செய்து கொடுக்கப்பட்டதென்றும், அவ்வேஜண்டுகளில் கூளப்பநாயக்கனும் ஒருவனென்றும், அப்பட்டயம் ஏற்பட்ட காலத்தில் மதுரையை அரசுபுரிந்தவர் விஜயரங்க சொக்க நாதநாயக்கர் என்றும், அவரது ஆட்சிக்காலம் கி. பி. 1705 முதல் 1731 வரையிலும் என்றும் (Topographical List of Inscriptions vol: I page 1019) தெரிகின்றது. இச்சாசனம் விறலிவிடுதூது உரைக்கும் விஜயரங்க நாயக்கரையே கூறி நிற்றலால், விஜயரங்கநாயக்கர் அரமனை ஏஜண்டுகளில் ஒருவனும், இப்பாட்டுடைத் தலைவனுமாகிய கூளப்பநாயக்கனது காலம் கி. பி. பதினெட்டாம் நூற்றுண்டின் முற்பாதி என்று கொள்ளத்தக்கது.

இக் காதலைப்பாடியவர் சுப்பிரதீபக்கவிராயர் என்பவர். விசுவகன்ம குலத்தினர். சிறந்தவாக்கி. இது அச்சிடப்பட்டிருக்கிறது. இந்தப் பிரதியின் 11-ம் ஏட்டில் ஒன்றும் எழுதப்படவில்லை: சிறிது சிதைந்துள்ளது.

**Beginning:**

பேராரும் பெஞ்சைப் பெரியநா கேந்திரன்மேல்
சீராருங் காதலின்று செப்பவே—வேரிதரு
வேலோன் துணையான விக்னே சுரனளித்த
மாலோன் மருகன் வளர்காப்பு.

பொன்மாது மேவுதிம்ம ராயனருள் பூண்டிருக்கு
நன்மா நிதிபெரிய நாயகன்மேற் காதலுக்கு
வந்துதவுஞ் சொன்மதுர வாக்குதவி யெப்பொழுதுந்
தந்துதவ வேணு மெங்கள் தந்திமுகத்தோனே.

* * * *

கற்கோட்டை யென்பவர்மேல் கண்சிவந்து கண்டவர்
செம்
பொற்கோட்டை யென்னும் புகழுநிலக் கோட்டையி
சிந்தம கூளேந்திரன் செகராசன் கண்மணிபோல்[ளுன்
வந்ததுரை சிங்கமெங்கள் மால்பெரிய நாகேந்திரன்.

* * * *

காலாயுதக் கொடியோன் கையாயுத வழியே
மாலாயுத மீன்ற மாமணியைத் தானுகுத்தாள்

**End :**

செங்கோலும் வாழி செழிக்க வொன்ப தூர்வாழி
யெங்கோன் துரைபெரிய நாயகனும் வாழியதே
பாவாணர் வாழி பரிசனங்கள் தான்வாழி
பூவுலகோ ரன்னசுற்றம் புகழ்பெறவே வாழியதே.

முற்றும்.

**Colophon :**

மூறையூர் வீசன்னுத்துக்காரன் கய் எழுத்து.

---

278. No. 392 கந்தர் காதல்.
ஏடுகள் 18; Lines 4—5 in a page.

இது, கந்தர்மீது பாடப்பட்ட காதலாகும். ஆசிரியர் பெயர் முதலியவை விளங்கவில்லை. ஏடுகள் பெரும்பாலும் பாதியாகச் சிதைந்துள்ளன. இது அச்சிட்டிருப்பதாகத் தெரியவில்லை.

**Beginning :**

தண்டை யசையச் சதங்கை தகுதிகென
கொண்டையசைய மயில் கூத்தாட—வெண்டிசைக்கு
முத்தணிந்த மார்பா முருகா வெனக்குமொரு
தத்துவரும் போதோடி வா.

சீரார் கருணைச் சிவனுர் திருமகனே
வாராத செல்வமெல்லா மகிழ்ந்துதர வல்லோனே
வித்தைக்கு விநாயகனே விண்ணேர் பெருமானே
மத்தக் கரிமுகனே வந்தவினை தீர்த்தோனே
சாற்றரிய பாரதத்தைத் தப்பாம லெப்பொழுதும்

* * * *

பொங்கு மதகரியே பொன்னின் கணபதியே
உன்தம்பி மேலே உகந்துநான் காதல்சொல்ல
நின்தம்பி காதலுக்கு நீயே துணையாவாய்.

* * * *

**End:**

ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரோடி
மூங்கில்போல் சுற்றம் முசியாமல் வாழ்ந்திருப்பீர்.

**Colophon:**

பிரசோற்பதிஷு மாசிமீ 14உ நாயிறு ஆதித்த வாரநாள் பொன்னின் கணபதி மாசிலாமணி எழுதி முகிந்தது.

முற்றும்.

---

X. குறவஞ்சி.

279. No. 599 சரபோஜிராஜன் குறவஞ்சி.
ஏடுகள் 77; Lines 4—5 in a page.

இது, தஞ்சாவூர் பெரிய கோவிலில் உற்சவகாலத்தில் நடிப்பதற்காக சரபோஜி மகாராஜா ii போரிற்

பாடப்பட்ட குறவஞ்சியாகும். தமிழ்ப் பிரபந்தங்களுள் ஒன்று. இதனை இயற்றியவர் கொட்டையூர் சிவக் கொழுந்து தேசிகர். சரபோஜி மகாராஜர் கி. பி. 1800 முதல் 1832 வரையில் தஞ்சையில் ஆட்சிபுரிந்தவர். இக்குறவஞ்சி அச்சிடப்பட்டிருப்பினும் கிடைப்பதரிது.

**Beginning :**

பார்கொண்ட புகழினேங்கு பதியெனுந் தஞ்சை மேவு
தார்கொண்ட மார்பனெங்கள் சரபோசி மன்னன்மீது
சீர்கொண்ட தமிழினாலே திகழ் குறவஞ்சிகூறப்
பேர்கொண்ட பிரகதீசர் பெறுகணபதி காப்பாமே. (1)

தன்னிகர் செல்வத் தஞ்சை சரபோசி மன்னன்மீது
நன்னயத் தமிழினாலே நவில்குற வஞ்சி கூற
வுன்னு போசல குலத்துக் குயர்குல தெய்வமாகி
மன்னு சந்திர மௌலீசர் மலர்ப்பதங் காப்பதாமே. (2)

**End :**

குலவுஞ் சரபோசி மகராசர் தமைவாழ்த்திக் கொண்டிருப்ப மேடி சிங்கி
நலதிப்படியே நாஞ்செய்தாலவர் தயை நமக்குக் கிடைக்கு மேடா சிங்கா
அவர் சுகமாகவிருக்க பிரகதீச ரருட்பதம் போற்றுவோஞ் சிங்கி
அவனியிலெவர்களுஞ் சுகமே யிரிக்கணு மவர்பதம் போற்றுவஞ் சிங்கா.

மங்களஞ் சரபேந்திரற்குச் செயமங்களம்.

மன்னு மதி மந்தரத்தாற் றமிழ்க்கடலைக் கடைந்து குறவஞ்சி யென்னும், இன்னமுதந் தனை யெடுத்துப் பகர்ந்திடு நாவெனுங்கரத்தா லெழிலார் தஞ்சை, யென்னு நகர்மேவு சரபேந்திரற்குப் புலவர்களு மினிதுட்

கொள்ள, நன்னயங்கொ ளேரண்ட புரத்துவளர் சிவக் கொழுந்துநல்கினனே.

முற்றும்.

---

280. No. 606 தியாகராஜர் குறவஞ்சி.

ஏடுகள் 35; அபூர்த்தி சிதிலம். Lines 5—6 in a page.

குறவஞ்சி என்பது தமிழ்பிரபந்தம் 96 வகையினுள் ஒன்று. இது பல துறைகளின் முகமாகத் திருவாரூரில் வீற்றிருக்கின்ற தியாகராஜப் பெருமானுடைய பெருமையை விளக்குவது. இத்தலம் தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ளது. இதில் முதல் மூன்று ஏடுகள் பாதியாகச் சிதைந்துவிட்டன. இது மகராட்டிர அரசர் களுள் சகராசன் காலத்திற் செய்யப் பட்டிருக்கிறது. இவரது காலம் 1684—1714 A. D. இதனைச் செய் தவர் பெயர் முதலியவை தெரியவில்லை. இது அச்சிடப் படவில்லை.

**Beginning:**

........................கேளாதோ வெண்ணிலவே
சிலைமதனன் றனையெரித்த தியாகரெ...ரனைச்...
ராகக்காண் பாய் வெண்ணிலாவேநானே
தலையி லிடித்தபின் பல்லோ தாழக்குனிவாய் நான்
சொன்னேன்......வெண்ணிலாவே

(தென்றல் தரு)

செந்தமிழ் மேவிய தென்மலை தந்தருள் தென்றலே நீயும்
தேறி விளையாட வேறிடமில்லையோ தென்றலே
என்றன்
கந்த மலர்க்குழல் சந்தனச் சோலையோ தென்றலே இரு
காவி விழிகளும் வாவிக் கமலமோ தென்றலே
சீதள மானநீ செந்தழல் வீசுறுய் தென்றலே இப்போ
சேர்க்கைக் குணம் கொண்டு இயற்கைக் குணம்
விட்டாய் தென்றலே

பாதகமல்லவோ மாதர்க் கிடர்செய்தாய் தென்றலே
நீயும்
பார்த்தாற் பசுப் போல பாய்ந்தாற் புலியாளுய்
தென்றலே
ஓசைக் கடலா லுடுபதி யாலுன்ளுல் தென்றலே நான்
உடுத்த கலையு முடம்பு மறந்தேனே தென்றலே
எள்ளள வுந்தய வில்லாத பாவிநீ தென்றலே என்னை
யித்தனை பாட்டுக்கு லெக்காக வைத்தாயே தென்றலே
உள்ள மகிழ்ந்தா ரூரரெனைச் சேர்வாரோ தென்றலே
அப்போ
துன்பகை செங்கதிர் முன்பனி யாகுமே தென்றலே

* * * *

மலர் மகளும் கலைமகளு மம்மே வளர்ந்தோங்கும்
வாசலிது, அம்மே
.................வளர்ந் தோங்கும் வாசலிது
சிலைமதவேள் சகராச னம்மே தினம் பணியும் வாசலிது
அம்மே தினம் பணியும் வாசலிது

**End :**

காணேனே அடய்யே சிங்கிதனைக் காணேனே

(விருத்தம்)

சங்கங்கள் தவழுந் தெண்ணீர்த் தடம்புனற் கமலம் பூத்த கொங்கெங்கு மகிழ...........

குறிப்பு:

இதில் திருவாரூர் தியாகராஜர் பவனிவரக்கண்டு காதலித்த மோகினிப்பெண் நிலா தென்றல் முதலிய வற்ருல் வருந்தியிருக்கையில் குறத்தி இவளது கை ரேகையைப்பார்த்துக் குறி சொல்லித் திருவாரூரிலிருந்த போது அவளைக் காணுது சிங்கன் வருந்திய வரைக்கும் இருக்கிறது.

———

## 281. No. 614 (*a*) தஞ்சை வெள்ளைப் பிள்ளையார் குறவஞ்சி.

ஏடுகள் 16; பூர்த்தி : Lines 5—6 in a page.

இது பிரபந்தர் 96 வகையுள் ஒன்று. தஞ்சைக் கீழவாசலில் கோயில்கொண்டுள்ள வெள்ளைப்பிள்ளையார் விஷயமானது. முதல் 2 ஏடுகள் இருபுரமும் சிதைந்துள்ளன. இந்நூலை நாயக்கர் காலத்தில் செய் திருத்தல் வேண்டுமென்று ஊகிக்கலாம். ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

**Beginning :**

......னமுக அருமொழியு மானந்த வல்லி
......மைபிறை நாறு சீரடித் தா யென் திருவும்
......னையுள பெறு வுடையார் சொக்கனுயகருந்
......ரவுடைய வயித்தீசர் தஞ்சை நாயகரும்
......மகிழத் தொப்பாரங்கட்டிப்பிள்ளையாரும்·

* * *

தஞ்சை வெள்ளைப் பிள்ளைக் குறவஞ்சிக்கு முன் னடக்க வேணும்.

* * * *

உந்தியிலே வேதாவை அரிபெறுவ ரென்று
உலகமெங்குஞ் சொன்னவளென் ஓரகத்தி யம்மே
நந்தனிட மனையில்மால் வளருவா ரென்று
நாடறியச் சொன்னவளென் நாத்தியடி யம்மே
பெந்துவாய் ரகுநாதர் திசரதனுர் வயிற்றில்
பிறப்பரென்று சொன்னவளென் பேத்தியடியம்மே
விந்தனிட மாது மையாள் வயிற்றிலே தஞ்சை
வெள்ளைப்பிள்ளை சனிப்பரென்று சொன்னவளென்
தமக்கை.

**End:**

கோணாத வளரெங்க நாதபுரம் வாழி
குருநாதர் எல்லம்மன் வீரேசர் வாழி
வாணாளும் பூமாலைராவுத்தரும் வாழி
மண்டபங்கள் கோபுரங்கள் மானகரும் வாழி
சோணாடு மிகவாழி சூத்திரங்கள் வாழி
சுருதிநூ லறநூல்கள் சுகமாக வாழி
பூணார மணிமார்பப் பூவையர்கள் வாழி
புகழ்வெள்ளை பிள்ளையார் பூசைகளும் வாழி

விசையரா கவசுவாமி மேன்மேலும் வாழி
மெச்சுதள வாய்வெங்க டேந்திரனும் வாழி
திசையாளுந் துரைமக்கள் வேளாளர் வாழி
செட்டி பலபட்டடைகள் செந்தமிழும் வாழி
அசையாத தஞ்சாவூர் அஷ்டதிக்கும் வாழி
அறம் வாழி சத்திரங்க ளறுசமயம் வாழி
இசையாகவே வெள்ளைப்பிள்ளையார் வாழி
யிக் குறத்தைக் கேட்டவரும் கற்றவரும் வாழி

---

282. (*b*)விசையராகவ நாயக்கர் அய்யன் பேரில் முளைப்பாட்டு.

Lines 5 in a page.

இது, விசையராகவ நாயக்கர் பவனிவருந் தெருக்களில் பெண்கள் முளைப்பாலிகை வைத்து வழிபடுவதைக் கூறுவது. விசையராகவ நாயக்கர் காலத்தில் செய்யப்பட்ட தாகும். அச்சிடப்படவில்லை.

**Beginning:**

பொய்யாத காவேரி பொழிந்து வரும் வளநாடாம்
செய்யாரும் கால்வாயால் சிறந்த சோழ மண்டலமாம்

மண்டலத்துக் கழகான மருவுதஞ்சை பட்டணமாம்
பட்டணத்துக் கழகான பரவநெடுங் கோட்டைகளாம்
கோட்டைகளைச் சூழ்ந்திருக்குங் குலவுகடல் போல
கிழாம்
குதிரை நடத்துகின்ற கொடித்தேரு வீதிகளாம்
வீதிதனில் வேடிக்கை செய மெல்லியரெல் லாங்கூடி
ஆதரவாய்ப் பவழத்தாலே அழகாகக் கானுட்டிக்
கானுட்டி மரகதத்தால் கனமான வளைபரப்பி
மேலான பொன்னாலே விதம் விதமாய்ப் பந்தலிட்டு
பந்தலின்மேல் முத்தாலே பரியதுடர் பலதூக்கி
இந்திர நீலத்தாலே யிடைக்கிடையாய் மாலைகட்டி
மாலைகட்டி வச்சிரத்தால் மகரதோ ரண நிறுத்தி
தாழைக்கனி யிளநீரும் சதுராக வேபரப்பி
சதுருடன் குங்குமம்பனிநீர் சாந்தாலே நிலமெழுகி
மதிநிறைந்த மிருகமதத்தால் வளமான கோலமிட்டு
கோலமுள நாகமருள் குலமணிகள் விளக்கேத்தி
யேற்றமுளைப் பாலிகைக்கு ளேழுவகை நிரைத்து

* * * *

ஆனாலும் புகழ்படைத்த அச்சுத விசையராகவன்முன்
தானாக வித்தெருவே தயவாக வாரானோ
வாரானோ எனையொருக்கால் மகிழ்ந்துமுகம் பாரானோ
பார்க்கும் படிக்குமுளைப் பாலிகையை யெடுத்தளகை
யூர்க்குள்ளே நாமெல்லாம் ஓடியாடுவந் தோழிப்
பெண்காள்

* * * *

மன்னன் விசயராகவேந்திரன் வரவேணு மென்று
பாலிமுளை நாச்சியாரைப் பணித்திடுவந் தோழிப்
பெண்காள்

**End :**

பவழயித லூறலுண்போம் பாங்காகப் புனைந்திடுவோம்
தவவிசையராகவய்யனைத் தழுவினமடி தோழிப்
பெண்காள்

நாளு ளு நன்னனளு நாளுநா நன்னனளு
பொய்யாத மூர்த்தி கலங்காத மூர்த்தி முன்னிற்க
வேணும். பெத்து நாயக்கர் மகன் வேங்கடபதி சுவடி.

---

## XI தூது

### 283. No. 96 விறலிவிடு தூது.

ஏடுகள் 11; அபூர்த்தி Lines 5—7 in a page.

தூது என்பது ஆண்மகனும் பெண்மகளும் தாம் கொண்ட காதலை பாணன் விறலி முதலிய உயர்திணையிடத்தும், கிள்ளை, வண்டு, மேகம் முதலிய அஃறிணையிடத்தும் எடுத்துரைத்து தன்னவர்பால் தூதுபோய் மீள்க எனக் கலிவெண்பாவாற் பாடுவது. இது தொண்ணூற்ருறு வகைத் தமிழ்ப் பிரபந்தங்களுள் ஒன்ருகும்.

விறலிவிடுதூது என்பது கூளப்பநாயக்கன் என்னும் ஒரு பிரபுவின்மீது காதல்கொண்ட ஒருபெண் தன் விறலியைத் தூதுபோய் மீள்க என அவள்பால் விடுத்ததைக் கூறுவது. விறலி—பாடுபவள். இவனைப்பற்றிய விவரங்களை 95-ம் நம்பரிற் காண்க. இதனைப் பாடியவர் சுப்பிரதீபக் கவிராயர். இது அச்சிடப்பட்டிருக்கிறது. அச்சுப்பிரதிக்கும் இங்குள்ள எட்டுப் பிரதிகளுக்கும் பாடபேதம் அதிகமாயிருக்கின்றது.

**Colophon :**

பொங்குபெருஞ் செல்வப் புகழ்பெரிய நாகன்மேந்
துங்கன் விறலிவிடு தூதுக்கு — மங்களஞ்சேர்
பஞ்சவர்க்கி ரங்கமுதப் பைம்பொனெடுங் குன்றிடக்கை
கஞ்சமலர்க் குஞ்சரமே காப்பு.

தவளத் தாமரைத் தாதார் கோவில்
அவனைப் போத்துவ ரருந்தமிழ் குறித்தே.

கார்பூத்த மேனிக் கருணைத் திருநெடுமால்
பார்பூத்த வுந்திப் பரந்தாமன்—நீர்பூத்த
வேலைகுழ றக்கடைந்த வேலைதருந் தெள்ளமுர்து
மாலைதரும் வெண்சா றடுபாகும்—பாலும்
கனியுஞ் சருக்கரையுங் கற்கண்டு நாவுக்
கினியபசுந் தேனு மிணக்கித்—தனியாக
மத்தித் தெடுத்த மதுரிப்புக் கெண்மடங்கு
தித்திப்புக் கேட்போர் செவிக்கேற்கத்—தத்தைகள்
குன்றேறத் தோற்றுக் குயில்மா மரந்தோறும் [போய்க்
சென்றேற வானிற் சிறைநிலைகள்—நின்றேங்கி
விண்ணேற அந்தரத்தில் விஞ்யசயரே றக்கனிந்த
பண்ணேறப் பாடுமியல் பாவையே.........

**End:**

ஆழிமுத்தை முத்தய்யவேள் நல்கவர தப்பனொரு
நாளிவில்லே போட்டான் சமுகத்தில்—வாளியெனும்
ரெங்கயனீந் தான்மாடை நாலுபத்து ராமழக
துங்கன் கொடுத்தான் பொன் தொண்ணூறு—திங்கள்
வீரப் பெருமாள் விரலுக்கு ரெத்னவொளி [முகன்
சேரப் பருமோ திரந்தந்தான்—கோர
(அனுமத்)துவச ருங்கருடடாலர்
கனக விருதுசிங்க டால் காரர்—எனவாழும்
......மசத்தை பூரமே அபலபட்டடையார்
அத்தனைபேருங் கொடுத்தா ராயிரம் பொன்—
........ஒன்பதூர் பெஞ்சை நகர்வாழி [வித்துவசனம்
ஊர்வாழி வேதமுத லோர்வாழி—யேர்வாழி

---

284. No. 97 விறலிவிடு தூது.
ஏடுகள் 108; அபூர்த்தி. Lines 4—7 in a page.
இது 96ஆம் நம்பரைப் போன்றது.

---

## 285. No. 98 விறலிவிடு தூது.

ஏடுகள் 94; Lines 4—7 in a page.

இதுவும் முன்பிரதியைப்போன்றது. அபூர்த்தியாகவே இருக்கிறது.

---

## 286. No. 96 செண்டலங்காரன் விறலிவிடு தூது.

ஏடுகள் 63; Lines 4 in a page.

இது, செண்டலங்காரன் என்னும் பிரபுவின்மீது பாடப்பட்ட விறலிவிடு தூதாகும். இவன், தஞ்சாவூர் ஜில்லா மன்னார்குடி தாலூகா இராசை நகரிலிருந்த தியாகபூபன் என்பவரது மகனாவான். புலவர்பாடும் புகழ்படைத்த ஒரு கொடையாளி. சகஜி ராஜனது அரமனைக் கணக்கப்பிள்ளை. இவை, 'சீராசை வாழுந் திகழ் செண்டலங்காரன்' எனவும், 'செந்தமிழ்க்கு நாளுந் திகழ் தியாக பூபனருள்— ஐந்தருவை நேர்செண்டலங் காரன்' எனவும், 'தன்மதுரை தஞ்சை சகஜிமா ராசனுக்குப்—பொன்முதிர வேண்டிப் புதுக்கியே-நன்மணியத்—திட்டமிட்டு நாளுந் திகழ்நல்லவன் வாசல்— அட்டவணையாஞ் செண்டலங்காரன்' எனவும் வருவனவற்றால் விளங்கும். சகஜி என்பவர், தஞ்சையை அரசு புரிந்த மகராஷ்டிர மன்னரில் ஒருவர். இவரது ஆட்சிக் காலம் கி. பி. 1634 முதல் 1714 வரையிலுமாகும். ஆதலால், செண்டலங்காரனது காலம், கி. பி. பதினேழாம் நூற்றாண்டின் கடைசி அல்லது பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதி என்று கொள்ளத்தக்கது. இராசை என்பது இராசமன்னார் கோயில் என்பதன் மரூஉ. அட்டவணை— கணக்கப் பிள்ளை. இந்தப்பிரதியில் இந்நூல் முழுவதும் இருக்கிறது. அச்சிடப்படவில்லை.

**Beginning :**

அத்த ரருள்செண் டலங்கார ஞனபரி
சுத்தன் விறலிவிடு தூ துக்கு—நித்தநித்தம்
பொற்பகத்தென் ராசைப் புனிதர்கை லாசர்தந்த
கற்பகத்தின் பொற்பதமே காப்பு.

சீர்கொண்ட செம்பதுமச் செல்வி மணவாளன்
கார்கொண்ட மேனிக் கருணைமால்—ஏர்கொண்ட
செண்டழகன் பேரழகன் செய்யதனிச் சேலையுள
தண்டழகன் செண்பகப்பூந் தாரழகன்—வண்டுவரை
தன்னில் வருவோன் தனிமாலை தானழகன்
பொன்னிலழகன் புகழழகன்-சென்னெல்(ந்நெல்)வயற்
சீராசை வாழுந் திகழ்செண்டலங்காரன்.

* * * *

**End :**

கற்றுப் படித்துக் கரைகண்டு பூவுலகிற்
பெற்றுப் பெருகிப் பெரிதுகந்து—நற்றவங்கள்
செய்யும் பொழுதுமெங்கள் செண்டலங்கா ரப்பெருமான்
வையகத்தி லெந்நாளும் வாழியென—மெய்யுரைத்தும்
அன்புற் றிருந்ததொரு வள்ள லருளாலே
யின்புற் றிருந்தா ரினம்.

---

வெண்பா

செந்தமிழ்க்கு நாளுந் திகழ்தியாக பூபனருள்
ஐந்தருவை நேர் செண்டலங்காரா—விந்தையொடு
மூன்ருனை காத்த முகுந்த னருளதனு
லென்ஞளும் வாழ்ந்துண் டிரு.

ஆறுமுகத்தையன் துணை.
செண்டலங்காரன் வாழி வாழி.

---

## xii பரணி

### கலிங்கத்துப்பரணி.

கலிங்கத்துப்பரணி என்பது சோழன் முதலாங் குலோத்துங்கன் தன் சேனைத்தலைவன் வண்டை நகர் கருணாகரத் தொண்டைமானை அனுப்பிக் கலிங்க நாட்டை வென்ற வெற்றியைக் கூறும் பரணியாகும். கலிங்கமென்பது வட சர்க்காரிலுள்ள ஒரு நாடு. அது, கோதாவரியாற்றுக்கு வடக்கும் மகாநதிக்குத் தெற்குமாகிய பிரதேசமாகும். பரணி என்பது, ஆயிரம் யானைகளைப் போர்க்களத்திற் கொன்ற வீரனது வென்றியும் புகழும் விளங்கப் புறப்பொருள் தோன்ற ஈரடித் தாழிசையாற் புனைந்துரைக்கப்படுவது. (இலக்கண விளக்கம் சூத். 838, 839) இது, பரணி நாளில் கூழும் துணங்கையும் கொடுத்துக் காளியை வழிபடுவதோர் வழக்குப் பற்றி அதனுட் பாட்டுடைத் தலைவனைப்பெய்து சொல்லப்படுவதாகலின் தேவபாணியின் பாற்படும் (தொல். செய்யுளியல் 149). தமிழில் வழங்கும் தொண்ணூற்றறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்றாகும். கலிங்கத்தின் மீது படையெடுப்பு இருமுறை யாதலால், இப்பரணி கூறுவது அவற்றுள் முதற்படை யெடுப்பை எனச் சிலரும், இரண்டாவதை எனச் சிலரும் கூறுவர். அதனால், இக்கலிங்கப்போர் நிகழ்ந்த காலம், பதினோராம் நூற்றாண்டின் கடைசி யெனச் சிலரும், பன்னிரண்டாம் நூற்றாண்டின் தொடக்கமெனச் சிலருங்கொள்வாராயினர்.

இப்பரணிக்குமுன் வேறுபரணி இருந்ததாக அறியப் படாமையால், இதுவே பரணிகளில் முதன்மை யுற்றது; அன்றியும் சிறந்தது. இதிலுள்ள பாக்கள், சொன்னயமும் பொருணயமும் தோற்றிச் சந்தவின்பம் பயப்பன. இதனைத் தெய்வப்பரணி என்பர் ஒட்டக்கூத்தர்.

இதனால், சோழர்கள் பரம்பரையும், குலோத்துங்கனது வெற்றியும், பண்டைக்கால ஒழுக்க வழக்கங்களும் நன்கு விளங்கும். இப்பாட்டுடைத் தலைவனாகிய முதலாங் குலோத்துங்கன் கி. பி. 1070 முதல் 1118 வரையிலும் சோழ நாட்டை அரசுபுரிந்தவன்.

இப்பரணியை இயற்றியவர் செயங்கொண்டான் என்பவர். இவர், தஞ்சாவூர் ஜில்லா நன்னிலந் தாலூகாவைச் சேர்ந்த தீபங்குடியிலிருந்தவர். இவரைச் சைனரெனச் சிலரும், சைவரெனச் சிலரும் கூறுவர். இவர், பரணி பாடுவதிற் சிறந்தவர். அது, பரணிக்கோர் சயங்கொண்டான் ' என்பதனால் விளங்கும். இவர்க்கு கவிராச கண்டிதன், கவிச்சக்கிரவர்த்தி எனவும் பெயர்களுண்டு. (208-ம் நம்பரின் கடைசியிற் காண்க.

இப்பரணி சிலரால் அச்சிடப்பட்டிருப்பினும், அச்சுப்பிரதிக்கும் இங்குள்ள பிரதிகளுக்கும் பாடபேதம் அதிகமாகக் காணப்படுகின்றன. அன்றியும்; அச்சுப் பிரதிகளிலுள்ள செய்யுட்களில் சில ஏட்டுப்பிரதிகளிலும், ஏட்டுப் பிரதியிலுள்ள செய்யுட்களில் சில அச்சுப் பிரதியிலும் இல்லை. இங்குள்ள ஏட்டுப்பிரதிகள் ஏழும் ஒன்றற்கொன்று வேறுபாடுடையனவாக இருக்கின்றன.

பழைய அச்சுப்பிரதிகளோடு இங்குள்ள ஏட்டுப் பிரதிகளையும், பிற இடங்களிற் கிடைத்தபிரதிகளையும் வைத்து ஒப்புநோக்கி, சென்னை அடையாறு நாஷனல் ஹைஸ்கூல் தலைமைத் தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீ. அ. கோபாலையர் இப்பரணியை இப்பொழுது அச்சிட்டிருக்கின்றனர்.

---

287. No. 208 கலிங்கத்துப்பரணி.

ஏடுகள் 83; பூர்த்தி (1) Lines 4—6 in a page.

இதில் இப்பரணி முழுவதும் இருக்கிறது. இதன் கடைசியிலுள்ள வெண்பாவும் கலித்துறையும் அச்சுப்

பிரதிகளில் இல்லை. இப்பிரதியின் கடைசியில் பாட்டு டைத் தலைவன் பெயரும், நூலாசிரியர் பெயரும் அவரது ஊர்ப்பெயரும் எழுதப்பட்டுள்ளன. இது சிறிது சிதைந் துள்ளது.

**Beginning :**

ஆய கலைக ளறுபத்து நான்கினையும்
ஏய உணர்விக்கும் என்னம்மை—தூய
உருப்பளிங்கு போல்வாள்என் னுள்ளத்தினுள்ளே
யிருப்பளிங்கு வாரா திடர்.

புயல்வண்ணன் புனல்வார்ப்பப் பூமிசையோன் றொழில்
காட்டப் புவனவாழ்க்கைச்
செயல்வண்ண நிலைநிறுத்த மலைமகளைப்
புணர்ந்தவரைச் சிந்தை செய்வாம் (1)

அருமறைக ணெறிகாட்ட வயன்பயந்த நிலமகளை
யண்ட கூடத்
துரிமையினிற் கைப்பிடித்த உபயகுலோத்தமனபயன்
வாழ்கவென்றே (2)

ஒருவயிற்றிற் பிறவாது பிறந்தருளி யுலகொடுக்குந்
திருவயிற்ற தொருகுழவி திருநாமம் பரவுதுமே (3)

அன்னெ(ந்நெ)டுமா லுதரம்போ லருளபயன்
றனிக்கவிகை
இன்னே(ந்நெ)டுமா லுலகனைத்தும் பொதிந்தினிது
வாழ்கெனவே (4)

* * * *

சூதள வளவெனு மிளமுலைத் துடியள வளவெனு
நுண்ணிடைக்
காதள வளவெனு மதர்விழிக் கடலமு தனையவர்
திறமினோ (1)

புடைபட விள முலை வளர்தொறும் பொறை
யறிவுடைளுரும் நிலைதளர்ந்
திடைபடு வதுபட வருளுவீ ரிடுகத வுயர்கடை
திறமினோ (2)
சுரிகுழ லசைவுற வசைவுறத் துயிலெழு மயிலென
மயிலெனப்
பரிபுர மொலியெழ வொலியெழப் பணிமொழி
யவர்கடை திறமினோ (3)

**End :**

பூப்பது மன்தனை முன்படைத்துப் புவியை யிரண்
டாவதுங் காக்கக்
காப்பது வென்கட னென்னவந்த கரிகால்வளவனை
வாழ்த்தினவே (188)
யாவருங்களி சிறக்க மெய்த்தரும மென்று மெங்குமுள
தாகவே
தேவரின்னருள் தழைக்கவே முனிவர் செய்தவப்பயன்
விளைக்கவே (189)
வேத நன்னெறி பரக்கவே யபயன் வெம்புலிப்பகை
கெடுப்பவே
பூதலம்புலி புரக்கவே புவி நிலைக்கவே புயல் சுரக்கவே.

கலித்துறை.

தரைநிரைத் தாலன்ன தண்பனி தூங்கத் தலைமிசைச்
செங்
கரநிரைத் தாரையுங் காண்பர் கொலோ கலிங்கத்து
வெம்போர்
பொரநிரைத் தார்விட்ட வேழமெல்லாம் பொன்னி
நாட்டளவும்
வரநிரைத் தான்றெண்டைமான் வண்டைமானகர்
மன்னவனே.

வெண்பா

தடங்குலவு நாண்மாலை தாமத்தங் கையில்
விடங்குலவும் வெள்வாள் விதிர்ப்ப—நடுங்கியே
கோள்மேவு பாம்பின் கொடுமுடிய தல்லவோ
வாள்மேவு தேர்கலிங்க மன்.

கலிங்கத்துப்பரணி முற்றும்.

குலோத்துங்க சோழபெருமாளுக்கு தீபங்குடி கவிராச கண்டிதன் கவிச் சக்கிரவர்த்தி செயங்கொண்டார் பாடிய கலிங்கப்பரணி முற்றும்.

---

288. No. 209 கலிங்கத்துப்பரணி.
ஏடுகள் 83 (2); Lines 5—8 in a page

இது 208ஐப் போன்றதெனினும் அதைப் பார்க்கிலும் சுத்தப்பிரதி; முழுவது மிருக்கிறது. மேற்பிரதியின் கடைசியில் எழுதியுள்ள வெண்பாவும் கலித்துறையும் நூலாசிரியர் பெயரும் பாட்டுடைத் தலைவன் பெயரும் இதில் இல்லை. ஆனால் சிறிது சிதிலமாயிருக்கிறது.

---

289. No. 210 கலிங்கத்துப்பரணி.
ஏடுகள் 64 (3); Lines 4—7 in a page.

இது முன்பிரதிபோன்றது. முழுவதும் இருக்கிறது. ஏடுகளில் சில சிதைந்தும் முறிந்தும் இருக்கின்றன. கடைசியில்

சரநிரைத் தாலன்ன தண்பணி தூங்கத் தலைமிசைச் செங்
கரநிரைத் தாரையுங் காண்பார்கொ லென்கொல் கலிங்கவெம்போர்
பொரநிரைத் தார்விட்ட வேழமெல்லாம் பொன்னி நாட்டளவும்

வரநிரைத் தான் தொண்டைமான் வண்டைமாநகர்
மன்னவனே.

என்னும் செய்யுள் எழுதப்பட்டுள்ளது.

---

290. No. 211 கலிங்கத்துப்பரணி.
ஏடுகள் 62; (4) Lines 5—6 in a page.

இதுவும் முன்பிரதியைப் போன்றது. முழுவதும் மிருக்கின்றது.

ஆரம்பத்தில்

வேக மாநெறி சேருய் வினைகளுந்
தாக மோகம் விடாத தளர்ச்சியுஞ்
சோக வாரியி னுல்வருந் துன்பமும்
போக வானை முகத்தனைப் போத்துவாம்.

என்னும் விநாயகர் துதியும் 'பவளநிறமும்' 'ஆய கலைகள்' என்னும் சரஸ்வதி தோத்திரங்களும் எழுதப் பட்டுள்ளன.

---

291. No. 212 கலிங்கத்துப்பரணி.
ஏடுகள் 27 ;(5) Lines 7 in a page.

இதுவும் முன்பிரதியைப்போன்றது, ஆரம்பத்தில் 'ஆயகலைகள்' என்னும் சரஸ்வதி தோத்திரமும் அதன் பின் பரணி லக்ஷணமும் எழுதப்பட்டுள்ளன. இது அபூர்த்தியாயும் சிதைந்து மிருக்கிறது.

---

292. No. 213 கலிங்கத்துப்பரணி.
ஏடுகள் 44; (6) Lines 6—7 in a page.

இதுவும் முன்பிரதி போன்றது. இது 211-ம் நம்

பரைப்போலப் பூர்த்தியாயிருக்கிறது. ஆனால் சிற்சில இடங்களில் சிதைந்தும் ஏடுமுரிந்துமிருக்கிறது.

---

293. No. 563 கலிங்கத்துப்பரணி.

ஏடுகள் 68; Lines 6—8 in a page

இது மேற்பிரதியைப்போன்றது. இதன் கடைசியில் பத்துத் தாழிசைகள் அதாவது 68 முதல் 77 வரையிலுள்ள தாழிசைகள் இல்லை. 47ஆம் ஏடில்லை.

குறிப்பு:

தலைப்பில் செயங்கொண்ட மகரிஷிபாடிய கலிங்கத்துப்பரணி என்று எழுதப்பட்டுள்ளது.

---

xiii. பள்ளு

294. No. 607 தியாகராஜர் பள்ளு.

ஏடுகள் 13; பூர்த்தி சிதிலம். Lines 7—8 in a page.

இது தமிழ்ப்பிரபந்தங்களில் ஒன்று. திருவரங்கப் பள்ளியும் திருவாரூர்ப் பள்ளியும் தம்மில் ஏசுதல் காரணமாகத் தியாகராஜரின் பெருமையை விளக்குவது. இதனை இயற்றியவர் கமலை ஞானப்பிரகாசன் என்பவர். இது அச்சிடப்படவில்லை. பள்ளி—பள்ளப்பெண்.

**Beginning:**

சீர்பரவு மாரூர்த் தியாகற்குச் செந்தமிழால்
பார்புகழும் பள்ளொன்று பாடவே—தார்மருவு
கொங்கையுமை யாள்பவனுங் குஞ்சரனும் வேலவனுங்
கங்கைசர சோதியுமே காப்பு.

பூமாதொரு மாதவ மினிதுறை நீராடிய வாவியி னறை
பூகாடவி மேவிய பொழில்களு மெழில் வீறப் [கமழ்
பாமாதிசை வீறிய புகழ்பயி லாரூரர்தி யாகர்த மனமகிழ்
பாவானபள் ளேசலி னிசைவகை பலகூற

ஏமாசலமாகிய புயமிசையாகாச மானாவிய பணபணி
ஏகாச மதாமென வணிதரு மியலாளன்
மாமால்மரு கேசன் முன் வநமொரு போர்மாமத
வாரணமுகமுள
வாதாவி விஞபக னிருபத மறவேனே.

**End:**

மறந்திடா யென் பிழையை யன்புகூரவே
வன்மமாக வெண்ணுதே வன்மீகப் பள்ளி
சிறந்திட நாமிருவர் கூடி யாடியே
சேர்ந்து வாழ வேணுங்காணுஞ் சீரங்கப்பள்ளி
நற்கவிதை கொண்டு பள்ளு வர்க்க முரைத்த
ஞானப்பிர காசன் வாழி நற்புவி வாழி
விற்குலவு மாறன்மிசை மானேந்து கையான்
வித்தியா பதிமுதல் மெய்ப்புகழ் வாழி
சற்கமலை நகர்வாழி சாமந்தன் வாழி
தானமும் பரிகலமுந் தழைத்து வாழி
மற்குலவு திண்புயத்தான் மல்லைய பூபன்
வாழி பூமியானெந் நாளும் வாழி வாழியே.

வெண்பா

ஆண்டபுகழ்த் தென்கமலை யத்தரே போர்விசையன்
பூண்டசிலை தாக்கப் பொறுத்தீரே—யீண்டு
வெறுப்பதுவே யாஞலு மெய்யடியேன் புன்சொல்
பொறுப்பதுமக் கன்ருே புகழ்.

---

295. No. 608 தியாகராஜர் பள்ளு.
ஏடுகள் 40; பூர்த்தி சிதிலம். Lines 4 in a page.
இதுவும் முற்பிரதி போன்றது.

**Colophon:**

ஆங்கிரஸ சித்திரைமீ 12உ சனிவார நாள் ரோகணி முதல்காலப் பொழுது விடிந்து 18 நாழிகைக்குமேல் வடுகனுதன்

296 No. 609 தியாகராஜர் பள்ளு.

ஏடுகள் 47; பூர்த்தி Lines 4 in a page.

இதுவும் முற்பிரதிபோன்றது. மேலிரண்டு பிரதிகளைவிட இது சிறந்தது. சிதிலம் சிற்சில இடத்தில் இருக்கிறது.

---

xiv. பிள்ளைத்தமிழ்.

---

297 No. 444 திருஞான சம்பந்தர் பிள்ளைத்தமிழ்.

ஏடுகள் 14; Lines 5 in a page.

பிள்ளைத்தமிழ் என்பது, கடவுள் அல்லது மக்களைப் பாட்டுடைத் தலைவராகக்கொண்டு, பிள்ளைமைப் பருவத்தில் நிகழ்ந்தனவற்றைக் கூறுமுகத்தால், அவரது அருமை பெருமைகளை விளக்குவது. இது தொண்ணூற்றுறுவகைத் தமிழ்ப் பிரபந்தங்களுள் ஒன்ருகும். பிள்ளைத்தமிழ், ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத்தமிழ் என்றிருவகைப்படும். அவற்றுள், காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்னும் இவற்றைக் கூறுவது ஆண்பாற் பிள்ளைக்கவியாம். இவ்வுறுப்புக்களில், சிற்றில் முதல் மூன்றையும் ஒழித்து, கழங்கு அம்மானை ஊசல் என்பவற்றைச் சேர்த்துக் கூறுவது பெண்பாற் பிள்ளைக்கவியாகும்.

சம்பந்தர் பிள்ளைத்தமிழ் என்றது, சீகாழியில் அவதரித்தவரும், சைவசமயாச்சாரியர் நால்வருள் ஒருவருமாகிய திருஞான சம்பந்தமூர்த்தி நாயஞர் விஷயமாகப்

பாடப்பட்ட பிள்ளைத்தமிழாகும். செய்யுள் நடை சிறந்தது. இந்தப்பிரதியில், காப்புப்பருவமும் செங்கீரைப் பருவமும் தாலப் பருவத்தில் 8 செய்யுட்களும் இருக்கின்றன. ஏனைய பருவங்கள் இல்லை. இதனை இயற்றியவர் இன்னவரென்றுத் தெரியவில்லை. ஆனால் செய்யுட் போக்கை நோக்குமிடத்து, இதனைச் செய்தவர் சைவ எல்லப்பநாவலர் என்று ஊகிக்கின்றனர். இது அச்சிடப்படவில்லை.

**Beginning :**

கார்மேவு பொழில்சூழுங் கதிர்மாட வீதிக் கழுமலத்தார்
பெருவாழ்வைக் கவுணியனைக் கமலத்
தார்மேவு திருப்புயத்துச் சைவசிகா மணியைச் சம்மந்
தப் பெருமானைத் தமிழ்க்களிற்றைப்புரக்க
பார்மேவு மறைவாழத் திருப்பொய்கைக் கரையிற் பவள
வாய் திறந்தழுத பசுங்குதலை கேட்டுச்
சீர்மேவு திருத்தோணி அழகோடு மிருந்தார் சென்றுமழ
விடையுடனே நின்ற திருநிலையே.

**End:**

மதுரகவி தைக்கடலில் வருபொருண் மரக்கலநல்
வழிவிடு வனப்புடை மீகாமா
மறிகட லடைத்தவனு மறையவன் மதிக்கரிய
மணியினை மதித்தருள்வி யாபாரா
அதிர்கலை புறச்சமய முதுகளை யறுத்துரிய
அறுசமய வித்துவிளை வேளாளா
அதிமதுர சத்தவலை மதுரையி லொழுக்கமிடை
யமண் மிருக மறுத்துவரு காளா
முதிரும் வட வைக்கனலின் முருகுதறு கட்பணியின்
முதுகுகுனியப் பலவின் வேர்வாய் வீழ்
முதுபழ மெடுத்தவழி யுரகபண பத்திநிரை
முழுமணி யெரித்தவெயில் வயமாவூர்

கதிரவனி லெட்டுமடி ஒளி பெருக வெற்றிபுனே
  கழுமல நகர்க்கதிப தாலே லோ
கருதரிய முத்தமிழின் எரிமுறை வளர்க்கவரு
  கவுணிய குலக்குரிசில் தாலே லோ (8)

---

298. No. 445. திருஞான சம்பந்தர் பிள்ளைத்தமிழ்.

ஏடுகள் 39; Lines 4—5 in a page.

இது முன்பிரதிபோன்றது. நூல்முழுவதும் இருக்கின்றது. சிற்சில இடங்கள் சிதைந்துள்ளன.

தண்காழிச் சம்பந்தன் தண்டைக்கா லின்பயனைக்
கண்கொள் பருகுக் களியீரே—நண்...
............................................................ பொழுதே
தந்திடுமே பேரானந் தம்.

சாற்றரிய காப்புச்செங் கீரைதால் சப்பாணி
..................................................................................
அம்புலியே சிற்றிலே ஆற்று சிறுபறையே
பம்புசிறு தேரோடும் பத்து.

**Beginning :**

கார்மேவு பொழில்சூழுங் கதிர்மாட வீதிக்
  கழுமலத்தார் பெருவாழ்வைக் கவுணியனைக் கமலத்
தார்மேவு திருப்புயத்துச் சைவசிகாமணியைச்
  சம்பந்தப் பெருமானைத் தமிழ்க்களிற்றைப் புரக்கப்
பார்மேவு மறைவாழத் திருப்பொய்கைக் கரையிற்
  பவளவாய் திறந்தழுத பசுங்குதலை கேட்டுச்
சீர்மேவு திருத்தோணி யழகோடு மிருந்தார்
  சென்றுமழ விடையுடனே நின்றதிரு நிலையே (க)

(வேறு)

இரவி துவக்கிவிடு குரதுர கத்திரளை மேற்குப் பாச்சு
  மிரவின் மடத்திலிடு கனல்வழுதிக்கிடவு மேட்டிற்
நீட்டி

யெரியிலிடக்கடவ தெனவவ ரிட்டவுரை தீக்குத்தோற்க
வினிய தமிழ்ப்பனுவல் பனிமல ரொத்தெழவும் நாட்
டைச்சூழ்த்த
பரவை புகழ்ப் பெருகு நதியினில் வெற்றுடல மேற்புற்
போர்ப்பார்
பழிமொழி பொய்க்கவெதிர் வழிமொழி மெய்த்திடவும்
நீர்க்குட்பூத்த
பதும மலர்ப்புதுமை யனையதிருக்கண்மலர் சாத்திப்
போத்தல்
பழகு பவுத்தரொரு சிரமுரு ளத்தொடவும் நாற்றிக்
கேற்க
விரவு புகழ்ப்பழன மயிலையி லச்சமொடு பூத்துப் பூத்து
விடுமர வெச்சில் பொதி குடம்வடி வைத்தரவு மாற்
பொற் பேற்ற
வியன்மது ரைக்குளமண் மிருகமடைய புகுதும் வேட்
டைக்காட்டை
விரகில் வனைத்துரிய சிலவி லழித்திடவு மேற்றித்
தோற்றும்
அரனை விரற்கமல மலரை யெடுத்தினிது காட்டிக்
காட்டி
யமுத தமிழ்க்குழவி சிறுபிறை நெற்றியினில் வாய்க்
கச் சேர்க்க
வடைவு துவக்கிவரு பிறவி தவிர்க்குமென வேற்றிச்
சாற்றும்
அடியவர் தத்தமடி யமரர்துதிக்கவரு ணீற்றுக்
காப்பே (2)

**End:**

அலையார் புனற்கருகு பிறையாய் முடித்தபிறை யருகே
யெருக்கடவியா
யடரா வெருக்கினிடை யடராயிருக்குதமரருகே கடுக்
கைமலரா

இலையார் கடுக்கைமல ருகே நகைத்தபலி தலையாய்
விரித்த சடையாய்
இலையார் மடக் கொடிதன் மணவாளனைப்பரவு
மிசையா தமிழ்க்கரசுநீர்
நிலையா நிலைக்கருகு மலராய் மலர்க்கருகு ஞிமிறாய்
ஞிமிற் கருகுமா
நிழலாய் நிழற்கருகு வளையாய் வளைக்கருகு மணியாய்
மணிக்கருகுவேள்
சிலையாய் விளக்கமிகு பிரமாபுரத்ததிப சிறுதே ருருட்டி
யருளே
திருவான வட்டிநிறை திருஞான மெய்க்குழவி சிறு
தேருருட்டி யருளே 10

ஆக பருவம் பத்துக்குக் கவி 100.

**Colophon:**

பிரமோதூத௵ ஆவணிமீ 2வ. வாத்தியார் ந. லத
மயி......கா செட்டியார் மகன் கிருஷ்டிணனுக்கு சம்பந்
தப்பெருமாள் பிள்ளைத் தமிழ்ப் படிப்பித்து முற்றும்.

ஓதிய வாயி லொருவாய்த் தெர்கைதன்னை
யாறினல் மாறி யமர்ந்திருந்த வப்பொருளை
யஞ்சினு லாய பயன் களைத் தோன்றுமே
துஞ்சா வலகு நிலை. இச்செய்யுள் எண்சுவடியில் சதுர
வாயிலுள்ளது.

---

299. No. 447 திருஞான சம்பந்தர்.
பிள்ளைத்தமிழ்.
ஏடுகள் 49; Lines 4—5 in a page.

இதுவும் முன்பிரதிபோன்றது. இதில் சிறுதேர்ப்பருவந்தவிர ஏனைய பருவங்களிருக்கின்றன. சிற்சில ஏடுகள் சிதிலமாய் இருக்கின்றன. முதலேட்டில் பின்வரும் செய்யுள் எழுதப்பட்டுள்ளது.

துறக்கவொண் ணுவைவர் சூழலிற் சூழ்வார்
துறக்கவொண்ணு வீடு துறப்பேன் — மறக்கதிர்வேல்
மாபுரத்தார் வேவ மலைவளைத்தார் மைந்தரெழு
கோபுரத்தார் நூபுரத்தாள் கொண்டு.

---

300. No. 534 (*a*) திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ்.

ஏடுகள் 48; Lines 4—5 in a page.

இதுவும் முற்பிரதிபோன்றது. ஆரம்பத்தில் பத்து ஏடுகள் மிகச் சிதைந்தும் மற்றவைகள் இருபுறமும் முறிந்தும் இருக்கின்றன.

---

301. (*b*) கபிலை வாசகம்

Lines 4 in a Page

இது, ஒரு பசு தன்னை உண்ணவந்த புலியினிடம், தன் கன்றுக்குப் பால்கொடுத்து வருவதாக உறுதி கூறிச் சென்று, அவ்வாறே திரும்பிவந்து தன்னை இரையாக ஏற்றுக்கொள்ளுமாறு வேண்ட, புலிமறுக்க, அவ்விரண்டும் வாதாடுவதைக் கண்ட நாரதர் அதனைச் சிவபெருமானிடம் தெரிவிக்க, ஈசன் எதிர்வந்து அவைகளின் சத்தியம் தவறுமைக்கு மெச்சி அவற்றிற்கு நற்கதி அளித்தனர் எனக் கூறும் வசன நூல். இந்தப் பிரதியில் நூல் பூர்த்தியாக இல்லை.

**Beginning:**

காசிகாண் டத்தில் கபிலையிட வாசகத்தை
யாசு மதுரமுடன் யான்பாட—வாசி

மயிலேறு கந்தன் வடபத்தி ரத்தில்
கயிலையில்வா ழைங்கரனே காப்பு.

உத்தரபூமி காம்பிலிநாடு கங்கையாற்றுக்கு வடகரையிலே தெய்வநாயகபுர மென்று ஒரு அக்கிராரமுண்டு. அந்த அக்கிராரத்தில் குடிவிளங்கிறு னென்று ஒரு ஆயனுண்டு. அந்த ஆயன் அக்கிராரத்தில் ஊர்க்காலிலே நானூறு அஞ்ஞூறு பசுக்களுண்டு. அந்தப் பசுக்களை அந்த ஆயன் உதையகாலத்திலே கறந்து விட்டுப் புல்லுள்ள விடங்களிலே நிறுத்தி யிந்தப்படி சமாதானமாக இரட்சை பண்ணிக்கொண்டு வருகிற காலத்திலே ஒருநாள் பசுக்களை நல்ல மேச்சலுள்ள விடமென்று விந்தமான காட்டிலே ஓட்டிப் போனுன்.

**End:**

கேட்க வாராய் என்கண்மணியே நான்.........ச்சே திகைதப்பி ஒரு காட்டுக்குள்ளே போனேன்.........
வேங்கைப்புலி என்னை மறித்துக்கொண்டு அந்த வேங்கைப்புலிக்கு ......... ஆணையிட்டு உனக்கு ஊட்டக் குடுத்து வருகிறே னென்று ஆணையிட்டு வந்தேன்.

---

### 302. NO. 448 சத்தியஞான பண்டாரம் பிள்ளைத்தமிழ்.

ஏடுகள் *30*; Lines 7 in a page.

இது திருவாரூரிலிருந்த சத்தியஞானபண்டாரத்தின் மீது பாடிய பிள்ளைத்தமிழ். இவர் தமிழில் தசகாரியஞ் செய்த களந்தை ஞானப்பிரகாசருக்கும் சிவப்பிரகாசத்திற்குஉரை இயற்றிய ஞானப்பிரகாசருக்கும் ஆசிரியராவர். இவர்க்கு மாசிலாமணித் தேசிகர் எனவும் பெய

ருண்டு. செய்யுள் நடை மிகச் சிறந்தது. இந்தப் பிரதி யில் நூல் முழுவதும் இருக்கின்றது. ஆனால் தலைப்புகள் சிதைந்திருக்கின்றன. ஆசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை. அச்சிடப்படவில்லை.

**Beginning :**

[கார்கொண்ட] கரடமுழுமன...ந்தொழுகுங் கடாம்
புகர் மருப்பணிபெறக்
கண்ணுதற் பரமன் புயத்திற் படர்ந்து...டவரைய
கட்டிற்
சீர்கொண்ட தவளவெண்பிறையுடுத்தொகையொடுஞ்
செம்முகில் கிடந்துநீலத்
திரணறும்பு...வ தென்னவிளை யாடுமொரு சிந்துரத்
தைத்துதிப்பாம்
பார்கொண்ட பல்லுயிர்கள் சிவசமய மல்லாது பரசமய
வாரியிற்போய்ப்
படியாது சரணத் திருத்தோணி காட்டியொரு பர
முத்தி வீடளிக்கு
மேர்கொண்ட சைவசித் தாந்தகுரு தேசிகனை யெழுது
புகழாரூரனை
யென்னுயிர்க் குயிரான மாசிலாமணியையின் றேத்து
சொற்றமிழ் தமையவே (1)

* * * *

கண்ணிற் சிறக்குமா கமமுணர்ந் தினியதெசகாரியந்
தமிழினிற்செய்
களங்தைவருஞானப்பிர காசனுலகத்தவர்கள் கருதரு
சிவப்பிரகாசம்
பண்ணிற் சிறக்குமுரை யெழுதுமன் பூரவனி பரவு
ஞானப்பிரகாசன்
பகரரிய விருவருந் தலைவணங்கக் கருணை பாலிக்கு
மொரு குரவனே

யெண்ணிற் சிறக்குமுயர் முத்தலத்தினு முதன்மை
யீதென வெடுத்திசைக்க
வெவ்வுயிர்க ளெவ்வுரு வெடுக்கினுஞ் சாரூப மெய்து
விக்கும் புதுமைசேர்
மண்ணிற் சிறக்கும் புகழ்க்கமலைநகர்மேவு மான
பூஷணன் வருகவே
வளவர் வளநாடவர் சிவசமய பரிபால மாசிலாமணி
வருகவே.

* * * *

**End :**

இறையுந்திகிரி முகுந்தனு மறியா வீசன் குருமயமா
யிருநில முய்ந்திட நார..................னை
நிறையுங் கருணையி னியதி முடித்து நிமலனை வந்தித்தும்
நிகரரி தாகிய விரத மிழைத்தும் நித்தி
.........கங்கைபடிந்து மன்னம் வழங்கியுமே
யருளிய வருமைத் திருமக னனுதின மன்பருளத்தி
யுறை ...............ருட்டுக சிறுதேரே [னுள்ளே
யுத்தம வித்தக சத்திய ஞானி யுருட்டுக சிறுதேரே.
கார்வாழி யந்தணர்கள் .........தழைத்துவாழி
கமலைவள நகர மொடு மேனைவள நகரமுங் கமலமயி
லோங்கி வாழி
சீர்வாழி......செந்தமிழ்க்கிளைத்து வாழுந்
தென் சோழவளநாடு வாழி குடகங்கிளர் திருப்
பொதிய வெற்புவாழி
யேர்வாழி.........டிருநீறு மியல்புபெறு மஞ்செழுத்து
மெப்போதும் வாழிகவி நாவலர்கள் வாழி முருகின்
னறையுயிர்க்குமி
...................கேசர் வாழி நற் சைவம் பெருத்து வாழி
சந்ததமு மெய்ப்புகழ்த் தொண்டர்குழு வாழிசத்திய
ஞான.........

சத்திய ஞான பண்டாரத்தின் பேரிற்
பிள்ளைத் தமிழ் முற்றும்.

---

303. No. 449 முத்துக் குமாரசுவாமி
பிள்ளைத் தமிழ்.
ஏடுகள் 55; Lines 5 in a page.

இது வைத்தீச்வரன் கோவிலில் கோவில் கொண்டு வீற்றிருக்கும் முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ். இதனை இயற்றியவர் குமரகுருபர சுவாமிகள். இக் குமரகுருபரர், பாண்டியநாட்டில் ஸ்ரீ வைகுண்ட மென்னும் கைலாச புரத்தில் வேளாளர் குலத்தில் பிறந்தவர். ஐந்து வயதளவும் ஊமையாக இருந்து திருச்செந்தூர் முருகக்கடவுளது திருவருளால் பேசுந் திறம்பெற்றுக் கந்தர் கலி வெண்பா முதலிய பிரபந் தங்களைப் பாடியவர். தருமபுர ஆதீனத்து மாசிலாமணித் தேசிகரை ஞானசிரியராகக்கொண்டவர். இவருடைய காலம் மதுரையை அரசாண்ட திருமலை நாயக்கர் காலம். அதாவது பதினேழாவது நூற்றுண்டாகும். செய்யுள் நடை மிகச் சிறந்தது. இதில் நூல்முழுவது மிருக்கிறது. அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning :**

அத்தி முகத்
துத்த மனை
நித்த நினை
சித்த மே

சாற்றரிய காப்புச்செங் கீரைதால் சப்பாணி
மாற்றரிய வெண்முத்தம் வாரானை—போற்றரிய
அம்புலியே சிற்றிலே ஆய்ந்த சிறுபறையே
பம்பு சிறு தேரோடும்பத்து.

பொன்பூத்த குடுமிப் பொலங்குவட் டிமவான் பொருப்
பிற் பிறந்து தவளப்
பொழிநிலவு தவழுமுழு வெள்ளிவே தண்டத்தோர்
போர்க்களிற்றைப்புணர்ந்து
தென்பூத்த பாட்டளி துதைந்தபைங் கூந்தற் செழும்
பிடி பயந்தளித்த
சிறுகட் பெருஞ்செவிக் குஞ்சரக் கன்றினிரு செஞ்
சரணை யஞ்சலிப்பா
மின்பூத்த சிற்றிடைப் பேர்மரக் கட்கடவுள் வேழங்
கடம் பொடுபடா
வெம்முலைக் கோடுகொண் டுழுதுழுதுழக்க முகை
விண்டு தண்டே ன்றுளிக்குங்
கொன்பூத்த தெரியற் கடம்பணி தடம்புயக் குருசிலைப்
பொருசிலைக்கைக்
குமரனைக் கந்தபுரி முருகனைப் பரவுமென் கொழிதமிழ்க்
கவி தழையவே(1)

* * * *

கங்கைமுடி யடிகட் கொர் கண்ணுயிருத்தியக் கண்ணி
னுண் மணியிவன்காண்
கலைகள்சில நிறைதிபின் குறைதியிவ னென்றுமொண்
கலைமுழுதும் நிறைய நின்றான்
எங்குமிர வோனெனத் திரிதியிவ னடியவ ரெவர்க்குமிர
வினையொழித்தா
னிருநிலத் தங்குரிக் கும்பயிர் வளர்த்தியிவ னெவ்வு
யிரும் வாழச்செய்தான்
பொங்கமுத மமுதா சனர்க்குதவினையிவன் புத்திமுத்தியு
மளித்தான்
• புவனம் படைத்தவிவ னின்னின்மிக் கானெனப் புகல்
வதோர் பொருளன்றுகா

ணங்கண்மறை யோலிட் டரற்றநின் றவனுட னம்புலி
யாடவாவே
யழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுட னம்புலி
யாடவாவே.

**End :**

கள்ளவிழ் நறுங்கொடிகள் கமுகிற் படர்ந்துபூங் கற்பகத்
தும்படர்தலாற்
காமன் பெருஞ்செல்வ மன்னவர்கள் குழுமியக் கமு
கின் கழுத்திலார்த்த
வொள்ளொளிய செம்மணிப் பொன்னூஞ்சல் பன்முறை
யுதைத்தாட வாடுந்தொறு
மொண்கமு கொடுந்துணர்ப் பைங்கற்பகக்காடு
மொக்க வசை யத்தலையசைத்
தள்ளிலை யலங்கல்வே லெம்பிரானைப்பாடி யாடுகின்ரு
ரெனத்தா
மலர்மாரி பொழிய பொற் கற்பகத் தெய்வமவ் வம்
பொன்மலர் மாரிதூர்க்குந்
தெள்ளுதமிழ் விரிபுனற் காவிரித் திருநாட சிறுதேருருட்
டியருளே.
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமரசிறுதே ருருட்
டியருளே.

ஆக 100

**Colophon:**

பிரமோதூத-ஹு புரட்டாசி-மீ 2-உ வீரைமட, பட்டுக் கோட்டையிலிருக்கும் வாத்தியார் நாராயண செட்டி தீராவினை தீர்த்தார் தையலார் நல்லத்தம்பி ஆபதுத்தாரணர் புத்திரன் கோனேரி ரெகுநாத செட்டி யார் மகன் பொன்னப்பனுக்குத் திருச்செந்தூர் முத்துக் குமாரர் பேரில் பிள்ளைத் தமிழ் படிப்பித்து முற்றும் ஆறுமுகன் துணை. தாலும் நல்லவள் துணை.

குறிப்பு :

திருப்பாதாள ஈசன் தோத்திரமாக மூன்று செய்யுட்கள் எழுதப்பட்டுள்ளன.

---

304. No 452A முத்துக்குமாரசுவாமி
பிள்ளைத்தமிழ்.

ஏடுகள் 36; Lines 5—8 in a page.

இதுவும் முன்பிரதிபோன்றது. நூல்முழுவதுமிருக்கிறது. சிற்சில இடங்களில் சிதிலமாயிருக்கிறது. 36வது ஏட்டில் திருப்புகழில் ஒரு செய்யுள் எழுதப்பட்டுள்ளது.

---

305. No. 220 சிவயோக நாயகி
பிள்ளைத்தமிழ்.

ஏடுகள் 41; Lines 4—5 in a page.

இது, திருப்பெருந்துறையில் (ஆவிடையார் கோயிலில்) வீற்றிருக்கிற சிவயோக நாயகியம்மை பிள்ளைத்தமிழ். பெண்பாற் பிள்ளைக்கவிக்குரிய பருவங்களில், கழங்காடற் பருவமும் ஒன்றெனினும், அதனை விடுத்து நீராடற் பருவத்தைக்கூறுவதுபெருவழக்கு. இப்பிள்ளைத்தமிழில், அவ்வாறன்றிக் கழங்காடல் கூறப்பட்டிருக்கிறது. ஆசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை. இந்தப்பிரதியில் இந்நூல் முழுவதுமிருக்கிறது. இது, அச்சிடப்பட்டுள்ளது.

**Beginning :**

வல்ல சிவயோக மன்னும் பெருந்துறைவாழ்
நல்ல சிவயோக நாயகிமேல்—சொல்லிப்
பரசுவற்கப் பிள்ளைப் பருவத் தமிழ்க்கங்
கரசுவற்கப் பிள்ளையே காப்பு.

முகிலாண்ட வெற்பரசன் முதுதவஞ்செய் வா[வி]
  முண்டகப்பச் சிளங்கதிர்போல் முளைத்தபூம் பாவை
நகிலாண்ட மோகினியாய் நன்முகுந்தற் கிளைய
  நாரணியைச் சிவயோக நாயகியைப் புரக்க
துகிலாண்ட கொடியாடத் தோகைமயில் நடிக்குஞ்
  சூளிகையு மாளிகையுஞ் சூழ்ந்த பெருந்துறையில்
அகிலாண்டங் கடந்தசீ ரன்றெருமா னிடனுக்
  கங்குருவாய் வந்தளித்த நங்குருவா னவனே 1

**End :**

ஆறு(மி) சூழ்புவி வானமாமழை ஆறுவாவிகள்பா
  யார நீர்வயல் சேரவேலிளை சாலிசேர் பயிர்சால்
மேழி காவலர் நீதிமாமனர் வேத வேதியரான்
  மேலையானவர் சாலை பாலையும் வேணிசேர் பிறையார்
வாழு மூவர்பா வாதவூரர் சொல் லான
  மாமணி வாசகாதியு மோர்
ஊழி நாள்பெற வாழி வாழிய ஊசலாடுகவே
  யோக நாயகி யேக நாயகி யூசலாடுகவே 100

பொன்னூசல் முற்றும்.

**Colophon :**

ஆங்கிர-ஞு ஆடி-மீ 17-உ ஆவுடையார் பிள்ளைத் தமிழ் மாசிலாமணி எழுதி முடிந்தது. ஹரி ஓம் நன்ருக.

---

306. No. 551 சிவயோகநாயகி பிள்ளைத்தமிழ்

ஏடுகள் 25 ; Lines 5—8 in a page.

இதுவும் முன்பிரதி போன்றது.

---

## 307. No. 453 சிவயோகநாயகி பிள்ளைத்தமிழ்.

ஏடுகள் 29; Lines 6—8 in a page.

இதுவும் பின்பிரதிபோன்றது.

**Colophon :**

பிரமோதூத-ஸு மார்கழி-மீ 12-உ திருப்பெருந் துறை யோகனுயகியம்மன் பிள்ளைத் திருனுமம் படித்து நிறைந்தது விமலராசக் கோன் குமாரன் லட்சுமணன் பிள்ளைத் திருனுமம் குருந்த மூலக் குருவே துணை. யோகனுயகி யம்மன் துணை.

---

## 308. No. 452 (b) வீரவேலாயுத சுவாமி பிள்ளைத்தமிழ்.

ஏடுகள் 45; Lines 5 in a page.

இந்நூலில், தரங்கை நகர் எனவும் அலையெறிதரங் கபுரம் எனவும் காணப்படுவதால், இது தரங்கம்பாடி யில் கோயில்கொண்ட வீரவேலாயுத சுவாமி பிள்ளைத் தமிழ் என்று தெரிகிறது. செய்யுள் நடை சிறந்தது. 93 செய்யுட்களே இருக்கின்றன, இது அச்சிடப்பட் டுள்ளது. ஆசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை. 1, 9, 10. 15, 28 ஏடுகளில் பாதியேயுள்ளன. 17. 39, இரண்டாக முரிந்துள்ளன; மற்றைய ஏடுகளிலும் சிதிலம் அதிகமாயிருக்கிறது.

**Beginning :**

சீர்பூத்த வுந்திச் செழும்போதில் நான்முகச் சிறைவண்
டிருந்து வேதத்
தெள்விளி யெடுத்துலகு பதினுலு நல்கத் திருந்தளி
கள்பூத்து நிற்குங்

கார்பூத்த கொண்டற் கனிந்ததிரு மேனியெங்
கண்ணனைப் பண்ணுலாவுங்
கனியிதழ்க் கொன்றையந் தீங்குழற் பவளவாய்க்
கடவுளைக் கைகுவிப்பாங்
கூர்பூத்த செங்கட் கருங்கயற் செந்துவர்க் கொவ்வை
வாய்க் கவுரியிமவான்
குலக்கொடி மடப்பிடி தன் வயறுளைந் தீன்றசெங்
குமரனைக் காந்தள் சூட்டுந்
தார்பூத்த பன்னிரு தடம்பொற் குவட்டிலிரு தனதடக்
கொடிகள் படரத்
தண்ணளி சுரக்குந் தரங்கை வடிவேலனைச் சந்ததங்
காக்க வென்றே

* * * *

கூறும் புவனம் படைத்தளித்துக் கொளுவி யொடுக்கும்
புத்தேளிர்
குறையுற் றிரந்து சூர்க்கொடுமை கூறவருளு
மமையத்தே
சீறுங் குழந்தைப்பசி கொள்ளித் தேளிற் சினவ
வயிறெக்கிச்
செவ்வாய்ப் பவளத் திதழ்பிதுக்கித் தேம்பிக் கமலக்
கண்பிசைந்து
வீறுஞ் சிறுபுன் குரல் நெரிந்து விம்மியழலுங் கவுரி
யனல்
மிதித்தாள் போலக் கடிதோடி விரும்பி யிடுக்கிக்
கண்டுடைம்பத்
தேறிச் சுரக்குந் திருமுலைப்பால் தெவுட்டவுண்டாய்
தாலேலோ
செல்வத் தரங்கநகர் புரக்குஞ் சேயே தாலோ
தாலேலோ.

கற்பகக் கொம்பிற் கனிந்தொழுகு மழகுவளர் கானக்
குறத்தியவடன்

காதற் கியைந்து குழனீவிப் புணர்ந்தினிய
கலவியமிழ் துண்ணும் ஞான்றிற்
பொற்புறக் கொங்கைத் தடங்குங் குமக்கலவை
புளகமொடு தீட்டி. வாட்டும்
பொருபடைக் கட்டுணைக் கஞ்சனமு மிட்டுநுதல்
பொட்டுமெதிர் நின்றுதீட்டி
விற்பொலியு மென்கவுட் கனிகளை நெரித்திடும் வேலை
நன்னுதலி லொப்பும்
வெண்டரள மணிநகைக் கொப்புஞ் செழுங்கமல
மென்முகத் தொப்புமாக்கி
யற்பினிற் கைபுணைய வல்லவன் னிவனுட னம்புலி
யாடவாவே
யலையெறி தரங்கைவரு வீரவேலவனுட னம்புலி
யாடவாவே

* * * *

**End :**

துப்பரும் பொற்பிலகி வெயில்விட் டெறிக்குமணி
யுமிழ் கதிர்க் கற்றைமாடத்
தொள்ளொளிச் சாளரத் தண்ணித் திலக்கோவை
யொன்றேடொன் றெற்றுமோசை
யிப்பெருங் கற்பகப் பொன்னகருமின்னகர்க் கிணையுரு
தென்ன அண்ணுந்
தெல்லொளிப் பகுவாய் திறந்துகல கலவென்றி
ரைத்துச் சிரித்தல் மானுந்
தப்பருஞ் செய்குன்று மணிமாளி கைக்குலந் தமனியச்
சிகரி புரிசை
தரணிதல மெங்கு ந் தண்டமுக டுச்சியுந் தடவிப்
பொலிந்து சுடருஞ்
செப்பருங் கண்ணொளி பரப்புந் தரங்கையாய் சிறுதே
ருருட்டி யருளே
திருமருக அமரேசர் பரவவளர்[குமரேச சிறுதே
ருருட்டி யருளே]. 93

## 309. No. 454 குலோத்துங்க சோழன் பிள்ளைத்தமிழ்.

ஏடுகள் 5; அபூர்த்தி Lines 8 in a page.

இது, விக்கிரம சோழன் (கி. பி. 1118-1135) மகனாகிய இரண்டாங் குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ் சரித ஆராய்ச்சிக்கு இன்றியமையாத நூல்களுள் ஒன்ருகும். இதனை இயற்றியவர் ஒட்டக்கூத்தர். இது அச்சிடப்படவில்லை. இதில் கடைசி ஏடும் முரிந்த நான்கு துண்டு ஏடுகளும் இருக்கின்றன.

**Beginning :**

சங்கோ விடும்படை கிடந்துதிடும் படுகள.........
பாவுத்தர குருக்கள்பல யோகத்தனி தனிபெறப்
பொங்கோ......தன ந்தருமனேற வொரு
போயேறியக் குரிசில் பெ...தேராழியுய்த்தினிதவன்
செங்கோனடத்த வொருமுட் கோல் பிடித்தவன்
செங்கீரை யாடியருளே
சேரா பெருங் கவிதை வீரோதையா...யடியருளே...7

**End :**

பாடிய பொய்கை களவழி கேட்டுப்பழம்படியே
யடி படிந்து
வாடியுண்...றையனை சிறைவிடு மன்னவ னொரு
திருமருகன்
கோடியர் புலவர் விறலியர் பாணர் குல கிரிகளுங்
குறை நிறையத்
தேடிய நிதியம் குலொத்துங்கசோழ னுருட்டுக
சிறுதேரே 7

குலோத்துங்க சோழன் பிள்ளைத் தமிழ் முற்றும்.

310. No. 455 கமலாலயம்மன் பிள்ளைத்தமிழ்.

ஏடுகள் 48; பூர்த்தி Lines 6—7 in a page.

இது திருவாரூரில் எழுந்தருளி இருக்கின்ற கமலாம்பிகை பிள்ளைத்தமிழ். நூல் முழுவதும் இருக்கிறது. ஆசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை. அச்சிடப் படவில்லை.

**Beginning :**

பொன்பூத்த கோட்டுப் பொருப்பிற் சுவைபெருகு புத்த
முதம் வைத்ததென்னப்
பொழிநிலவு புரையும் புகழ்பெருகி யோர்கொடு
புக்குநின் றிலங்கலென்னத்
தென்பூத்த நெடுமரூர் பொருபா ரதந்தீட்டித்
திணிசயிலம் நட்ட தென்னச்
செம்பவள வொளிததும் படுக்கலிற் கலைமாது சேர்ந்
தொளி படைத்ததென்ன
நன்பூத்த வெண்ணிலவு தவழுஞ் சடாமகுடம் நளினகர
மைந்து நால்வாய்
நதியொழுகு மும்மத மிருசெவிகொள் ளொருவேழ
நளினவடியஞ்சலிப்பாம்
மின்பூத்த சிற்றிடைக் கருணைகரம் பெருகு விழிமயிற்
பேடுவெற்பின்
விளங்கிவளர் கமலையுமை யிசைபாடு கொழிதமிழ்
விரிநிலந் தழையவென்றே.

ஒளிருநீல கண்டரிடத் துழையைப் பிடித்துச் சடிலமிசை
யுகுந்து கிடந்த வறுகரிசி யுலவா விதழி நறைவிரவி
யளியி னுண்ண மிகவழங்கி யலையாக் கங்கை நீர்வாரி
யடுத்துப் பருகத் தனியளித்தே யங்கை யுடலின்
மிசைநீவி

மிளிருங் கண்ட நித்தலத்தை வீக்கி வேலன் விளையாட
விளங்கும் வள்ளி தனைக்குறித்து விளைத்த தெனவே
சேடிமார்
வளைய நின்றே யுரைப்பமகிழ் கமலை வாழ்வே வருகவே
மழுவாட் படையார்க் கானந்தம் வழங்கு முமையே
வருகவே.

**End :**

முத்துப் பொழிநிலவு மேலேறி வெண்மதி முத்துட
னளாவி நிற்ப
மூரிவெண் ஞெளியெலாம் வடிவுகொண் டுரைதலின்
மொய்த்தொ ளிர்வளை யொலிப்ப
நத்துத் தரிக்கின்ற மாயவன் றரிமணிக ஞயக நகில
மீதே
நடுங்காத வெற்பருவி மணிதவழந் திடுவதின் னன்
குறவழகு காட்டப்
பத்திவளர் சேடிமார் சுற்றிநின் றருகுசெய் பணிகளின்
மகிழ்ந்து காப்பப்
பாதபங் கயமலரி னேசம்வைத் தடியவர் பணிவதற்
குளமகிழ்ந்தே
புத்தியும் முத்தியுந் தருங்கருணை யாழியே பொன்னூச
லாடியருளே
புகழ்வளரு மாரூரர் மகிழ்பரா சக்தியே பொன்னூச
லாடியருளே.

குறிப்பு :

இதனைப் பிரதி செய்து வேறு 8 ஏடுகள் கடைசியில் கோக்கப்பட்டுள்ளன.

---

### 311. No. 456 திருச்செந்தூர் பிள்ளைத்தமிழ்.

ஏடுகள் 26; பூர்த்தி. Lines 5—9 in a page.

இது திருச்செந்தூரில் எழுந்தருளி இருக்கின்ற முரு

கக்கடவுள் பிள்ளைத்தமிழ். இதனை இயற்றியவர் பகழிக் கூத்தர். இவர் சேது நாட்டைச் சேர்ந்த சன்னசிக்கிராமம் என்னும் ஊரில் தர்ப்பாதனன் என்னும் வைணவ அந்த ணர்க்குப் புத்திரர். அவ்வூரில் கோயில் கொண்டுள்ள ஐயனுர் பெயர் பகழிக்கூத்தராதலால் இவர்க்கு அப் பெயர் வழங்கலாயிற்று. நடைமிகச் சிறந்தது. இந்நூலா சிரியரது காலமுதலியவை தெரியவில்லை. சிற்சில இடங் களில் மட்டும் சிதைந்துள்ளது. இது அச்சிடப்பட்டி ருக்கிறது.

**Beginning :**

அத்தனையும் புன்சொல்லே யானுலும் பாவேந்த
ரெத்தனையுங் கண்டுமகிழ்ந் தெய்துவார்—முத்தி
புரக்குமரன் றந்தகந்த புண்ணியன் முந்நான்கு
கரக்குமரன் பிள்ளைக் கவி.

செந்தமிழ்க்கு வாய்த்ததிருச் செந்திற் பதிவாழுங்
கந்தனுக்குப் பிள்ளைக் கவிசெய்தான்—அந்தோ
திருமாது சேர்மார்பன் தெர்ப்பாதனனன்
தருமால் பகழிக்கூத் தன்.

அரிய நல்லற மாற்றினேன் றன்னிலும்
புரிதி யென்பவன் காப்பவன் புகலிரு வருக்கும்
பெரிய நற்பலன் பதின்மடங் கென்றனர் பெருநூற்
குரிய மாந்தர்கள் தீவினை வழிக்குமீ தொக்தும்.

பூமாதிருக்கும் பசுங்களபப் புயபூ தரத்துப் புருகூதன்
போற்றக் ககன வெளிமுகட்டுப் புத்தேள் பரவப்
பொதியமலைக்
கோமா முனிக்குத் தமிழுரைத்த குருதே சிகனைக் குரை
கடற்குக்
குடக்கே குடிகொண்டிருந்த செந்திற் குமரப்பெருமா
டனைக்காக்க

தேமா மலர்ப்பொற் செழும் பொகுட்டுச் செந்தாமரை
யில் வீற்றிருக்கும்
தேவைப் படைத்துப் படைப்புமுதற் சேரப்படைத்
துப் படைக்கு முயி
ராமா றளவுக் களவாக வணைத்துந் தழைக்கும் படிகருதி
யளிக்கும் படிக்குத் தனியே சங்காழி படைத்த பெரு
மாளே.

**End :**

தக்கபூசனைச் சிவமறை யோர்பெருந் தான நாயகர்
தம்பேர்
திக்கனைத்து மெண் முதலிமையோர் தெய்வத் தேவ
ராய்த் திருமேனி
மிக்கமாலைகை தருபவரடியவர் மின்னார் சமையத்தோ
டொக்க வாழ்கெனச் செந்தில்வாழ் கந்தனே யுருட்டுக
சிறுதேரே
மருநாண் மலர்ப்பொழிலுடுத்த தடமெங்கு மலைவாய்
கொழித்தெறியு முத்தை
வண்டலிடு மெக்கர்புடை சூழ்ந்திருச் செந்தில் வரு
மயில்வாகனக் கடவுளெங்
குருநாத னொரு தெய்வ யானைதன் பாகன் ......

குறிப்பு :

இந்தப்பிரதியில் முழுவது மிருக்கிறது ஆனால் நூற் பயனுரைத்த செய்யுள் மட்டும் இல்லை.

---

xv. மாலை.

---

312. No. 329 அகிலாண்டமாலை.

ஏடுகள் 14 ; Lines 3—4 in a page.

இது திருவானைக்காவில் கோயில் கொண்டுள்ள அகிலாண்டேச்வரி தோத்திரம். முதலேடு சிதைந்

திருப்பதால் ஆரம்பத்தில் 4 செய்யுட்களும் கடைசியில் சிதைவுற்றிருப்பதால் செய்யுள் தொகை இத்துணையென் பதும் தெரியவில்லை. இதில் 45 செய்யுட்களிருக்கின் றன. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. அச்சிடப்பட வில்லை. செய்யுள் நடை சிறந்தன்று.

**Beginning:**

அம்புவனக் காவை யகிலாண்ட ஞயகிமேல்
சொம்புவன ஞான்கவிதை சொல்லவே —சம்புவனச்
சீரார் கருணைச் செழுவீர்த்தி ரானருளும்
காராணை மாமுகத்தோன் காப்பு.

……… கவல்லி வரிசைவல்லி
தருவுறை வல்லிநின் தாடாண்மை வல்லி சதாசிவற்கு
திருவுறை வல்லி சிவகாம……………
………………………………………
அருமறை வல்லியெனும் காவை வாழகிலாண்ட
வளே. (1)

காவிக் கயல்விழி மாஞர் கலவியில் காதலிக்கும்
பாவிக்கு முந்தன் பதந்தரு வாய்பணி மாமதியின்
தாவிப் படர்சடை வெண்ணுவ லிசர்தந் தார்குழலே
ஆவிக் கொருதுணை யேகாவை வாழகி லாண்டவளே.

**End :**

மனத்துயர் தீரநின் பாதார விந்தம் வணங்கறியேன்
எனைத்துயர் தீத்தென்னை ரெட்சி……எழுபூதலத்தில்
வினைத்துயர் தீத்தருள் வெண்ணுவனீழலில் வித்தகனுர்
அத்தனுக் காரணங்கேகாவை வாழகி லாண்டவளே.

---

### 313. No. 335 திருக்கும்பேச்சுர மாலை
ஏடுகள் 18; Lines 5 in a page.

இது, கும்ப கோணத்தில் கோயில்கொண்டு வீற்றி ருக்கும் கும்பேச்வரர் தோத்திரப்பாவாகும். நூறு கலித்

துறைகளை உடையது. இந்தப்பிரதியில் 8-ம் செய்யுள் முதல் 44வது வரை செய்யுள் இல்லை. 98-ம் செய்யுளில் மூன்றடியே இருக்கின்றன. ஆசிரியர் பெயர் முதலி யவை தெரியவில்லை. அச்சிடப்பட்டிருப்பதாகத் தெரிய வில்லை.

**Beginning :**

பழமலையுந் தேன்மலையும் பாற்கடலு மொன்றாய்
விழவித் தயிர்க்கடலை விட்டிளக்கி—யழவளா
யெள்ளுண்டை பிட்டிட் டெடுத்திறுக வேயுருட்டிக்
கொள்ளுங் குடவயிற்றுக் கோன்.

சீலந் திகழு மடியார்தம முள்ளத்து ளேதிரிந்து
ஞாலந் திகழும் பொருளாகி யேநின்ற நன்மைத்தன்றி
வாலந் திகழு மதியைச் சடைவைத்த வாறதென்னே
கோலந் திகழு மதிள்சூழ் குடந்தை கும்பேச்சுரனே 1

விச்சை யில்லாது வினையும் தொன்றில்லை மேதினியோ
ரிச்சை யல்லாதுபின் னெய்துந் தரமில்லை யெப்பொருளு
நிச்சை யல்லாது நிகழப் படாநின்ற நீர்மைத்தென்னே
கொச்சை யிலாச்செந் தமிணீள் குடந்தைக்கும் பேச்
சுரனே 50

**End :**

துன்றிக் கரிமருப் பேலஞ் சுரிநா—சோதிமணி
குன்றத் தகில்பிற வெல்லா மலைகொண்டு கோலிவந்
தாங்
கொன்றிக் கரைபொரு காவிரி வாய்ந்திருந்த தென்னே
கொன்றைக் குழலுமை பங்கா குடந்தைக்கும் பேச்
சுரனே 97

நாட்டுறு பொய்யத் தனையு நவின்றுநன் மாற்கமென்பா
னீட்டுறு மெய்யரை நித்தித் திடைதடு மாறியவர்
மாட்டுறு சிந்தை யகலா வெறிளனை வாழ்விப்பையோ
கோட்........................................ 98

குறிப்பு :

இதன் கடைசியில் அடியிலுள்ள தனிப்பாடல் காணப்படுகின்றது.

மண்ணிடை நீரை நீரிடை நெருப்பை நெருப்பிடை
வளியை விளியிடை விண்ணை
விண்ணிடை யொளியை யொளியிடைக் களியைக் களி
யிடை யளியை யளியிடை வெளியை
யெண்ணுறு வெளியில் வெளியை யவ்வெளியினிடை
பரப்பாழையப்பாழிடைப்பாழை
நண்ணுறு முயிரை யறுதிவே றறுத்து நாடரும் பாழை
நண்ணினனே. 1

---

## 314. No. 336 பழனி மாலை.

ஏடுகள் 3; Lines 8 in a page.

இது, பழனியில் கோயில் கொண்டு வீற்றிருக்கும் முருகக் கடவுளின் மீது சிருங்கார ரசமாகப் பாடப் பட்டது. முப்பது கலித்துறைகளையுடையது. இப்பிரதி யில் நூல் முழுவது மிருக்கிறது. நூலாசிரியர் கொற்கை என்னும் ஊரினரெனத் தெரிகிறதேயன்றி பெயர் முதலி யவை விளங்கவில்லை. அச்சிட்டிருப்பதாகத் தெரிய வில்லை.

**Beginning :**

பயிலாதி யன்னம் பழனியில் மாலை பகருமுன்னீர்
துயிலாதி யாரணன் நாரணன் போற்றுஞ் சுடரொளிமுக்
கயிலாதி கையில் க...... ... ... ......
... ... ... ... ... ...... ... ... ... ... ... ... ... ...
ஆனைமா முகனை யாகுவா கனனை
ஞானமாய் நிதமும் நாடொறுந் தொழுமே

மிடியாற்கு மோதவிழ்ப்பாய் தேவர்கோன் சிறை
மீட்டதன்றி
படியாற்கு நீயும் பராசக்தி பாலன் பரங்கிரியில்
குடியாக்கு மெங்கள் குலதெய்வ மாக்குநின் கூறு
முண்மை
யடியாற்கு...ய பெருமான் பழனிக் கதிபதியே. 1

கொடிக்கொடி மின்னிடை வள்ளிபங்கா நின் குணத்தை
யெல்லாம்
படிப்படி கேட்டது மல்லா தெனைப்பெற்ற பாதகியார்
பொடிப்பொடி யாய்த்திட்ட நீயருள் வேண்டிப்
போதுடுக்கா
யடிக்கடி தான்வர லாமோ பழனிக் கதிபதியே. 3

**End :**

மாமா வெனுமையர் ஆபத்துக் காத்தவன் மைந்தனி
[கோமா]ன் தமிழ்க் கொற்கை யூர்காவலன் மிகக்
கூறுசெஞ்செற்
பாமாலை கந்தன் பழனியில் மாலை படிப்பவரே
தாமா புரந்தான் வாழ்வெய்து வாரிது தானுண்மையே 30

பாழனிமாலை எழுதி முற்றும்.

---

315. No. 338 அம்பிகை மாலை

ஏடுகள் 18; Lines 4 in a page.

இதுவும் மதுரை மீனாட்சியம்மன் தோத்திரம். இதனை இயற்றியவர் குலசேகர பாண்டியர் என்பதும் இது முப்பது கலித்துறைகளையுடையது என்பதும் 'பிடித்தாரைக்கட்டி' என்னும் ஈற்றுச் செய்யுளால் விளங்கும். இப்பிரதி சிற்சில இடங்களில் சிதிலமா யிருக்கிறது. இது தமிழ்ப் பள்ளிக்கூடங்களிலெல்லாம்

கற்கும் வழக்குடையது. இந்தப் பிரதியில் 28 செய் யுட்களே இருக்கின்றன. இது அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning :**

நடக்குந் திருவிளை யாட்டோ டறுபத்து நாலுஞ்சொக்க
ரடக்குந்தண் கூடலில் அம்பிகை மாலையை யாறுகவி
தடக்கும்ப கம்பச் சிறுகட் புகர்முகத் தாலவட்ட
முடக்குந் தடக்கை ஒருகோட்டு வாரண முன்னிற்கவே

திருவே விளைந்தசெந் தேனே வடியிட்ட தெள்ளமுதே
உருவே மடப்பிள்ளை யோதிம மேயொற்றை யாடகப்பூந்
தருவேநின் தாமரைத் தாளே சரணஞ் சரணங்கண்டாய்
அருவே யணங்கா சேமது ராபுரி அம்பிகையே 1

**End :**

பூண்டகை.........பொன்னடிக்கே
கூண்டகை சென்னிக் குவிக்க.........
நீண்டகை வேழம் பிடரேறி வட்ட நிலம்பு......
..................... யம்பிகையே. 28

---

316. No. 339 அம்பிகை மாலை.
ஏடுகள் 9; Lines 4 in a page.

இது முன்பிரதிபோன்றது. இந்தப்பிரதியில் இந் நூல் முழுவதுமிருக்கிறது. இது 338-ம் நம்பரைவிட சுத்தப்பிரதி. செய்யுள் முறையும் வேறுபட்டுள்ளது. நூலாசிரியர் பெயரும் நூற்பெருமையும் கூறும் செய்யுள் பின்வருமாறு :—

பிடித்தாரைக் கட்டி அணைத்தமு தூட்டிய பேயின்முலை
குடித்தாடு மாயன் குலசேகரன்வட குன்றைச்
சென்று(ண்டால்)

அடித்தான் வடித்தசொல் அம்பிகைமாலை அய்யாறுகவி
படித்தார்சொல் கற்பகக் காவும் பொன் னாடும்
படைப்பவரே

---

## 317. No. 341 பரமராசியமாலை,

ஏடுகள் 38 ; Lines 4—5 in a page.

இது, சிதம்பர நடராஜப் பெருமான் தோத்திரம். இதனை இயற்றியவர் குருநமச்சிவாயர் என்பவர். இது நடராஜரை பரமராசியன் எனத் தோத்தரிப்பதால் பரமராசிய மாலை எனப்பெயர் பெற்றது. இவர் தமது குருவின் கட்டளையின் வண்ணம் சிதம்பரத்தை அடைந்து நடராஜரை தெரிசித்தபோது அப்பெருமான் இவரது குருவாகிய குகை நமச்சிவாயர் உருவாகக் காட்சி கொடுத்தருளக்கண்டு இதனைப் பாடினர் என்பர். இது *100* செய்யுட்களையுடையது, இந்தப்பிரதியில் 96 செய்யுட்கள் இருக்கின்றன. இது அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning :**

சமையமிரு மூவகையிற் சார்ந்தோர்க்கும் சிந்தை
யமையநெறி யோர்தமக்கும் ஆர்க்கும்–உமையவள்தன்
பூமானைச் சந்ததமும் பொன்னம் பலத்தாடுங்
கோமானைக் கொண்டே குலா.

திருவணு மலையிற் குகைநமசிவாய தேசிகவடிவமா
யிருந்துங்
கரவனு மடியேன் சென்னிமே லுனது கழலிணை
வைத்த வாறுணரேன்
விரவு நாரியரைப் புதல்வரைப் பொருளை வேண்டிய
வேண்டியாங்கனைத்தும்
பரிவினுற் புகழ்வார்க் களித்திடும் பொன்னம்பலவனே
பரமராசியனே 1

**End :**

குகைதனிற் சோண கிரியினிலுற்றும் குருபரனுகி
வீற்றிருந்து
வகைபெறக் கருணை யாலெனக்...வெலுமையை
மறப்பனே வடியேன்
நகைகொடு புரமூன் றெரித்த நாயகனே நல்லசீ
ரடியவர் தமக்குப்
பகைஞரு முறவராக்கிடும் பொன்னம் பலவனே
பரமராசியனே 96

---

318. No. 343 நமச்சிவாயமாலை.

ஏடுகள் 32 சிதிலம் அபூர்த்தி; Lines 3—4 in a page.

இது சிவபெருமான் தோத்திரம். இதனை இயற்றியவர் சிதம்பரம் குருநமச்சிவாயதேவர். குகை நமச்சிவாய தேவரது மாணுக்கர். இந்தப்பிரதியில் முதல் ஐந்து ஏடுகள் சிதைந்திருத்தலால், பதின்மூன்ருவது செய்யுள் முதல் தெரியக்கூடிய நிலைமையில் இருக்கின்றன. இது அச்சிடப்பட்டுள்ளது.

**Beginning :**

சிவ சிவா நமசிவாயம் 12

அக்கெலா மணிந்து கொண்டு
அரியயன் சாம்பற் பூசுஞ்
சொக்கரே செக்கர் மேனித்
துணைவனே நமசிவாயம். 13

கம்பவெங் களிறுரித்த
கச்சியேகம்பர் செம்பொன்
னம்பலந் தன்னிலாடு
மண்ணலே நமசிவாயம். 14

**End :**

மேருவில் வளைய வாங்கி
விண்ணவர் சாலநோக்கப்
போரினில் விடை மீதேறும்
புனிதனே நமசிவாயம். 90

மைக்கடல் கடந்தமாயன்
மாமலர் தேவன் பூணுந்
திக்கெலாந் தேடிக்காணுத்
தேவனே நமசிவாயம். 91

---

xvi. இரட்டைமணி மாலை.

319. No. 682 மூத்த நாயனார்
(*a*) இரட்டைமணிமாலை.
ஏடுகள் 165 ; Lines 7—8 in a page

இது, விநாயகர் தோத்திரம். வெண்பாவும் விருத்தமும் தம்மில் விரலி அந்தாதியாகவரப் பாடப்பட்டிருத்தலின் இரட்டைமணிமாலை யெனப் பெயர் பெற்றது. 20 செய்யுட்களையுடையது. இதனைச் செய்தவர் கபில நாயனார். அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning:**

திருவாக்குஞ் செய்கருமங் கைகூட்டுஞ் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கு—முருவாக்கு
மாதலால் வானோரு மானை முகத்தானைக்
காதலாற் கூப்புவர்தங் கை.

கைக்கும் பிணியொடு காலன் றலைப்படு மேல்வையினு
லெய்க்குங் கவலைக் கிடைந்தடைந்தேனெமை
நாவலைக்கும்

பைக்கு மரவரை யான்றந்த பாய்மத வானைபத்துத்
திக்கும் பொலிநுதற் கட்டிரு வாளன் திருவடியே.

**End :**

நல்லார் பழிப்பி லெழிற்செம் பவளத்தை நாணநின்ற
பொல்லா முகத்தெங்கள் போதக மேபுர மூன்றெரித்த
வில்லா னளித்த விநாயக னேயென்று மெய்மகிழ
வல்லார் மனத்தன்றி மாட்டாளிருக்க மலர்த்திருவே.

---

### 320. (*b*) திருவாலவாய் திருத்தாண்டகம்.
### Lines 9—10 in a page.

இது தேவாரம் அடங்கன் முறையில் ஒரு பகுதி யாகும். இதனை இயற்றியவர் திருநாவுக்கரச நாயனார்.

**Beginning :**

முளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி
  முதிருஞ் சடைமுடிமேல் முகிழ் வெண்டிங்கள்
வளைத்தானை வல்லசுரர் புரங்கள் மூன்றும்
  வரைசிலையா வாசுகிமா நாணுக் கோத்துத்
துளைத்தானைச் சுடுசரத்தாற் றுவள நீற்றுத்
  தூமுத்த வெண்முறுவ லுமையோ டாடித்
திளைத்தானைத் தென்கூடற் றிருவாலவாய்ச்
  சிவனடியே சிந்திக்கப் பெற்றே னானே.

**End :**

தூர்த்தனைத் தோண்முடிபத் திறுத்தான் றன்னைத்
  தொன்னரம்பி னின்னிசைகேட் டருள்செய்தானைப்
பார்த்தனைப் பணிகண்டு பரிந்தான் றன்னைப்
  பரிந்தவர்க்குப் பாசுபத மீய்ந்தான் றன்னை
யார்த்தனை யடியேனுக் கன்பன் றன்னை
  யளவிலாப் பல்லூழி கண்டு நின்ற

தீர்த்தனைத் தென்கூடற் றிருவாலவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றே னே.

திருச்சிற்றம்பலம்.

---

321. (*c*) திருவாலவாய்
திருவிருக்குக்குறள்
Lines 9 in a page.

இது, தேவாரம் அடங்கன் முறையில் ஒரு பகுதியாகும். இயற்றியவர் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்.

**Beginning :**

நீல மாமிடற்
றால வாயிலான்
பால தாயினார்
ஞால மாள்வரே. (1)

ஞான மேழுமா
மால வாயிலான்
சீலமே சொலீர்
காலன் வீடவே. (2)

**End:**

அடிக ளாலவாய்ப்
படிகொள் சம்பந்தன்
முடிவி லின்றமிழ்
செடிக ணீங்குமே. (11)

திருச்சிற்றம்பலம்.

---

322. (*d*) பட்டினத்தார்பாடல்.
Lines 6 in a page.

இது ஞான சாத்திரங்களுள் ஒன்று. இதனை இயற்றியவர் திருவெண்காடர் என்கிற பட்டினத்துப் பிள்ளையார்.

**Beginning**

வரிக்கோல வேல்விழி மாஞரை மாமலர் மாதினுக்குச்
சரிக்கோது வேன்எழுத் தஞ்சுஞ் சொல்லேன் தமியே
னுடலம்
நரிக்கோ கழுகு பருந்தினுக்கோ வெய்ய நாய்தனக்கோ
எரிக்கோ விரைதனக் கின்னதென்பாய் கச்சியே
கம்பனே.

**End :**

........................................யேறப் பிறந்த
கருவாயா ரிட்ட கலகம்—திருவாரூர்த்
தேரோடு வீதி..............................க்கீர்
நீரோடுந் தாரைக்காய் நீர்.

---

323. (*e*) திருவெம்பாவையும்
திருப்பொன்னூசலும்.
Lines 6—7 in a page.

இவை திருவாசகத்தின் பகுதியாகும். இவற்றினை இயற்றியவர் மாணிக்கவாசகர்.

**Beginning :**

ஆதியு மந்தமு மில்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாட்டடங்கண்
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்மறந்து
போதா ரமளியின்மேல் நின்றும் புரண்டிங்கன்
ஏதேனு மாகாள் கிடந்தா ளென்னே யென்னே
யீதேயென் ரேழி பரிசேலோ ரெம்பாவாய். (1)

**End :**

தெங்குலவுஞ் சோலைத் திருவுத்தர கோசமங்கைத்
தங்குலவு சோதித் தனியுருவம் வந்தருளி
யெங்கள் பிறப்பறுத்திட் டெந்தம்மை யாட்கொள்வான்

பங்குலவு கோதையுந் தானும் பணிகொண்ட
கொங்குலவு கொன்றைச் சடையான் குணம்பரவி
பொங்குலவு பூண்முலையீர் பொன்னூசலாடாமோ.

திருச்சிற்றம்பலம்.

---

### 324. (*f*) திருவூடல் (தேவாரத்திரட்டு)
Lines 5—6 in a page.

இது, அம்மை ஊடிக் கதவைத் தாழிட்டுக் கொள்ள அவ்வூடலைத் தீர்ப்பதற்காகச் சுவாமி சுந்தரமூர்த்தியை அம்மைபால் அனுப்புவதுபோலச் சிவாலயங்களில் நடைபெறும் ஒரு ஐதீகம். இதில் வசனமும் இடையிடையே தேவாரமும் விரவி வந்துள்ளன.

**Beginning :**

சுவாமியார் சுந்தரப்பெருமாணாயனார்க்கு அருளிப்பாடிட்டுத் திருவூடல் திறக்கவேணுமென்று பரிவட்டங் கட்டி அனுப்புகிறபோது சுவாமி சன்னதியிலே சுந்தரப் பெருமாணாயனார் வினவியோதின தேவாரம். பண் கொல்லி திருவிருத்தம்.

வங்கமலி கடனாகைக் காரோணத்தெம் வானவனே
யெங்கள் பெருமானொர் விண்ணப்பமுண்டது
கேட்டருளீர்
கங்கை சடையுட் கரந்தாய் கள்ளத்தை மெள்ளவுமை
நங்கை யறியிற்பொல் லாதுகண்டாயெங்க ணாயகனே.

**End :**

சூடினார் கங்கையாளைச் சூடிய துழனி கேட்டங்
கூடினாள் நங்கையாளு மூடலை யொழிக்க வேண்டிப்
பாடினார் சாமவேதம் பயமொளி பழன மொய்யா
ராடினார் காளி காண ஆலங்காட்டடிகளாரே.

குறிப்பு :

இதில் மேற்கண்ட இரண்டு தேவாரங்களையன்றி.

| | |
|---|---|
| 'பூண்பதோ ரிளவாமை' | 'உள்ளவ ரெனக்குறை' |
| 'ஒருத்திதன் றனை' | 'அன்பாலடி கைதொழ' |
| 'மங்கை வாணுதல்' | 'கற்றுர் பயில் கடனுகை' |
| 'பட்டிசைந்த' | 'கூறினுருமை தன்னெரு' |
| 'வீடின் பயனே' | 'கங்கைநீர் சடையில் வைக்க' |

என்னும் பாசுரங்களும் வந்துள்ளன.

தேவாரத்தினின்றும் தேர்ந்தெடுத்த அடியிற்கண்ட தேவாரப்பதிகமும் பிறவும் கோக்கப்பட்டுள்ளன. அவை வருமாறு :—

| | | |
|---|---|---|
| திருவாலவாய் | 'வீடலாலவாயிலாய்' என்னும் தேவாரப்பதிகமுடிய | |
| திருக்கேதாரம் | 'வாழ்வாவது மாயம்' | ,, |
| திருக்கழுமலம் | 'பிறையணிபடர்சடை' | ,, |
| திருவாரூர் | 'பருக்கையானை மத்தகத்து' | ,, |
| திருக்கோளிலி | 'நீள நினைந்தடியேன்' | ,, |
| திருக்கருப்பறியலூர் | 'சிம்மாந்து சிம்புளித்து' | ,, |
| திருமயிலாடுதுறை | 'ஏனவெயிருடாவொடென்பு' | ,, |
| திருக்காளத்தி | 'வானவர்கடானவர்கள்' | ,, |
| திருக்கருப்பறியலூர் | 'சுற்றமொடு பற்றவை துயக்கற' | ,, |
| தருக்கோடிகா | 'இன்றுநன்று நாளை நன்றென்று' | ,, |
| திருக்கோவலூர் | 'புடைகொள் கூற்றம்' | ,, |
| புள்ளிருக்கு வேளூர் | 'கள்ளார்ந்த பூங்கொன்றை' | ,, |
| தனித்திருத் தாண்டகம் | 'அப்பனீ அம்மை நீ' | ,, |
| திருப்பூவணம் தாண்டகம் | 'வடிவேறு திரிசூலம்' | ,, |
| திருவாரூர் தாண்டகம் | 'இடர்கெடுமா றெண்ணுதியே' | ,, |

| | |
|---|---|
| கங்கைகொண்ட சோழீச்சரம் திருவிசைப்பா | 'பரிந்த செஞ்சுடரோ' என்னும் பதிகத்தில் 6 செய்யுட்கள் |
| திருக்கயிலாயத் திருத்தாண்டகம் | 'பொறையுடைப்பூநீராய்' என்னும் பதிய முடிய |
| திருவாலவாய் | 'வேதியா வேதகீதா' ,, |
| திருமறைக்காடு | 'யாழைப்பழித்தமொழி' 6 செய்யுட்கள் |
| திருவலஞ்சுழி | 'என்னபுண்ணியஞ் செய்தனம் 5 ,, |
| திருவேம்பகம் | 'ஆலந்தானுகந்தமுதுசெய் தானை' 5 ,, |
| திரு நின்றியூர் | 'திருவும் வண்மையும்' 7 ,, |
| திருக்கயிலைமலை | 'வாள்வரி கோள்புலி முடிய |
| கோயில் திருத் தாண்டகம் | அரியானை யந்தணர்தம் சிந்தையானை ,, |
| திருவெண்ணெய் நல்லூர் | 'பித்தாபிறை சூடி' என்னும் பதிய முடிய |
| கோயில் | 'பனைக்கை மும்மதயானை ,, |
| திருவண்ணமலை | 'உண்ணமுலை யுமையாளொரு' ,, |
| திருவையாற்றுத் தாண்டகம் | 'ஓசையொலியெலாமானாய் ,, |
| திருச்செங் காட்டங்குடி | 'பைங்காட்டு மலர்ப்புன்னை' ,, |
| அம்பர்த்திருமா காளம் | 'பொங்கு பொன்னிறம்' ,, |
| திருக்காளத்தி | 'செண்டாடும் விடையாய்' ,, |
| திருச்செங் காட்டாங்குடி | 'நறைகொண்ட மலர்தூவி' ,, |
| திருவையாறு | 'விடகிலேனடி நாயேன்' ,, |
| திருக்காட்டுப்பள்ளி | 'வாருமன்னுமுலை மங்கையொரு பங்கினர் 5 செய்யுள் |

| | | |
|---|---|---|
| திருமயிலை | 'மட்டிட்ட புன்னையங்கானல்' பதிக | முடிய |
| திருவாரூர் | 'பவனமாய்ச் சோடையாய்' | ,, |
| குரங்காடுதுறை | 'கோங்கமே குரவமே' | ,, |
| திருவாலவாய்த் தாண்டகம் | 'மூத்தானை யெல்லார்க்கு முன்னே,' | ,, |

குறிப்பு :

இவைகளையல்லாமல் செவ்வந்திப் புராணத்தில் 2 ஏடுகளும் வாதவூர்ப் புராணத்தில் 8 ஏடுகளும் சிவ நாமமகிமை, சிதம்பர தோத்திரம், திருவாசகத்தில் அருட்பத்து, கோயிற்றிருப்பதிகம், நீத்தல் விண்ணப் பம், குயிற்பத்து, அம்மானையும் இருக்கின்றன.

---

## xvii. பன்மணிமாலை

---

325. No. 330 திருவாரூர்ப் பன்மணிமாலை.
ஏடுகள் 12 ;Lines 6—7 in a page.

இது திருவாரூர் தியாகராஜர் தோத்திரம். பல வகைப்பட்ட பாவினங்கள் விரவிவர அந்தாதியாகப் பாடப்படுவது பன்மணிமாலையாகும். நூறு செய் யுட்களையுடையது. இந்தப்பிரதியில் 60 செய்யுட்களே இருக்கின்றன. சில இடங்களில் சிதிலமாயிருக்கிறது. இதனை இயற்றியவர் இலக்கண விளக்கம் செய்த திருவாரூர் வைத்தியநாத தேசிகர் இது அச்சிடப்பட்டிருக் கிறது.

**Beginning:**

மின்மணி மாலையம்பொன் வீதியா ரூர்பெருமாள்
பன்மணி மாலைப் பனுவற்கு—முன்மணி
யேய்த்தவா தாவியுடலீறு செய்தோன் குண்டிகைநீர்
சாய்த்தவா தாவி சரண்.

வெண்பா

பூமேவு நாபியான் கரனுதை புண்டரிகந்
தாமேவு வாரையென்று சார்குவேன்—நாமேவு
காவாரூர் வீதிவிடங் கார்செயா துண்டமலர்க்
காவாரூர் வீதிவடங் கா............................................ 1

கலித்துறை

காவா யெனச்சிறு தெய்வந் தனைத்தினங் கைதொழுது
நாவாய் தழும்பப் புகழ்ந்தென் பயன்கதி நாடின்
முன்மைத்
தேவாயத் தேவுக்குங் கோவாய் மணிப்பொற்சிங் காத
னஞ்சேர்
பூவாய் மதிக்கண்ணி யாரூர்ப் பிரான்பதம் போற்றுமின்
னே.

**End :**

ஒண்ணுதலி பாகர்மறை யோது திருவாரூர்
வண்ணமுறு சித்திரமு மாதரெனி ஞடே
னெண்ணமிது சேரியரை யாரறிவர் மின்னே
பெண்ணமுத மேயடிய னேடென பிணக்கே..........60

---

326. No. 331 *(a)* திருவாரூர்ப் பன்மணிமாலை.
ஏடுகள் 37 பூர்த்தி; Lines 5 in a page.

இதுவும் முற்பிரதி போன்றதெனினும் முழுவதும் இருக்கின்றது.

**Beginning :**

மின்மணி மாலையம்பொன் வீதியா ரூர்பெருமாள்
பன்மணி மாலைப் பனுவற்கு—முன்மணி
யேய்த்தவா தாவியுட வீறுசெய்தோன் குண்டிகைநீர்
சாய்த்தவா தாவி சரண்.

பூமேவு நாபியான் காணுத புண்டரிகந்
தாமேவு வாரையென்று சார்குவே—ஞமேவு
காவாரூர் வீதிவிடங்கா. 1

* * * *

**End :**

தொண்டர்க் கெளிதாகுஞ் சூளா மணிமௌலி
அண்டர்க்குக் காண்டற் கரிதாகும்—விண்டருநூல்
சாற்றுகம லாலயர்தாந் தாதையென்றுங் கேள்வரென்றும்
போற்றுகம லாலயர்தாட் பூ. 100

**Colophon:**

பிங்களஞு ஆவணிமீ 20உ பன்மணிமாலை
ஆறுமுகம் எழுதி நிறைந்தது முற்றும்.

---

### 327. (*b*) சுப்பிரமணியர் பதிகம்
### Lines 4—5 in a page.

இதில் காப்புச் செய்யுளைத்தவிர 11 செய்யுள் இருக்கின்றன. ஏடுகளின் தலைப்புகள் சிதைந்திருக்கின்றன. அச்சிடப்படவில்லை.

**Beginning :**

நடக்கில் நிலமதிரும் நற்சிறகால் வீசி
யடிக்கில் லருவரைகள் நீரும்—இடைக்கழியில்
கந்தனு ரான கயிலா தன......மு மலையில்
மைந்தனுரேறு மயில்.

இலக்கிய முகங்க ளாறும் யே (ஏ) றிய மயிலும் வேலும்
தலமது வெடிக்கக் கூவுஞ் சாவலும் கடப்பந் தாரும்
அலையினிலுதித்த சோதி ஆனதோர் மேனி தானும்
நிலைபெற அடியேன் முன்னே நித்தலுந் தோன்ற
வேணும்.

**End :**

[நாளொடு] கிழமையில்லை நணுகிய பிணியு மில்லைத்
தோளொடு பாம்பு மில்லைச் சினத்ததோர் மிருக[மில்லை]
..................................வலியதோர் பேயுமில்லை
ஆளுடன் திரியவேண்டாம் அறுமுக மடியார்க் கெல்
லாம். 11

குறிப்பு :

முதற்பாட்டில் இடைக்கழியில் கந்தனுர் என் றிருப்ப தைக் கொண்டு இந்தத் தோத்திரம் திருவிடைக்கழி முருகன் தோத்திரம் என்றாகிக்கலாம்.

---

# VIII. தனிப்பாடல்.

---

328. No. 168 சிருங்காரபத்யம்.

ஏடுகள் 87; Lines 4 in a page.

இதில் சிருங்கார ரசமான பாடல்கள் எழுதப்பட்டுள்ளன. இதனைப்பாடியவர் அருணசல வாத்தியார். இதில் பக்க நம்பர் போடப்படவில்லை.

**Beginning :**

மொழிகின்ற முப்பத்து முக்கோடி தேவரு முத்தர்முதல்
சித்தரிஷி முக்கியமுள்ள

எழிலிலகும் நாற்பத்தி யெண்ணுயிரம் ரிஷியும்
யிருகை கூப்பி யிஷ்டம் வைத்து

விசையீச சாமியை நான் மேவியணைய
அரிவிழிச்சகியே கண்டழைத்துவாடி

**End :**

தேவாதி தேவன்வர சிந்தை மகிழ்ந்திடவே
சிங்கார லீலைகள் செய்யவேதான்

பாவாணர் பாமாலை பண்புடனணிந்திடும் பரமகுரு
என்னுடைய பங்கில்வந்து
.....................அரிவிழிச்சகியே கண்டழைத்துவாடி.

---

## 329. No. 457 அருந்தமிழ்த் திரட்டு.

## ஏடுகள் 107 ; Lines 4—7 in a page.

இதில், காளமேகம், ஒட்டக்கூத்தர் முதலிய பல புலவர்கள் பல சமயங்களில் பாடிய தனிப்பாடல்கள் இருக்கின்றன. அவற்றுள், அச்சிடப்படாத செய்யுட்களும் பல இருக்கின்ன்றன. இந்தப்பிரதியின் முதல் இரண்டு ஏடுகள் பாதியாக முரிந்து சிதைந்திருப்பதோடு மற்றைய ஏடுகளும் சிதிலமாயிருக்கின்றன.

**Beginning :**

மென்று விழுங்கி விராய்க்கழித்து நீர்த்தேட
லென்று விடியுமெனக் கேங்கொவே—அன்று
கருதார்புர மூன்றுங் கண்ணழலாற் செற்ற
மருதாவுன் பொன்னடிக்கே வந்து. 11

நெஞ்சடைத்த வேட்கை யெல்லாம் நீங்கி யிருவிழியும்
பஞ்சடைத்துள் ளாவிப் படுமுன்னே—செஞ்சடையின்
வெள்ளாரு வெந்நாளும் வேள்விப் புகையருு
நள்ளாரு வென்று நவில். 12

ஆடுங் கடைமணி நாவசை யாம லகிலமெல்லாம்
நீடுங் கொடையைக் கவித்தபிரா னென்பர் நித்தநலம்
பாடுந்தமிழ்ப்பெரு மாளொட்டக்கூத்தன் பதாம்புயத்தை
சூடுங் குலோத்துங்க சோழ னென்றே யென்னைச்
சொல்லுவரே 39

அயிலோ டரிக்கண்ணி யஞ்சன நீரென் றருவினையேன்
றுயிலோவிரைவா துடைகத் தெல்லாந் தொல்லை ஞால
முய்ய
வெயிலோ னெனவந்த விக்கிரம சோழன் விளங்கு
கொல்லி
மயிலோ வெனு...... கனவாயினும் வாய்க்கு மென்றே.
40

குட்டுகைக்குப் பிள்ளைப் பாண்டிய ஞரில்லைக்
குறும்பி யளவாய்க் காதைக் குறித்துத்தோண்டி
யெட்டினமட் டறுப்பதற்கு வில்லி யில்லை
யிரண்டொன்றாய் மயிரை முடிந் திறங்கப் போட்டு
வெட்டுகைக்குக் கவியொட்டக் கூத்த னில்லை
விளையாட்டோ தமிழ்தெரிந்து விரைந்துபாடல்
தெட்டுதற்குத் தமிழறியாத் துரைகளுண்டு
திகிலற்றுப் புலவரென்றுந் திரியலாமே. 80

செய்யும் வினையு மிருளு ண்பதுவும் தேனும் நறவு
மூனுங் களவும்
பொய்யுங் கொலையுமிழவுந் தவிரப் பொய்தீர றனால்
செய்தார் தமதூர்
கையுமுகமு மிதழும் விழியுங் காலு நிறமும் போலும்
கமலங்
கொய்யும் மடவார் கனிவாயதரங் கோபங்கடியுந் தீபங்
குடியே. 81

**End :**

வடித்திடும்துய்ய மதுரமே மயிலே மாமதி யொத்த நல்
முகத்தாய்
வனசமாமலர்மே லிருக்கின்றவன்ன மடநடைபோல்
நடையுடையாய்
நடித்திடும் பாதபங்கயு மெனக்கு நன்மையா யுதவிட
வேணும்
நான்மறைப் பொருளே நளினமாமலரால் நான்றுதித்
திறைஞ்சி நிற்றொழவே

கொடிக்கிடை நுடங்கும் சூற்றிடையாளே குங்கும மார்
பிஞ யென்று
கூறியேயுன்றன் குணமெலாம்புகழ் வேன்குஞ்சர
மாவுரி போர்த்த
குடிலையம் பொருளே கமலையம் பதியிற் குடியிருந்
தருளிட வருள்வாய்
பிடிநடைபயிற்றும் வடிநடைப்பெண்ணே
பெருமையாங் கமலை நாயகியே. 7

---

330. No. 619 வண்ணத்திரட்டு.
ஏடுகள் 34; Lines 4—5 in a page.

இது, சடையப்பமுதலியார் பேரில் பாடப்பட்ட வண்ணம்.

**Beginning :**

நீடுவிற் சுரும்பு மாரனைக் கடிந்து மானிடப்பிரபஞ்ச
மாயை யைத் துரந்து காரணத்திேைடு
நித்த சிவபத்திதரு தற்பரனை வஸ்துவை மனத்தினி
னிருத்தியோக
சாதனைக் கிசைந்து மாச னத்திருந்து தாள்வழுத்து
மன்பர் பாலருள் புரிந்து மனபத்திபெறு...
சத்துவ சுரித்த சிவ சித்த...சமயத்தை நிலையிட்ட
தேவன்
நீரினிற் கொழுந்து சோதிமெய்க்கெழுந்து வீழியிற்
பொலிந்து வாழ்சிவக் கொழுந்தி னிரு
பத்ம சரணத்தை யிதை யத்தினி னிறுத்தி யொரு பொற்
குடை நிழற்கீ ழுலகத்தையாளும்-வள்ளல் பாரிசுரவி
முகில் போலவே

* * * *

காவிமட்டலர்ந்த கால்வழிக்குரம்பின் வாவியிற் பரந்த
கேணியிற்...ங்கின் மீதகிற் கனகுளத்தின்
வழியிற்சிறு சுனைக்குள் வயலிற் கயல் குதித்து
முறிபட்டு நாளி
கோமளக் குரும்பை பாளையிற்ற ழைந்த தாழையிற்
சுகந்த வாழையிற் கரும்பி
லுடைபட்ட புனலிட்ட களைதத்தி மடைதத்தி யலைதத்தி
வயல்தத்தி வீசு
காரிகைக் குளந்தை வீரியப்பதங்கி நீரிலுற்பலங்கள்
வேறு பத்திவண்டு
சற்று தொடை பெற்ற தட வெற்பினிட முற்ற கொடை
கற்றுநடை கற்ற சடையப்ப பூபன்- எல்லைமேருகிரியில்
மடமாதரார்—ரு

**End :**

ஊறலிற் சுரந்த நீரெனப் பொதிந்த தானெனத்ததும்ப
மானடிக்குளம்பில்
அமுதக்கடல் குதித்த திவலைத்துளி தெறிப்ப வொரு
வர்க் கொருவர் சித்த மிதமற்ற போக
மாமெனத்திரண்டு மார்பு மொக்கழுந்து பார்வை சற்ற
டங்கு காளச...மிந்த
அவசக் கலைகலைத்த கலையைத் தெளியவிட்டு நினை
வறத் துயில் விழித்து விதிபட்டுலாவு
மோதியைக் கரங்களால் முடித்தவிழ்ந்த சேலைசுற்றி
மஞ்சமேடை விட்டிரங்கி
வெளிமுற்ற மணுகித்தன் முலைவெற்பி லணியொக்க
நகமிட்ட குறிதைத்த தெனவெட்கி நாணம் இவ்விகாரம
மளிமறவாததே. (க)

குறிப்பு :

இதுவன்றி வெங்கடேசுவரர், வெள்ளிச்செட்டி, விட்
டல்ராயச் சோழகன் இராமநாதர், இராமலிங்கர் ஆகிய

இவர்கள்பேரில் பாடப்பட்ட வண்ணங்களும் இதில் இருக்கின்றன.

---

231. No. 620(*a*)வராககிரி
வீர சின்னையன் வண்ணம்.
ஏடுகள் 12 ; Lines 5 in a page.

**Beginning .**

அகளத்தி சகளத்தி சிவசத்தி சமையத்தி.....................
ஆயி சதாநந்தி மாயி கலாதந்திரி மாலினி மாதங்கிசூலி
கபாலி
மகனைப் பன்னிருகைச் சண்முகனைச் சரவணைக்குள்
மணியைப் பணிவதற்கு வைப்பானதோளர்
வானவர் மேல்வந்து தானவர் போர்சிந்த மாவடி வாய்
நின்ற சூரனுமாள
அயிலைப் பொர விடுத்து மயிலைத்தனி நடத்தி அமரர்க்
குயிரளித்த கர்த்தாவை ஓதும்
ஆரண சாரங்கள் ஆகம சாரங்கள் பூரணமாய் நின்ற
காரண வேலை விசாலசிவ கிரியானைப் பரவுவார் (று)

**End:**

ஒருகிட்டமலர்மெத்தை நனைய கனக சப்பிரம் ஒருமிக்க
நனையப்பெருக்காறுபோல்
ஊறிய போகங் குபீரெனவே பொங்க வாசனையே
சென்று ரோசனை வீச
நயனக்கடை சிவப்பன் பவளக்கனி வெளுப்பன் உவரித்
தொழின் முடிப்பன் ஒப்பானபோது
போது மய்யாவென்பள் நானும் விடேன் வஞ்சி
தானும் விடேனென்று கூடியவிலை

ஒருவர்க் கொருவர் மிச்சம் ஒருவர்க் கொருவர் பட்ச
மொருவர்க் கொருவர் உச்சம் ஒப்பானதேசை
யோகமு மாமிந்திர போகமு மாமிந்த வாணுதலாள் தந்த
போக சல்லாபம் உல்லாச மறவேனெப் பொழுதுமே.
(க)

---

382. (*b*) சொக்கநாதர் வண்ணம்.
Lines 4—5 in a page.

**Beginning:**

கருத்துமடிய துயர்கள் கெடவரு கமலபரிபுர சரணி
திரிபுரை
கச்சுலாமுலை பச்சை நாரணி கற்றநாவலர் சொற்றபூரணி
உரககணபண நெளிய மணிமுடி யுதறு மயில் மிசை
மருவு குகனையும்
ஒற்றையானை மருப்பினனையு முற்றவாழ் வொடு பெற்ற
நாயகி
கவுரிதிரிபுரை ககனி யுமையவள் கமலை மலர்மகள் பரவு
மலைமகள்
கற்பகாடவி யுற்றவாணர் கருத்துண்மேவு கயற் கணு
யகி பாதகமல மலர் நினைகுவார்
கரடமதகரி யுரிவை யுடையினர் கயிலைமலை நிகர் தவள
விடையினர்
கற்றை வார்சடை யத்தராரணர் கப்புவேல் செறி அத்தர்
பூரணர்
மருவு மிரசத சபையுள் மதிகுல வழுதி மகிழ்தர நடன
மிடுபவர்
மட்டுலாவு கடுக்கைதாதகி மத்த மாறிவை வைத்த
வேணியர்
கனக வரையினர் பனகவரையினர் கமழு மறுகினர்
கமழு மறியினர்

கற்க நீளறு பத்து நாலு கலைக்கு நாயகர் சொக்க நாயகர்
—கூடல் நகர் மேவு களியரேம். வ

**End :**

கமல மென்பதுவிரல் வெதும்ப நடந்திளைப்பானோரோ
பாம்பியல்
விழிவிடும் புனல் வழி நணைந்து கடும் பெருக்காருமோ
துடர்ந்திடு
கலையினங்களோடெணை நினைந்தவ ரென்சொலிப்போனு
ரோ தெளிந்திலம் மனதியாசை கொடிதே. க

---

333. No- (*a*)பன்னூற்றிரட்டு.
ஏடுகள் 140 ; Lines 6— 10 in a page.

இதில் கம்பராமயணம், பாரதம், புறநானூறு, சிலப்பதிகாரம், சிந்தாமணி, குறள், பழமொழி, நாலடியார், பட்டினத்தார் பாடல், நைடதம், முதலிய பல நூல்களினின்றும் தேர்ந்தெடுத்துத் திரட்டப்பட்ட செய்யுட்கள் இருக்கின்றன. சிதிலமாயிருக்கிறது.

**Beginning :**

வண்மை யில்லையோர் வறுமை யின்மையால்
......யில்லை யோர்செறுன ரின்மையா
னுண்மையில்லை பொய்யுரையி லாமையால்
வெண்மை யில்லைபல் கேள்வி மேவலால்.

* * *

கடஞ்சுழிக்குங் கரிமருப்பு முத்தும் பொன்னுங்
காரகிலுஞ் சந்தனமுங் கலந்து பொன்னி
யிடஞ்சுழிக்கும் வலஞ்சுழிக்குள் ளிருப்பீரைய
மிடுவதுமக் கெப்படியோ விரண்டு காதும்

விடஞ்சுழிக்கு நாகத்தை யணிந்தீர் முன்னே
விழிசுழிக்கும் பூதத்தை விடுவீர் காக
முடன்சுழிக்குந் தலையோட்டி லிரப்பீர் மாத
ருயிர்சுழிக்கும் படிமறுகிலுலவு வீரே.

* * * *

சூட்டும் பரராசர் தோண்முடிமேற் செவ்வாளைத்
தீட்டும் பரராச சேகரா — வீட்டுபுகட்
சிங்கைக்கோ வேமகிழ்ந்து சேராநாட் சந்தனமென்
கொங்கைக்கோ வேதனையா கும்.

**End :**

சுந்திரனார் வாழியவர் சொற்றமிழுஞ் சூரியனார்
சந்திரனா ருள்ளமட்டுந் தான்வாழி—யிந்திரனார்
போத்திஞன் தென் முருகன் பூண்டி யன்று......
தேத்திஞன் வாழி தினம்.

---

334. (*b*) சுந்தரர் வேடுபறி.
Lines 5—6 in a page.

இது, சுந்திரமூர்த்தி நாயனார் கூடலை யாற்றூர் வழி யாகப் போன பொழுது, அவரிடத்திருந்த பொன்மணி முதலியவற்றைப் பூதகணங்களாகிய வேடர்களைக் கொண்டு பறிப்பித்து மீட்டும் சிவபெருமான் கொடுத்த ருளியதைக் கூறுவது. ஆசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை. அச்சிடப்பட்டுள்ளது.

காப்பு

**Beginning :**

சூடுந் தமிழ்ப்பெருமான் சுந்தரனார் வேடுபறி
பாடுந் தமிழ்க்கலிவெண் பாவுக்கு—நாடுஞ்

சிரத்திலஞ்சான் றன்னைத் திசைமுகத்தா னுக்கக்
கரத்திலஞ்சான் கையிலஞ்சான் காப்பு.

நூல்

பொன்பூத்த கொன்றைப் புரிசடையாய் பொற்சிலம்பின்
மின்பூத்த பாதிபச்சை மேனியாய்—முன்பூத்த
பைந்தா மரையான் பதம்போற்ற என்னிதையச்
செந்தா மரைக்கிருந்த செல்வனே.

End :

அறுத்துண்ட பிள்ளை அழைத்தளவி லோடி
சிறுதொண்டர் மு......த சீர்போல்—மறித்துவிட்டுப்
பின்காட்டு மூடலிலே பித்தனைந்த காதலற்கு
முன்காட்டும் பெண்கள் முலைத்துணைபோல்—வன்
காட்டில்
கண்ணீர் சொரிந்துபுனல் காணாத வேளையிலே
விண்ணீர் சொரிந்த விதத்தைப்போல்—எண்ணுமறை
வல்லான் பறித்த மணிபணி பொன்னுடை செம்பொ
னெல்லாங் கொடுத்தா னெனக்கு.
சுந்தரனார் வாழியவர் சொற்றமுழுஞ் சூரியனார்
சந்திரனா ருள்ளமட்டுந் தான்வாழி—யிந்திரனார்
போத்திரேன் தென்முருகன் பூண்டியான்.........
தேத்திரன் வாழி தினம்.

குறிப்பு :

இதில் பலபுலவர்கள் பாடிய தனிச் செய்யுளும் புறத்திரட்டினும் கொக்கோகத்தினும் நம்பியகப் பொருளினும் தேர்ந்தெடுத்த செய்யுட்களும், சீவகசிந்தாமணி யாப்பருங்கலக் காரிகை, சூடாமணி நிகண்டு முதலியவைகட்கு முதனிலைப்பெழுதிய சில ஏடுகளும் இருக்கின்றன.

## 335. No. 684 தனிப்பாடற்றிரட்டு.
### ஏடுகள் 76; Lines 3—7 in a page.

இதில் பற்பல சமயங்களிற் பற்பல புலவர் பாடிய பாடல்கள் திரட்டப்பட்டுள்ளன. அவற்றுள் அச்சிடப் படாத பாடல்கள் பல இருக்கின்றன.

**Beginning :**

வருமலைக்குந் தென்மலைக்கு மிருள்மலைக்கு வஞ்சியிவள்
வாட மாரன்
பொருமலர்ச் செவ்வாளிவிட்டா லிவள் வயதிலுளந்தரிக்
கப் போமோ சொல்லாய்
அரிமலைக்குஞ் சேதுவுக்கு மடங்காத கீர்த்திபெற்ற
வரசே நாங்கைத்
திருமலையே கூத்தனருள் தெள்ளமுதே பொதுவர்
குலச் செங்கண்மாலே.

**End :**

முந்த நாளந்தி நேரத்திலே யிந்தமுத்து மோகன
ரம்பையு நீயுமே
சொந்தம் போல் விளையாடிக் கூடினதுடுக்கைவாய்
கொண்டு சொல்லவுங் கூடுமோ
சந்திர மாவதனுவெங்கடாத்திரிதந்தபாலவழியவன்
சோதரா
மந்தரப்புயனே பையயர் கோத்திர மன்னனே வெங்கிட
மகிபாலனே.

குறிப்பு :

இத்துடன், கயிலாச நாதர் வண்ணமும், வேங்கட பதி வண்ணமும், மெய்க்கன் வண்ணமும், மன்னூர் நிரோட்டவண்ணமும் இருக்கின்றன.

**336. No. 690 (*a*) தனிப்பாடற்றிரட்டு.**
**ஏடுகள் *80*; Lines *4—6* in a page.**

இது பல புலவர்கள் பாடிய தனிப்பாடல்களின் திரட்டாகும். இதில் அச்சிடப்படாத பல செய்யுட்களும் இருக்கின்றன.

வள்ளற்கைத் தலமில்லா மானிடரைப் பாடியவர் வாசற் போந்து
தள்ளத்தள் ளுண்டடைந்த நோவெல்லாம் புலவீர்காள் சாற்றக் கேளீர்
உள்ளத்தி னன்பர் கண்ணீ ரூற்றவலஞ் சுழியில் வளர்ந்தொருகொம்போங்கும்
வெள்ளத்தியடியின்பா லிட்டத்தால் நமக்காறி விடுங் கண்டீரே. 1

தள்ளைக்கு மன்னமிடார் தமைக்காம தேனுவெனச் சாற் றிவீணே
கொள்ளைச்செந் தமிழுகுத்தால் மிடிபோமோ புலவீர் காள் கூறக் கேளீர்
வள்ளைத்தண் குழைகொளிரு பெண்ணையணை யொரு பெண்ணை வண்கைத்தஞ்சை
வெள்ளைப்பிள் ளையைப்புகழ்ந்தால் கறுப்புப் பிள்ளைக் கொடியாள் மேவிடாளே. 2

கருத்தெழுந் திரவெலாங் காமத் தீச்சுடர்
பொருத்தினு மிருவிழி பொருந்தக் காண்கிலேன்
வருந்திய தலைவரும் வன்னெஞ் சாயினு
ரொருத்தரு மில்லையென் னுயிரு நானுமே.

**End :**

கடஞ்சுழிக்குங் கரிமருப்பு முத்தும் பொன்னுங்
காரகிலுஞ் சந்தனமும் கலந்து பொன்னி

யிடஞ்சுழிக்கும் வலஞ்சுழிக்கு ளிருப்பீ ரைய
மிடுவதுமக் கெப்படியோ விரண்டு பாலும்
விடஞ்சுழிக்கு மரவத்தை யணிவீர் முன்னே
விழிசுழிக்கும் பூதத்தை விடுவீர் காக
முடன்சுழிக்குந் தலையோட்டி யிரப்பீர் மாத
ருயிர் சுழிக்கும் படிமறுகி லுலாவு வீரே. 58

---

337. (*b*) சோதிடநூல்.

Lines 7—8 in a page.

முதலும் கடைசியும் இல்லாதிருப்பதால் இது இன்ன நூலெனத் தெரிவதற்கிடமில்லை. இதில் நக்ஷத்திர இலட்சணமும் நட்சத்திரங்களைக் கொண்டு இரவில் நாழிகை பார்க்கும் விதமும் கூறப்பட்டுள்ளன. ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

தண்ணியனுள்.

சென்றவரு ஷத்துடனே ஆறுகூட்டிச்
சிறந்த ஏழிற்கழிச்ச மிச்சமும் மாசந்
தோன்றியவா ரந்தொட்டுச் சனிமட் டெண்ணி
திகழ்ந்த கதிரகத்திஅத் துகையொன் றுக்கு
ஒன்றியமா தத் துரைத்த தினத்தைக் கூட்டி
உயர்மாத தேத்தம் ஏழு ரெண்டிடத்தும் தள்ளித்
தோன்றி வரு பகலும் முதனுளிரவும்
தண்ணிய நாளெனச் சொல்லுவது.

**End :**

கேட்டை நான்கும் ஈட்டி போல
வாட்ட மில்லாக் குடமிரண் டாமே
மூல மஞ்சுங் கானம் போல
சாலுங் கும்பத்தி னுலே காலே

பூராடம் உத்திராடம் பொற்காற் கட்டில்
ஓரெட்டா மீனத்தேர் முக்கால் நாலேகால்
ஓணம் மூன்றும் உழக்கோல் போலக்
காணி லாடு மூன்றே காலே
அவிட்டச் சக்கரத் தாரும் ஏரெுன்று
தவிட்டில் சதையம் அதனில் ரெண்டேமுக்கால்
பூரட்டாதி உத்திரட்டாதி பொற்கால்கட்டில்
ஓரெட்டா மிதுனத் தொண்முக்கால் நாலரை.
ரேவதி ஆறும் பாடகம் போலப்
பார்புகழ் கடகத் தொன்றரை யாமே.

---

## 338. (*c*) திருவாய்மொழி.

Lines 7 in a page.

இது திருமங்கை மன்னன் இயற்றிய பெரிய திரு மொழியின் ஒரு பகுதி. அச்சிடப்பட்டுள்ளது.

**Beginning :**

செருவாளும் புள்ளாளன் மண்ணுளன் விண்ணுளன்
செருச்செய் நாந்தகமென்னு
முருவாளன் மறையாளன் ஓடாத படையாளன் வெழுக்
கையாளன்
இரவாளன் பகலாளன் ஏழுலகப் பெரும்புரவாளன்
என்னை யாளன்
திருவாள னினிதாகத் திருக்கண்கள் வளருகின்ற
திருவரங்கமே. 1

**End :**

திண்ணியதோ ரரியுருவாய்த் திசையனைத்து நடுங்கத்
தேவரொடு தானவர்கள் திகைப்ப விரணியனை

நண்ணியவன் மார்பகலத் தகிர்மடுத்த நாதன்
ஞடோறு மகிழ்ந்தினிது மருவியுறை கோயில்
எண்ணில்மிகு பெருஞ் செல்வத் தெழில்விளங்கு
மறையும்
ஏழிசையும் கேள்விகளு மியன்ற பெருங் குணத்தோர்
மண்ணில்மிகு மறையவர்கள் மலிவெய்து நாங்கூர்
வைகுந்த விண்ணகரம் வணங்குமட நெஞ்சே 31

---

339. (*d*) இராமபத்திர சுவாமி தோத்திரம்.

Lines 7— 8 in a page.

இதனைச் செய்தவர் பெயர் முதலியவை தெரியவில்லை.

ஸ்ரீராம ராமா செயம் ராம ராமா
அரி ராம ராமா அரராம ராமா
பரராம ராமா பதம் ராம ராமா
மயனராம ராமா மதன் ராம ராமா
அகில புவன லோக சகல வடிவா

* * * *

வளர்மச்ச கூர்மா வராக நரசிம்மா
உச்சிதா வாமனு உயர் பரசு ராமா
ரகுராமா பலபத்திர ராமா செய கிஷ்ணு
சிகமேவு கர்க்காவ தாரா தெசவ தாரா
ஆதி நாராயணு வேத பாராயணு

**End :**

என்னேதல் என் சூனியம் என் கொடுமை என்தீது
என்மிடிகள் இடர் செய்தே நின்மகிழ்தல் நின்புகழ்தல்
நின் வசியம் நின் பாதம் நின் சேர்வை யால்
ஞான மோதுங் கிருபையாளனே என்றும்
அரியோம் நமோ நாராயணு எந்தனுளமே.

முற்றும்.

---

## 340. (*e*) செந்தில் வேலவர் தோத்திரம்

Lines 7—8 in a page

இந்த ஏட்டின் தலைப்பில் 'இராமாயணக் கழினெடில்' என்றெழுதப்பட்டிருப்பினும் செய்யுள் தோறும், முன்னடிகளில் வேண்டுகோளும் ஈற்றடிகளில் இராமாயணக் கதைகளும் எடுத்துரைத்துச் 'செங்கண் மால் மருகா செந்தில்வாழ்முருகாதேவனே யமரர்தேசிகனே' எனமுடியும் மகுடத்தால், இது முருகர் தோத்திரம் என்று விளங்குகின்றது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இதில் ஒன்பது செய்யுட்கள் இருக்கின்றன. அச்சிடப்படவில்லை.

**Beginning :**

காரெனுங் குழலாள் திங்கள்சேர் நுதலாள் காவியமலரெனும் விழியாள்
கமலமா முகத்தாள் அமிர்தவாய் சுகத்தாள் கன்னி நற்க முகெனுங்கழுத்தாள்
மேரிணைப்பழித்து தன்னிலே மிகுத்து வேள்வரும் பவனியையடக்கு
விரகினை விளைக்கு முலையினுர்க் குணங்கும் விழலனையாளுந நாளுளதோ
பாரெனுமயோத்தி தசரதன் றனக்குப் பாலனுய் வந்தவதரித்துப்
பலகலை முனிவன் வேள்வியைக்காத்துப் பகையெனுமரக் கியைவதைத்து
சீர்வளரகலி சாபமே தீர்த்துச் சனகனுர் மகள் மணம் புணர்ந்த
செங்கண்மால் மருகா செந்தில்வாழ் முருகா தேவனே அமரர்தேசிகனே.

**End:**

அனுதினம் உலுத்தர் தங்கள் பாற்சென்று அவர்
தனைக்கற் பகக்கா வென்றும்
அங்கமா முகில் நீ துங்கவேள் மதனீ அண்டருக்கர
சனிநீ யென்றும்
பனுவலுமசை சீர்தனையது சிறக்கப் பாடியே பலன
தில்லாமல்
பரதவித்துனையே நினைத்தன னெனக்குன் பதமளித்
தாளு நாளுளதோ
மனுநெறி தழைக்க வேந்தராய் மவுலிவசிட்டர் தன்
கையினால் தரிக்க
வள்ளலாமிலக்குவன் பரதர் சத்துருக்கன் வானரத்
திறைகுகனனுமன்
தினகரன் மதில்சூழ் குலமன்னர் பணியத்திருவொடு
மயோத்தி வீற்றிருந்த
செங்கண் மால்மருகா செந்தில்வாழ் முருகா தேவனே
அமரர் தேசிகனே.

---

### 341 (*f*) தனிப்பாடற்றிரட்டு
Lines 5—6 in a page.

இதுவும் பலபுலவர் பாடிய தனிப்பாடல்களின் திரட்டு இதில், தாழிசை 50, வெண்பா 201, கலித்துறை 84, கலிப்பா 6 இருக்கின்றன. இவற்றுள் பெரும்பாலும் அச்சிடப்படாத செய்யுட்களே இருக்கின்றன.

**Beginning :**

தாழிசை

அருகு நந்தமர் வைகையாற்றிகழ் சங்கம் வீசுகையுடை
மையால்

ஆதரித்திடு கூடலாலுயராசை யம்பர மாகையா
விரவிணைப்பிரியாமையால் விட மன்ன மாக வருதலா
விரதிவேள் பகை யாகையாலுமை யிவளு மொத்தன
ளருள்செய்யீர்
பரவையின் கணடைந்து நாவலர்பின் செலப்புகழ
மேவியும்
பரசுபத்தியு நாகமீது பயின்று மானிட மாகியும்
மருதிடைப் புகலுற்று மண்டர் மனங்களிக்க நடந்து
நீண்
மாலுமாகிய சொக்கரே தமிழ் மதுரை மானகரீசரே. 1

வெண்பா.

இலகு புகழாறை ஏகம்ப வாணன்
அலகை வரும் வருமென் றஞ்சி—யுலகரிய
வானவர்கோன் சென்னியின்மேல் வண்ண
வளையெறிந்த
மீனவர் கோன் கைவிட்டான் வேம்பு.

கலித்துரை.

விடங்காட்டிக் கண்டத்திற் றேலுரி காட்டித் தம் மேனி
யிற்புற்
றிடங்காட்டி வாலை யொருபுறங் காட்டிவண் டேறு
மலர்த்
தடங்காட்டிய பொழிலாரூர்த்தி யாகர் தமது பொற்றாள்
படங்காட்டி யாடிநின் றுருல கேழும் பணியென்னவே.

கலிப்பா.

சமையுங் கோபுரந் தாங்கிய பாவைபோல்
தாரஞ் சுற்றந் தனையரைத் தாங்குவேற்
கிமையு நின்னயம் காணேன் வகுத்தநின்
இந்திர ஞால மெவர்க்குத் தெரியுமோ
சுமையும் வைத்திளைப்பாற வொட்டார் மிகுந்
துக்கமன்றிச் சுகமறியே னெனக்
கமையுமிந்தக் குடிவாழ்க்கை என்னம்மே!
அன்னமே தஞ்சையானந்த வல்லியே

## 342. (*g*) இராஜகோபாலர் திருவனந்தல்.
**Lines 6— 7 in a page.**

இது இராச கோபால சுவாமி திருப்பள்ளி எழுச்சி. இது 685ம் நம்பரின் உட்பிரிவாகிய *e*. போன்றது. இதில் அதைவிட சிலசெய்யுட்கள் அதிகமாகக்காணப்படுகின்றன.

---

## 343. (*h*) பதார்த்தகுணம்.
Lines 6 in a page.

இதில் பதார்த்தங்கள்களின் குணங்களை கூறும் 11செய்யுட்கள் இருக்கின்றன.

**Beginning :**

மருவிய அய்யம் பித்தும் வாதமுஞ் சுரமுந்தீரும்
பெருகிய போகமுண்டாம் பிறகிடு மிளமை மீளும்
கருகிய மேனி நீங்கும் காயமு மொளியுண் டாகும்
உருவமுந் திறமே யாகு மூர்க்குரு விச்சாறுண்ணே 1

**End :**

வாயு வடையாது வந்தபிணி சேராது
காய நெகிழாது கண்குளிரும்—ஓயாமற்
காரளகப் பெண்மயிலே கைகண்ட தித்தனையுஞ்
சீரகத்தைத் தின்ன தினம்.

குறிப்பு :

இன்னின்ன மாதத்தில் கிரகணம் வந்தால் இன்ன பலனுண்டாகும் என்றுரைக்கும் செய்யுள் எழுதிய ஏடு ஒன்று கடைசியில் கோக்கப்பட்டுள்ளது.

---

### 344. No. 691 தனிப்பாடற்றிரட்டு
### ஏடுகள் 44; Lines 3—5 in a page.

இதில் பலவகை கீர்த்தனங்களும் புள்ளிருக்கு வேளூர்த் தேவாரமும் இருக்கன்றன.

**Beginning :**

பல்லவி

நில்லேனே நம்பிக்கை சொன்னால் நில்லேனே

அனுபல்லவி

நில்லேனே நம்பிக்கை சொன்னால் வெல்லேனே உன்னிலுங்கல்வி
கல்லேனே உனக்குத்தாரஞ் சொல்லேனே விற்காமன் கணை
வெல்லேனே வுன்னுடன்கூட வல்லேனே நான் கூடியிதழ்
மெல்லேனே உன்னண்டைக் கொண்டு நில்லேனே.
நில்லேனே நம்பிக்கை சொன்னால்

இதுவல்லாமல் அடியில்கண்ட கீர்த்தனங்களும் இருக்கின்றன.

| | |
|---|---|
| ஆச்சுக்காணும் பேச்சுக்கென்ன | கஞ்சமால் தேடிய |
| | வேண்டாமிதெல்லாம் |
| வந்தாரிலையே பாங்கியே | செய்வதேது |
| காண நினை மனமே | ஒருநாளோ |
| அமையாதோ பட்டதெல்லாம் | நீதயவாய் |
| | வரக்காணேன் |
| பூலோக கயிலாயகிரி | எந்தத்திராணிகண்டு |
| நம்பினேனுன்னை | |

முதலிய கீர்த்தனங்களும் பலவகைப்பட்ட பாடல்களும் இருக்கின்றன.

**End :**

தையலா ளொருபாகஞ் சடைமேலா ளவளோடு
மைந்தேர்ந் துழல்வானே ரந்தணனு ருறையுமிடம்
மெய்சொல்லா விராவணனை மேலடி யீடழித்துப்
பொய்சொல்லா துயிர்போனான் புள்ளிருக்கும் வேளூரே.

குறிப்பு. சக்கரத்துடன் கருடமந்திரம் எழுதிய ஏடொன்றும் இருக்கின்றது.

---

345. No. 692 (*a*) தஞ்சைநாயகம்பிள்ளை பேரில் வண்ணம்.

ஏடுகள் 96; Lines 5 in a page.

இவர் திருவாரூரில் வேளாள மரபில் கல்வியிலும் செல்வத்திலும் சிறந்திருந்த ஓர் பிரபு. 1684-1710வரை தஞ்சையையாண்ட சகஜிராஜன் காலத்தினர். இதனை "வேரூரும் ஆலுதவும் விழுதென" என்னும் கீழேயுள்ள செய்யுளாலறிக.

**Beginning :**

அனகன் மேல்விழி நோக் குகன்றவர்
பனக பூஷண கூற்றுணந்தவர்
கங்கை தாதகி திங்கள் கூவிளை கொன்றவார் சடை யார் நெடுங்கட
கரியின் மீதுரி போர்த்த சங்கரர்
நடனமாயடி தூக்கு கின்றவர்
துங்கமான் மழு வங்கை மீதில்வி ளங்குசூல கபால கங்கணர்
அரிசு ராதிபர் போற்றவுந் திரு
மணவை மாநகர் வீற்றிருந்தவர்
நங்கையோர் திரு மங்கை நாயகி பங்கினர் சிவ ராமலிங்கரை
அம்பொனிரு பாதமலர் துதிசெய்வோன்.

**End :**

இறுகியோர் கொடி போற்றுவண்டிடை
பதறவே இருதாட் சிலம்புமு
ழங்கவேயிரு செங்கைவால்வளை யுங்கலீரென
வேபுலம்பிட
இணைவிடா தினியாச்சு தென்றுபின்
னுவரி லீலையி னுல் புணர்ந்துட
லுஞ்சிலீரென மிஞ்சி யேயமு தங்குபீரென வேளமுந்
துள
மிரைமேனியும் வெற்ப மென்பர
வசமு மாயிரு வோர்க்கு மிங்குயி
ரொன்ற தாமென முந்து போகமு மன்றில் பேடெனவே
கலந்ததை
என்றுறவந்துருகு மனமுமே.
வேரூரும் ஆலுதவும் விழுதெனவே உனது தந்தை
மேன்மையான
பேருர்தான் விளங்க மிகு பெருங்கிளையுந் தழைக்கவந்த
பேகனீகாண்
தேரூருஞ் செகராசர் செங்கோலை யுழக்கோலின்
செயலாற் காக்கும்
ஆரூர்வாழ் புழுகாச்சி யளித்த தஞ்சை நாயகமே அனகவே
ளே.

குறிப்பு :

இவ்வண்ணம் அல்லாமல் இத்தஞ்சை நாயகம் பிள்ளையின் பேரில் கட்டளைகலிப்பா, சந்தவிருத்தம், கலித்துறை, தாழிசை சிந்துக்களும் இருக்கின்றன.

---

346. (*b*) இராசைமுத்து வீரேந்திரர்
பேரில்பதம்

Lines 4—6 in a page.

இது, இராசமன்னர் கோவி லென்ற மன்னார்குடியி

விருந்த முத்து வீரேந்திரர் பேரில் சிங்காரபதம். ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

**Beginning :**

பல்லவி

ஆசை மிஞ்சு தேதோ அய்யா என்மேல் வாதோ

அநுபல்லவி

ராசைவாழ் முத்துவீரேந்திரா நகைமுக வசந்திரா

சரணம்

நேசம் பெருகுதே நிலவும் வருகுதே
பூசல் வளருதே போகந் தளருதே— ஆசை

**End :**

பாத்தேவன் தரும லோலன் எந்நாளும் மிகு
பைந்தமிட் கருனனு கூலன்
பங்கயத்திருமாது சேருமழசை லோலன்
மாராவதார வதார முத்துவீரரே நல்லசீரா.

---

347. (*c*) வீரராகவ முதலியார் பேரில் வண்ணம்.
Lines 4—7 in a page.

**Beginning :**

ஆதி யுருத்திரனுர் கயிலாச வெற்பை முன்னு
ளடியூடெடுத்த விடாசலப்புய வீரவிக்கிரம
ராவணேசுரன்

வாரண மெட்டுடனே
பொரு தேமருப் பொடியா
மணிநீல வச்சிர மேலெழுத்திய மார்பு தக்கிப
சேரியா றென

ஆதவனுக் கிணையா
யபிஷேகம் வைத்த மகா

மகுடா டவித்திரள் தூளிபட்ட சுரேச ரத்தனை பேரும்
வேரற வாளிதொட்ட சாபநெடுமால்.

**End :**

ஓதிம மிப்படியே
தனியே கிடக்குமதோ
ஒருநாளும் விட்டக லாத சொற்கிளி யோலமிட்டழு
தேத யாவுள

தாயை நினைத்தனளோ
தமரோ டுரைத்த னளோ
இவள் தானினைத்தறியாதபுத்தியி தார்சமைத்தனரோ
முன்னுளினி

லூழி விதிப்படி யோ
ஒருமாதருக் கியல்போ
அயலா ளொருத்த னுபாய மிட்டொரு பேதை
கைக்கொடு போனபாதகம்
ஏதெனச் சொல் வார்கள் பிறரே.

குறிப்பு :

இதில் மேற்கண்டவையல்லாமல் பற்பலதனிப் பாடல்களும் சகஜிராஜா பேரில் வாசுதேவகவி பாடிய சிங்கார பதங்களும் ரகுநாத பூபதிபேரிலும் தில்லையாடி சிற்றம்பல கவிராசர் பேரிலும் பாடப்பட்ட செய்யுட் களும் வைத்தீசுவரர் பதிகமும் முத்துக்குமாரசாமி பதி கங்களும், கலிங்கத்துப்பரணி கடைதிறப்பும் இருக் கின்றன. ஏடுகள் முறிந்தும் சிதைந்து மிருக்கின்றன.

---

**348. No. 695 (*a*) தனிப்பாடற்றிரட்டு.**
ஏடுகள் 88; Lines 4—5 in a page.

இதில் பலபுலவர்கள் பல சந்தர்ப்பங்களில் பாடிய

வெண்பா 30, கலித்துறை 16, விருத்தம் 14, அம்மானை 9, தாழிசை 10, சந்தவிருத்தம் 9, கலிப்பா 2 இருக்கின்றன. அவற்றுள் அச்சிடப்படாத செய்யுட்களுமிருக்கின்றன.

**Beginning :**

ஆரூரன் சன்னதிபோ லாரூர ளுலயம்போ
லாரூரன் பாதத் தழகுபோல்—ஆரூர்
மருவெடுத்த கஞ்சமலர் வாவிபோல் நெஞ்சே
யொருவிடத்தி லுண்டோ வுரை.

மஞ்சுமஞ்சுங்கைப்பரராச சேகர மன்னன் வெற்பிற்
பஞ்சுமஞ் சும்பதப் பாவைநல் லீர்படை வேள்பகழி
யஞ்சுமஞ் சுங்கட லஞ்சுமஞ் சுங்கய லஞ்சுமஞ்சு
நஞ்சுமஞ் சுங்கொலை வேலோவுமது நயனங்களே.

பண்காணுந் தமிழ்ப்புலவீர் இனத்தோடே யினஞ்
சேரும் பரிசே யல்லாற்
றண்காவி மலர்தடஞ் சூழ் காவிரிநாட் டொருபுதுமை
தன்னைப் பாரீர்
கண்காண நரையான்மேல் வெண்காடனினிதிருப்பக்
கண்டோமந்த
வெண்காட னிடப்புறத்தே பச்சையன்னங்
கலந்திருக்கும் விதங்கண்டோமே.

ஈசன் பசுவாய் ஏமனதன் கன்ருகி
வீசுபுக ழாரூரின் வீதிவந்தா ரம்மானை
வீசுபுக ழாரூரின் வீதிவந்தா ராமாயின்
காசளவு பாலு கறக்குமோ வம்மானை
கன்றை யுதைகாலி கறக்குமோ வம்மானை

**End :**

இந்துபார் தென்றல்பா ரெய்யுமதன் பூசலைப்பார்
சந்துபார் குங்குமம்பார் தடமுலைதள் ளாடுதல்பார்

உந்துபார் பாயலின்மே லுன்சமத்து மென்சமத்தும்
வந்துபார் சுந்தரா மாவலிவா ணுதிபனே.

---

349. (*b*) தியாகராசர் கழிநெடில்.
Lines 4—5 in a page.

இது, திருவாரூர் தியாகராசர் தோத்திரப்பதிகம். ஆசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை. அச்சிடப் படவில்லை.

**Beginning :**

தண்ணூர் மதியும் பகீரதியுஞ் சாந்த மெழுது திருத்
தோடுந்
தவிரா தணிமும் மாலிகையுந் தம்பேர் கொடுத்த
கறைத்தூசும்
பண்ணூர் தவளப் பாளிதமும் பதும ராகப் பலபணியும்
பசும்பொன் குயிற்று நவரத்தினப் பணிவாங் கதமு
மணிச்சிலம்பு
மெண்ணுடரவக் கிண்கிணியு மிழைத்த சுடர்ப்பூ
வாசிகையு
மிமைத்த வீர கண்டயமு மிணங்கு மிடங்க
டொறுந்தரித்துக்
கண்ணு ரமுத மயலிருக்கக் கனக வரியா சனத்திருக்குங்
கருணு நிதியே யாரூரிற் கண்டார் பிறவி காணுரே.

**End :**

வாணு ளிரந்து மவனிரங்க மலரோன் விதியா
திளைப்பாற
வகுத்த வகுத்த பல்லுயிருள் மருவும் பாவக் கதிசேரப்
பூணூர் முலையார் பல்லாண்டு போற்றி யிசைப்பப்
பதஞ்சலியும்
புலியும் பசுவும் முனிவருடன் போந்து பணிந்து
பணிந்தேகச்

சேனு டமரர் புடைசூழச் சிலையார் திருவா திரைநாளிற்
றிருவா சகப்பூந் தேன்பருகிச் செந்தா
மரைக்கண்ணனு மின்னங்
காணுதரவக் கிண்கிணிக்கால் காட்டி யரியா
சனத்திருக்குங்
கருணு நிதியை யாரூரிற் கண்டார் பிறவி
காணுரே. (10)

---

350. (c) குருநாத பூபதிபேரில் அட்டமங்கலம்.
Lines 4—5 in a page.

இது மாவையர்பதி குருநாதபூபதி மீது பாடப்பட்ட அட்டமங்கலம். அட்டமங்கலமாவது, இன்னுனைக் காக்கவென, கவி, தான் வழிபடுகடவுளை ஆசிரிய விருத்தத்தாற்பாடுவது. (பன்னிருபாட்டியல் சூத்திரம் 142) அச்சிடப்படவில்லை.

**Beginning :**

விண்ணவர் பரவ முனிவரர் வணங்க விரிஞ்சனுன்
மறையெடுத் திசைப்ப
விரைகமழ் துளவோ னடி மல ரிறைஞ்சி விழிகணீர்
ததும்ப நின்றேத்த
மண்ணவர் துதிப்ப மன்றினின் றுடும் வானவன்
நாடகம் பார்த்து
மகிழ்சிவ காம வல்லி நான்போற்றி வகுக்கும்
விண்ணப்பமொன் றுளதால்
நண்ணலர் வணங்கும் ராசபூ ஷணனை நராதிபர்
முகவசிகரனை
நயம்புரி ராம நாதன் முன்னவனை நாவலர்க்
குதவுமுத்தியப்பன்
புண்ணியவரத்தால் வருமயிலப்ப பூபதி துணைவனை
மாவைப்
புகழ் குருநாதபுரந்தரீகரனைப் பொற்புடனினிதுகாத்
தருளே.

**End :**

ஐங்கரற் களித்த அருளிய வணங்கே ஆறுமா
முகவனைப்பெற்ற
அண்ணலே யென்னை யாண் நாயகியே அமலையே
கமலையம் பதிவாழ்
சங்கரர் பங்கி லினிதுவீற் றிருந்து சகமொரு
மூன்றையுமீன்ற
...பானுமையே அடியேன் சாற்றும் விண்ணப்ப
மென்றுளதால்
மங்களராம நாதபூபதியூ மயிலப்ப பூபனுங் கீர்த்தி
மாவையம் பதியில் புத்திர மித்திராதி
வங்கிஷயாவையுந் தழைத்தோங்கி
செங்கதிர் மதிய முள்ள நாளளவும் சிந்தனை களித்து
வீற்றிருப்பத்
திகழ்குருநாதபூபனை நாளுந் திருவுள மகிழ்ந்து
காத்தருளே. (10)

---

351. No. 697 (*a*) தனிப்பாடற்றிரட்டு.
ஏடுகள் 38; Lines 4—8 in a page.

இதில் பலர் பாடிய பாடல்கள் திரட்டப்பட்டுள்ளன. அவற்றுள் அச்சிடப்படாதனவு மிருக்கின்றன.

**Beginning :**

எருத்திலே பவனிவரு மிரிஞ்சிபுரத் தான்றனையு
மெனையுஞ்சந்து
பொருத்திடுவா ரொருத்த ரில்லை தாயென்றால்
மாச்சரியம் பொருப்போவாழைக்.
குருத்திலே கிடந்திடினுங் கொப்புளிக்கும் பனிநீருங்
கொதிக்குமெந்த

னுளத்திலே கொழுந்துவிட்டு... குதீயென நின்றெரி
யுங் காமத்தீயே.

**End :**

ஏதப்பட் டாயினி மேற்படும் பாட்டையு
மெண்ணுதற்குப்
போதப்பட்டாயில்லை நல்லோ ரிடஞ்சென்று புல்லறி
வாய்
வாதைப்பட்டாய்மட மானுர்கண் மாய்கை வலையில்
வந்து
பேதைப்பட்டாய் நெஞ்சமேயுனைப் போலில்லை பித்த
னுமே.

352. (*b*) நவமணிமாலை.
Lines 4—5 in a page.

இது, தேவிமீது ஒன்பது கலித்துறையால் அமைந்துள்ள தோத்திரப்பா மாலை. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. அச்சிடப்படவில்லை.

**Beginning.**

நீணத்த வற்குஞ் சரோருகத் தோனுக்கு நின்மலர்க்குஞ்
சேணுற்ற வர்க்கு மெட்டாத பொற்ருளென் சிரத்தில்
வைத்தே
காணத் தவந்தந் தடிமை கொண்டா ளண்டங் காக்குநவ
கோணத் தவளவ ளேயென்னை யாளுங் குலதெய்வ
மே. 1

**End :**

படியிருப் பாளரன் பூசிக்க வார்பதஞ் சேர்நிதம்பக்
கடியிருப் பாளரன் கைத்தலத் தேயென் கருத்தினுள்ளே
படியிருப் பாக வமர்ந்து கொண்டேபர மானந்தமாய்க்
குடியிருப் பாளவளே யென்னை யாளுங் குலதெய்வ
மே. 9

---

## 353. (*c*) அங்கயற்கண்ணம்மை அடைக்கலப்பத்து.

Lines 5 in a page.

இது, மதுரை மீனாக்ஷியம்மை தோத்திரம். செய்யுள் தோறும் 'அம்மேயானுன் அடைக்கலமே' எனப் பத்துச் செய்யுளாற் பாடப்பட்டிருத்தலின், இது அடைக்கலப் பத்து எனப் பெயர்பெற்றது. ஆசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை.

சமைத்த வுடலை மெய்யென்று சாகப்பயந்து தடுமாறி
இமைத்து விழியாற் பிறப்பதன்றி யெண்ணு தெண்ணி
யிடையலுற்றேன்

... ... ... ... ... ... ... ...

அமைத்த காத லங்கயற்க ணம்மே யானுனடைக்
கலமே.

சாதிய ழிந்து மிடுக்கழிந் துஞ் சங்கையழிந்துஞ் சதுர
ழிந்து
நீதியழிந்து மறிவழிந்து நெஞ்சிலழிந்து நிற்கின்றேன்
ஓதியுணர்ந்த பெரியோர்க ளுறவே யுயிரே யெங்க
ளாதிமுதலே யங்கயற்க ணம்மே யானு னடைக்கலமே.

சூழ்ந்த வினைக்கு ளகப்பட்டுத் துள்ளித் துடித்துப் பரத
வித்து
வீழ்ந்து மிகவு மிகநடுங்கி வேற்றுமுகம் பார்த் தழுகலுற்
றேன்
தாழ்ந்த சடையார்க் கிடமாருந் தாயே கூடற் சங்கரியே
ஆய்ந்த பொருளே யங்கயற்க ணம்மே யானு னடைக்
கலமே. 6

**End :**

சோற்றால் தளர்ந்து மதிமயங்கி சோபம் பெருத்துப்
பீடையினால்
மாற்றான் கையி லகப்பட்ட மதலை போல மயக்குற்றேன்

பார்த்தா லிறங்குந்துணைகாணேன்- பாதாம் புயத்தி பரா
பரியே
ஆத்தாள் குறத்தி அங்கயற்கணம்மே யானு
னடைக்கலமே. 10

---

354. (*d*) செந்தில் வேலவர் தோத்திரம்.
Lines 5—6 in a page.

இது முருகர் தோத்திரம். இது 690ம் நம்பரின் உட்பிரிவாகிய (*e*) போன்றது.

---

355. (*e*) பஞ்சநதீசுரர் தோத்திரம்.
Lines 5 in a page.

இது திருவையாற்றில் கோயில் கொண்டுள்ள சிவ பெருமான் தோத்திரப்பா. அச்சிடப்படவில்லை.

**Beginning :**

ஒருபாதி பச்சையும் ஒருபாதி பவளமும் ஒருபாதி களபங்களும்
ஒருபாதி வெண்ணீறும் ஒருபாதி முல்லை நகை ஒருபாதி முளரி நகையும்
மருவார் மலர்க்கூந்த லொருபாதி யொருபாதி மலையளகபாரமுடியு
மையிட்ட கண்ணுமைக் கீற்றிட்ட கண்ணுமொரு வாழ்க் கண்ணரைக்கண்களும்
பொருவா ரணப்போர் புரிந்தமுலை யொன்றுமப் போர்த்தொழிலை விட்டதொன்றும்
பொன்னுடை யொன்றுடை மின்னுசை யொன்று மெதிர் போராடு மகுடமுடியும்

பரராசர் முடியிடறு பங்கயத்தாளுமென் பாவனைக்குள்
குள்ளாகுமோ
பஞ்சநதி முடிவைத்த பஞ்சநதிவாணனே பஞ்சாட்
சர ரூபனே. 1

**End:**

நெய்யொழுகு சூலமு நிணமொழுகு மழுவுமதி னின்
றெழுகு செங்குருதியு
நிலவொழுக வொருவிழியில் வெயிலொழுக ஒருவிழி
யில் நெருப்பொழுக நின்றநிலையு
மையொழுகு களபமு மனலொழுகு மழுவும் வழிந்
தொழுகு பால் மதியமும்
மதுரமுரு குந்தேறல் மழையொழுகு கொன்றையு
மணமொழுகு பாதமலரும்
கையொழுகு மலரொடு கண்ணொழுகு நீரொடு.........
கண்டுந்தொழுதேற்ற கல்லுக்குளன்பு கசிந்துருகு
தென் செய்குவன்
பையொழுகு பணமுடியில் மணியொழுகு பன்னகரா
பரணந் தரித்தபுயனே
பஞ்சநதி முடிவைத்த பஞ்சநதிவாணனே பஞ்சாட்
சர ரூபனே. 2

---

### 356. No. 700 சிவாஜி மகாராஜாவின்பேரில் கவிகள்.

ஏடுகள் 30 ; Lines 2—6 in a page.

இதில் தஞ்சையையாண்ட மகாராஷ்டிர மன்னர் சிவாஜி மகாராஜா பட்டத்துக்குவந்த போது புகழ்ந்து பாடப்பட்டவை இருக்கின்றன. இதில் முதல் 3 ஏடுகளில்லை. பிழை அதிகம்.

**Beginning :**

.........பதியுகங்கள் போழிக்கும் யுகமான ராசசமுகம்

பாகவத லழமணி கானவர்சர அலங்கார ஆசியபதி
நாட்டிய சமுகம்
நாகரிகத்துடநம்பினோர் மனம் தாயின்யமான் நித்திய
சமுகம்
தியாகாதி ராசராம் சிவாசி மகராச பூலோகதேவேந்
திரனே.
அவனியிலே புகழுற்றிடு அன்பான சபை ஆதரணை
செய்யும் அழகானசபை
கவிகளாய் புலவரும் காத்திருக்கும்சபை கலைஞான
சாஸ்திரம் தேறிநிற்கும் சபை
புவியிலே பு......தயெனங்கள் புகழ்ந்தாடு சத்யசபை
புத்திகள் மேன்மேலு பிறந்து வளரும் சபை
இவியில் கர்ணனைப்போல் கொடைகொடுக்குஞ்சபை
இதமான சிவாசி மகராசன் கனகசபையே

**End :**

தலமான பொன்தில்லை யம்பலத்தே காண அழகான
சக்கிரவர்த்தி
சகல லோகாதீசர் இருசரண தெரிசனம் செய்கின்ற
சக்கிரவர்த்தி
சதுரங்க சேனையும் சனமும் இனமும்காண சேவைதரு
சக்கிரவர்த்தி
வேண்டும்போது கொடுக்கின்ற வெகுமான அபிமான
வையகச் சக்கிரவர்த்தி
அகிலலோகாதி சீர்சாரூவபூமர் ராசராச சிவாசி
சத்ரபதியே

குறிப்பு :

மணவாள நாராயணசதகம் அறப்பளீசர் சதகங்களிலிருந்து எடுத்தெழுதிய செய்யுட்களும் ஆனந்தக் களிப்பும் ராக விஷயமாக கிரந்தத்தில் எடுத்தெழுதிய சில ஏடுகளும் இருப்பதோடு சிவாஜி மகாராஜா கரனூ

பங்குனி மீத்தில் பட்டாபிஷேகம் பெற்றதாகக் கூறும் ஏடு ஒன்றும் இருக்கின்றன.

---

### 357. No. 702 வண்ணத்திரட்டு.

ஏடுகள் 45; Lines 4—5 in a page.

இந்தப்பிரதியில் நெல்லைநாதர், சோழகன், செம்பை இளையான், சந்திரமதி, அண்ணுமலையார், குமாரசாம் புவன், தியாகராசர், வீரப்பநாயக்கன், ரெங்கனாதர், திருப்பெருந்துறை ஆளுடையார், சிதம்பரேசர், ரெகு நாத தேவன் வண்ணங்களும் இருக்கின்றன. அவை பெரும்பாலும் சிதைந்துள்ளன. அச்சிட்டிருப்பதாகத் தெரியவில்லை.

**Beginning :**

ஆட்சியால் நாலுபடை மாட்சியால் வாழ்வுபெறு
காட்சியால் நீ... ...மங்கையால் பூமங்கை
செயமங்கை கலைமங்கை நிலமங்கை புகழ்மங்கை
யருள்மங்கை வடிவெங்கு நிறைவோன்.

ஆக்கமா...ரு வாக்கிஞ ராயண்ணுள் ளேக்கமாய் வாடு
பிணி கண்டவ... ... ...
அஞ்சலென விந்திதைய சஞ்சல மொழிந்தவ னருந்
துயர் தணந்தவன் வழங்கு கொடையா
ளுர்க்குமாதர வறிவுளோர்க்கு ஞாதா...ட பாவைமார்
கிலா மோகன் சுந்தரமதவே
அண்டினவர் சஞ்... ...டைந்தவர் பெரும்பொருளருந்
தவரும் பொருள்
மிண்டரிடியே ருதுவர் சேமநிதி நீதிமான்

**End :**

தாற்றிலே வாழைமது ஆற்றிலே பாளையுதிர் சேற்றிலே
சோசெயல்... ... ...ருகே

நர்துகரு வின்பத முதிர்ந் துளைய நெரிந்தயலில்
நந்தனவனந்த........முலைந்து மணல் சூழ்
மேட்டிலே பெற்றியயல் கோட்டிலே...யல ரேட்டிலே
யேறியர விந்தமுகமேல்
வெண்டரளஞ்சொரிநத்துதன்னண்ட மெனமென்
.........டைகே பெடை நண்டு துயில்கூர்
சாத்தனூ ராதிபதி பாட்டிமாறுய...ற் கோத்தர்
சூடாமணியெனுங் கருணைமால்
கங்கைதுங்க...துங்க வழியன் துணைவன்
வண்டமிழுகந்தடிமை வாழ்

---

358. No. 703 (*a*) தென்பாகை ஆனந்த பூபன் பேரில் சீட்டுக்கவி.

ஏடுகள் 93; Lines 4 in a page.

இது, உழுவதற்கு எருது இரண்டும் பதின்கல நெல்லும் பெற விடுத்த சீட்டுக்கவியாகும். விடுத்த புலவன் பெயர் விளங்கவில்லை.

**Beginning :**

பூவில்வாழ் புயனும் புரந்தரா திபரும்
தேவர்கள் பணிதிரு மாலுமா தவருஞ்
சந்திர சூரியரும் சதுமறை நாலும்
நந்தியெண் டிக்கில் நாயகத் தவரும்
முன்னிய முப்பத்து முக்கோடி தேவரும்
இன்னியல் நாற்பத் தெண்ணு யிரவரும்
வாகுள சகல மதங்களு மற்ற
வாகம புராணம் அறிந்திடா வடிவன்
கங்காள சுருபன் கறையணி மிடற்றன்
சங்கார ருத்திரன் சர்வசங் காரன்

*   *   *   *

கலையறி கிழவன் ஆனந்த பூபனைத்
தலமதில் சிறிய தந்தையாய்ப் படைத்தோன்
வழங்கு முத்தமிழ்க்கு மனதை வழங்கிய
திருவருள் சரச சிகப்ப பூபதியையும்
பூவில் மதனெனு...னந்தனையும் தம்பியாய் படைத்த

* * * * *

சிவகாரியத்தன் தியாகசம் பன்னன்
உபகார மேரு உச்சிதர் போசன்
அபகாரக் கன்னன் அண்டினோர் நிதியம்
செம்மைசேர் கீர்த்தி தென்பாகை வாழ்வோன்
ஆண்டி பூபன் தரு ஆனந்த பூபன்

* * * *

இந்தத் திருமுகம் எதிர்கொண்டு காண்க
எந்தச் சபையிலும் ராச சபையினும்
செந்தமிழ்ப் பிரசங்கம் செப்பு முதாரன்
தேசத்தி லுன்னிடம் செந்தமிழ் தன்னை
வாசா மகோசர மாகப் புகழ்வோன்
அற்பர் மார்பாணி அறிவினுற் கும்பன்
கற்பாணிச் சடையான் கவிசொல்லி வந்தான்
நம்மிடத் திருமுகம் நல்கிட நாடி
செம்மையா யுன்னைத் தேடியே வந்தான்

* * * *

உழக்குண்டை ரெண்டு மொருபதின் கல நெல்லும்
வழக்கமா யுனது மனமது மகிழ்ந்து
திருமுகந் தன்னைச் சிரசினில் வைத்து
மருவுசெந் தமிழை மனம்பெறக் கேட்டு
வெகுமான மாக வழங்கிடச் செய்தால்
செகமீதிற் கீர்த்தி சித்தியா முனக்கு

* * * *

உம்பர்கள் தருப்போ லுதவிடு கரனே.

---

## 359. (*b*) சோதிடம்

Lines 5—6 in a page.

இதில், சில திசாபலனைக் கூறும் ஏடுகளே இருக்கின்றன.

**Beginning :**

இருக்கும் பதிபோமிரு நிதிபோமிடருமுளையு
மிகவுண்டாம்
அருக்கன் றிசையில் கதிபூணிலாளு நிதியு
மடந்தையரும்
பெருக்குஞ் சேயூண் பகை பேரா பிணி தீப்பாடு
பெரிதரவூண்
மரிக்கு மனைவி பிணி சிறையு மக்கள் சுற்ற நிதிமாயும்

என்பது, ஆதித்தன் திசை ஊரை விட்டுப்போய் அத்தகானியுண்டாம் இடம் உளையும் பித்தம் கொமுத்தம் விதனமுண்டாம். சந்திரன் திசை அடியாரும் பெந்துக்களும் அத்தலாபமும் சிரீகளும் பெருக உண்டாம். செவ்வாய் திசை பகையும் பசியும் பூசலும் வியாதியும் அக்கினி பயமுண்டாம். ராகு திசை மரணம் சிரீ மரணம் பிணி சிறை வேந்து மரணம் அத்தகானி யுண்டா மென்பது. 363

**End :**

வல வோட்டுக் கெல்லாம் மேழ முதலாக வுண்ணும்
இடவோட்டுக் கெல்லாம் விருட்சிக முதலாக வுண்ணும்

* * * * *

வெள்ளி யுண்ணும் நாள் ருாசூய. சரீர கிலேசம் தலை வியாதி சுரம் ஆக ஆருட்டை நாளுங் கொள்க. ஆதித்தன் ஆண்டு முற்றும்.

---

## 360. (*c*) கயிலைத் தேவாரப் பதிகம்.

Lines 6 in a page.

இது; சிவபெருமான் தோத்திரம். மூவர் பாடிய தேவாரத்தைச் சேர்ந்ததன்று. இதில் பதினொரு செய்யுட்களிருக்கின்றன. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. அச்சிடப்படவில்லை.

**Beginning :**

கெங்கை உயர்பர்வதங்கள் திரிந்துமூன்றும்
கேதார முந்திரிந்து கேள்வி யின்றி
யங்கமளந் தருக் கொ.........................
ரவைமுதல வோங்காரக் கம்ப நாட்டி
கங்குல் பகல் மும்மலதே சங்கடந்து
கதிரொளியை திரிபுரையை சிலையான் றன்னைக்
குங்குமமின் முலையாள்சேர் குன்றில் வேந்தைக்
கும்பிட்டே னென்பிறவி பின்பட் டேனே. (1)

கரமலரும் திருமழுவு முழையு மேந்திக்
கதிர்செறியும் குண்டலமும் குழையு மாடத்
திரையலையும் சடைமுடியு மிதழித் தாரும்
சிறு பிறையும் பொரியரவுஞ் சீறியாடத்
திருவுறையும் மாலயனும் தேடிக் காணுத்
திரிபுரையைச் சிலையானைத் தேவர் கோவைக்
குரைகடல் சூழுலகாளுங் குன்றில் வேந்தைக்
கும்பிட்டே னென்பிறவி பின்பட் டேனே. (3)

**End :**

தானந்த மானதிரு வடிவு கொண்டு
சற்குருவாய் நின்தாளை தலைமேல் வைத்து
ஆனந்தத் திருக்கூத்து வந்து தோன்றி
அருநரகப் பிறப்பறுத்து அப்பாலாகித்
தேனுந்து மலர்ச்சோலைக் குன்றில் வேந்தைத்
திரிபுரையைச் சிலையானைத் தேவர் கோவை
ஞானந்த மானசிவ வீடளிக்கும்
நாடறியப் பரமகுரு நாடி னேர்க்கே. (4)

திருச்சிற்றம்பலம்.

---

### 361. (*d*) திருப்பதிக் கோவை.
Lines 5—6 in a page.

இது சிவஸ்தலங்களைக் கோவையாக உரைப்பது. இது, உமாபதிசிவம் இயற்றியுள்ள தலக்கோவையினும் வேறுபட்டது. அகவற் பாவாலமைந்தது. அபூர்த்தி. இயற்றியவர் பெயர் தெரியவில்லை.

**Beginning :**

செம்பொன் மால்வரை அம்பிகை பாகத்
துறைபவன் நால்வகை மறைதொழு தலைவன்
பாலனை யடைந்த காலனைக் காய்ந்த
பரிபுர மலரும் வரியத ளுடையும்
பவள மேனியும் தவளவெண்ணீரும்
நூலணி மார்பும் நீல கண்டமும்
நயன மூன்றும் புயமிகு நான்கு
மதலை மாலையும் மதியமுந் தோன்றிடத்
தொண்டர் நெஞ்சக மண்டபத் திருந்தனை
நாகம் பூண்டனை நாக முரித்தனை
வன்னி யேந்தினை வன்னி மிலைச்சினை
கங்கை யேந்தினை கங்கை தரித்தனை

*      *      *      *

**End :**

இந்திரன் தொழுதிரு நீல பருப்பதம்
மந்திர மறையோர் மருவு கேதாரமும்
நொடித்தான் மலையும் விருப்புட னமர்ந்தனை
கண்ணுத லோன் போற்றும் கயிலைப் பதியுடன்
எண்ணி இருநூற்று எழுபத் தெட்டென்னும்
நண்ணிய சீர் தேமாலை......................

## 362. (*e*) சோதிடம் தசப் பொருத்தம்

Lines 6 in a page.

**Beginning :**

மாதவர் மணப்பொருத்தம் வழுத்துநாள் கணப்
பொருத்தம்
மோது மகேந்திரஞ் சொற் சிரீதீற்கம் யோனி யோரை
மேதரு மதிபதிக் கோள் வச்சிர மிரச்சு வேதம்
தீதுறு மரங்கள் புள்ளுந் தெளிந்திவை யுரைப்பந்
தேனே.

என்பது நாள் கணம் மகேந்திரம் சிரீதீற்கம் யோனி இராசி அதிபதி வசியம் ரச்சு வேதம் என்று சொல்லப் பட்ட தசப் பொருத்தமும் விருக்ஷப் பொருத்தம் பக்ஷிப் பொருத்தம் அடைவே சொல்லுவேனென்றவாறு.

**End :**

இராக்கிஷ கணமும் தெய்வ கணமுமாகில் சிலுகர மென்பது. இராக்கிஷ கணமும் மனுஷ கணமுமாகில் மரணமென்பது. மனுஷ கணமும் தெய்வ கணமு மாகில் மத்திப மென்பது. இரண்டும் ஒரு கணமாகில் உத்தமம் என்பது.

கணப் பொருத்தம் முற்றும்.

---

## 363. (*f*) ருது சாஸ்திரம்.

Lines 5—6 in a page.

**Beginning :**

| | | |
|---|---|---|
| அசுபதியில் தெருண்டால் விதவையாம் | | |
| பரணி | ,, | புத்திர ருண்டாம் |
| கார்த்திகை | ,, | மலடியாம் |
| ரோகணி | ,, | நன்மையுண்டாம் |
| மிருக சீரிஷம் | ,, | பத்தாவுக்கினியள் |

**End :**

| | | |
|---|---|---|
| நாயறு | ,, | புத்திர ரில்லை |
| திங்கள் | ,, | பதிவிரதை |
| செவ்வாய் | ,, | விதவை |
| புதன் கிழமையில் | ,, | புத்திர ருண்டாம் |
| வியாழன் | ,, | ஸ்ரீதத்துவ முண்டாம் |
| வெள்ளி சனி | ,, | மலடி என்பது |

தெருட்சி முற்றும்.

குறிப்பு :

இதில் மழையறியும் சோதிக் குறி வில்லடிக் குறி கெற்பக் குறிகளும் கோள்களின் நட்பு பகையும் குமரு நீக்கமும் ருது சாந்தி இலக்கணமும் எழுதிய 3 ஏடுகள் கோக்கப்பட்டுள்ளன.

---

364. (*g*)சைவ அனுஷ்டான விதி:
Lines 5—7 in a page.

**Beginning :**

அத்திராய நம,………………நம, கவசாய நம, என்று இடம் பண்ணவும், சிவாய வவுஷ் டென்று விபூதியை யள்ளி சத்தியோ வவுஷ் டென்று நீர் தத்தி அந்த விபூதியை வலது கையினுல் மூடி பிரவண பஞ்சாக்ஷரத்திஞலே பதினொரு கால் அபி மந்திரித்து மூல மந்திரத்தால் குழைத்து விபூதி தரிக்கும்படி.

**End :**

பதினொரு மந்திரத்திஞலே பத்திரம் கிள்ளி, அர்ச்சித்து, அத்திராய நம வென்று பந்தனம் பண்ணி, கவசாய நம வென்று அவகுண்டனம் பண்ணி, மூல மந்திரத்திஞலே தேனு முத்திரை கொடுத்து பின்பு தூப தீபம் பணிமாறப் பண்ணி இப்படி அற்கியம். தர்ப்பிக்கவும்.

---

## 335. (h) திருமூலர் திருமந்திரம்
Lines 6—7 in a page.

இது சைவசித்தாந்த நூல்களில் ஒன்று. இதனை இயற்றியவர் திருமூல நாயனுர். இதில் 29 செய்யுட்கள் இருக்கின்றன.

**Beginning :**

அய்ந்து கரத்தனை ஆனை முகத்தனை
இந்து இளம்பிறை போலு மெயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தனை
புந்தியில் வைத்தடி போற்று கின்றேனே.

குருவென வந்து குணமாய் வணங்கி
திருவடி சாத்தி செவியருள் செப்பி
எருவுடன்..............யென் கையில் நீரா
லுருவுடன் கொண்டான் உடல்பொருளாவி(1)

* * * *

சக்கர மண்ணுஞ் சதிரமே நீர்பிறை
வக்கினி முக்கோணம் வாயுவ றுகோணம்
புக்குவான் வட்டம் பூதவடி வின்மேல்
நிற்குந் திருவடி நிறமது பொன்னே. (4)

**End :**

மன்னு மலமைந்தும் மாற்றுகை யோரான்
துன்னிய கன்மாதி தோயுந்தொழில் நீஞ்சான்
பின்னிய பொய்யின் பிறப்பிறப் பஞ்சாதான்
நன்னினை வாமவன் சற்குரு வாகுமே. (29)

குறிப்பு :

இதில் சிவதீக்ஷை செய்து கொண்டவர்களின் பெயர் விபரம் குறிக்கப்பட்ட ஏடுகள் கோக்கப் பட்டுள்ளன.

——

366. No. 706 தனிப்பாடற்றிரட்டு.
ஏடுகள் 84 ; Lines 4— 5 in a page.

இது,பல புலவர்கள் பாடிய தெய்வத் துதியும் நரஸ்துதியுமாகிய பல பாடல்களின் திரட்டாகும் சிதிலமாயிருக்கிறது. அச்சிடப்படாத பல செய்யுட்களும் இருக்கின்றன

**Beginning :**

வண்டு கிண்டியமாலே யோதிகுணக்கிலேவரு மருதமோ
மன்னுநூபுர மோபயோதர மூரும்வானவர் கணி
கையோ
அண்டர் பூபதி வனிதையோமுக மமுதவாய்மொழி
தும்பியோ
அரிகையாயுத மோபிறந்திட மன்ன மென்ன
வுலாவுவீர்
கொண்ட நண்பு முதாரமுமற வாதகோனக ஆதிபன்
குத்திபல்லவ ராயதீர குமாரதுக்கையான் வரையில்நீர்
துண்ட வெண்பிறை சூடுகச்சிலே நாணெனச்சில
சொல்கிலீர்
தூரமோ அதி பாரமோ ஒரு சோனுகைக்குள தோய்
கலே.
மாவிருக்கும் தலத்திரண்டு மருந்திருக்கு மவரிடத்து
வைத்திய நாதர்
சேவிருக்குங் கொடியுடையார் சென்றிருக்குந் தேடரி
யார் செவியில் மூவர்
பாவிருக்கு மவிர்சடைமேற் பாம்பிருக்கு மால்பணியும்
பாதத்தே யோர்
பூவிருக்கு மடையாளம் புள்ளிருக்கும் வேளூரிற் புனித
ஞர்க்கே.

**End :**

கலங்காத வீரியராஞலு...வந்த காலம் வந்தால்
மலங்கா தவர்வெல்ல மாட்டுவரோ அதன்றியிலே

சலங்காணுங் கோட்டையி(ருந்தும்) தலைபத்துத்
தானிருந்தும்
இலங்கா புரிநின்ற தோவெள்ளை நாவ லிருப்பவனே.
குறிப்பு :

இராமநாதர் வண்ணம் அபூர்த்தியாக எழுதிய பிரதி ஒன்றும் இருக்கிறது.

---

# IX. இதிகாசம்.

## i. இராமாயணம்.

### 367. No. 1 ஏடுகள் (*a*) கம்பராமாயணம்.

இது, இதிகாசங்களுள் ஒன்று சீராம சரித்திரத்தைக் கூறுவது. இதனை வடமொழியிற் செய்தவர் வான்மீகிமுனிவரர். இது கம்பராற் செய்யப்பட்டமையின் கம்ப ராமாயணம் எனப் பெயர் பெற்றது. நவரசங்களுடன் சொன்னயம் பொருணயங்களிற் சிறந்து பெருங் காப்பிய மாக விளங்குவது. இதனை இராமாவதாரம் எனவும் வழங்குவர்.

இராமாயணம் ஏழு காண்டங்களை உடையதெனினும் கம்பராற் செய்யப்பட்டவை முன்னுள்ள ஆறுகாண்டங்களேயாம். ஏழாவதாகிய உத்திரகாண்டத்தைச் செய்தவர் ஒட்டக்கூத்தர் என்பவர்.

கம்பரும் ஒட்டக் கூத்தரும் இரண்டாம் குலோத்துங்க சோழனது ஆஸ்தானத்து வித்துவான்கள். சோழன் இவர்க ளிருவரையும் இராமாயணம் பாடக் கேட்டுக் கொண்டனன் எனவும், பாடி முடிந்தபிறகு, கம்ப ராமாயணத்தைப்போலத் தாம்பாடிய இராமாயணத்தில், நயங்கள் காணப்படாமையை அறிந்த கூத்தர் அதன் முதலாறு காண்டங்களையும் கிழித்துவிட்டனர்

எனவும், அதனை அறிந்த கம்பர் உத்தரகாண்டத்தைக் கிழிக்காமல் தடுத்து அதனைப் பெற்றுத் தம்முடைய இராமாயணத்தோடு சேர்த்து வைத்தனர் எனவும் கூறுவர்.

கம்பர் மாயூரந் தாலுகாவைச் சேர்ந்த திருவழுந்தூரிலிருந்த ஆதித்தன் என்பவரது மகன். இவர் பிறந்தவூர் தேரழுந்தூர் எனவும் கூறுவர். இவரை உவச்சகுலத்தினரென்பர். இவர் விருத்தப் பாவினங்களைப் பாடுதலில் மிகச்சிறந்தவர். அது 'விருத்த மென்னு மொண்பாவிற் குயர் கம்பன்' என்பதனால் விளங்கும். இவரை ஆதரித்தவர் வெண்ணெய் நல்லூர் சடையப்பவள்ளல். இக்கம்பரை கம்ப நாட்டாழ்வார், கவிச்சக்ரவர்த்தி, எனவும் வழங்குவர்.

இரண்டாம் குலோத்துங்கனது காலம் கி. பி. (1133-1146) பன்னிரண்டாம் நூற்றாண்டாதலால், கம்பரது காலமும் பன்னிரண்டாம் நூற்றாண்டாகும். இன்னும், 'எண்ணிய சகாத்த மெண்ணூற்றேழின்மேற் கம்பநாடன்... கவியரங்கேற்றினானே' என்னும் செய்யுளால், இராமாயணம் அரங்கேறிய காலம் சகம் ஆயிரத்துநூற்றேழு அதாவது கி. பி. 1185 என்று அறியத்தக்கது.

இந்நூல் பலரானும் அச்சிடப்பட்டிருப்பினும் அச்சுப் புத்தகத்திற்கும் இங்குள்ள எட்டுப் பிரதிகளுக்கும் பாடபேதம் காணப்படுகின்றது. இதில் ஏழு காண்டமும் பூர்த்தியாக இருக்கின்றன.

---

**Beginning :**

நாடிய பொருள்கை கூடும் ஞானமும் புகழு முண்டாம்
வீடுயர் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கும்
நீடிய வரக்கர் சேனை நீறுபட் டொழிய வாகை
சூடிய சிலையி ராமன் றோள்வலி கூறு வோர்க்கே.

உலகம் யாவையுந் தாமுள வாக்கலும்
நிலை பெறுத்தலும் நீக்கலு நீங்கலா
வலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவ ரன்ன வர்க்கேசர ணுங்களே.

**End :**

உம்பரோ டிம்பர் காறு முலகமோ ரேழு மேழு
மெம்பெரு மானெனன் றேத்தி யிறைஞ்சி நின்றேவல்
செய்யத்
தம்பிய ரோடுந் தானுந் தருமமுந் தரணி காத்தா
னம்பரத் தனந்தர் நீங்கி யயோத்திவந் திறுத்த காலை.

விடைகொடுத்த படல முற்றும்.
ஸ்ரீமத்ராமாயணம் ஆறுங்காண்டமான
உயுத்தகாண்ட முற்றும்.

குறிப்பு :

இந்தப் பிரதி சகாப்தம் 1641-ல் அதாவது 1719. கி. பி. யில் எழுதப்பட்டுள்ளது.

---

1. பாலகாண்டம்

| | | | |
|---|---|---|---|
| கடவுள் வாழ்த்து அவை யடக்கம் | 11 | 9 முதன்முறை கிளத்து படலம் | 164 |
| 1 ஆற்றுப்படலம் | 20 | 10 கார்முகப்படலம் | 68 |
| 2 நாட்டுப்படலம் | 61 | 11 எழுச்சிப்படலம் | 82 |
| 3 நகரப்படலம் | 75 | 12 வரைக்காட்சிப் படலம் | 71 |
| 4 திருவவதாரப் படலம் | 150 | 13 உண்டாட்டுப்பட லம் | 145 |
| 5 கையடைப்படலம் | 17 | 14 மகட்காட்சிப்படலம் | 88 |
| 6 தாடகை வதைப் படலம் | 85 | 15 கோலங்காண்பட லம் | 43 |
| 7 வேள்விப்படலம் | 59 | 16 கடிமணப்படலம் | 104 |
| 8 மிதுலைக்காட்சிப் படலம் | 110 | 17 பரசுராமப்படலம் | 50 |

## 2. அயோத்தியாகாண்டம்

18 மந்திரப்படலம் 97
19 மந்தரை சூட்சிப் படலம் 88
20 கைகேசி சூழ்வினைப் படலம் 110
21 நகர் நீங்குபடலம் 236
22 தயிலமாட்டுபடலம் 87
23 குகப்படலம் 76
24 வனம்போக்குப்படலம் 47
25 சித்திரகூடப்படலம் 57
26 பள்ளிப்படலம் 140
27 ஆற்றுப்படலம் 59
28 கங்கைப்படலம் 72
29 திருவடிசூட்டுப் படலம் 141

## 3. ஆரணியகாண்டம்.

30 விராதன்வதைப் படலம் 71
31 சரபங்கப்படலம் 43
32 அகத்தியப்படலம் 59
33 சடாயுப்படலம் 42
34 பஞ்சவடிப்படலம் 7
35 சூர்ப்பநகைப் படலம் 136
36 கரன்வதைப்படலம் 191
37 மாரீசன் வதைப் படலம் 250
38 சடாயு வதைப் படலம் 222
39 அயோமுகிப்படலம் 99
40 கவந்தன் வதைப் படலம் 55
41 சவரிப்படலம் 9

## 4. கிஷ்கிந்தாகாண்டம்.

42 பம்பைப்படலம் 42
43 அனுமப்படலம் 34
44 சுக்ரிவனட்புப் படலம் 81
45 மராமரப்படலம் 20
46 துந்துபிப்படலம் 15
47 கலன்காண் படலம் 33
48 வாலிவதைப் படலம் 176
49 அரசியற்படலம் 82
50 கார்காலப்படலம் 121
51 கிட்கிந்தைப்படலம் 139
52 தானைகாண் படலம் 40
53 நாடவிட்டபடலம் 75
54 பிலம்புகுபடலம் (கடைசியில் பில நீங்கு படலம் என்றிருக்கிறது) 74
55 வழிநடைப் படலம் 55
56 சம்பாதிப்படலம் 62
57 மகேந்திரப்படலம் 27

## 5. சவுந்தரியகாண்டம் (அச்சுப்பிரதியில் சுந்தரகாண்டம்.)

58 கடல்தாவு படலம் 95
59 நிலாத்தோற்றுப் படலம் 60
60 இலங்கைமாதேவி வதைப்படலம் 35
61 ஊர்தேடுபடலம் 138

62 காட்சிப்படலம் 72
63 நிந்தனைப்படலம் 82
64 திருவாழி காட்டுப் படலம் 117
(படலக்கடைசியில் திருவாழிகொடுத்த படலம் என்றுள் ளது)
65 சூடாமணிப்படலம் 89
66 கிங்கரர் வதைப் படலம் 120
67 சம்புமாலிவதைப் படலம் 51
68 பஞ்சசேனுதிபதி வதைப்படலம் 68
69 அட்சதகுமாரன் வதைப்படலம் 48
70 பாசப்படலம் 87
71 பிணிவீட்டுப்பட லம் 118
72 எரியூட்டுப்படலம் 84
73 மீட்சிப்படலம் 92

## 6. உயுத்தகாண்டம்.

74 கடல்காண்படலம் 12
75 இராவனன் மந்திரப் படலம் 118
76 இரணிய வதைப் படலம் 176
77 வீபீஷணனடைக்க லப்படலம் 153
78 இலங்கை கேள்விப் படலம் 73
(விபீஷணன் இலங்கை கேள்விப்படலம்)
79 வருணனை வழிவேண் டுபடலம் 85
80 சேதுபந்தனப்பட லம் 71
81 ஒற்றுக்கேள்விப் படலம் 89
82 இலங்கைகாண் பட லம் 24
83 இராவணன் தானை காண்படலம் 48
84 மகுடபங்கப்படலம் 43
85 அணிவகுப்புப் படலம் 30
86 அங்கதன் தூதுப் படலம் 44
87 இராவணன் முதற் போர்ப்படலம் 260
88 கும்பகன்னன் வதைப்படலம் 365
89 மாயாசனகப்படலம் 95
90 அதிகாயன் வதைப் படலம் 276
91 நாகபாசப்படலம் 299
92 சங்குலமகா இராட்ச தன் வதைப்படலம் 140
93 பிரம்மாஸ்திரப் படலம் 260
94 மருத்துமலைப் படலம் 115
95 மாயா சீதைப் படலம் 118
96 நிகும்பலைப்படலம் 180
97 இந்திரசித்து வதைப் படலம் 130
98 மூலபலவதைப் பட லம் 283
99 வேலேற்றுபடலம் 46
100 களங்காண்படலம் 69

**Colophon :**

சுபமஸ்து: வேதாந்த இதீசுரராகிய வித்தியாரண் ணியர் தாரணம் பண்ணப்பட்ட நரபதி யாதவகுல வங்கிஷோத்தமராக அபகன விபகன பிரபுடைதேவ மகாராயராதிய மனுவிக்கியான நெறி செங்கோல் செலுத்தப்பட்ட கிருஷ்ணராயர் கடாட்சத்துக்கு யோக் கியனென சேவப்ப நாயக்கர் முதல் விசயராகவ நாயக்க ரந்தம் விசையாயுரம் பாரிசாவ சீரரான சாசி மகாராசா வுடைய குமாரன் ஏகோசி ராசா. ஏகோசி ராசா குமாரன் மகாராசா, மகாராசா சகோதரன் சர்வோசி ராசா, சாம்பூதீப தக்ஷணபாக நள்ளி தலை கிள்ளி பின் னுற்பத் தெண்ணாயிரம் ஆதித்தகுலராசரீகஞ் செலுத் திய சோழதேச தீபக தஞ்சைமானகரம் நித்தியவாசம் தன்ம உத்தாரண கவரையள் குலங்கள் விளங்க உதை யஞ்செய்து கீர்த்திதுரந்தர மகாமேருசமான் விவிதப் பிரபாகர பிரபல அஷ்டலட்சுமி நித்தியவாசரான பந்து சன சிந்தாமணி அன்னதான விநோதன் தயவு தாட் சண்ணிய நயகுண விநோதர் பலவுபகாரமும் சத்திய அரிச்சந்திர வாக்கியமும் அஷ்ட ஐசுவரியமும் காரிய துரந்தரீகர் சகலரெத்தின பூஷணர் மோங்காலிப்பட்ட வர்த்தனர் சாலக்கிராம பருவத சயிலர் தேவப்பிராமாண விசுவாசர், தவளசத்திர ஆலவட்டன், உபயவெண் சாமரையோன் பகல்தீவட்டியான் தூளிவாகனன்,சமய நாராயணர், சமய துரோகர் கண்டராயவேசியர் புயங்காசாலு, மூல சமயத்துக் குடையவர், இப்படி யோங்கி விளங்கிய குலத்தில் வந்துதித்த வேங்கிடபதி நாயக்கர் தவம் பண்ணிப்பெற்ற நாலாக நாடரான விட்டுணுபூசா துரந்தரரான வெகுசன ரட்சகரான

மன்மத சொரூபரான கஸ்தூரி நாயக்கர் அவர்கள் மனோரம்மியமாக ஸ்ரீமத்ராமாயண கதா சுதா சமுத்திரத்தை எழுதி முடிக்க வேணுமென்று சிந்திச்சு கோபால குலத்தில் பூவாத்தை பிள்ளை குமாரன் வாசு தேவபிள்ளைக்கு சகல பாக்கியமும் கொடுத்து எழுதி முடிந்தது. துவாபரயுகத்தில் செல்லும் கலியுகம் 4820 சாலிவாகன சகாத்தம் 1641 மேற் செல்லாநின்ற விகாரிவூ வைகாசிமீ 11வ ஆதித்தவார நாளும் பூருவபட்சமும் துதிகையும் மிருகசீரிஷபமும் துருதி நாமயோகமும் கவுல்லாகரணமும் சுக்கிர ஓரையும் ரிஷப லக்கினமும் கூடின சுபதினத்தில் ஸ்ரீமத்திராமாயணம் எழுதி முடிந்தது முற்றும்.

வாசுதேவபிள்ளை கையெழுத்து ஹரிஓம் நன்றாக குரு வாழ்க குருவே துணை.

ஸ்ரீவெங்காடாசல சுவாமி பாதமே கெதி. அய்யங்கார் திருவடிகளே சரணம்.

---

## 368. No 1 (*b*) உத்தரகாண்டம்.
Lines 11—14 in a page.

இது, இராமாயணத்தின் ஏழாவது காண்டமாகும். இதனை இயற்றியவர் ஒட்டக்கூத்தர். இவர் பாண்டி மண்டலத்தில் சேதுநாட்டில் மலரி என்னும் ஊரில் செங்குந்தர் மரபில் பிறந்தவர் எனவும், இவர் பாடிய 'அரும்பைத் தொள்ளாயிரம்' என்னும் நூலிலுள்ள செய்யுளொன்றைத் தனக்கு ஒட்டப்பாட விக்கிரம சோழன் வேண்டியவாறே பாடியதாலும், இவரது மரபினர் தம்மீது பாடவேண்டி அறுத்துக் குவித்த தலைகளை அவரவர் உடலோடு சென்று ஒட்டுமாறு பாடியதாலும் ஒட்டக்கூத்தரெனப் பெயர் பெற்றனரெனவும் கூறுவர். இவர் கோவையுலா அந்தாதி பாடுவதிற் சிறந்தவர். அது, 'கோவையுலாவந்தாதிக் கொட்

கூத்தன், என்பதால் விளங்கும். இவருக்கு, கவிராக்ஷஸன் கவுடப்புலவன் என்னும் பெயர்களுமுண்டு. இவர் பாடிய வேறு நூல்கள்:—விக்கிரம சோழனுலா, குலோத்துங்க சோழனுலா, இராசராசனுலா, குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ், நாலாயிரக்கோவை, அரும்பைத் தொள்ளாயிரம், தக்கயாகப் பரணி, அண்டத்துப்பரணி, ஈட்டி எழுபது முதலியவை. இவர், விக்கிரமசோழன் (1118-1135) அவன் மகன் குலோத்துங்கன் II (1133-1146) அவனுக்குப் பின் பட்டத்துக்கு வந்த இராசராசன் II (1146-1178) இம்மூவர் மீதும் உலாப் பாடியவராதலால், இவரது காலம் பன்னிரண்டாம் நூற்றுண்டு என்று கொள்ளத்தக்கது.

---

(*b*) உத்தரகாண்டம்.

**Beginning :**

வெள்ளியங் கிரியைமீதே வேரொடு மெடுத்த வீரக்
கள்ளவன் புயநா லேந்துங் கனகமா மவுலிபத்துந்
துள்ளியம் புவிமேல் வீழ வொருகணை தொடுத்துவிட்ட
வள்ளலம் புயமே யன்ன மலரடி வணக்கஞ்செய்வாம்.

**End.**

ஆழியான் மகிழ்ந்து பூவி னயன்மறை கொண்டு போற்றச்
சூழியா னையின்மீ தேறி யிந்திரன் றுதிசெய் தேத்தப்
பூழியார் மேனி யானும் புகழ்ந்துடன் போகவழி
வாழிவா னவர்கள் கூற மருவியவை குண்டஞ் சேர்ந்தான்

வைகுண்டப்படல முற்றும்.

---

உத்தரகாண்டம்

**369.** No. 2 கம்பராமாயணம்.

ஏடுகள் 465 ; சிதிலம். Lines 9—14 in a page.

இதுவும் முற்பிரதிபோன்றது. இதில் கடவுள் வாழ்த்து முதல் யுத்தகாண்டத்தில் திருவபிஷேகப் படலமுடிய இருப்பதோடு ஒட்டக் கூத்தர் இயற்றிய உத்திர காண்டத்தில் அரம்பை எதிருற்ற படலத்தில் 23ம் செய்யுள்வரையு மிருக்கிறது.

குறிப்பு :

யுத்தகாண்டத்தில் விடைகொடுத்த படலம் இல்லை. பெரியபுராணத்தில் சம்பந்தர் புராணம் 124 முதல் 138ம் செய்யுள் வரை எழுதிய ஏடொன்றுமிருக்கிறது.

370. No. 4 கம்பராமாயணம்.
ஏடுகள் 272 ; சிதிலம் Lines 9—12 in a page.

இதில் பாலகாண்டம், அயோத்தியா காண்டம், ஆரணிய காண்டம், சுந்தரகாண்டம் ஆகிய நாலு காண்டங்கள் இருக்கின்றன. கிஷ்கிந்தா காண்டத்தில் 202 —252 வரையிலுள்ள ஏடுகள் இல்லை. ஆரணிய காண்டம் சவரி பிறப்பு நீங்கு படலத்தில் 8, 9, செய்யுட்கள் இல்லை.

**Colophon:**

யுவஸ்ரீ புரட்டாசிமீ ராமசந்திர வணியனூர் ராமாயணம் எழுதி நிறைந்தது முற்றும்.

---

371. No. 5 கம்பராமாயணம்.
ஏடுகள் 550; சிதிலம் Lines 6—8 in a page.

இதில் பாலகாண்டம், அயோத்தியா காண்டம் ஆரணியகாண்டம், கிஷ்கிந்தா காண்டம், ஆகிய நான்கு காண்டமும் முழுவதுமிருப்பதோடு சுந்தரகாண்டத்தில் நிந்தனைப் படல முடியவுமிருக்கிறது. கிஷ்கிந்தா காண்டம் தானை காண் படலத்தில் 19 முதல் 39 வரையிலுள்ள செய்யுளில்லை.

---

372 No. 7 கம்பராமாயணம்.
ஏடுகள் 336 ; சிதிலம் Lines 6—8 in a page.

இதில் பாலகாண்டமும் அயோத்தியா காண்டமும் முடியவிருக்கின்றன. ஆரணியகாண்டத்தில் கவந்தன் வதைப்படலம் 50ம் செய்யுள்வரையில் இருக்கின்றது.

---

373. No. 8 கம்பராமாயணம்.
ஏடுகள் 145 ; சிதிலம் Lines 8 in a page.

இதில் பாலகாண்டம் சிறிதேனும் உபயோகப் படாத விதமாகக்கறையான் அரித்துச்சிதைந்து கிடக்கிறது.

374. No. 31 கம்பராமாயணம்.
ஏடுகள் 53 ; சிதிலம் அபூர்த்தி Lines 7—10 in a Page.

இதில் பாலகாண்டத்தில் பரசுராமப் படலமும் யுத்த காண்டத்தில் கும்பகர்ணன் வதைப்படலமும் நாகபாசப் படலமும் இருக்கின்றன.

---

375. No. 33 கம்பராமாயணம்.
ஏடுகள் 307 ; சிறிது சிதிலம் Lines 5 in a page.

இதில் பாலகாண்டம் முழுவது மிருக்கிறது.

---

376. No. 48 கம்பராமாயணம்.
ஏடுகள் 27 ; அபூர்த்தி சிதிலம் Lines 6—8 in a Page.

இதில் பாலகாண்டத்தில் பாயிர முதல் திருவவதாரப் படலம் 45-ம் செய்யுள் வரையிலும் இருக்கின்றது.

---

377. No. 32 கம்பராமாயணம்.
ஏடுகள் 217 ; பூர்த்தி Lines 5 in a page.

இதில் அயோத்தியா காண்டம் முழுவதுமிருக்கிறது.

---

378. No. 34 கம்பராமாயணம்.
ஏடுகள் 244 ; பூர்த்தி Lines 5 in a page.

இதில் ஆரணியகாண்டம் முழுவதும் இருக்கிறது.

---

379. No. 11 கம்பராமாயணம்.
ஏடுகள் 127 ; மிகவும் சிதிலம் Lines 6 in a page.

இது கிஷ்கிந்தாகாண்டம் பார்த்தற்குத் தகுதியற்ற விதமாகச் சிதைந்துள்ளது.

380. No. 12 கம்பராமாயணம்.
ஏடுகள் 53; அபூர்த்தி சிதிலம். Lines 5 in a page.

இதில் கிஷ்கிந்தா காண்டத்தில் துந்துபிப்படலம் முதல் கார்காலப்படலம் 60-ம் செய்யுள்வரையும் இருக்கின்றது.

381. No. 35 கம்பராமாயணம்.
ஏடுகள் 248; பூர்த்தி சிதிலமாயிருக்கிறது
Lines 5 in a page.

இதில் கிஷ்கிந்தாகாண்டம் முழுவதும் இருக்கிறது.

382. No. 3 கம்பராமாயணம்.
ஏடுகள் 181; அபூர்த்தி சிதிலம் Lines 12-15 in a page

இதில் சுந்தரகாண்டம் கிங்கரர் வதைப்படலம் 113-ம் செய்யுள் முதல் முடிய இருப்பதுடன் யுத்த காண்டமுடியவும் இருக்கிறது.

383. No. 13 கம்பராமாயணம்.
ஏடுகள் 121; அபூர்த்தி சிதிலம் Lines 8-10 in a page.

இதில் சுந்தரகாண்டத்தில் விசுவரூபப் படல முதல் மீட்சிப் படலமீருகவும் யுத்தகாண்டத்தில் கடல் காண் படலம் முதல் ஒற்றுக் கேள்விப் படலத்தில் 44-ம் செய்யுள் வரையும் இருக்கிறது. ஆனால் இரணிய வதைப்படலத்தில் 119-க்குப்பின் 57 செய்யுட்களும் ஒற்றுக் கேள்விப் படலத்தில் 44-க்குப்பின் 46 செய்யுட்களும் இலங்கைகாண் படலமும் இல்லை.

384. No 36 கம்பராமாயணம்.
ஏடுகள் 293; பூர்த்தி. Lines 5 in a page.

இதில் சுந்தரகாண்டம் முழுவதும் இருக்கிறது.

385. No. 10 கம்பராமாயணம்.

ஏடுகள் 20; அபூர்த்தி சிதிலம். Lines 7—8 in a page.

இதில் யுத்தகாண்டத்தில் நிகும்பலைப் படலமும் அங்கதன் தூதுப் படலமும் இருக்கின்றன.

---

386. No. 14 கம்பராமாயணம்.

ஏடுகள் 300; அதிக சிதிலமாயிருக்கிறது.

Lines 8—11 in a page.

இதில் யுத்தகாண்டமும் ஒட்டக்கூத்தர் இயற்றிய உத்தரகாண்டமும் இருக்கின்றன. ஏடு அதிகமாய்ச் சிதைந்து தொட்டால் உதிரும் நிலைமையிலிருக்கிறது.

---

387. No. 15 கம்பராமாயணம்.

ஏடுகள் 186; சிதிலமாயிருக்கிறது அபூர்த்தி

Lines 9—10 in a dage.

இதில் யுத்தகாண்டம் முதலிலிருந்து மூலபலப் படலத்தில் 199 செய்யுள் வரை இருக்கிறது. 25 முதல் 56 வரையிலுள்ள ஏடுகளில்லை.

---

388. No. 16 கம்பராமாயணம்.

ஏடுகள் 140; அதிக சிதிலமாயிருக்கிறது.

Lines 9—11 in a page.

இதில் யுத்தகாண்டமட்டும் தொட்டால் உதிரு நிலையிலிருக்கின்றது.

---

389; No. 17 கம்பராமாயணம்.

ஏடுகள் 63; அதிக சிதிலம் அபூர்த்தி

Lines 6—10 in a page.

இதில் யுத்தகாண்டத்தில் கடல்காண் படல முதல் அணிவகுப்புப்படலம் முடிய இருக்கிறது.

---

390. No. 19 கம்பராமாயணம்.

ஏடுகள் 58; அதிக சிதிலம் Lines 9—10 in a page.

இதில் யுத்தகாண்டம் மூலபலப்படல முதல் திரு முடி சூட்டுப் படலம் ஈறாக இருக்கிறது. ஆனால் பார்ப் பதற்குத் தகுதியற்ற விதமாகப் பெரும்பாலும் சிதைந் துள்ளது.

---

391. 19 (*a*) கம்பராமாயணம்.

ஏடுகள் 67; அபூர்த்தி சிதிலம் Lines 6—7 in a page.

இதில் யுத்தகாண்டத்தில் கும்பகர்ணப்படலமும், நாகபாசப்படலமும் முடிய இருக்கின்றன.

---

392. (*b*) மன்னார் மோகனப் பள்ளு.

Lines 7 in a Page.

இது இராசமன்னார் கோவிலிலுள்ள விஷ்ணுமீது பாடப்பட்ட பள்ளுப் பிரபந்தம். நூலாசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை. இதன் கடைசிச் செய் யுளில், 'பாராளும் விசையராகவபூபனை பட்சத்துடன் நித்தம் காத்தவர்' என்று வந்திருப்பதைக் கொண்டு இந் நூல் தஞ்சையை அரசுபுரிந்த விசையராகவ நாயக்கர் காலத்தில் செய்யப்பட்டதாக ஊகிப்பதற்கு இடமிருக்கின்றது. அச்சிடப்படவில்லை.

**Beginning:**

புத்தியும் புத்திக் கேற்ற பொறுமையுமுதவிப் பின்னும்
முத்தியுந் தருமன்னார்மேல் மோகனப் பள்ளு பாட
எத்திசை தனிலு மன்பர் ஏதுரைத் தாலுங் கேட்டு
சித்தமே மகிழ்வார் ராசைச் செங்கமலத்தாய் காப்பாம்

பூவிற் சிறந்த லட்சுமிமார்பர் புவனம் பதினான் களந்
தவர்
பூபாரத்தைத் தீர்த்தவர் அன்புபுரிந்தே யெந்தனைக்
காத்தவர்
சேவிக்க வாழ்வு கொடுத்தவர் வாணன் சிரம்வீழ வாளி
தொடுத்தவர்
தெக்ஷண துவாரகை பட்சம் வைத்த மன்னர் சித்த
மெச்சும் சோழநாட்டிலே
தாவிப்படர் முகில்கள் கடல்நீர்தனைக் கொண்டு குடகி
னிற் சென்றே
தழைத்த குறிஞ்சி பாலைமுல்லை தருநேர் மருதம் நெய்
தலிலே
மேவிப்பரந்த காவேரிக்கரை வெள்ளப் பெருக்கில் திருக்
கையை
வெளிச்சை மருட்டி வெருட்டி யெய்தற் கருட்டிப்
பாரடி பள்ளீரே

**End :**

பாராளும் விசையராகவபூபனை பட்சமுடன் நித்தம் காத்
தவர்
பணியு மறுகு மானும் தரித்த பரன்பெறுஞ் சாபந்
தீர்த்தவர்
தீராத வல்வினை தீர்த்தவர் துரோபதை செந்துகில்
போகாமல் காத்தவர்
தெக்ஷணத்துவாரகை பட்சம் வைத்த மன்னர் சித்த
மெச்சும் பண்ணைவயலுள்ளே
மோராமுலைமுற்று ரெங்கிக்காசை கொண்டு வெங்கி
தனைச் சந்துவிடுத்தாள் மூர்த்தி
வெள்ளையன் தங்கச்சி பெற்றியைத் தன்மனம்
வேண்டாமல் துரும்பு குடுத்தான் புவிக்
கோராதோவிது நடவெல்லாம் நட்டு இருவி வீட்டி
லிருக்கச்சே துயர்

எட்டினது மெள்ளக் கிட்டினதுந் தாலிக் கட்டினதும்
பாரும் பள்ளீரே.
தினத்திஞனத் தின்ஞேனத்தின திஞனத் தென்ஞனே.
மோகனப்பள்ளு முற்றும்.

---

393. No. 9 கம்பராமாயணம்.

ஏடுகள் 24; அபூர்த்தி சிதிலம் Lines 4—5 in a page.

இதில் யுத்த காண்டத்தில் சங்குல மகாராட்சதன் வதைப் படலம் 11-ம் செய்யுள் முதல் முடிய இருக்கிறது.

---

394. No. 29 (*a*) கம்பராமாயணம்.

ஏடுகள் 360; அபூர்த்தி. Lines 8—10 in a page.

இதில் யுத்தகாண்டம் ஆரம்ப முதல் திருவபிஷேகப்படத்தில் 17-ம் செய்யுள் வரை இருக்கின்றது.

---

395. (*b*) உத்தரகாண்டம்.

Lines 8—9 in a Page.

1. *b*. நம்பர் பிரதிபோன்றது முழுவதும் இருக்கிறது. சிதைந்துள்ளது.

---

396, No. 21 கம்பராமாயணம் உரையுடன்.

ஏடுகள் 200; சிதிலம் Lines 6—7 in a page.

இதில் யுத்தகாண்டத்தில் கும்பகர்ணப் படலமும் அதிகாயப் படலத்தில் 198 செய்யுட்களும் பொழிப்புரையுடன் இருக்கின்றன.

இது அச்சிடப்படவில்லை.

**Beginning :**

[நாளொத்த நளினமன்ன முகத்தியர் நயன மெல்லாம்
வாளொத்த] மக்கள்வார்த்தை யிராகவன் வாளியொத்த
கோளொத்த சிறைவைத்தாண்ட கொற்றவற்கற்றை
நாடன்
ருளொத்த துணைமென் கொங்கை நோக்கங்குத்துடர்ந்
திலாமை.

நாள் பூவாம் அன்றலர்ந்த தாமரைப்பூவைப் போலும் முகநலம்படைத்த கன்னியர் கூட்டத்து நயனப் பார்வையெல்லாம் கூறியவாள்போலே யிருந்தது. குமாரசனங்கள் மித்திருவசன மெல்லாம் இராம பாணம் போலே யிருந்தது. அது ஏதோ வென்னில் நவக்கிரகம்போலே வக்கிரித்துத் தேவர்களைச் சிறை வைத்தபடியாலும் சீதாலெச்சுமியை சிறைவைத்தபடி யாலும் இராவணனுக்கு அபசெயமாக அவனுடைய புசத்திரளிலே வீரலெச்சுமி விசைய லெச்சுமிக்கு உல்லாசமாக நின்று விளையாடி பூரண திருஷ்டி துடர்ந்து பாராதபடியாலே அபசெயம் வந்து அப்படி யிராவணேசுரனுக்கு மனத்தாபம் வந்தது.

**End :**

குரங்கு கூட்டங்கள் எறிந்தமலை......பின்னமாகத் துளித்து எட்டுத்திக்குஞ் சிதற விழுபடுத்தி இரண்டு கையும் நெற்றியும் சுருக்கு...... துங்கிப்ப...கைக்குள் அடக்கி நடந்தான். இவன் வருகிறது பார்த்து நின்ற அங்கதன் என்றவாறு..................................................
..........................................................................
உறுமி லெட்சுமணர் பாணம் போலக் கடிது போய் நரா......துக்கு முன்னே அந்த மராமரத்தை நராந்தகன் தன்னுடைய வாள்வீசி ஆயிரங் கண்ட துண்ட மாக்கின னென்றவாறு. (198)

397. No. 22 கம்பராமாயணம் உரையுடன்.
ஏடுகள் 66; அபூர்த்தி சிதிலமாயிருக்கிறது.
Lines 4—5 in a page.

இதில் யுத்தகாண்டத்தில் கும்பகர்ண வதைப் படலத்தில் 128 செய்யுட்கள் உரையுடனிருக்கின்றன.

---

398. No. 23 கம்பராமாயணம் உரையுடன்.
ஏடுகள் 44; அபூர்த்தி சிதிலமாயிருக்கிறது.
Lines 4—5 in a Page.

இதில் யுத்தகாண்டத்தில் கும்பகர்ண வதைப் படலத்தில் 88 செய்யுட்கள் உரையுடனிருக்கின்றன.

---

399. No. 24 கம்பராமாயணம்.
ஏடுகள் 41; அபூர்த்தி சிதிலமாயிருக்கிறது.
Lines 4—6 in a Page.

இதில் யுத்தகாண்டத்தில் கும்பகர்ண வதைப் படத்தில் 322 செய்யுட்கள் இருக்கின்றன.

---

400. No. 25 கம்பராமாயணம்.
ஏடுகள் 26; அபூர்த்தி. Lines 4—5 in a page.

இதில் யுத்தகாண்டம் கும்பகர்ண வதைப்படலத்தில் 126 செய்யுட்கள் இருக்கின்றன. ஆனல் அதிகமாகச் சிதைந்துள்ளன.

---

401. No. 26 கம்பராமாயணம்.
ஏடுகள் 71 ; மிகவும் சிதிலம். Lines 4—5 in a page.

இதில் யுத்தகாண்டத்தில் அதிகாயப் படலமும் வேறு சில செய்யுட்களும் இருக்கின்றன. ஆனல்

பார்ப்பதற்குத் தகுதியற்ற விதமாக ஏடுகள் சிதைந்து இருக்கின்றன.

---

402. No. 27 கம்பராமாயணம்.

ஏடுகள் 31; சிதிலம் Lines 4—6 in a page.

இதில் யுத்தகாண்டத்தில் இந்திரசித்து வதைப் படலம் மாத்திரம் இருக்கிறது.

---

403. No. 28 கம்பராமாயணம்.

ஏடுகள் 37; சிதிலம் Lines 4—7 in a page.

இதில் யுத்தகாண்டத்தில் பிரமாஸ்திரப் படலமும். மருத்துப் படலத்தில் 97 செய்யுட்களும் இருக்கின்றன.

---

404. No. 37 கம்பராமாயணம்.

ஏடுகள்; 36 அபூர்த்தி சிதிலம் Lines 4—6 in a page.

இதில் யுத்தகாண்டத்தில் அங்கதன் தூதுப்படலமும் நிகும்பலைப்படலம் 156-ம் செய்யுள் வரையும் இருக்கின்றன.

---

405. No. 40 கம்பராமாயணம்

ஏடுகள் 119; அபூர்த்தி. Lines 5 in a page.

இதில் யுத்தகாண்டத்தில் மூலபல வதைப்படலமுதல் மீட்சிப்படலத்தில் 313-ம் செய்யுள்வரை இருக்கிறது.

---

406. No. 44 கம்பராமாயணம்

ஏடுகள் 299; அபூர்த்தி. Lines 5 in a page.

இதில் யுத்தகாண்டத்தில் கடல்காண் படலமுதல் அதிகாயன் வதைப்படலத்தில் 270-ம் செய்யுள் வரை இருக்கிறது.

407. No. 45 கம்பராமாயணம்.
ஏடுகள் *267* ; அபூர்த்தி. Lines *5* in a page.

இதில் யுத்தகாண்டத்தில் நாகபாசப் படலமுதல் இந்திரசித்து வதைப்படலத்தில் *20*-ம் செய்யுள் வரை இருக்கிறது.

---

408. No. 6 கம்பராமாயணம்.
ஏடுகள் *239* ; Lines *6—8* in a page.

இது சிறிதேனும் பிரயோசனப் படக்கூடிய நிலையி லில்லை. மிகவும் சிதிலமாயிருக்கிறது.

---

409. No. 39 கம்பராமாயண வசனம்.
ஏடுகள் *109*; பூர்த்தி. Lines *5—8* in a page.

இது கம்பராமாயணச் செய்யுளை அனுசரித்து எழுதப்பட்டுள்ள வசனம். சதுரைப் பெருமாள் குமாரர் முத்துகிருஷ்ணன் என்னும் பிரபுவின் வேண்டுகோட் கிணங்கி சீனிவாசன் என்பவராற் செய்யப்பட்டது. இதில் பால காண்டமும் அயோத்தியா காண்டமும் முடிய இருக் கின்றன.

**Beginning:**

நாடிய பொருள்கை கூடு ஞானமும் புகழு முண்டாம்
வீடுயர் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கு
நீடிய வரக்கர் சேனை நீறுபட் டழிய வாகை
சூடிய சிலையி ராமன் றோள்வலி கூறு வோர்க்கே.

நினைத்தபொரு ளியாவது மருளுமிரா மாயணமா
நிதியந்தன்னை

யனைத்துலகும் புகழுமகா கவிகம்பர் கவிதைமலை
யதனில் வைத்தார்
மனத்துவகை யொடுஞ்சீனி வாசனதை யாவருக்கும்
வழங்க வேண்டிக்
கனத்துவரு தமிழ்வசன காவியமாஞ் சவுபானங்
காட்டினனே.
வாருதியைக் கடைந்தமுதம் வானவருக் களித்ததிரு
மாலைப்போலப்
பாருலகி விராமகதை கம்பர் சொன்ன பாடறனைப்
பகுத்தெந் நாளுஞ்
சீருலவும் படிவசன காவியமா யாவருக்குஞ் செய்வித்
தானல்
காருலவு கான் சதுரைப் பெருமாள்சேய் முத்து கிஷ்ண
கருணையோனே.

வசனம் :

ஸ்ரீமது ராமாயணம் பூர்வத்திலே வான்மீக மகாரிஷி திருவுளம் பற்றினபடிக்குத் தமிழிலே மகாகவி கம்பர் பாடலாகச் சொல்லியிருந்த கதை சாரப்படிக்கு வசனமாக வெழுதத்துடங்கினது. மகாத்துமாக்களான வித்துவாங்கிசாள் முன்னே நானிந்த மகாகாவியத்தை யென் புல்லறிவினலே யெழுதுகிறது திருப்பாற்கடலை யொரு பூனைக்குட்டி பானம் பண்ணுகிறதுக்கு ஆயத்தமானது போலவும் வீணைக் கானத்திலே பழகி யுகந்திருக்கிற அசுணத்தினுடைய காதுக்குப் பெரும்பேரிகை யடிக்கிறுப் போலவுஞ் சிற்ப சாஸ்திரங்களைக் கற்றிருக்கிறவனுக்கு முன்னே சிறு பிள்ளைகள் சிறு வீடு கட்டி விளையாடுகிறுப் போலவு மெழுதத்துடங்கினே னிதனை யிலக்கண மிலக்கியங்க ளறிந்த பெரியவர்கள் மழலை வார்த்தைப் பேசுகிற பிள்ளைகள் சொல்லுகிறதும் பயித்தியக்காரர் சொல்லுகிறது மடியார்கள் சொல்லுகிறதும் பாராட்டார்களே யப்படி யென்னையு மதிலே யொரு

வனுக எண்ணி யபசாரங்கள் பொறுத்து கிருபை பண்ணி ரட்சிக்கவேண்டியது.

பாயிரமுற்றும்.

**End:**

கெங்கையைத் தாண்டிப்போய் அயோத்தியா புரியைப்போகாமல் ராத்திரி நித்திரைகளைவிட்டு நந்திக் கிராமத்திலே போயிருந்து ஐம்புலாதிகளையு மொடுக்கிக் கொண்டு அந்தப்பாதுகைதா னிந்தராச்சியத்துக்கு அதிகாரி யென்றெண்ணிக்கொண்டு ராத்திரி பகலோயாமல் கண்களிலே தண்ணீர்வரத் தெற்குத் திசையைப் பார்த்துக்கொண்டேயிருந்தார். சித்திர கூடத்திலேயிருந்த ஸ்ரீராமரு மிவடத்திலே தானே யிருந்தாலிப்படியாக இன்னம் வந்து வந்து நலிவு செய்வார்க ளென்றெண்ணித் தம்பியுந் தானுஞ் சீதையுமாக ஸ்ரீராமன் தெற்குத் திசை நோக்கி நடந்தார்.

திருவடி சூட்டுப்படலம் முற்றும்.
அயோத்தியாகாண்டம் முற்றும்.

---

410. No. 46 கம்பராமாயண வசனம்.

ஏடுகள் 143; பூர்த்தி. Lines 6—8 in a page.

இதில் ஆரணியகாண்ட வசனம் முழுவதுமிருக்கிறது. 39 நம்பரின் தொடர்ச்சி.

---

411. No. 41 கம்பராமாயண வசனம்.

ஏடுகள் 210; பூர்த்தி. Lines 7—9 in a page.

இதில் கிஷ்கிந்தாகாண்ட வசனமும் சுந்தரகாண்ட வசனமும் இருக்கின்றன. 46 நம்பரின் தொடர்ச்சி.

---

412. No. 42 கம்பராமாயண வசனம்.
ஏடுகள் 463; பூர்த்தி. Lines 6—9 in a page.

இதில் யுத்தகாண்ட வசனம் முழுவதும் இருக்கிறது. இது 41-ம் நம்பர் தொடர்ச்சி.

---

413. No. 30 உத்தரகாண்டம் செய்யுள்.
ஏடுகள் 52; பூர்த்தி. Lines 13—17 in a page.

இது 1 (*b*) நம்பர் பிரதியைப் போன்றது. முழுவதும் இருக்கின்றது. ஆனால் எலி கடித்து தலைப்பில் சிதைவாக இருக்கிறது.

---

414. No. 38 உத்தரகாண்டம் செய்யுள்.
ஏடுகள் 347; பூர்த்தி. Lines 5 in a page.

இதுவும் முன்பிரதி போன்றது. முழுவதும் இருக்கிறது.

---

415. No. 43 உத்தரகாண்டம் வசனம்.
ஏடுகள் 180; பூர்த்தி. Lines 6—9 in a page.

இது உத்தரகாண்ட வசனம் முழுவதும் இருக்கிறது.

---

ii. பாரதம்

416. No. 65 பெருந்தேவனார் பாரதம் பொழிப்புரையுடன்.
ஏடுகள் 192; அபூர்த்தி. Lines 3—4 in a page.

சந்திரகுலத்து அரசன் துஷ்யந்தன் மகன் பரதன் என்பவனது மரபிற் பிறந்தவர்கள் பாரதராவார்கள்.

இங்குப் பாரதராவார், அப்பரதன் மரபினராகிய பாண்டவரும் துரியோதனுதியருமாம். அவர்களைப்பற்றிக் கூறும் நூல் பாரதம் எனப்படும். பாரதம் இதிகாசங்களுள் ஒன்ருகும். இது பெருந்தேவனுர் என்னும் சிறந்த புலவராற் செய்யப்பட்டமையின் பெருந்தேவனுர் பாரதம் எனப்பட்டது. வடமொழியிற் சம்புபோலப் பாட்டும் உரையும் விரவி வருவதலின், இதனை உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளென்பர். வெண்பாக்களே யன்றிச் சிறுபான்மை அகவற் பாக்களும் காணப்படினும் பெரும்பான்மைபற்றி இது பாரதவெண்பா எனவும் வழங்கும். நச்சினுர்க்கினியர் முதலிய உரையாசிரியர்களால் மேற்கோளாக எடுத்தாளும் சிறப்பு வாய்ந்தது. இந்நூலின் செய்யுட்டொகை பன்னீராயிரம் என்ப. அவற்றுள் இப்பொழுது கிடைத்துள்ளவை, ஏறக்குறைய அறுநூறு அல்லது எழுநூறு செய்யுட்கள் என்பர்.

இந்நூலாசிரியராகிய பெருந்தேவனுர் தொண்டை நாட்டினர். இவர் இப்பாரதத்தில் 'தெள்ளாற்றில் வென்ருேடார்வேந்த ரேற்பாரெதிர்' எனப்பல்லவ அரசன் நந்திவர்மனைப் புகிழ்கின்ருர். இவனை 'தெள்ளாற் றெறிந்த நந்தி போத்தரசன்' எனச் சாசனங் கூறும். இவன் கி. பி. 815 முதல் 870 வரை ஆட்சி புரிந்தவன் என்பர் கோபிநாதராயரவர்கள். எட்டாவது நூற்ருண்டிலிருந்த நந்திவர்மனே இவன் என்பது வெங்கையா அவர்களின் அபிப்பிராயமாகும். ஆகவே இப் பாரதம் பாடிய பெருந்தேவனுர் கி. பி. ஒன்பதாம் நூற்ருண்டின் பிற்பகுதியில் இருந்தவர் என ஒரு சாராரும் எட்டாவது நூற்ருண்டினர் என மற்ருெரு சாராரும் கொள்வராயினர். சின்னமனூர் சாசனங் கூறும் பாரதம் பாடிய பெருந்தேவனுர் இவரினும் வேறுபட்டவர். இந்தப் பிரதியில் கண்ணபிரான் வைகுந்தம் புக்க பின்னர், பாண்டவர்கள் தம்

மரசாட்சியை பரீக்ஷித்தினிடம் ஒப்புவித்து மாவிந்தம் சென்ற வரலாறு மட்டுமுள்ளது. இதில் 326 செய்யுட்கள் இருக்கின்றன. இதற்கு உரை செய்தவர் இன்னாரெனத் தெரியவில்லை.

ஏடுகள் தொடர்ச்சியாக இல்லை. அவைகளிற் பெரும்பான்மை முற்சிதைந்தும் பிற்சிதைந்தும் இடையிற் சிதைந்தும் இருக்கின்றன. இதில் 1 முதல் 9, 11, 12, 21. 22, 27, 33, 34. 41, 42, 47, 51 to 54, 64, 67, 73, 74, 78, 80, 85. 87, 88, 93, 97, 101, 104, 109, 111, 113 to 122, 127, 129, 131 to 136, 140, 142, 146—148, 157, 159, 160, 161, 163, 165, 168, 169, 177, 178, 179, 180, 185. 189, 192, 193, 197, 199, 203, 206, 209 to 215, 219 to 235, 243 to 245, 249, 251, 256, 261, 268, 269, 272, 275, 279, 281, 285, 288, 290, 295, 299, 300 முதலிய ஏடுகள் இல்லை. 89, 130, 139, 173, 176, முதலிய ஏடுகள் பாதி பாதியாக இருக்கின்றன. இந்தப் பகுதி அச்சிடப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை.

**Beginning :**

......விதியை வெல்ல வல்லாரில்லை யென்ன நீ விதியில்லை யென்று சொன்னாய் உனக்குமேல் வருகின்றதுங் கூறுகின்றேன் வராமல் காக்க வல்லையாமாகில் காத்துக் கொள்ளென்றுரைத்து இற்றைக்கிருபத்தேழா நாளில் பிருமகத்தியானது வருதென்று கூறித் தன்னாச்சிரமமே யெழுந்திருந்து போயினான் மகா விருஷி யென்றவாறு. இப்பால் செனமே செயனியாது செய்தானோ வெனில்,

> விதியா றதன்மேல் வினைமுன்னே காப்பதற்கென்
> றேதுவார் தம்மை யுடனழைத்து—நீதி
> அருந்தவ வேள்வி யதுதுடங்கு மென்றான்
> பெருந்தழலில் நெய்வார்த்துப் பின்.

எ—து. வேத விதியால் வேள்வி யியற்றினல் விதியை வெல்லலா மென்றுரைத்த மூதுமொழி கொண்டு நூற்றெட்டு வேத வியாதரான விப்பிரரை அழைத்து அக்கினி வளர்த்து வோமந்துடங்கியாது நிகழ்ந்ததோ வெனில்.

நெய்பெய் தழல்வளர்த்து நேரிருந்த நித்திரையிற்
றெய்வ மறையவனைத் தேர்வேந்தன்—கையிலோர்
தெற்பையினல் விட்டெரியத் திண்டாடி வேதியனும்
அப்பொழுதே பட்டா னயர்ந்து.

**End :**

பூவைப்பூ வண்ணன் புருஷோத் தமன்பாதம்
சேவித்து மாபெலிதான் செப்புவான்—கோவெந்
[கோவர்த்]
தனமெடுத்துக் கோநிரையைக் காத்தாயிங் கென்னே
மனமெடுத்து வந்தருளு மாறு.

எ—து. தம்பிரானே அடியேன் கொட்டில் வாசலிலே சிறீ நாராயணசுவாமிகள் ஏது காரியம் இன்னதென்றறியாதே அடியேனுக்குச் சாலப்பயமா யிரா நின்றது அருளிச் செய்வா யாகென்று அடி பணிந்து மகாபெலி போற்றி செய்து நிற்பத் தன்மபுத் திரனைக் காட்டி நாராயண சுவாமி யாதருளிச் செய் தாரோ வெனில்,

இவன்கண்டாய் கங்கை வளநாடான் தரும
னிவன்கண்டாய் பஞ்சவரில் மூத்தா—னிவன்கண்டாய்
பொய்யுரையா நாவெனக்குப் பூபதியாய்
மெய்யுரையால் மேவியதோ வேந்து.

...யாடி நாராயணனைத் துதிபண்ணி யந்த வாரணி யத்தைக் கடந்து சரீரமெல்லாஞ் சருகாயுலர்ந்து...... ரனுந்தாகத் தராய்க்கடிது நடந்து சென்று அவ்விடத் தில் யாது கண்டாரோ வெனில். கன்னியரால்.........

---

## 417. No. 54 வில்லிபுத்தூரார் பாரதம்.

ஏடுகள் 324; அபூர்த்தி சிறிது சிதிலம்.

Lines 7—11 in a page.

இது ஆதிபருவம் முதல் சௌப்திக பருவம் ஈருகப் பத்துப் பருவங்களையுடையது.

இதனை இயற்றியவர் வில்லிப்புத்தூராழ்வார் என்பவர். இவர் கூடலூர் ஜில்லாவைச் சார்ந்த சனியூரில் வைணவ வேதியர் குலத்தில் பிறந்தவர். இதனைச் செய்வித்தவன், நடுநாட்டில் வக்கபாகை என்னும் ஊரிலிருந்த கொங்கர் குலாதிபன் வரபதி யாட்கொண்டான் என்பவன். இது இந்நூலாசிரியர் குமாரர் வரந்தருவான் கூறியுள்ள இந்நூற் பாயிரத்தால் இனிது விளங்கும். இவ் வில்லிபுத்தூரரும் திருப்புகழ் பாடிய அருணகிரி நாதரும் ஒருகாலத்தினர் என்பது முன்னமே கூறப்பட்டது. (150-ம் நம்பர் குறிப்பைப் பார்க்க). ஆகவே அவரது காலமாகிய பதினைந்தாம் நூற்றுண்டே வில்லிபுத்தூராழ்வாரது காலமாகக் கொள்ளத்தக்கது. அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning :**

நீடாழி யுலகத்து மறைநாலோ டைந்தென்று நிலைநிற்கவே
வாடாத தவராசன் முனிராசன் மாபார தஞ்சொன்ன நாள்
ஏடாக மாமேரு வெற்பாக வெங்கூ ரெழுத்தாணிதன்
கோடாக வெழுதும்பிரானைப்பணிந்தன்பு கூர்வாமரோ.

மண்ணி லாரண நிகரென வியாதனுர் வகுத்த
எண்ணி லாநெடுங் காதையை யானறிந் தியம்பல்
விண்ணி லாதவன் விளக்கு நீ டெல்லையை யூமன்
கண்ணி லாதவன் காண்டலுங் காட்டலுங் கடுக்கும்.

* * * *

கூற்றினை யுதைத்த பாதமு முடுத்த குஞ்சரத் துரிவையு
மணிந்த
நீற்றொளி பரந்து நிலவெழு வடிவு நிலாவெயில்
கனலுமிழ் விழியு
மாற்றொடு பரந்த கொன்றைவார் சடையு மல்லதை
யாவையுங் கருதான்
மாற்றமொன் றின்றி நின்றனன் வரைபோல் வச்சிரா
யுதன்றிரு மகனும்.

* * * *

**End :**

மருத்தின்மக னெனுஞ்சண்ட மருத்தனைய புயவீரன்
வன்கைத் தண்டா
லுருத்தமரி லுடன்றும்ப ரூர்புகுந்தான் வாளுரக
முயர்த்தோ னென்று
வருத்தமுடன் மயங்கிநில மிசைவீழ்ந்தான் மிகுதிபெறு
மயக்க மான
கருத்தினுட னலம் வந்தானழுது பெரும் புனல் சோரக்
கண்ணிலாதான். 238

---

இதிலுள்ள சருக்கங்களும் செய்யுளும்

**III.** ஆரணிய பருவம்

1 தவநிலைச் சருக்கம் 176
2 நிவாதகவசாதிகள் வதைச் சருக்கம் 160
3 முண்டகச் சருக்கம் 139
4 சடாசுரன் வதைச் சருக்கம் 22
5 நச்சுப்பொய்கைச் சருக்கம் 67
6 துர்வாசச் சருக்கம் 17
7 பழம் பொருதச் சருக்கம் 24

**IV.** விராட பருவம்

1 நாட்டுறை சருக்கம் 51
2 கீசகன்வதைச் சருக்கம் 103
3 நிரைமீட்சிச் சருக்கம் 138
4 வெளிப்பாட்டுச் சருக்கம் 35

**V.** உத்தியோக பருவம்

1 உலூகன் தூதுச் சருக்கம் 15
2 வாசுதேவனைப் படைத்துணை யழைத்த சருக்கம் 19
3 தனஞ்சயன் புத்தி அபூர்த்தி 16
4 கிருட்டிணன் தூது 285

**VI.** பீஷ்ம பருவம்

1 படையெழுச்சிச் சருக்கம் 25
2 முகூர்த்தங் கேள்விச் சருக்கம் 5
3 களப்பலியூட்டுச் சருக்கம் 8
4 அணிவகுப்புச் சருக்கம் 34
5 முதல்நாள் போர்ச் சருக்கம் 77
6 இரண்டாம் நாள் ,, 32
7 மூன்றும் நாள் ,, 30
8 நான்காம் நாள் ,, 39
9 ஐந்தாம் நாள் ,, 23
10 ஆறும் நாள் ,, 28
11 ஏழாம் நாள் ,, 10
12 எட்டா நாள் ,, 39
13 ஒன்பதா நாள் ,, 41
14 பத்தாநாள் போர் சருக்கம் 53

**VII.** துரோண பருவம்

1 பதினோரா நாள் போர்ச் சருக்கம் 45
2 பன்னிரண்டா நாள் ,, 93
3 பதின்மூன்று நாள் ,, 258
4 பதின்னான்கா நாள் ,, 214
5 பதினைந்தா நாள் ,, 50

**VIII.** கர்ணபருவம்

1 பதினாறு நாள் போர்ச் சருக்கம் 90
2 பதினேழா நாள் ,, 262

**IX.** சல்லிய பருவம்

**X.** சௌப்திக பருவம்

1 பதினெட்டா நாள் போர்ச் சருக்கம் 238

418. No. 55 வில்லிபுத்தூரார் பாரதம்.

ஏடுகள் 324; சிதிலம் அபூர்த்தி Lines 6-12 in a Page.

இதுவும் முன்பிரதியைப் போன்றது. இதில் குருகுலச் சருக்கமுதல் பதினுன்கா நாள் போர்ச் சருக்கத்தில் 130 செய்யுள் வரை இருக்கிறது. இந்நூலாசிரியர் குமாரர் வரந்தருவார் செய்த பாயிரத்தில் 24 செய்யுட்களும் இருக்கின்றன.

---

419. No. 56 வில்லிபுத்தூரார் பாரதம்.

ஏடுகள் 170; சிதிலம் அபூர்த்தி Lines 5—6 in a Pape.

இதுவும் முற்பிரதியைப் போன்றது. இதில் பதினேராம் போர்ச் சருக்கமுதல் 17-ம் போர்ச் சருக்க முடிய இருக்கிறது.

**Colophon:**

செவுமிய ஞு புரட்டாசி மீ 12உ செவ்வாய்க் கிழமை நாள் குப்பைய பிள்ளை குமாரன் ஆபத்துத்தாரணப் பெருமாள் பிள்ளை எழுதின பாரதம் விருத்தம் 738 எழுதி வளர்ந்து நிறைந்து முடிந்தது.

---

420. No. 66 வில்லிபுத்தூரார் பாரதம்.

ஏடுகள் 60; அபூர்த்தி சிதிலம் lines 4—5 in a Page.

இதில் நிரைமீட்சிச் சருக்கம் ஆரம்பமுதல் 136-ம் செய்யுள் வரையில் இருக்கின்றது. ஆனுல் பெரும் பாலும் சிதைந்திருக்கிறது.

---

421. No. 64 வில்லிபுத்தூரார் பாரதம் உரையுடன்.

ஏடுகள் 73; அபூர்த்தி சிதிலம் Lines 3—4 in a Page.

இதில் கிருஷ்ணன் தூதுச் சருக்கத்தில் 102-ம் செய்

யுள் முதல் 155-ம் செய்யுள் வரை பொழிப்புரையுடன் இருக்கிறது. பிழை அதிகமாகக் காணப்படுகின்றன. உரையாசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை. இவ் யுரை அச்சிட்டிருப்பதாகத் தெரியவில்லை.

**Beginning :**

முட்ட நித்தில நிரைத்த பந்தரின கத்தசீறரி முகத்த கால்
வட்டமெத்தையொ.....................சைவாசவன் கொலென
வைகினன்
பட்ட வர்த்தனரும் மகுட.வர்த்தனரும் வந்து சேவடி
பணிந்தபி
னிட்டபொற்றவிசின் முறைமையா லினிதிருக்க வென்ற
வரை யேவியே.

ஏ—து. நூறுயோ.....................மகாமண்டபத்தில் முன்னே பவளக்கால் நாட்டின முத்துப்பந்தல் நடுவே பொன்னிற் சமைத்து ரெற்றின வற்கமழுத்திய நகை முகமான சிங்கரூபந்தாங்கின ஆசனத்திலே பொன் னெழுத்து மெத்தை யமைத்த பீடத்தின்மேலே தேவ லோகத்தில் தேவராசனைப்போலே இருந்தான் திரியோ தன மகாராஜன் பட்டவர்த்தனரும் மகுடவர்த்தனரும் அனந்தகோடி மன்னர் மண்டலீகரும் வந்து கும்பிடக் கும்பிட ராசகூட்டத்திற்............அவரவராசனத்திலே இருக்கச் சொல்லித் திரியோதனன் ஆமத்தின பின்னை யுஞ் சொல்லு.........யோதன' மகாராசன் (102)

**End :**

எரியமுதருந்தக்கானம் எரித்தனளகன்று போன
அரவினை யங்கர் கோமான் ஆசுகமாகக் கொண்டான்
வரிகழல் விசயன்றன்மேல் மறுகணை தொடாத
வண்ணம்
ஒருவரம் வேண்டு கென்ருன் உற்றவர்க் குறுதி
சூழ்வான்.

எ—து அர்சுனராசன் காண்டா வனத்தை அக்கினிக்கு அமிர்த போசனமாகத் தர்மம் பண்ணினான். அப்போது காண்டவனத்தில் ஒரு சர்ப்பம் அற்றகோனெனும் சர்ப்பம் மகாப் பேருடைய சர்ப்பம் தப்பிப்போய் அஸ்தினாபுரத்திலே போய் கர்ன மகா ராசனிடத்திலே அடைக்கலம் புகுந்தது. அந்த சர்ப்பத்துக்கு தினம் ஆயிரக்கலக்குழம்பு பால் வார்த்து வளர்கிறது. அந்த சர்ப்பம் அர்ச்சுனராசன் சிரசைத் துணிக்கிறேனென்று சவுரியங் கூறியிருக்குது. அதுக்கு அர்ச்சுனராசன் பேரில் ஒருகணையே ஒழிய மறுகணை தொடாமல் கர்ன்னனை வரம் வேண்டிக் கேளுமென்று குந்தாதேவிக்குச் சொன்னான் கிருஷ்ணதேவன். 155

---

### 422. No. 84 வில்லிபுத்தூரார் பாரதம் உரையுடன்.

ஏடுகள் 258 ; பூர்த்தி மிகச் சிதிலம் Lines 4 in a page.

இதில் கிருஷ்ணன் தூதுச் சருக்கம் பொழிப்புரையுடன் இருக்கிறது. மிகவும் சிதைந்திருக்கிறது.

---

### 423. No. 85 வில்லிபுத்தூரார் பாரதம்.

ஏடுகள் 206 ; மிகவும் சிதிலம் Lines 6—10 in a page.

இதில் கிருஷ்ணன் தூது முதல் பதினெட்டாம் போர்ச் சருக்க முடிய இருக்கிறது.

---

### 424. No. 86 வில்லிபுத்தூரார் பாரதம்

ஏடுகள் 137; சிதிலம் Lines 5—6 in a page.

இது 84-ம் நம்பரைப் போன்றது. கிருஷ்ணன் தூதுச் சருக்கம் பொழிப்புரையுடன் இருக்கிறது.

---

425. No. 87 வில்லிபுத்தூரார் பாரதம்.
ஏடுகள் 98: சிதிலம் Lines 4—6 in a page.

இதில் கிருஷ்ணன் தூது மூலம் முழுதும் இருக்கிறது. இத்தூதில் ஆரம்பமுதல் 89 செய்யுட்கள் மீட்டும் எழுதிக் கோக்கப்பட்டுள்ளன.

---

426. No. 88 (*a*) வில்லிபுத்தூரார் பாரதம்.
ஏடுகள் 60; சிதிலம் Lines 4—5 in a page.

இதில் முற்பிரதியைப் போலக் கிருஷ்ணன் தூது மூலம் முழுதும் இருக்கிறது.

---

427. (*b*) கணக்கதிகாரம் உரையுடன்.
Lines in a page.

இது கணிதத்தைப்பற்றிச் சொல்வது. இதனை இயற்றியவர் காரி என்பவர். இவர் பொன்னி நாட்டில் முகரியம் பதியில் கொறுக்கையர் மரபிற் பிறந்தவர். அபூர்த்தி.

**Beginning :**

கணக்கதி காரத்தைக் கருத்துடனே யானோதக்
கரிமுகனே வந்தென்னைக் கா.

கணக்கதி காரத்தைக் கருத்துடனே யானோதக்
கந்தனே வந்தென்னைக் கா.

ஐய வணுவிரவி பஞ்சுமயிர் நுண்மணலே
ஐயவி யெள் நெல்லு ஆனமிவை— செய்யவளே
எட்டின் வழியெல்லா மேத்தி யணலத்
தட்டில்லை பன்னிரண்டு சாண்.

எ—து. அணு 8 கொண்டது கதிரெழுதூள், கதிரெழுதூள் 8 கொண்டது கொத்துகள், கொத்துகள் 8 கொ

ண்டது பஞ்சுத்தூள், பஞ்சுத்தூள் 8 கொண்டது மயிர்முனை, மயிர்முனை 8 கொண்டது நுண்மணல், நுண் மணல் 8 கொண்டது ஐயவி, ஐயவி 8 கொண்டது சிறு கடுகு, சிறுகடுகு 4 கொண்டது எள்ளு, எள்ளு 4 கொண்டது நெல்லு, நெல்லு 8 கொண்டது விரல், விரல் 12 கொண்டது சாண்.

எண்ணி யுலகத் தியம்புங் கணக்கதனை
மண்ணி லறிவோர்க் கறிவுரைத்தேன்--ஒண்ணுதலாய்
பாரை முழுதும் பரந்த புகழ்க் கொறுக்கைக்
காரிதான் தோணவன் காரி யென்பவனே.

**End :**

முந்திரி 2 கொண்டது அரைக்காணி, அரைக் காணி 2 கொண்டது (காணி) உ ; உ 4 கொண்டது (ஒருமா)ப; ப 5 கொண்டது (கால்)வ; வ ,4 கொண்டது ஒன்றெனப்படும்; ஒன்று 10 கொண்டது 10; பத்து பத்து கொண்டது-100 ; 100 பத்துக்கொண்டது 1000; 1000 பத்துக் கொண்டது 10,000; பதினாயிரம் 10 கொண்டது 10 நூறாயிரம் ; 10 நூறாயிரம் 10 கொண்டது கோடி ; கோடி 100 லட்சம் கொண்டது மகாகோடி ; மகாகோடி 100 லட்சம் கொண்டது சங்கம்; சங்கம் 100 லட்சம் கொண்டது மகா சங்கம்; மகாசங்கம் 100 லட்சம் கொண் டது விந்தம்; விந்தம் 100 லட்சம் கொண்டது மகா விந்தம் ; மகாவிந்தம் 100 லட்சம் கொண்டது பதுமம்; பதுமம் 100 லட்சம் கொண்டது மகாபதுமம்; மகாபது மம் 100 லட்சம் கொண்டது நாடு ; நாடு 100 சட்சம் கொண்டது மகாநாடு; மகாநாடு 100 லட்சம் கொண்டது சமுத்திரம் ; சமுத்திரம் 100 லட்சம் கொ டது வெள்ளம் ; வெள்ளம் 100 லட்சம் கொண்டது மகா வெள்ளம் ; மகாவெள்ளம் 100 லட்சம் கொண்டது பிரளயம்.

---

**428. No. 89 வில்லிப்புத்தூரார் பாரதம்.**
**ஏடுகள் 49 அபூர்த்தி சிறிது சிதிலம்**
**Lines 4—5 in a page**

இதில் கிருஷ்ணன் தூது மூலம் 10-ம் செய்யுள் முதல் 252 செய்யுட்கள் இருக்கின்றன.

---

**429. No. 90 (a) வில்லிபுத்தூரார் பாரதம் உரையுடன்.**
**ஏடுகள் 45; அபூர்த்தி Lines 5—8 in a page.**

இதில் கிருஷ்ணன் தூதுச் சருக்கம் 245-ம் செய்யுள் வரையிலும் பொழிப்புரையுடன் இருக்கிறது.

---

**430 (b) 430 உத்தரபோதம்.**
**Lines 5 in a page.**

இது வினாவும் விடையுமாக ஞான விஷயங்களைச் சொல்வது. இதில் 51 செய்யுட்களிருக்கின்றன. இதனைச் செய்தவர் பரமாநந்த முனிவர் : 4, 8, 9-ம் நம்பர் ஏடுகள் முரிந்த பாதி ஏடுகளாக இருக்கின்றன.

**Beginning :**

பொன்மலை வில்லிய மைந்தன் போதக ஞதி நாதன்
நன்மலை யரையன் தந்த நாரணி பயின்ற வானை
நின்மல வடிவ னென்ற னெஞ்சகத் திருந்து வாழ்வோன்
மென்மலர்ப் பாதந் தன்னை வேழ்வியான் போற்று
வேனே.

பூமகளருளால் போத பூரணி யருளால் துய்ய
நாமக ளருளா லென்றன் நற்குரு வருளா லாறு
மாமுக னருளா லீசன் மலரடி யருளா லிந்தப்
பூமிகள் தனிலே ஞானப் பொருள் தனைப் புகலலுற்றும்.

**End :**

மாசிலாப் பரமானந்த மாமுனி மொழி.....................
..................ஞேடுகந்த பேரின்பம் பெற்றேன்
ஊசையா..... ......................................................
...............!யென்றன்ஊயுலகிலே யாவரேனும்
பத்தியாயுகந்து கேட்க...... ......னருளிஞரே... (51)

ஹரி ஓம் ராமசந்நவே துணை சிவமயம்.

---

431. No. 91 வில்லிபுத்தூரார் பாரதம் உரையுடன்.

ஏடுகள் 36 ; அபூர்த்தி Lines 4—5 in a page

இதில் கிருஷ்ணன் தூதுச் சருக்கத்தில் 56 செய்யுட்கள் பொழிப்புரையுடன் இருக்கின்றன.

**Colophon :**

சித்திரபானுஸ்ரீ தைமீ 25உ

---

432 No. 92 (*a*) வில்லிபுத்தூரார் பாரதம்.

ஏடுகள் 51 ; பூர்த்தி Lines 4—5 in a page.

இதில் கிருஷ்ணன் தூதுச் சருக்கம் மூலம் முடியவிருக்கிறது.

**Colophon:**

பவ-ஸ்ரீ-ஆவணிமீ-1உ-வெள்ளிக்கிழமை சுக்கிர வார நாள் கிருஷ்ணன் தூது மாசிலாமணி எழுதி முகிந்தது முற்றும்.

---

433. (*b*) நவரத்தினமாலை.

Lines 6—7 in a page.

இது அம்பிகை தோத்திரம். ஒன்பது செய்யுட்களை யுடையது. மிக்க இனிமை வாய்ந்தது ஆசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை. ஆனால் 'அவ்வைபாடல்' எனக் கடைசியில் எழுதப்பட்டிருக்கிறது. அச்சிடப் படவில்லை.

**Beginning :**

ஓங்காரமாகி ஒளியாகி நின்ற உருவங்கள் வேறு விதமாய்
ரீங்கார மாகி யிடைபிங் கலைக்கு ளெழுகின்ற ஏக இறைவீ
சாங்கால மைந்து பூதங்களைன்கு காரணங்கள் மூன்று குணமொன்
றுங்காலம் யானுன் னடிபேணவேணு மரனாரிடங் கொளமுதே.

முன்புற்ற நாடிமூலந் துடங்கி முதலான வாச லளவும்
இன்புற்ற தண்டி னிடமே பிரிந்து வலமே நடந்து இறைவி
யென்புக் கிசைந்த தசைதோல் நரம்பு எழுகின்ற வாயு விடுநாள்
அன்புற்று யானுன் னடிபேண வேணு மரனாரிடங் கொளமுதே.

**End :**

படியா லளந்து இருநாழி செந்நெல் பதர் போக்கி நின்ற படிகொண்
டடியாரு நீரு மிடியாம லுண்ண அதிபோக மான இறைவி
கடிகால தூதர் கொடிதாக வந்து கடைவாசல் கொள்ளு மளவில்
அடியார் நினைந்துன் னடிபேண வேணு மரனாரிடங் கொளமுதே.

அவ்வைபாடல் சிதம்பரமெழுதிக் கொடுத்து,

## 434. (*c*) திருச்செங்கோட்டகவல்.
Lines 7 in a page.

இது சேலம் ஜில்லாவிலுள்ள திருச்செங்கோட்டில் கோவில் கொண்டுள்ள முருகக் கடவுள் தோத்திரம், ஆசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை. சிதைந்திருக்கிறது. அச்சிடப்படவில்லை.

**Beginning.**

சிந்தையி லெழுந்த செஞ்சுடர் வெள்ளச்
செங்கம லத்துள் செம்பொற் பதியுள்
ளுந்தியி லுதித்த ஓங்கா ரத்து
ளந்த மிலாத............லா
யகிலாண் டமுமா யகிலமு மாகி
யுகார வுயிரா யோரைஞ் செழுத்தாய்
மகாரத்தி னுள்ளே மாட்சிப்ப தாகி
சிகாரத்தி னுள்ளே செம்மை பரந்து
வகாரத்தி னுள்ளே வண்மை சிறந்து
யகாரந் தன்னில் எல்லாந் தானாய்
நகாரத்தி னின்ற நண்பா சரணம்
நாலித ழிருக்கு நாதா சரணம்
ஆறித ழிருக்கு மாதி சரணம்
பத்தித ழிருக்கும் பரமா சரணம்
பன்னிரண் டிதழில் பதியே சரணம்
பதினா றிதழிற் புருடா சரணம்
ஈரொண்ப திதழிருக்கு மிறைவா சரணம்
எல்லாந் தானா யேகாட் சரத்துள்
நில்லா நிலையுள் நிறுத்தினை யென்னை.

**End:**

நீயாய் நானாய் நின்றாய் சரணம்
நீள்சுழல் தன்னை நினைப்பவர் தங்கள்
நீண்ட பிறப்பை யறுப்பாய் சரணம்

திருச்செங்கோட்டி லுறையுஞ் செல்வனென்
சிந்தையே.

ஆறுமுகந் துணை வேல் வாழி வாழியே

---

435. No. 93 வில்லிபுத்தூரார் பாரதம்.

ஏடுகள் 49; அபூர்த்தி Lines 5—6 in a page.

இதில் கிருஷ்ணன் தூதுச் சருக்கம் மூலம் 213-ம் செய்யுள் வரையில் இருக்கிறது.

---

436. No. 699 வில்லிப்புத்தூரார் பாரதம் உரையுடன்.

ஏடுகள் 14; அபூர்த்தி Lines 6—7 in a page.

இதில் கிருஷ்ணன் தூதுச் சருக்கத்தில் (18, 19. 22, 23, 59, 60, 74, 126, 127, 130, 131, 140, 141, 151, 152, 194, 195, 197, 198, 200, 201, 236, 238, 239, 240, 241, 248) இந்த இருபத்தேழு செய்யுட் களுக்கு மட்டும் உரையிருக்கிறது.

**Beginning :**

........................மெய்க்காகத் திருமால் நின்ற
நிலைகண்டு மிவள்விரித்த குழல்கண்டு மிமைப்
பொழுதில் நேரார் தம்மைக்
கொலைகண்டு மகிழமா மலவன்குடைக்கீ ழுயிர்வாழக்
குறிக்கின்றாயே.

எ—து. மலையைப்போலே பாரித்த என்னுடைய கையில் தெண்டாயுதப் பிரபலங் கண்டும் அர்ச்சுன ராசன் காண்டிபத்தின் வலிமை கண்டும் நகுலராசன் புரவி வல்லபங் கண்டுஞ் சகாதேவன் வீரவாளின்

சவுரியங்கண்டுஞ் சகாயமாக நமக்கு கிருஷ்ண நாரா யண சுவாமி துணையாக நிற்கிறது கண்டுந் துரோபதை அளகபாரம் விரித்து நிற்கிற பரிபவங்கண்டும் நிமிஷ மாத்திரத்திலே நமக்கு சத்துருவான சுயோதனன் முதலான நூறுபேரையுங் கொன்று அவர்களிட சேனைப் பிரளைய மடங்கலுங் கொன்று பிரியப் படாமல் பகை யாளி குடைக்கீழே அடங்கி உயிர் வாழும்படி தர்ம ராசனே எண்ணுகிறீர். இது காரியமல்லவென்று பின் னையும் வசனிக்கிருன் வீமசேனன்.

**End :**

மாயனுர் விர கிதுவென மதித்தகை வள்ளல்
நீயநாளெனைப் பயந்தவளெனினு நின்மொழி
நெஞ்சுறத்தேறேன்
பேயனுர் சிலர் பேறறி வின்மையிற் பெற்றதாயெனக்
கென்னத்
தூயநாகரீக மமைந்ததோர் துகிலாற் றுன்பமுற்
றென்புருவானுர்.

என்றது இப்படிக் குந்திதேவி யம்மன் சொன்னது கேட்டு, இது கிஷ்ண நாராயணசுவாமி சொன்ன சற்பனை வசன மென்ன மனதிலே யெண்ணிச் சொல்லு கிருன், கர்ன்னமகாராசன் குந்திதேவி யம்மனே, தேவரீ ரடியேனைப் பெற்றதாயென்று சொன்னுல் நான் நம்பத்தக்கதேயில்லை, யப்படி யனேகம்பேர் பொய் வசனஞ் சொல்லிப் பேய்ப் புத்தியாக வந்து என்னைப் பெற்றதா யென்ருர்கள். என்னிடத்திலே நாகரீக மானது ஒரு தெய்வீகப் பட்டுத்துயிலுண்டு. அந்தத் துயில் தரித்துக் கொள்ளச் சொல்லிக் கொடுக்க அவர்கள் தரித்துக் கொண்ட உடனே அந்தத்துயில் தரித்துக்கொண்ட பேர்களைப் பரிகரித்து மாங்கிஷ மெல்லாம் போய் எலும்பு உள்பட நிர்மூலமாக்கிவிடும்.

அவர்களிப்படி யனேகம்பேர் எலும்பாகச் செல்லரித்த சரகுபோலே யாகிவிட்டார்கள் என்று கர்ன்னமகா ராசன் சொல்லக் குந்திதேவியம்மன் சொல்லுகிருர்.

---

## 437. No. 57 பாரதம் மகாவிந்தம்.

ஏடுகள் 248; பூர்த்தி Lines 5—6 in a Page.

இது, பாண்டவர்கள் கலியுகம் பிறந்தவுடன் இவ்வுலகை வெறுத்துச் சுவர்க்கம் சென்ற கதையை விரித்துரைப்பது. செய்யுள் நடை சிறந்ததன்று. ஆசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை. ஆனல் 2-ம் செய்யுளால் விநாயகன் என்பவரால் செய்யப் பட்டது என்று ஊகிப்பதற்கிடமிருக்கிறது. செய்யுட் டொகை 1378. இதில் இரண்டு பிரதிகள் இருக்கின்றன. அச்சிடப்படவில்லை.

**Beginning :**

பாண்டவ ரைவரும் பாரை யாண்டிடி
லீண்டிய கலியுக மெய்துங் காலையில்
பூண்டிடு மகாபெந்தம் போக வேன்றி (ண்டிடி)ல்
ஆண்டருள் விநாயக னடிவணங்குவாம் (1)

அருச்சனன் பாண்டவ ரய்வர் மாதுடன்
விருப்புள மகாபெந்த மெய்த வெண்ணிய
தருக்குள விஞயகன் தமிழிற் பாடவே
மருப்புடை விஞயகர் வந்து தோன்றுமே (2)

**End :**

பாண்டவர் மகாபெந் தத்தே பரிவுடன் போன சொல்லை
யீண்டியே கற்ருேர் கேட்டோ ரியலுடனெழுதிச்
சேர்த்தோர்
பூண்டதோர் பாபம் நீங்கிப் புத்திர சம்பத் துண்டாய்
ஆண்டதோர் கரிய மால்தன் னருள்பெற்று வாழ்வார்
தாமே 95

அந்தணர் வாழி செங்கோல் அரசரும் வாழி செய்ய
செந்தமிழ் வாணர் சைவர் சிறந்தவெள் ளாளர் வாழி
பந்தமா மென்று மெந்தன் பரிவுகற் பகமனைத்தும் வாழி
சந்ததந் தருமஞலே சகலரும் வாழி தானே 96

ஆக விருத்தம் 1378.

**Colophon:**

யுவஞல மார்கழிமீ" 13வ தஞ்சாவூரிலிருக்கும் ா கில்லோசி அப்பா அவர்கள் கிட்ட இருக்கும் கோவிந்தன் மகாவிந்தம் சுவடி எழுதி முடிஞ்சுது முத்தும்.

---

438. No. 58 பாரதம் மகாவிந்தம்.

ஏடுகள் 168 ; அபூர்த்தி Lines 7—13 in a Page.

இது முன்பிரதி போன்றது. இதில் ஆரம்பமுதல் 'சீதை மோக்ஷம்' என்னும் பகுதியில் 15-ம் செய்யுள் வரையும் இருக்கிறது.

---

## X புராணம்.

439. No. 234 (a) கந்தபுராணம்.

ஏடுகள் 303 ; Lines 20 in a Page.

இது, வடமொழிக் காந்தபுராணத்துச் சங்கர சங்கிதையின் பன்னிரண்டு கண்டங்களுள் முதற்கண்டமாகிய சிவரகஸ்ய கண்டத்திலுள்ள கந்தரது சரித்திரத்தைக்கூறுதலின் கந்தபுராணம் எனப் பெயர் பெற்றது. இதில் அறுமுகக்கடவுள் திருவவதாரஞ்செய்து, ஆயிரத்தெட்டு அண்டங்களை நூற்றெட்டுயுகமளவும் அரசாண்ட சூரபன்மாவைப் போரில்வென்று, தேவர்களைச் சிறைமீட்டு விண்ணிற் குடியேற்றித் தெய்வயானையையும் வள்ளிநாயகியையும் திருமணம் புரிந்த வரலாறும் பிறவும், கூறப்பட்டுள்ளன. இது தமிழில்

பெருங்காப்பியத்திற்குரிய இலக்கணத்தோடமைந் திருப்பினும், அறுமுகக்கடவுளின் மகிமையை யெல் லாம் விரித்துரைப்பதால், படிக்குந்தோறும் அக்கடவு ளிடத்தில் பத்தி விளைவிப்பது. இது உற்பத்திகாண் டம், அசுரகாண்டம், மகேந்திரகாண்டம், யுத்தகாண் டம், தேவகாண்டம், தக்ககாண்டம், உபதேசகாண்டம் என ஏழுகாண்டங்களை உடையது. அவற்றுள், முதலாறு காண்டங்களும் கச்சியப்ப சிவாசாயராலும், ஏழாவதுகாண்டம் அவரது மாணுக்கர் கோனேரியப்ப முதலியாராலும், இயற்றப்பட்டன. செய்யுட்டொகை 14696. செய்யுள் நடை மிகவும் சிறந்தது. அச்சிடப் பட்டிருக்கிறது.

இதனை இயற்றிய கச்சியப்ப சிவாசாரியார் காஞ்சி புரம் காளத்தியப்பசிவாசாரியரது புதல்வர். குமரகோட் டத்து அர்ச்சகர். இவர் சங்கநூற்பயிற்சியிலும் சமய நூல் ஆராய்ச்சிலும் வல்லவரென்பதும் முருகப்பெரு மானிடத்து மிக்க அன்புடையவர் என்பதும் இந்நூலைப் படிப்பவர்க்கு இனிது விளங்கும்.

கவிவீரராகவன் காஞ்சிபுரத்தில் படித்தபோது கந்தபுராணம் கச்சியப்பர் பாடியது எனப், "பொங்கு தமிழயோத்தியில் வாழ்" என்னும் செய்யுள் தமிழ் நாவலர் சரிதையிற் காணப்படுதலின், கச்சியப்பரும், வீரராகவமுதலியாரும் சமகாலத்தினர் என்பர் ஒரு சாரார்.

**Beginning :**

திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் [தாமரை நாயக
னகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்.]

தேக்கு தெண்டி ரைப் புணரிநீர் வெம்மையைச்
சிந்தி
யாக்கி வாலொளி யுலகில்விட் டேகலா லடைந்
தோர்

நீக்க ரும்வினை மாற்றிநன் னெறியிடைச் செலுத்திப்
போக்கின் மேயின தேசிகர்ப் பொருவின
புயலீகள்

**End :**

வற்ரு வருள்சேர் குமரேசன்வண் காதை தன்னைச்
சொற்ருரு மாராய்ந் திடுவோருந் துகளுருமே
கற்ருருங் கற்க முயல்வாருங் கசிந்து கேட்க
லுற்ருரும் வீடுநெறிப்பா லுறுவ ரன்றே

பாராகியேனைப் பொருளா யுயிர்ப்பன்மையாகிப்
பேரா வுயிர்கட் குயிராய்ப் பிறவற்றுமாகி
நேராகித் தோன்ற லிலதாகி நின்ருன்கழற்கே
யாராதகாத லொடுபோற்றி யடைதுமன்றே.

வள்ளியம்மன் திருமணப்படல முற்றும்
தெட்சணகாண்டம் முற்றும்.

குறிப்பு :

இதில், உற்பத்திகாண்டமுதல் தக்ககாண்டம்ஈருக ஆறுகாண்டங்களும் இருக்கின்றன. முதல் ஏடு முறிந்து இருக்கிறது.

---

## 440. (*b*) சிவதருமோத்தரம்.

### Lines 16—19 in a Page.

இது, சைவாகமத்தின் ஒருபகுதியாகும். பரமதரு மாதியியல் முதல் கோபுரவியல் வரை பன்னிரண்டு இயல் களையுடையது.

இதில், இந்நூல் முழுவதுமிருக்கின்றது. இதனை இயற்றியவர் மறைஞானசம்பந்த நாயனுர். இவரைப் பற்றிய விவரங்களை 363 நம்பரில் காண்க. இது அச்சிடப்பட்டிருக்கிறது.

**Colophon.**

விபவஹ சித்திரைமீ 21உ மங்களவாரம் சதய நட்சத்திரமும் கூடின சுபதினத்தில் தஞ்ச நகரம் ஆறு

முகத்தா பிள்ளைக்கு சிவஞானதேசிகனடிமையான சுந்தரலிங்கவாத்தியார் எழுதின சிவதருமோத்தரம் வாழ்க.

தருமையுங் கமலையு மதுரையுந் தழைக்க
வருசிவஞான தேசிகன் மரைமல
ரிருபத மனுதின மிறைஞ்சுது
மருடரு மாரமு தருந்துதற் பொருட்டே.

சிவமயம்.

---

441. No. 235 கந்தபுராணம்.

ஏடுகள் 358; Lines 5 in a Page.

இதில் கடவுள் வாழ்த்து முதல் திருச்செந்திற் படலம் ஈருக உற்பத்திகாண்டம் முடிய இருக்கின்றது. சிற்சில இடங்களில் பூச்சியரித்திருக்கிறது.

உற்பத்திகாண்டம் முற்றும்.

ஆக காண்டத்திற் படலம் 32-க்குத் திருவிருத்தம் 1772

திருச்சிற்றம்பலம்.

---

442. No. 236 கந்தபுராணம்.

ஏடுகள் 377; Lines 5 in a Page.

இதில் மாயைப்படல முதல் அமரர் சிறைபுகு படலம் ஈருக அசுரகாண்டம் முடிய இருக்கிறது. சிதிலம் சிலவிடத்தில் காணப்படுகின்றது.

அசுரகாண்டம் முற்றும்.

ஆக படலம் 43-க்கு திருவிருத்தம் 1906.

ஆக காண்டம் 2-க்குப் படலம் 75-க்கு
திருவிருத்தம் 3678.

443 No. 237 கந்தபுராணம்.
ஏடுகள் 225; Lines 5 in a page.

இதில் வீரவாகு கந்தமாதனம் செல்படலம் முதல் சூரனமைச்சியற் படலம் ஈருக மயேந்திரகாண்டம் முடியவிருக்கிறது.

மயேந்திரகாண்டம் முற்றும்.
ஆகபடலம் 21-க்கு திருவிருத்தம் 1075.

---

444. No. 238 கந்தபுராணம்.
ஏடுகள் 296; Lines 5 in a page.

இதில், ஏமகூடப் படலம் முதல் அக்கினிமுகன் வதைப்படலம் ஈருக யுத்தகாண்டத்தில் எட்டுப் படலங்கள் இருக்கின்றன. சிற்சில இடங்களில் சிதைந் திருக்கிறது. அபூர்த்தி.

---

445. No. 239 கந்தபுராணம்.
ஏடுகள் 96; Lines 6—8 in a page.

இதில், உற்பத்திகாண்டத்தில் கடவுள் வாழ்த்து 8-வது செய்யுள் முதல் தவங்காண்படலம் 28-ம் செய்யுள் முடிய இருக்கிறது. மிகவும் சிதைந்துள்ளது. அபூர்த்தி.

---

446. No. 240 கந்தபுராணம்.
ஏடுகள் 16; Lines 10—11 in a page.

இதில், தக்ஷகாண்டத்தில் உபதேசப்படல முதல் கையிலை செல்படலத்தில் 15-ம் செய்யுள் வரைஇருக் கிறது. அபூர்த்தி சிதிலமாயிருக்கிறது.

---

### 477. No. 244 கந்தபுராணம்.

ஏடுகள் 307; Lines 6—11 in a page.

இதில், மயேந்திரகாண்டம், நகரழிபடலம் 133வது செய்யுள்முதல் சகஸ்திரவாகுவதைப்படத்தில் 30 செய்யுட்களும், யுத்தகாண்டம், ஏமகூடப்படல முதல் மீட்சிப்படல முடியவும், தேவகாண்டம் திருப்பரங் குன்றம் சேர்படலமுதல் இந்திரப்புரிப்படல முடியவும், தக்ஷகாண்டம் உபதேசப்படல முதல் வள்ளியம்மை திருமணப்படல முடியவும் இருக்கின்றன. தக்ககாண் டத்தில் 12 ஏடுகள் மீட்டும் எழுதிக்கோக்கப்பட் டுள்ளன.

---

### 448. No. 245 கந்தபுராணம்.

ஏடுகள் 23; Lines 7—9 in a page.

இதில், மயேந்திரகாண்டம் அவைபுகுபடலம் 22ஆம் செய்யுள்முதல் அமைச்சியற்படலம் முடியவும் யுத்தகாண்டம் ஏமகூடப்படலமுதல் மீட்சிப்படலம் முடியவும் தேவகாண்டத்துள் பரங்குன்று சேர்படலம் முடியவும் இருக்கின்றது.

---

### 449. No. 247 கந்தபுராணம்.

ஏடுகள் 35; Lines 7—8 in a page.

இதில் உற்பத்திகாண்டம் மேருப்படலம் 74-வது செய்யுளிலிருந்து திருவவதாரப் படலம் 122-வது செய்யுள் முடிய இருக்கிறது, அபூர்த்தி.

---

450. No. 247 A கந்தபுராணம்.

ஏடுகள் 30; Lines 6—8 in a page.

இதில் உற்பத்திகாண்டத்தில் தவங்காண்படல முதல் துணைவர்வருபடலம் வரை இருக்கிறது. ஏடுகள் 67 முதல் 97 வரையில் இருக்கின்றன.

---

451. No. 241/1 உபதேசகாண்டம்.

ஏடுகள் 308; Lines 5—6 in a page.

இது சங்கரசங்கிதையின் ஏழாவது காண்டம். சூரபன்மன் முதலியோர்களின் முன்னைய வரலாறும், விபூதி, ருத்திராக்ஷம், சிவநாம மகிமைகளும், பிறவும் எடுத்துரைப்பது. கைலைமான்மியச்சருக்க முதல் சிவ காட்சிப்பேற்றுச் சருக்கம் ஈருக நாற்பத்தொரு சருக்கங்களை உடையது இதனை இயற்றியவர் கோனேறியப்ப முதலியார். காஞ்சிபுரத்தில் செங்குந்தர்மரபில் பிறந்தவர். கந்தபுராணம் பாடிய கச்சியப்ப சிவாச்சாரியரது மாணுக்கர். இந்நூல் மூன்று சம்புடமாக எழுதப்பட்டுள்ளது. அவற்றுள் இது முதலாவதாகும். இந்நூல் அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning :**

திங்க ளஞ்சடை யெம்பிரான் றிருவருள் பெருக
பொங்கு திங்கள்மும் மாரியும் பொழிக பூதலத்தி
லங்க ணுயகன் றிருக்குழாத் தொண்டரீ டேறத்
தங்கு நான்மறைச் சைவநூ லோங்கறந் தழைக்க.

**End :**

நோற்றவர் நோற்பவர்க்குறிய பகுந்தளிப்போர் நோற்
பவரால் நுவலுங்கேள்வி
யேற்பரிக் கதைபடிப்போ ரிருசெவிதாழ்த்துளந்தாழ்ப்
போரிவை நோற்பித்த

போற்றிய குரவனடி வீழ்ந்திறைஞ்சித்தமக்கியன்ற
புரிந்தோர் செங்கண்
மாற்பொரு கோட்டி மிலேறு கடவுள்பிரான் றிருக்கயிலை
மன்னிவாழ்வார்.

குறிப்பு :

இதில் கைலைமான்மியச்சருக்க முதல் சிவவிரத மான்மியச்சருக்கம் ஈருக ஒன்பது சருக்கங்களே இருக்கின்றன.

---

## 452. No. 242/2 உபதேசகாண்டம்.

ஏடுகள் 346; Lines 5 in a page.

இது முன்பிரதியோடு தொடர்ந்த பிரதி.

**Beginning :**

முக்குறும் பெற்ற சிந்தனை மூரிவண்டரற்று
மைக்க ருங்குழல் பாகன்மா மலரடி வருந்தீ
ரிக்க ணஞ்சிவ விரதமுற்றிசைத்தன னுமக்குச்
செக்க ரஞ்சடை யெம்பிரான் புண்ணியந் தெரிக்கேம்.

**End:**

அன்பதி ரட்டிக்கும் பரியாகமருளிற் செய்
தும்பர் வணங்.........த்தன்னுளம் வைத்துக்
கம்பலை முன்னீர் வையமளித்துக் கடைசெல்லா
செம்பதுமத் தாடன்னெடுமுன்னைத் திதிபெற்ருன்.
ராமாவதாரமான்மிய முற்றும்.

குறிப்பு :

இதில் பத்தாவது சிவபுண்ணியமான்மியம் முதல் இராமாவதாரமான்மியம் ஈருக அதாவது இருபதாவது சருக்க முடிய இருக்கின்றது.

---

### 453. No. 243/3 உபதேசகாண்டம்.
ஏடுகள் 276; Lines 5 in a page.

இதுவும் முன்பிரதியோடு தொடர்ந்த பிரதி.

**Beginning :**

பஞ்சவ ரேவத்தூது...... நடந்தப் பகையோரை
யெஞ்ச முடிக்குந் தன்மையினின்ருனிவர்யாருந்
துஞ்சின பின்னர்த் தன்பதமுற்ருன் றுரிசற்ருன்
செஞ்சடையோனைத்தாளிணை யின்னுந் தெரிசிப்பான் 5

**End :**

வாழி நான்மறை வாழிய வந்தணர்
வாழி சைவ மனுமுறை யோங்குக
வாழி வையகம் வாழிய மன்னுயிர்
வாழி வாழி யறநெறி வாழியே.

சிவகாட்சிப்பேறு முற்றும்.

குறிப்பு :

இதில், முதல் ஏடு இல்லை. மாயன்வரம் பெறுமான்மிய முதல் சிவகாட்சிப்பேறு மான்மியம் ஈருக இருக்கின்றது. கந்தபுராணம் யுத்தகாண்ட ஏடுகள் 9 கோக்கப்பட்டுள்ளன.

---

### 454. No. 246 உபதேசகாண்டம்
ஏடுகள் 211; Lines 6—12 in a page.

இதுவும் முன்பிரதி போன்றது. ஆனுல் அதைவிட மிகவும் பழமையாகக் காணப்படுகின்றது.

இதில், 'குழவிவெண்பிறை மிலைச்சியோற் குணித்த மாதவத்தி
னிழைதடம்புனலருவி தாழிமையமீன்றெடுத்த

மழைமதர்த்தகண் மரகதப்பசும்பிடிபயந்த
தழைமடற்செவித் தந்திபொற் சரணமேசரணம்'

என்னும் செய்யுள் முதலில் காணப்படுகின்றது. மற்றையவைகளெல்லாம் முற்பிரதிபோன் றுள்ளவை.

குறிப்பு :

இதில் கைலாயமான்மிய முதல் திரிபுரவிசய மான்மியத்தில் 171-வது செய்யுள் முடிய இருக்கிறது. 29-வது சருக்க முதல் 41-வது சருக்க முடியவில்லை.

---

455. No. 413 உபதேசகாண்டம்.
ஏடுகள் 175; Lines 5 in a page.

இதுவும், முன்பிரதிபோன்றது. இதில் அயோமுகி வரலாறு படலத்தில் 22-ம் செய்யுள் முதல் சிவவிரத மான்மியம் 73-ம் செய்யுள் வரையும் இருக்கிறது.

---

456. No. 265 கூர்மபுராணம்.
ஏடுகள் 471; பூர்த்தி. Lines 7 in a page.

இது, கூர்ம வடிவுகொண்ட விஷ்ணுமூர்த்தியால் இந்திரத்துய்மனுக்கும் மற்றைய இருடிகட்கும் கூறப்பட்டது. வடமொழி கூர்மபுராணத்தின் மொழிபெயர்ப்பாகிய இது பூர்வகாண்டம் உத்தரகாண்டமென இரண்டு பெரும்பாகங்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. இதனை இயற்றியவர் அதிவீரராமபாண்டியர்.

அத்தியாயம் 94. செய்யுட்டொகை 3715. அச்சிடப்பட்டுள்ளது.

**Beginning :**

வெண்ணிலாக் கற்றை கான்று விளங்குமோர்
பிறைக்கோடின் றி
யெண்ணிலோர் பாகங் கூந்தற் பிடியென விருந்த
வாற்ருற்
பெண்ணெரு பாகம் வைத்த பிஞ்ஞக னுருவு
காட்டு
மண்ணலங் களிநல் யானை யடிமலர் சென்னி
வைப்பாம்

* * * *

கடலகமுழுதும் பொதிந்தபேழ் வயிற்றுக் கடவுண்
மோட்டாமை யெம்பெருமான்
வடமொழிதொகுத்த தெய்வமாக் கதையை வடித்த
செந்தமிழினுற் செய்தான்
படுமதஞ் செருக்கிப் பாகுடல் பிளந்துபடர்சிறை
மழலைவண்டோச்சு
மடுசினக் களிற்று மானவேல் வழுதியட லதிவீரபூபதியே.

**End :**

எதிர்மலைந்தேற்ற வெஞ்சமத் தரசரிடுதிறை கடை
யளந்தறியா
மதுரையும் புகாரும் வஞ்சியும் புரக்கு மானவேல்
வழுதியர் பெருமா
னதிர்பொலன் கழற்கா லடலதி வீர னரிறபத் தெரிந்து
நன்கிசைத்த
முதுதமிழ்க் கூர்மபுராணமுற் றுணர்ந்தோர் முத்திவீட்
டினிதுவீற் றிருப்பார்

தொண்ணூற்று நாலாவது பிராகிருதப்பிரளையமு மாத்தியந்தப்பிரளையமு முரைத்தவத்தியாய முற்றும்.

உத்தரகாண்ட முற்றும்.

ஆக அத்தியாயம் 94-க்கு திருவிருத்தம் 3715.

குறிப்பு :

கூர்மபுராணத்து அத்தியாயங்களின் பெயர் விவரம் கண்ட ஏடுகள் மூன்று கோக்கப்பட்டுள்ளன.

---

457. No. 266 கூர்மபுராணம்.

ஏடுகள் 250 பூர்த்தி, Lines 7—10 in a page.

இது, 265 ஆம் நம்பரைப்போல முழுவதுமிருக்கிறது.

ஆக அத்தியாயம் 94-க்கு திருவிருத்தம் 3715.

**Colophon :**

குரோதி-ஸூ ஆனி-மீ 7-உ ஆதித்தவாரநாள் கூர்ம புராணம் எழுதி முடிந்தது முற்றும். செம்பரம்பாக்கம் சொக்கப்ப முதலியார் புத்திரன் வசந்தராயன் எழுத்து. சித்திவிநாயகர் சரணம். மீனாட்சி சொக்கலிங்கம் சிதம்பரம் அருணாசலம் தியாகராசர் துணை.

---

458. No. 267 கூர்மபுராணம்.

ஏடுகள் 189 அபூர்த்தி, Lines 5 in a page.

இதில் முதலிலிருந்து 21-வது அத்தியாயத்தில் 50 செய்யுள் முடிய இருக்கிறது. முதலில் இரண்டு ஏடில்லை. சிதிலமதிகம்.

---

459. No. 279 (a) சரபபுராணம்.

ஏடுகள் 74, Lines 5—7 in a page.

இது, சிவபெருமான் சரபாவதாரமெடுத்து நாரசிங்கத்தை அடக்கியது முதலியவற்றைக் கூறுவது. நரசிங்கவுற்பத்திச்சருக்கம், கடவுளர் முறையிடு சருக்

கம், வீரபத்திரனெழுச்சி, அறிவுறுத்திய சருக்கம், சலந்தரன்வதைச் சருக்கம், சக்கரம்பெற்ற சருக்கம், நரசிங்கர்வதைச் சருக்கம் என ஏழு சருக்கங்களை உடையது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. அச்சிடப்படவில்லை.

**Beginning :**

தற்பரத்தொளிர் தற்சிவ சிற்பரத்
தற்புதத்தை யறிந்தடைந் தின்புற
முற்ப வக்கடல் சாடிய மும்மத
கற்ப கத்தை[தக் கருத்து ளிருத்துவாம்].

அடிமுடிவொன் றில்லாத பரபோகத் திருவுருவத்
தம்மை ஞானக்
கொ]டியுதவு ம]யூரவிரற் கொடியாளை யுலகமெல்லாங்
கொடுமை நீடும்
படிபுரியுஞ் சூரனுரம் பரவையுரங் கிரியினுரம்
பதைப்பச்சாடும்
வடிகிரண வயிலிலைவேற் குமரனிரு பதகமல மனத்துள்
வைப்பாம்.

**End :**

இக்கதையை விரும்பினர்கள் கேட்டவர்க
ளிசைத்தவர்க
டக்கசிவ லோகத்திற் றங்கிமகிழ்ந் திறைவனுட
னெக்கவுறைந் தவனுடைய வுருவமும்பெற் றழியாத
மிக்கபரி பூரணத்தி னீங்காமல் விளங்குவார்கள்.

---

### 460. (*b*) ததீசிபுராணம்.
### Lines 7 in a page.

இது, ததீசிமுனிவரது பெருமையை உரைப்பது. செய்யுட்டொகை 48. அச்சிடப்படவில்லை.

**Beginning :**

ம்னித்த ராயினுந் தேவர்க ளாயினும் வணங்க
நினைத்த போதினு மழிவிலா வீடரு ணிமலன்
பனித்த வாணுத லம்பிகை பரவிட மன்றிற்
குனித்த குஞ்சிதத் தாண்மலர் சென்னிமேற்
கொள்வாம்.

மன்று ணாயகன் சரபமாய் மானிட வரியைக்
கொன்று தோல்முகம் புனைந்தமை கூறின மிப்பாற்
றுன்று வண்டலற்றுளபமாலாழியைத் தொலைத்து
வென்றி கொண்டிடுததீசி தன்மேன்மையை
யுரைப்பாம்.

**End :**

அரியமாதவனு மாலுநேர் பொருதவத்தல
நனேசுரமதனி
லூரியதோர் தீர்த்த மதனையா டினர்சா யுச்சியம்
பெறுவரிக் கதையைப்
பரிவுடன் படித்தோர் கேட்டவர் பயமுமடைவிலர்
நினைத்ததும் பலிக்கு
மிருவினை யறுக்குங் காதையீதென்ருலாரிதன்
பெருமையை யிசைப்பார்.

ததீசிபுராண முற்றும்.

---

461. (*c*) வினுவிடைப்புராணம்.
Lines 7 in a page.

இது சிவபெருமானைப்பற்றி வினுவிய அகத்திய முனிவர்க்கு முருகக்கடவுள் கூறிய விடையாகும். இப் புராணமும் மேற்கண்ட இருபுராணங்களும் ஒருவரா லேயே செய்யப்பட்டவையெனத் தோன்றுகிறது.

**Beginning :**

விரியு மைம்புலன் வீடக் கரணங்க
டிரியும் போதுமென் சிந்தை மறக்குமோ
பரியு நோக்குமை பங்கினன் மன்றுளே
புரியு மாடலும் பூங்கழற்றுள்களும்.

நீதிமாதவன் நேமிபெற் றுய்ந்தமை
யோதி ஞேமினித் தெண்டிரை யுண்டவ
ஞதிபேரடை யாளம் வினவுறக்
கோதில்வேலன் மொழிந்தமை கூறுவாம்.

**End :**

சிந்தைமகிழ்ந்தன்புடனே யிக்கதையைக் கேட்பவர்
கள் சிவலோகத்தின்
முந்தியுறைந்திடுவரெனத் தமிழ்மலையமாமுனிக்கு
மொழிந்தான் வேலை
வெந்தொழியக் கிரிகிழியச் சூரனுடல் பொடியாக
விட்ட வைவேற்
கந்தனிமையவர் மடவார் மங்கலநாண்டனைக்காத்த
கருணையாளன் 44

*சிதம்பர புராணமருளிச்செய்த திருமலைநாயனு ரருளிச் செய்த சிவபுராணத்தில் வினுவிடைப் புராண முற்றும்.

குறிப்பு :

*இவ்வாக்கியத்தை ஆராயுமிடத்து மேற்கண்ட மூன்று புராணங்களும் சிவபுராணத்தினைச்சேர்ந்தவை என்பதும் இயற்றியவர் திருமலைநாயனர் என்பதும் உய்த்துணரக்கிடத்தல் காண்க.

---

462. No. 347 பாகவதபுராணம்.

புவனசக்கரம் வசனம்.

ஏடுகள் 31 அபூர்த்தி Lines 10—12 in a Page.

இது பாகவதபுராண வசனமாகும். கிருஷ்ணன் சரிதத்தையும் இன்னும் பல விஷயங்களையும் கூறுவது. இது பன்னிரண்டு ஸ்கந்தங்களையுடையது. ஆசிரியர் பெயர் விளங்கவில்லை. இதில் முதலிரண்டு ஸ்கந்தங் களேயுள்ளன. பிழை அதிகமாகக்காணப்படுகின்றன. அச்சிடப்பட்டுள்ளது.

**Beginning :**

புண்ணியக்ஷேத்திரம் நயிமிசாரண்யத்திலே சவுன காதி ரிஷிகளுக்கு சூதமகாரிஷி சொன்னது. பரிச்சித்து மகாராசாவுக்கு சுகப்பிரம்மரிஷி சொன்னப்படிக்கு ஸ்ரீமகாபாகவதம் பனிரெண்டு கந்தமும் சூதர்சொன்ன புண்ணியச் சேத்திரம் முதற்கந்தம் சவுனகாதிரிஷிகள் கேள்வி ஸ்ரீவேதவியாசர் உத்தாரம், கவுரவர் வர்த்த மானம், அசுவத்தாபங்கம், உத்தரைகெற்ப ரக்ஷிணை, பீஷ்மாசாரியார்......ஷசம், ஸ்ரீகிஷ்டணர் துவாரகைப் பிரவேசம், பரிச்சித்துப்பிறப்பு, விதுரன் வர்த்தமானம், பஞ்சபாண்டவர் மோக்ஷம், பரிச்சித்து ராச்சிய பரி பாலனம், கலிபுருஷ நிக்கிரகம், பரிச்சித்துசாபம், யோகி பிரத்தியக்ஷம்.

* * * *

ஸ்ரீவேதவியாசருடைய பாதபத்மங்களுக்கு நமஸ் காரம்பண்ணி ஸ்ரீமகாபாகவதம் பனிரெண்டு கந்தங் களும் தமிழ்வசனத்திலுலே தெளிவாக எழுதுகிறோம். இந்த புராண கதைக்கு ஒருவிக்கினங்களும் வராமல் ரக்ஷிக்கச் சொல்லி விக்கினேஸ்பரனை முந்தி தோத்திரம்

பண்ணி சரஸ்வதியம்மையை கீர்த்தனைபண்ணி வித்து வான்களை நினைத்து கதையாரம்ப முதல்கொண்டு எழுதுகிறோம். அதெப்படியென்றால் நயிமிசாரண்ணிய வனத்திலே சவுனகாதி மகாரிஷிகள் இருபத்தாருயிரம் பேர் எப்போதும் நின்று அவிடம் ஆதிவிஷ்ணு சேத்திரமானபடியினாலே பீதாம்பரதரனான ஸ்ரீவிஷ்ணு வை சேருகிறதுக்கு ஆக அங்கே ஆயிரம் ஸ்ரீதீர்க்க சத்தியாகம் பண்ண நினைச்சு யாகதீக்ஷை வகிச்சு யாக காரியங்கள் தினமும் நிறைவேத்தி வரச்சே ஒருநாள் தங்கள் அனுஷ்டானங்களை காலத்தாலே தீர்த்துக் கொண்டு அதன்பிறகு ஓம கிர்த்தியங்களும் பண்ணி உயர்ந்த ஆசனத்திலே யிருக்கிற சூதமகாரிஷியை பூசைபண்ணி கைகளைக் கும்பிட்டுக்கொண்டு ஒரு வார்த்தை சொல்லுகிறார்கள்...........

**End :**

விஷ்ணுவெடுத்த அவதாரங்களும் திராட்டுவிக் கிரக ஸத்திகளு மன்வந்தர முதலான கல்பங்களும் அந்தகதைகளும் பின்னையுஞ் சண்டான கோப்பியாச் சியங்களும் சொல்லுகிறேன் கேளுமென்று சூதர் சவுனகர் முதலான ரிஷிகளுக்குச் சொல்லக் கேட்டு சவுனகர் சந்தோஷப்பட்டு சூதரைப்பார்த்து மகாத்து மாவே விதுரன் விரதனாய் முன்னே பூமியிலே திரிந்து கொண்டு கோசலதேசத்திலே மயித்திரேயனைப் பார்த்து அவனாலே சிறிது விசேஷங்களாய் கேட்டான். இந்த வசனமே பரிச்சித்து சுகயோகியைக் கேட்டான். அவர் அவனுக்குச் சொன்னபடியே உனக்குச் சொல்லு கிறேன் கேளுமென்று சூதர் சொல்லுகிறார்.

இரண்டாவது கந்தம் எழுதிமுகிந்தது முற்றும்.

---

463. No. 569 அஜாமிளோபாக்யானம்.
ஏடுகள் 60 ; Lines 4—8 in a Page.

இது, பாகவதபுராணத்தின் ஒரு பகுதியாகும். கிரந்த சுலோகமும் தமிழ் உரையுமாக இருக்கிறது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. மிகவும் சிதைந்துள்ளது.

## XI மான்மியம்.

464. No. 232 சீரங்கமகத்துவம்.
ஏடுகள் 55 ; பூர்த்தி Lines 5—7 in a page.

இது, திருவரங்கமென்னும் விஷ்ணு ஸ்தலமான்மியம் கூறும் வசனநூல். இத்தலம் திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் உபயகாவிரியெனப்படும் கொள்ளிடத்திற்கும் காவிரிக்கும் மத்தியில் இருப்பது. இம்மகத்துவம் நாரதருக்குப் பரமசிவன் உரைத்தது. பத்து அத்தியாயமாகப் பகுக்கப்பட்டுள்ளது. இதனைத் தமிழில் மொழிபெயர்த்தவர் அப்பி ஆசாரியார் என்பவர். இப்பிரதியில் பிழைகள் அதிகமாக இருக்கின்றன. இது அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning :**

ரெங்கவிமானம் உரைத்த அத்தியாய கனஞதர் துவக்கி அம்பரீஷர் ருத்திளமரடாதர கரம்பூமரமயகர யிவர்கள் சிங்காதன வாசமாய் பூமியிலே துரைத்தி(த)னங்கள் செய்த பேர். யி(இ)வர்களுக்கும் சமானமான பரமபாகவதற்(ர்)கள் யாரென்ருல் பிரகலாதனன், நாரதர், பராசர், புண்டரீகர், வியாசர், சவுனகர், வீஷ்மர், சுகர், தாலப்பியர், ருக்குமாங்கதர், அர்சுனன், வதிஷ்டர், மகாபெலி, விபூஷணர் இன்னம் அனேகமாக பரமபாகவத சிரேஷ்டாள் யி(இ)ந்த ஸ்ரீரெங்க

விமானத்தை சேவிச்சு பூசிச்சு அதிலே வாசமாயிருந்தும் பறமானந்தமான ஸ்ரீவைகுண்டத்தை அடைந்தார்களென்றவாறு.

இவர்களிப்போ பரமபாகவதர் அப்படிக்கொத்த பரமபாகவதற்குள்ளே அதிசயமாயிருக்கப்பட்ட நாரத மகாமுனி பரமேஸ்பரரைப் பார்த்து ஸ்தோத்திரம் பண்ணி தேவதேவா தேவர்களுக்கெல்லாம் தேவராயிருக்கப்பட்டவரே மூனுகண்களோடேயும் அஞ்சு முகத்தோடும் கூடியிருக்கப்பட்ட மகாதேவ தேவரீரா லே சொல்லப்பட்ட வார்த்தையினலே மூணுலோக விர்த்தாந்தமும் தெரியலாச்சுது. அந்த மூணுலோகத் திலே புண்ணிய ஸ்தலமும் புண்ணிய தீர்த்தமும் கெங்கை முதலாகிய நதிகளும் தேவரிஷிகளுடைய சரித்திரங்களும் அடியேன் அறிந்தேன். அப்போ காவேரி மகத்துவம் தேவரீர் சொல்லுகிறபோது ஸ்ரீரெங்கமென்னும் ஒரு விஷ்ணுஸ்தலம் பூலோகத் திலேயிருக்கு(கிற)து அந்த ஸ்தலமகுத்துவம் நம்மாலே சொல்லி முடியாது என்று தேவரீர் திருவிளம்பத்தி (ற்றி)னபடினலே அண்ணு(ன்று) முதல் யிண்ணய (இன்றை) வரைக்கும் அந்த ஸ்ரீரெங்க மகுத்துவம் கேழ்க்க(ட்க)வேணுமென்று ஆசையாயிருக்கிறது.

**End :**

இப்படிக்கொத்த ஸ்ரீரெங்க மகுத்துவத்தைப் படிச்ச பேருக்கும் கேட்டபேருக்கும் வித்தையும் புத்தியும் அயிஸ்வரியமும் சவுபாக்கிய சந்தானமும் பெருமாளுட கடாக்ஷத்தினலே உண்டாமென்று சிவனுனவர் நாரத மகாமுனிக்கு திருவுளம் பத்தி(ற்றி)னர்.

பத்தாமத்தியாயம் முத்தித்து (முற்றிற்று) முற்றும்.

ஸ்ரீரெங்கனுதன் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் திருவடிகளே சரணம்.

**Colophon :**

துன்மகிஞூ தைமீ 15வ சனிவாரம் நாள் அமர பக்ஷம் ஏகாதேசியில் நல்ல சுபலக்கினத்தில் ரெங்க மகுத்துவம் எழுதி முகிந்தது முற்று.

தஞ்சை நகரத்திலிருக்கும் வஸ்தாது பட்டாளம் சிப்பாயி அம்மமுத்து ருமசாமி நாயக்கரவர் யெடுத்து படிச்ச பேர்கள் கொடுத்துவிடவும். ரெங்கனுயகர் துணையுண்டாகவும்.

---

**465.** No. 248 பிரமோத்தரகாண்டம்.
ஏடுகள் *106* ; பூர்த்தி Lines *6—10* in a page.
இதில் நான்கு பிரதிகள் இருக்கின்றன.

இது, பஞ்சாக்கரமகிமை, சிவராத்திரி மகிமை, பிரதோட மகிமை, சோமவார மகிமை, சிவயோகி மகிமை, விபூதி மகிமை, உமாமகேசுரபூசை மகிமை, உருத்திராக்க மகிமை, ஸ்ரீருத்திரமகிமை முதலியவற்றை எடுத்தோதுவது. இருபத்திரண்டு அத்தியாயங்களை உடையது.

இதனை மொழிபெயர்த்துத் தமிழில் இயற்றியவர் வரதுங்கராமபாண்டியர். இவர் வேம்பத்தூர் சங்கத்தவராகிய ஈசன முனிவரது மாணுக்கர். இவரை அதிவீரராமபாண்டியரது தம்பி என்பர். இவரது காலம் பதினும் நூற்ருண்டின் பிற்பகுதியும் பதினேழாம் நூற்ருண்டின் துவக்கமும் ஆகும். அச்சிடப்பட்டிருக்கிறது.

அச்சுப்பிரதிக்கும் இதற்கும் பேதங்காணப்படுகின்றது.

**Beginning :**

நல்ல சொற்பொருள் நாளு நடாத்தவு
மெல்லை காணரும் பேரின்ப மெய்தவும்

வெல்லு மானை முகந்தனை மேவிவாழ்
வல்ல பைக்குரி யானை வழுத்துவாம்.

பூமேவு சதுமுகனுந் திருமாலும் போற்றிசெயத்
தேமேவு குழலுமையாள் செழுங்குவளை விழிக
ளிப்ப
மாமேவு மிதழிநறு மழை துளிப்ப மணிமன்றந்
தாமேவி நடம்புரியுந் தனிப்பொருளை வணங்கு
வாம்.

கறங்குதிரைபெறுங்கடல்சூழவனிபுரந்திகல்கடிந்து
கலியைமாற்றி
மறந்திகழவிலங்கிலைவேல் வர துங்கராமனியல் மதுரைச்
சங்கஞ்
சிறந்தவறுகாற்பீடந்தனிற் பிரமோத்திரகாண்டந்தென்
சொல்லாக்கி
யறந்தழையுங் கவிஞர் செவிக்காரமுதமாக வரங்கேற்றி
ஞனே.

**End :**

தேவர்தம் பெருமான் சிறந்தவஞ் செழுத்தின் சீர்புகழ்
மாக்கதை முதலாப்
பாவ நின்றகற்றும் புராணநூல் கேட்போர் பயன்பெறல்
மொழிகதை யீருய்
மேவரப் புகன்ற சிவகதை முழுதும் விழைவுடன்கேட்
குனரவர்தாம்
யாவர்மற்றேனு மாரியன் முதலோரெய்தருஞ் சிவபத
மடைவார்.

**Colophon :**

பிரமோத்தரகாண்டம் அழகிய சொக்கராசாவின் பாட்டு எழுதி முடிந்தது. விய௵ புரட்டாசி௴ 21௳ எழுதி முடிந்தது முற்றும். செல்கர் சொக்கநாதன் ஸ்வஹஸ்தலிகிதம்.

466. No. 249 (*a*) பிரமோத்தரகாண்டம்.

ஏடுகள் 45; அபூர்த்தி Lines 6—10 in a page.

இதில், சோமவாரபூசையுரைத்த அத்தியாயம் 25-வது செய்யுள் முதல் புராணமகிமை அத்தியாயத்தில் 75-வது செய்யுள் வரையும் இருக்கிறது. ஆனால் இடையிடையே சில ஏடுகளில்லை. சிதிலமாயிருக்கிறது.

---

467. No. 250 பிரமோத்தரகாண்டம்.

ஏடுகள் 83; அபூர்த்தி Lines 6 in a page.

இதில் பத்திராயு அரசுரிமை பூண்டது முதல் கடைசி வரையுமிருக்கிறது. சிதிலமாக இருக்கிறது. ஏடுகளை பூச்சியரித்திருக்கிறது.

---

468. No. 251 (*a*) பிரமோத்தரகாண்டம்.

ஏடுகள் 98; பூர்த்தி, Lines 8—10 in a page.

இது 248-ம்ஆம் நம்பரைப்போல முழுவதுமிருக்கிறது. சிதிலமாக இருப்பினும் எல்லாப்பிரதியினும் சிறந்ததாகக் காணப்படுகிறது.

ஆக விருத்தம் 1321.

**Colophon:**

குரோதிஸு ஆடிமீ 25உ சோமவாரநாள் எழுதி முடிந்தது. முற்றும்.

செம்பரம் பாக்கம் சொக்கப்பமுதலியார் புத்திரன் வசந்தநாராயணன் எழுத்து.

சித்திவினயகன் சரணம் ஆறுமுகம்துணை, மீனாட்சி துணை, சொக்கலிங்கம் சிதம்பரம் அருணசலம் தியாகராசர் துணை குருபாதமேதுணை. திருச்சிற்றம்பலம்.

---

469. (*b*) சிவபுண்ணியத்தெளிவு.

Lines 7 in a page.

இது சிவபுண்ணியங்கள் இன்னின்னவை எனவும் அவற்றைச்செய்தோர் இன்னபேறு பெறுவரெனவும் கூறுவது. இதனைச் செய்தவர் கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியர் என்பர். செய்யுட்டொகை 131 அச்சிடப் பட்டிருக்கிறது.

**Beginning:**

பழகிய பதித்துவப் பான்மை யெய்தவு
முழுகிய பசுத்துவ முற்று நீங்கவு
மொழுகிய மும்மதத் தொளிகொள் ஞானமா
ரழகிய பிள்ளையா ரடிகள் போற்றுவாம்.

**End:**

தண்டமிழ்ச் சிவபுண்ணியத் தெளிவினைத் தயாவுட்
கொண்டுபற்பகற் படித்ததன் குறிவழி நின்றோர்
கண்டகப்பசுந் தாட்கமலத் தன்மால் காணு
மண்டுபேரொளி வளர்சிவ புரத்தின்மேல் வாழ்வார்.

சிவபுண்ணியத் தெளிவு முடிந்தது.

திருச்சிற்றம்பலம்.

---

470. No. 262 காசிகாண்டம்.

ஏடுகள் 162; Lines 8—10 in a Page.

இது கந்தபுராணத்து சங்கரசங்கிதையின் ஒரு பாகமாகும். பூர்வகாண்டம் உத்தரகாண்டம் என இரண்டு காண்டங்களை உடையது. இதில், விந்திய வரையை நாரதர் கண்ட அத்தியாயமுதல் சேவிக்கிற முறையுரைத்த அத்தியாயம் ஈருக நூறு அத்தியாயங் கள் இருக்கின்றன. செய்யுட்டொகை 2535. வாரணு சிச்சிறப்பு, கங்கையின் மகிமை, மகளிரிலக்கணம்,

அவர் கற்பொழுக்கம், இல்லறவியல், பிரமசாரியநெறி, வைதிகாசாரம், யோகவொழுக்கம், முத்திமண்டப வரலாறு முதலியவை கூறப்பட்டுள்ளன. இதனை இயற்றியவர் அதிவீரராமபாண்டியர். இவரைப்பற்றிய விபரங்களை 177-ம் நம்பரிற் காண்க. இந்நூல் அச்சிடப் பட்டுள்ளது. இந்நூலாசிரியரது காலம் பதினாறும் நூற்றாண்டு.

**Beginning :**

மாற்றறிய தொல்பிறவி மறிகடலி னிடைப்பட்டுப்
போற்றுறுதன் குரைகழற்றுட் புணைபற்றிக் கிடந்தோ
ரைச்
சாற்றறிய தனிமுத்தித் தடங்கரையின் மிசையுய்ப்பக்
காற்றெறியுந் தழைசெவிய கடாக்களிற்றை வணங்கு
வாம்.
புவிபுகழுங் காசிகாண்டம் பொருவில்பாரா சரன்புதல்
வன் புகன்றவாறே
செவிவழியினமுதுகுத்த தெனமதுரம் பொழிதமிழாற்
றெரித்தல் செய்தா
னுவவுமதிக் குடைநிழற்ற வோராழி திசையுருட்டி
யொளி நீர்வேலி
யவனிதனி புரக்குமுகி லதிவீர ராமனிக லரச ரேறே.

**End :**

அருமறை முனிவர் வாழ்க வானினம் வாழ்க தெண்ணீர்
விரிதிரை யுலகங் காக்கும் விறல்கெழு வேந்தன்வாழ்க
மருவிய திங்கடோறு மழைவளஞ் சுரக்க வெங்கோன்
பொருவற மொழிந்த வின்னூற் பொற்பொடும் பொலிக
மாதோ.

நூருமத்தியாய முற்றும் ஆக திருவிருத்தம் 2535.

**Colophon :**

**சோபகிருதுஸு சித்திரைமீ 14வ சனிவாரநாள் சித்திரை நட்சத்திரத்தில் எழுதி முடிந்தது முற்றும்.**

விசுவநாதர் விசாலாட்சி துணை. சித்திவிநாயகன் சொக்கர் மீனாட்சிதுணை. வசந்தராயன் எழுத்து.

---

471. No. 263 காசிகாண்டம்.

ஏடுகள் 244; அபூர்த்தி Lines 6—10 in a page.

இது, 262 நம்பரைப்போன்றது இதில் முதலி லிருந்து 76-வது அத்தியாயம் 39-வது செய்யுள்முடிய இருக்கிறது. சிதிலமாயிருக்கிறது.

---

472. No. 264 காசிகாண்டம்.

ஏடுகள் 172; Lines 8 in a page.

இதில், கடவுள் வாழ்த்து முதல் 100 அத்தியாயங் களும் இருக்கின்றன. சிதிலமாயும் ஏடுகள் இடையி டையே ஒடிந்தும் உள்ளன.

காசிகாண்டம் முற்றும்.

**Colophon :**

மாசிலாமணிச்சம்பந்தன் திருவடிவாழ்க.

உவஞூ ஆவணிமீ 18உ புதன்கிழமை நாள் துதிகை யும் சதைய நட்சத்திரமும் பெற்ற நாள் திருவாவடு துறை அம்பலவாண பண்டாரசன்னிதியடியாரில் மதுரா புரிச் சிற்றம்பலத்தம்பிரான் மாசிலாமணிசம்பந்த பண்டா ரத்தின் சீஷர் வசந்தராயபிள்ளையவர்களுக்கு எழுதின முறை காசிகாண்டமுற்றுமெழுதி முடிந்தது என்றறிக.

மாசிலாமணிச்சம்பந்தன் றிருவடிவாழ்க. சுமுகாயநம.

---

## 473. No. 268 விருத்தகிரிப்புராணம்.

ஏடுகள் 64; Lines 5—ҍ in a page.

இது விருத்தாசலத்தின் மான்மியத்தைக் கூறுவது.

இதில் விருத்தகிரிச் சருக்கமுதல் சசிவன்னச் சருக்கமீருகப் பதினெட்டுச் சருக்கங்கள் இருக்கின்றன. தமிழில் இதனைத் திருமுதுகுன்றமென வழங்குவர். சொன்னயமும் பொருணயமும் வாய்ந்தது. இதில் முழுவதுமிருக்கிறது.

இந்நூலை இயற்றியவர் ஞானக்கூத்தசிவப்பிரகாச தேசிகர். இவர் திருக்கைலாய பரம்பரை துறையூர் சிவப்பிரகாச தேசிகராதீனத்தில் இரண்டாவது பட்டம் பெற்றவர். தெய்வத்தன்மை வாய்ந்தவர். இந்தப் புராணத்தையல்லாமல் திருவிடைமருதூர்ப் புராணமும் செய்திருக்கின்றனர். இப்புராணம் அச்சிடப்பட்டிருக்கிறது.

**Begianing :**

திருவுங் கல்வியுஞ் சீருந் தழைக்கவுங்
கருணை பூக்கவுந் தீமையைக் காய்க்கவும்
பருவ மாய்நம துள்ளம் பழுக்கவும்
பெருகு மாழத்துப் பிள்ளையைப் பேணுவாம்.

திருமாலு நான்முகனுந் தேவர் கோவும்
தேவர்களும் யாவர்களுஞ் சிந்தையாலு
மருவாய மறையாலு மளவை யாலு
மளப்பரிதா யகண்டிதமாய் நின்ற மூர்த்தி
யுருவாய கிரிவடிவா யனந்தகோடி
யொளியுடைய கொடுமுடிக ளாகிநின்ற
பெருவாழ்வைத் திருமுதுகுன் றுடையான் றன்னைப்
பெருங்கருணை யாளனையாம் வணங்கலுற்றும்.

ஒருமலையாற் புரமலையு மொருமைந்தன் றிருமைந்தன்
னிருமலையுந் தும்மலையு மெதிர் மலையும் வினைமலையும்
பொருமலையும் விம்மலையும் பொய்மலையும் படைத்
தருளிக்
கருமலையும் பழமலையிற் கைமலையைக் கைதொழுவாம்.
8

வேயுதிரு முத்தாறு விரவியனை முத்தாறு
போயாகம்படியாரே புலையாகம்படியாரே
மாயமலர் முதுகுன்றர் வயற்கமல முதுகுன்றர்
தூயவரைப் பணியாரே சூழ்ந்தவரைப்பணியாரே 9

அருளாலே திருமுடிக ளனந்தமாய் நின்றபிரான்
திருவாயா லுமைகேட்கச் செப்பியவிப் புராணத்தை
யொருவாயா லுரைக்கின்றே னுயர்ஞானக் கூத்தனவன்
தருநாம மடியேன்றன் றலைமீது தரித்தமையால்.

**End :**

திங்கள் மும்மழை பெய்கச் செழும்புவி
பொங்கி வாழ்க புரவல னோங்குக
நங்கள் சங்கரன் பூசை நலம்பெற
சங்கர னடியார்கள் தழைக்கவே.

விருத்தகிரிப்புராணம் முடிந்தது முற்றும்.

**Colopohon:**

ஹரிஓம் நன்ருக குருவாழ்க குருவேதுணை.
நளவருஷ கார்த்திகைமாதம் 8 உ எழுதி முடிந்தது முற்றும்.

---

474. No. 269 விருத்தகிரிப்புராணம்.
ஏடுகள் 12 ; **Lines 4— 6 in a page.**

இதில், கிரிச்சருக்கத்தில் 15 செய்யுட்களும் தலச் சருக்க முடியவும் நதிச்சருக்கத்தில் 10 செய்யுட்களும்

இருக்கின்றன. இதில், பட்டணத்தார் பாடல் முதலிய விடு பாடல்கள் எழுதிய 3 ஏடுகள் கடைசியில் கோக்கப்பட்டுள்ளன.

---

**475. No. 270 விருத்தகிரிப்புராணம்.**

ஏடுகள் 95; Lines 6—7 in a page.

இதில், விருத்தகிரிச்சருக்கமுதல் சசிவன்னச்சருக்க முடிய இருக்கிறது. இத்துடன் திருவாசகம் கீர்த்தித் திருவகவலும் கிரந்தத்தில் எழுதப்பட்டுள்ள சில மந்திர பிரயோகங்களும் இருக்கின்றன.

---

**476. No. 271 (*a*) விருத்தகிரிப்புராணம்**

ஏடுகள் 45; Lines 6—7 in a page.

இதில் கடவுள்வாழ்த்து முதல் சிவபூசைச் சருக்க முடிய இருக்கிறது.

---

**477. (*b*)மல்லிகார்ச்சுனமாலை.**

Lines 6 in a page.

இது, மல்லிகார்ச்சுனபுரத்தில் எழுந்தருளிய சிவபெருமாள் தோத்திரம். அச்சிடப்படவில்லை.

**Beginning :**

மும்மதத்தினன் ஐங்கரத்தினன் முக்கணேக மருப்பி
னன்
செம்மலர்ப்பத மன்பினிற்றிகழ் சென்னிமீதி லிருத்து
வாம்.
ஆரணன்பரி பூரணன்கரு மூலகாரண காரணன்
சீரிணங்கு மனேககோடி திபாகராதி பதேசிகன்.

ஈறிலாமுத லேகனேகுரு லிங்கசங்கம மாதலால்
மாறிலாவருள் ளன்புகூர வணங்கு மும்மலமாயுமே.

**End :**

சீலஞான தவம் பெருந்திகழ் செல்வமும்பெறு மல்லிகர்
மாலைநாடொறு மோதுவார் சிவலோக நாயகராவரே.
மல்லிகார்ச்சுனமாலை முற்றும்.

---

**478. No. 272 விருத்தகிரிப்புராணம்.**
**ஏடுகள் 37; Lines 4—5 in a page.**

இதில்கடவுள் வாழ்த்தில் 11 செய்யுளும் கிரிச்சருக்கத்தில்3-வது செய்யுள் முதல் முடியவும், தலச்சருக்கம் தீர்த்தச்சருக்கங்களில் சில ஏடுகளும். ஒழுங்கின்றி கோக்கப் பட்டுள்ளன.

---

**479. No. 273 விருத்தகிரிப்புராணம்.**
**ஏடுகள் 98 ; Lines 6—9 in a page.**

இதில், 268-ஆம் நம்பர் பிரதியைப்போல முழுவதும் இருக்கிறது. விருத்தகிரிப்புராண ஏடுகளில் இது மிகச் சிறந்தது.

**Colophon :**

நந்தன ஷ அர்ப்பிசி மீ 16வ செருக்கூர் கிருஷ்ண ரட்டியார் படித்த விருத்தகிரிப்புராணம் முடிந்தது முற்றும். குருபாதமேதுணே. திருமுதுகுன்றநாதரும் பெரியம்மையும் லட்சிக. உதவிநாயகரும் அம்பன்ன கண்ணியம்மை இரட்சிக்க.

---

## 480. No. 274 திருவாதவூரர் புராணம்.

ஏடுகள் 190 ; Lines 5—6 in a page.

இதில் ஆறு பிரதிகள் இருக்கின்றன.

இது, பாண்டியநாட்டில் திருவாதவூரில் அவதரித்த மாணிக்கவாசகரது சரித்திரத்தையும் அருமை பெருமைகளையும் எடுத்துரைப்பது. ஐந்து சருக்கமுடையது செய்யுட்டொகை 541. இதனை இயற்றியவர் கடவுண் மாமுனிவர். இவர் இப்புராணத்தைப்பாடி முடித்துத் தம்முடம்பில் உண்டாயிருந்த நோய் நீங்கப்பெற்றனர் என்பர். இவரைக் கச்சியப்பமுனிவர் காலத்தினர் எனக் கூறுவார். சில ஏடுகளில் திருவம்பலச்சருக்கம், புத்தரை வாதத்தில் வென்ற சருக்கம் திருவடி பெற்ற சருக்கமென சருக்கங்கள் மூன்ருகப் பகுக்கப் பட்டுள்ளன. அச்சுப்பிரதிக்கும் இதற்கும் பாடபேதம் காணப்படுகின்றது. இந்நூல் உரைடன் அச்சிடப் பட்டிருக்கிறது.

**Beginning :**

பவளமால் வரையி னிலவெறிப் பதுபோற்
  பரந்தநீற் றழகுபச் சுடம்பிற்
றிவளமாதுடனின் ருடிய பரமன்
  சிறுவனைப் பாரதப் பெரும்போர்
தவளமார் மருப்பொன் ருெடித்தொரு கரத்திற்
  றரித்துயர் கிரிபுறத் தெழுதுங்
கவளமார் களிற்றின் றிருமுகம் படைத்த
  கடவுளை நினைந்துகை தொழுவாம்.

முக்கணுட ளுலுபுய மைந்துமுக முன்னேன்
சொக்கனரு ளுண்மைபெறு தொன்மைதிகழ் நாடு
வடுக்க விடத்தையர னுக்கருள்வ தென்றே
மைக்கடலில் வைக லொழி வைகைவள நாடு.

ஈனமிகுத்துளதோலு மென்புநரம் புஞ்சீயு
மானவுடற் சிவரூப மாமிதனைத் தெளியாம
லூனுடலுக் கிரைதேடி யுழன் றுலகிற் றடுமாறி
மானரகிற் புகுதுமதே மாயவலைப் படுவார்கள்.

திருவம்பலச் சருக்கம் முற்றும்.

ஆக சருக்கம் 5-க்கு விருத்தம் 541.

காயிரும்பி னீர்போற் கலந்துருவங் காட்டாம
லாயுருவந் தோறும்...........................ந்—தூய
குளந்தை முதலிக் கொடியேனுக் குண்மை
விளம்பவெனத் தான்படைத்த மெய்

தொல்லைவட நீழலிலே யாகமங்கள் செய்தவருந்
தில்லைநட மன் றுநடஞ் செய்தவரு—மெல்லையிலே
யொப்பாக வந்திங் குபதேசந் தந்தவருந்
தப்பா தொருமுதலே தான்.

| | |
|---|---|
| மந்திரிச்சருக்கம் விருத்தம் | 46 |
| திருப்பெருந்துறைச் சருக்கம் | 135 |
| குதிரையிட்ட சருக்கம் | 66 |
| மண் சுமந்த சருக்கம் | 95 |
| திருவம்பலச்சருக்கம் | 199 |

ஆக சருக்கம் 5-க்கு விருத்தம் 541.

**Colophon :**

துன்முகி-ஸு தை-மீ 30-உ வாதவூர் புராணம் தெய்வ நாயகம் படித்து முடிந்தது முற்றும்.

**237—26**

ஓரா தெழுதினே ஞயினு மொண்பொருளை
யாராய்ந்து கொள்வ ரறிவுடையோர் —சீராய்ந்து
குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.

திருச்சிற்றம்பலம் வேலும் மயிலும் குமரகுருபர.

---

481. No. 275 திருவாதவூரர் புராணம்.
ஏடுகள் 46; பூர்த்தி. Lines 7—9 in a Page.

இது 274 ஆம் நம்பரைப்போன்றது. ஆனல் 'பவளமால் வரையில்' என்னும் காப்புச் செய்யுள் இல்லை.

| | | |
|---|---|---|
| மந்திரிச்சருக்கம் | செய்யுள் | 45 |
| திருப்பெருந்துறைச்சருக்கம் | ,, | 135 |
| குதிரையிட்டசருக்கம் | ,, | 66 |
| மண்சுமந்தசருக்கம் | ,, | 95 |
| திருவம்பலச்சருக்கம் | ,, | 70 |
| புத்தரைவாதுவென்றசருக்கம் | ,, | 126 |

ஆகச் சருக்கம் ஆருகப்பகுக்கப்பட்டுள்ளது. விருத்தம் 535 காணப்படுகிறது. இது சிறந்த பிரதி.

திருச்சிற்றம்பலந்துணை. சிதம்பரந்துணை. அம்மை சிவகாமியம்மை துணை. தென்கமலை மாசிலாமணித் திரு ஞானசம்பந்ததேசிகன் திருவடிவாழ்க. ஸ்ரீமஸ்து.

---

482. No. 276 திருவாதவூரர் புராணம்.
ஏடுகள் 112; பூர்த்தி சிதிலம்: Lines 5 in a page.

இதில் 275-ம் நம்பரைப்போல முழுவதுமிருக்கிறது.

இது, எழுதினது வாசுதேவபிள்ளை பேரன் லெட்சு மணபிள்ளை கைபெழுத்து.

---

## 483. No. 277 திருவாதவூரர் புராணம்.

ஏடுகள் 32; பூர்த்தி சிதிலம் Lines 9—11 in a page.

இதில் முழுவதுமிருக்கிறது. ஆனால்

| | | |
|---|---|---|
| மந்திரிச்சருக்கம் | செய்யுள் | 46 |
| திருப்பெருந்துறைச்சருக்கம் | ,, | 135 |
| குதிரையிட்டசருக்கம் | ,, | 67 |
| மண்சுமந்தசருக்கம் | ,, | 91 |
| திருவம்பலச்சருக்கம் | ,, | 69 |
| புத்தரைவாதுவென்றசருக்கம் | ,, | 97 |
| திருவடிபெற்ற சருக்கம் | ,, | 32 |

எனச்சருக்கம் ஏழாகப்பகுக்கப்பட்டுள்ளது.

... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
சீல மன்னவன் செங்கோல் விளங்குக
கால மாமழை மன்னுக காதலாற்
சாலு மீச னடியார் தழைக்கவே

மழை வளங்குக மன்ன ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ... ...பிறங்குக
தழைக வஞ்செழுத்தோசை தரையெலாம்
பழைய வைதிக சைவம் பரக்கவே.

வைய நீடுக மாமழை மன்னுக
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
[சைவ] நன்னெறி தான்தழைத் தோங்குக
தெய்வ வெண்டிரு நீறு சிறக்கவே.

குறிப்பு :

இப்புராணத்தலைப்பில் திருவாதவூர் மாணிக்க வாசகதம்பிரானார்புராணம் எனவும் கடைசியில் திரு வாதவூர் நயினார் புராணம் எனவும் எழுதப்பட்டிருக் கிறது.

---

### 484. No. 278 திருவாதவூரர் புராணம்.

ஏடுகள் 144; Lines 4—6 in a page.

இதில் முதலிலிருந்து திருவம்பலச்சருக்கத்தில் 138 செய்யுள்முடிய இருக்கிறது. இதில் சருக்கமுறை 274-ம் நம்பரை ஒத்திருக்கிறது. சிதிலமாயிருக்கிறது.

---

### 485. No. 328 திருவாதவூரர் புராணம்.

ஏடுகள் 91; அபூர்த்தி. Lines 4—6 in a page.

இது, 274-ம் நம்பர் பிரதிபோன்றது.

இதில் ஐந்து சருக்கங்களும் இருப்பினும் கடைசிச் சருக்கமாகிய திருவம்பலச்சருக்கத்தில் 199 செய்யுட்களில் 71 செய்யுட்களே இருக்கின்றன. விடுபாட்டுகள் எழுதிய 3 ஏடுகள் கடைசியில் கோக்கப்பட்டுள்ளன.

---

### 486. No. 280 சேதுபுராணம்.

ஏடுகள் 443; சிதிலமாயிருக்கிறது.

Lines 6—10, in a page.

இது இராமேச்வரத்தின் பெருமையையும் அதிலுள்ள தனுக்கோடி முதலிய இருபத்துநான்கு தீர்த்த மகிமையையும் விரித்துரைப்பது. சொன்னயம் பொருணயங்களமைந்தது. இதனை வடமொழியினின்றும் மொழி பெயர்த்துத் தமிழ்ச்செய்யுளாலியற்றியவர் நிரம்பவழகிய தேசிகர். பாண்டிய நாட்டில் துழாயூரில் பிறந்தவர். இலக்கண இலக்கியங்களிலும் சித்தாந்த சாத்திரங்களிலும் வல்லவர். சிவஞான சித்தியார் சுபக்ஷத்திற்கு உரை செய்தவரில் ஒருவர். இவர் இயற்றிய வேறு நூல் திருப்பரங்கிரிப்புராணம். இவரை அதிவீரராமபாண்டியற்கும் வரணகுபாண்டியர்க்கும் கல்வி கற்பித்த ஆசிரியரெனக் கூறுவர் சிலர். இவரது மாணாக்கர் திருவாரூர்ப்புராணம் பாடிய சம்பந்த முனிவர். இவரது காலம் பதினாறும் நூற்றாண்டாகும். இந்நூல் ஆறுமுக நாவலரால் அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning :**

தொடர்கின்ற விடுக்கண்வெற்புத் துகள்படத்
துளக்குமேலோ
னடர்கின்ற வதற்குநாத ஞகியவங்கை முச்கட்
படர்வென்றிப் பகவன் முன்னைப் பவமுதற் படியி
னெல்லா
விடர்நின்றும் புரக்க வெம்மை யெங்கணுமெந்த
ஞான்றும்

தேவரைய முனிவரையுந் துவளமார்பிற்
றிருவரையுங் குரவரையுஞ் செல்வமிக்கோர்
யாவரைய மேவல்கொளு நெற்றிநாட்டத்
திறைவரைமுன் னிகழ்ந்திருந்த வெண்ணந்
தோன்றச்
சேவரைய நெடுங்கொடியின் றகைமை யெல்லாத்
திசைவரையுஞ் செலத்தமிழின் செய்யுள் பாடு
நாவரையர் புகழ்மொழிகள் வரைந்து கூறி
நயந்தவர்செய் திருத்தொண்டு வியந்துவாழ்வாம்

**End:**

என்றிவை மொழிந்து மிக்க விருடிகட் கருள்வ ழங்கித்
துன்றிய புகழ்சேர் கின்ற சூதமா முனிவ ேைடும்
வென்றிசேர் வாரு ருக வெள்விடைக் கொடியுயர்த்த
கன்றுமான் கரத்தோன் வாழுங் கயிலையையடைந்
தான் மாதோ 179

வென்றிகொ ளிராம ஞளும் விளங்கிட வரிச்சித் தேத்துந்
தென்றமிழிராம சேதுத் திகழ்கதை தினமும் போற்றித்
துன்றியமுனிவரோதத் துடங்கின ராதலாலே
யொன்றிய புகழிேைடு மோங்கிய துலக மெல்லாம் 180

குறிப்பு:

இதில் கடவுள் வாழ்த்து முதல் கடைசிச் சருக்கத்தில் 170 செய்யுட்கள் வரையும் இருக்கின்றது.

487. No. 281 சேதுபுராணம்.
ஏடுகள் 365 Lines 8—10 in a page.

இதில், கடவுள் வாழ்த்து முதல் புராணமுழுவதும் இருக்கின்றது. 280-ஆம் நம்பரைப் பார்க்கிலும் பழமை வாய்ந்த சிறந்த பிரதி.

**Beginning :**

தொடர்கின்ற விடுக்கண் வெற்புத் துகள்படத் துளைக்கு
மேலோன்

..... ...........................................................................................

..........................................................................................................

இடர்நின்றும் புரக்கவெம்மை யெங்கணு யெந்தஞான்
றும்.

**End :**

தெய்வவைஞ் செழுத்து வாழ்கச் செல்வவெண்ணீ
றுவாழ்க

வைதிக சைவம் வாழ்க மன்னவன் செங்கோல் வாழ்க
மெய்தரு மறையோர் வேள்வி விண்ணவர் முனிவர்
மேகம்

பொய்தவி ரறங்கள் வாழ்க வாழ்கவிப் புவன மெல்லாம்
188

ஐம்பத்தொன்ருவது சேதுபலச்சருக்க முற்றும்.
ஆக திரு விருத்தம் 3482.

**Colophon**

சித்திவிநாயகன் துணை. ஆறுமுகம் துணை.

சோபகிருது ஞு ஆனிமீ 15உ புதன்வாரநாள் பஞ்சமி யும் உத்திரட்டாதி நட்சத்திரமும் கூடின தினத்தில் எழுதி முடிந்தது முற்றும். வசந்தராயன் எழுத்து திருச் சிற்றம்பலம்.

குறிப்பு :

நூலாசிரியர் பெயர் கூறும் செய்யுள் இந்தப் பிரதியில் மட்டுள்ளது. ஏனைய பிரதிகளில் இல்லை.

அவையடக்கம் செய்யுள் 11.

விரிதருபைங் கடலுலகம் புரந்தமுடி வேந்தரெல்லாம்
வியந்து கேட்ப
வரியமறை முனிவர் தமிழ்ப் பாவாணர் செவிநுகர்பே
ரமுதமாகத்
தெரிதரமுத் தமிழ்வடிக்குமுனி நிரம்ப வழங்கியதே சிகனுஞ்
செம்மல்
வரிசைபெற வடமொழியின் சேதுமாக் கதைதமிழால்
வகுத்திட்டானே.

---

488. No. 282 சேதுபுராணம்.

ஏடுகள் 369; Lines 7 in a page.

இது 279 நெ. பிரதிபோன்றது முழுவதும் இருக்கிறது.

---

489. No. 285 கும்பகோணபுராணம்.

ஏடுகள் 163 ; Lines 5 — 7 in a Page.

இது கும்பகோண தல மகிமையை யுரைப்பது.

இதில், நைமிசாரணியச்சருக்கம், திருக்கைலாசச் சிறப்புரைத்த வத்தியாயம், கும்பகோணச்சிறப் புரைத்த வத்தியாயம், சிவபூசை யுபகரணங்கூறிய வத்தியாயம், சிவபுண்ணியமுரைத்த வத்தியாயம், கிருதகம்பளவிதி கூறியவத்தியாயம், சீதகும்பமுமதில் பூசையுமுரைத்த வத்தியாயம், சிவநாமமகிமையுரைத்த வத்தியாயம், வாணலிங்க மகிமையுரைத்தவத்தியாயம், வேடன் கதிபெற்றவத்தியாயம், வாணலிங்கபூசை மகிமை கூறியவத்தியாயம், பதிநிர்ணயங்கூறியவத்தி யாயம், வாணலிங்கதெரிசன வத்தியாயம், சிவயோக விரதமுரைத்த வத்தியாயம், சிவசரித்திரங்கூறியவத்தி

யாயம், அபராதங்கூறிய வத்தியாயம், விபூதிமகிமை கூறியவத்தியாயம், கலிவிடம்பன்வத்தியாயம், காசியின் சிறப்புரைத்த வத்தியாயம் என்னும் அத்தியாயங்கள் இருக்கின்றன. செய்யுள் நடைசிறந்தது. இது அச்சிடப்படவில்லை. இதனையியற்றியவர் தொண்டை நாட்டு அரசூர் சொக்கப்பப்புலவர் என்பதும் சகஜி மன்னர் காலத்தில் இருந்தவர் என்பதும். "கொண்டல் கண்டுயிலும்" என்னும் பின்வரும் செய்யுளால் விளங்குகிறது. தஞ்சையில் அரசுபுரிந்த மகாராட்டிர மன்னர்களில் ஒருவராகிய சகஜி கி. பி. 1684 முதல் 1714 வரை அரசாண்டவர். ஆகவே இவ்வாசிரியரது காலம் பதினெட்டாம் நூற்றுண்டின் தொடக்கமாகும்.

**Beginning :**

இருண்மணி கண்டன தினிய நல்லருட்
பொருணிதி யறைதிறந் தன்ன பொற்பது
மருளறுத் துயர்சிவ மதித்து வாழ்மறைத்
தெருள்பெறு முனிவரர் திருந்து நைமிசம்.

கொண்டல்கண் டுயிலுஞ் சோலைக் குடந்தையிற் பலரு மேவத்
தண்டமிழ்ப் பனுவல் வெற்றித் தாரைவேற் ருனைமன்னன்
மண்டலம் புரக்குஞ் செங்கோன் மனுநிகர் சகசி வாழ்நாள்
தொண்டை நாட் டரைசு சொக்க னரசவை சொற்ற தன்றே.

**End :**

................................................................................

................................................................................

..................சொக்கப்பனென்றும் வாழிவாழி...............
சங்கரனறன்னடியார்கள் வாழிவாழி தலந்தானம்பரி கலமும் வாழிதானே.

---

490. No. 284 கும்பகோணபுராணம்.
ஏடுகள் 283; Lines 4—10 in a page.

இதுவும் கும்பகோணதலமான்மியம் கூறுவது. செய்யுட்கள் சிறந்தனவாகக் காணப்படுகின்றன. இதில் கும்பகோணச்சிறப்புரைத்த சருக்கம் 113, ஆதிகும்பேசச்சருக்கம் 42, பொற்றாமரைச் சருக்கம் 13, மாந்தாதாச் சருக்கம் 34, சத்தியகீர்த்திச் சருக்கம் 20, சோமநாதச் சருக்கம் 45, நாகநாதச் சருக்கம் 79, மடந்தை பாகர் திருநடவரவுரைத்த சருக்கம் 535, பாற்கரதீர்த்தச்சருக்கம் 14, காரோணச் சருக்கம் 63, அமுத்தீசுரச்சருக்கம் 2, மகாமக நியமச் சருக்கம் 39, ஆராவமுதச் சருக்கம் 119 எனப்பதின்மூன்று சருக்கங்கள் இருக்கின்றன. செய்யுட்டொகை 1118. இதனை இயற்றியவர் அகோரமாதவர். இது அச்சிடப்படவில்லை. இது 283-ம் நம்பரினும் வேறுபட்டது.

**Beginning :**

சொல்விரவு தாரகத்தின் றேற்றமே தனதுருவாய்த்
துலக்கை நால்வாய்
மல்குமலி யிசைபாட மதந்துளிக்குங் கடமிவற்றால்
வயக்கை மாவோ
வெல்லுமிழங் குசபாச மேந்தலா லதன்பாகோ வென
வோ ரையஞ்
செல்லவயங் கொளியீழந் திறைகொண்ட குஞ்சரத்
தாள் சென்னிசேர்ப்பாம்.

சொல்லான்ற மறையீற்றி னின்ப வெள்ளச்
சுடராகிச் சொலற்கரிதாத் துகளற் றோங்கிப்
பல்லாறு படுசமய நெறிகள் யாவும்
பற்றதே யெவற்றினுக்கும் பற்ற தாகி
யொல்லாத துரியமுத லிறந்தாருள்ளத்
துணர்வாகி யுலப்பிலதா யுண்மையாகி
வில்லார்ந்த குடமூக்கி னிருந்தான் செய்ய
விரைமலர்த்தா ளிணையுளத்து விரும்பி வாழ்
வாம்.

**End :**

தென்கலைக்கடற் றீஞ்சுவை யமுதினை மாந்து
மின்பிறுரியத் தொல்லைபோ யிலங்குமெஞ் ஞானத்
தன்பனுகிய வகோரமா தவன்சிவ னருளான்
மன்பதைக்கொரு வாழ்வெனத் தமிழினுல்வகுத்தான்.

கேடில் செல்வமுங் கல்வியும் புதல்வருங் கிளையும்
பாடல் வண்டிரை பழனமு மரபுளம் படைத்தே
வீடிலாதுயர்ந் தோங்கிய விமலன மலர்ந்தாள்
சூடியின்பமே துன்னுவீர் பன்னுமிச் சொல்லே.

ஆராவமுதச் சருக்க முற்றும் 1118.

ஆதிகும்பேசன் லெக்ஷிக்க.

---

491. No. 287 (*a*) சிதம்பரபுராணம்.

ஏடுகள் 130 ; பூர்த்தி, Lines 6—7 in a page.

இதில் ஐந்து பிரதிகள் உள்ளன.

இது சிதம்பரத்தின் மகிமையைக் கூறுவது. மான்மியச்சருக்கம் முதல் துற்றெரிசச்ன சருக்கம் ஈருக ஒன்பது சருக்கங்களை உடையது. இதனை இயற்றியவர் பரஞ்சோதிமுனிவர். இவர், திருவிளையாடற் புராணமியற்றிய பரஞ்சோதி முனிவரினும் வேருவர். இது, அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning :**

வான நாடர்கள் மாதவ நாடரு
மோன ஞான முழுது முணர்ந்திடத்
தான மேவுந் தடவிக டாசல
ஆனை மாமுகத் தண்ணலை யேத்துவாம்.

**End :**

தாவிலா மறைச் சைவந் தழைத்திடக்
காவல் வேந்தனுங் காசினி வாழ்ந்திடத்
தேவர் தேவன் றிருவுரு வாகிய
மூவர்பாடலம் மூவுல கோங்கவே.

துற்றெரிசனச் சருக்க முற்றும்.

ஆகச் சருக்கம் ஒன்பதுக்கும் திருவிருத்தம் 813. திருச்சிற்றம்பலம் துணை. சிதம்பரபுராண மெழுதி முடிஞ்சுது.

---

492. (*b*) கோயிற்புராணம்.

Lines 7—8 in a page.

இதுவும் சிதம்பர மகிமையுரைப்பது. இதனை இயற்றியவர் கொற்றவன்குடி உமாபதிசிவாச்சாரியார். இதில் வியாக்கிரபாதச் சருக்கமுதல் திருவிழாச் சருக்க முடிய இருக்கிறது. இதைப்பற்றிய ஏனைய விபரங்களை 313-ம் நம்பரில் காண்க.

---

493. No. 285 (*a*) சிதம்பரபுராணம்

ஏடுகள் 290; பூர்த்தி Lines 7—9 in a page.

இதுவும் சிதம்பரத்தின் மகிமையையுரைப்பது. இதில் கடவுள் வாழ்த்துமுதல் துற்றெரிசனச் சருக்கம் ஈருக ஒன்பது சருக்கமும் இருக்கின்றன.

ஆகச் சருக்கமொன்பதுக்குத் திருவிருத்தம் 813.

**Colophon:**

குரோதன ஹூ வையாசிமீ 5உ திசமியும் நாயிற்றுக் கிழமையும் கூடின நாள் சிதம்பர புராணம் எழுதி முடிந்தது முற்றும். ஹரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை.

---

## 494. (*b*) அவிநாசிப்புராணம்.

Lines 7—9 in a page.

இது அவிநாசியின் மகிமையைக் கூறுவது. ஆசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை. அச்சிடப் படவில்லை.

இதில் முகவுரைச் சருக்க முதல் அயிராபதச்சருக்கம் ஈருக உள்ள சருக்கங்களும் தாடகைச் சருக்கத்தில் 14 செய்யுட்களும் இல்லை.

**Beginning :**

பொய்கையவிரா பதத்தீர்த்தப் புதுப்பூம்புனலுட் புகுந்தாடி
மெய்கை நுதன்மார்பகம் விளங்க வெண்ணீ றணிந்து விறல் பயின்று
செய்கை வலிய வினைமறந்து வேறூர் சனனத்திறம் போல
வுய்கை நினைந்து சிவசருதைச் சன்மார்க்கத்தி லொருப் பட்டான்.

**End :**

பருவமுகின் மழைவாழி பயிர்வாழி விளைபோகம் பலன்கள்வாழி
யிருவினையி னொருமருந்துக் கினியவைந்து வகைகருமா னினங்கள்வாழி
திருவாளர்நல் லறம்வாழி தவவேடத் தன்புடையோர் செல்வம்வாழி
மருவுசெந்தமிழ் வாழி தரணியிலிச் சிவபனுவல் வாழி வாழி.

சுந்தரச்சருக்க முற்றும்.

ஆகச் சருக்கம் 13க்கு திருவிருத்தம் 1018. திருச்சிற்றம்பலம்.

**Colophon :**

ரக்தாட்சிஸு கார்த்திகைமீ 22உ உத்தர நட்சேத்திரமும் ஏகாதசியும் கூடின சனிக்கிழமைநாள் நமசிவாய பண்டாரத்தின் குமாரன் முத்துக்குமரன் எழுதி முடிந்தது முற்றும். கிளிவனநாத சுவாமி அழகிய பொன்னம்மை அழகப்பெருமாள் பாதாரவிந்தமே துணை.

புக்கொளியூரவிநாசிச் சிவபுராண முற்றும்.

---

495. (*c*) சேக்கிழார்புராணம்.

Lines 6—8 in a page.

இது, 255-ம் நம்பர்போன்றது. முதலிலிருந்து 89 செய்யுட்களிருக்கின்றன.

**Colophon :**

அட்சயஸு கார்த்திகைமீ 19உ சுக்கிரவாரமும் திருக்கார்த்திகையும் கூடினநாளில் நமசிவாய பண்டாரத்தின் மகன் முத்துக்குமாரன். கடைசியில் தேவார ஏடு ஒன்றுள்ளது.

---

496. No. 288 சிதம்பரபுராணம்.

ஏடுகள் 73; Lines 8—9 in a page.

இதில் 285-ஆம் நம்பரைப்போல முழுவதும் இருக்கிறது.

---

497. No. 289 சிதம்பரபுராணம் உரையுடன்.

ஏடுகள் 160; அபூர்த்தி. Lines 5—10 in a page.

இதில் மூலமும் உரையும் மிகவும் சிதிலமாயிருக்கின்றன. இந்நூற்கு உரைசெய்தவர் பெயர் முதலியவை தெரியவில்லை. உரைநடை சாதாரணமானது.

இந்தப் பிரதியில் கடவுள் வாழ்த்து மூன்றுஞ்செய்யுள் முதல் நியமச்சருக்கம் 40-ம் செய்யுள் வரயுமுள்ள பாகத்திற்கு உரையிருக்கின்றது. பிழை அதிகமா யிருக்கின்றன.

**Beginning:**

..............................மணிமன்று ளென்று ஞானத்
திருமகிழ நின்றுடுஞ் சிதம்பரத்தை யென்னுளுஞ்
சிந்தை செய்வாம் (3)

ள—து. எதிர்வேத மிருக்குவேத மதர்வணவேதம் சாமவேதமென்று சொல்லப்பட்ட நாலு வேதத்துக்கு முடிவிலே பரஞ்சுடராய் பிரகாசித்தும் அகண்ட பரிபூரணமாயசலசைதன்னிய விருத்தியாய் சகல எண்பத்து நான்கு நூருயிரம் யோனி சீவ சிந்துக்கு மொருமுதலாகிய மெய்ஞானனந்த அதீதத்திலே துவாதசாந்தத்திலே நித்தியமான ஞானப்பிரகாசமாகி உடம்பிலுபாதிப்பட்டால் ஆத்துமாவுக்கு சொரணையை அறியுமுணர்வாகி யிருளாகிய ஆணவமாய்கை காமிய மென்று சொல்லப்பட்ட மும்மலத்தைப் போக்கிய ஞானவான்களுக்கு விருப்பென்னுமு......மாகி அழகு பொருந்திய சிற்சபையிலே ஞானத்திருவாகிய பரா பரை காணவு மானந்த நடஞ்செய்யு ஞானகாசத்தை சிந்தையிலே குடியாகத் தியானஞ் செய்வாமென்ற வாறு (3)

**End:**

பந்தமகற் றியதில்லை நகரடைந்துஞ் சிவகங்கை
படிந்து மன்றத்
தந்தமிலான் ருள்கண்டு மத்தலத்திற் கொடுவினைக
ளந்தோ வந்தோ
தந்தமது மனனறியப் புரிவதே மூடர்களென் சாற்று
கேன்யான்
சிந்தைசெயுந் தொறுமுடலந்துளங்குமென
துளங்கம்பஞ் சேருமன்றே (40)

---

### 498. No. 290 (*a*) கோயிற்புராணம்.

ஏடுகள் 213; Lines 7 in a Page.

இது 287-ம் நம்பரின் உட்பிரிவாகிய (*b*) போன்றது. இதில் வியாக்கிரபாதச் சருக்க முதல் இரண்ய வன்மச் சருக்கத்தில் 43-ம் செய்யுள் வரையில் இருக்கிறது. இதில் இடையிடையே பற்பல ஏடுகள் சிதிலமாய் இருக்கின்றன.

---

### 499. (*b*) திருவெண்காட்டுப்புராணம்.

(சுவேதவனப்புராணம்.)

Lines 8 in a Page.

இது மாயூரந்தாலூகாவிலுள்ள திருவெண்காட்டின் மான்மியத்தை உரைப்பது. இதனைச் செய்தவர் காலிங்கப் புலவர் என்பது "பாலன்றமிழ்விரகன்" என்னும் ஈற்றுச் செய்யுளில் "காலிங்கனுரைசெய்த புராணம் வாழியே" எனக்கூறுமாற்றுல் விளங்குகின்றது. இது அச்சிட்டிருப்பதாகத் தெரியவில்லை.

**Beginning:**

சொற்கண்டு பசுங்கிளியுங் கருங்குயிலும் கடலமுதுஞ்
சுவையருத
கற்கண்டுந் திறையளக்கு மலர்த்திருவின் பெருமானும்
கமலத் தானு
மற்கண்ட விடம்பிறந்த தலைநாளி லிறவாம லருள்செய்
தானைப்
பொற்கொண்ட லனையானைச் சுவேதவனப்
பெருமானைப் போற்றுவோமே 1
எண்காரும் புனக்குறவர் தன்க்குறவ ளெனவணுகி
யேனல் காத்த

தண்காருஞ் சைவலமு மனையகுழல் வள்ளிதனந்
தழுவுங்கோவை
வெண்காடன் திருமகனை மயிலோனை யமரர்சிறை
விடுத்தவேளைக்
கண்காணப் பரவினர்தம் பிறவியெனும் பெருஞ்சிறை
யைக் கடப்பார்தானே.

**End :**

பாலன் றமிழ்விரக ளரும்வாழியே பாடுந்த மிழரசர்
பாதம் வாழியே
ஞாலம் புகழ்பரமர் தோழன் வாழியே நாளும் பரம
குருநாதன் வாழியே
மேலுந் திருமுறைகளேழும் வாழியே வேதங்களு
மிறைவர் நூலும் வாழியே
காலஞ்சரமமருமீசர் பேரிலே காலிங்கனுரை செய்த
புராணம் வாழியே.

இதிலுள்ள சருக்கங்கள் பின்வருமாறு :—

1. சுவேதவனச்சருக்கம்.
2. திருநகர்ச்சருக்கம்.
3. தீர்த்தச்சருக்கம்.
4. வேதாரசி சருக்கம்.
5. சத்தியநல்விரதச்சருக்கம்.
6. அக்கினிதீர்த்தச்சருக்கம்.
7. சந்திரதீர்த்தச்சருக்கம்.
8. ஆதித்ததீர்த்தச்சருக்கம்.
9. சுவேதகேதுச்சருக்கம்.
10. இந்திரச்சருக்கம்.
11. சிவப்பிரியச்சருக்கம்.
12. அயிராவதச்சருக்கம்.
13. வியாக்கிரபாதச்சருக்கம்.
14. சுவேதமன்னச்சருக்கம்.
15. மருத்துவச்சருக்கம்,
16. திருநடச்சருக்கம்.
17. சிவலிங்கச்சருக்கம்.
18. திருவிழாச்சருக்கம்.

ஆகச் சருக்கம் 18-க்கு கவி 579.

குறிப்பு :

இதில் 186, 187, 196, 197, 198, 202, 203, 221, 226, 227, 229, இந்த நம்பர் ஏடுகளில்லை.

———

500. (*e*) வேதாந்த சூளாமணி.
Lines 7—8 in a page.

இஃது ஒரு வேதாந்த நூல். வடமொழி வேதாந்த சிந்தாமணியின் மொழி பெயர்ப்பு. இதனை மொழி பெயர்த்துத்தமிழில் இயற்றியவர் துறைமங்கலம் சிவப் பிரகாச சுவாமிகள் என்பவர். இவரைப்பற்றிய விவரங் களை 582 ஆம் நம்பரில் காண்க. இது உரையுடன் அச்சிடப்பட்டுள்ளது.

**Beginning :**

தருணமா துமைமுகத் தாம ரைக்கெழு
மருணனு மெனவுதித் தடியார் பாற்புரி
கருணைமா மதமெனக் காட்டு மாமுகன்
சரணவா ரிசமலர் தலையிற் கொள்ளுவாம்.

அருமறையின் பொருடெரித்த விவேக சிந்தாமணி
யதனுளறைவேதாந்தப்
பொருளினைமுன் னீர்வரைப்பி னுலகறிய செந்தமிழாற்
புனைதல் செய்தான்
பெருகுசுவை நறவொழுகு செஞ்சொன்மல ராற்
புனைபாப் பெருந்தண் மாலைக்
கருமிடற்று வானவற்கே சாற்று சிவப் பிரகாசன்
கவிஞர் வேந்தே.

**End :**

வேதமுத லாகிய சாத்திரத்தினுஞ் சொல்பொருளை
விளங்கியிடக் கரதலா மலகமெனக்காட்டிப்
போத மயமாகிய பேரானந்தத் தழுத்தும் பொருவிகந்த
வின்பமுத்திப்பேறு பெறக்குரிய
சாதனநான்கினையு மடைந்தெவரானு மென்றுந்
தடுப்பரிய பிறவிநோய் தணிப்பதனுக் கெண்ணி
............னரு............லனறனைத் தேடியுருகு மன்புடையோர்
தமைக்காணினளித் திடுகவுவந்தே.

ஆக 184: திருவரெங்கனுதரே துணை.

501. (*d*) திருவையாற்றுப்புராணம்.

Lines 9—12 in a page.

இது, 366-ம் நம்பர் பிரதிபோன்றது. இதில் ஆசிரமச் சிறப்பு முதல் புண்யகீர்த்தி யத்தியாயம் அங்கமுத்திச் சருக்கம் முடிய இருக்கின்றது. இந்தப் பிரதியின் கடைசியிலுள்ள ஏடுகள் கறையான் அரித்து மிகவும் சிதிலமாயிருக்கின்றன.

---

502. No. 313 கோயிற்புராணம்.

ஏடுகள் 30; Lines 5—8 in a page.

சிதம்பரத்தின் மகிமையைக் கூறுவது. இதனை இயற்றியவர் கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியார் இது உரையுடன் அச்சிடப்பட்டுள்ளது. வியாக்கிர பாதச் சருக்கம், பதஞ்சலிச் சருக்கம், நடராசச்சருக்கம், இரணியவன்மச்சருக்கம், திருவிழாச் சருக்கம், என ஐந்து சருக்கங்களை உடையது. சொன்னயமும் பொரு ணயமும் வாய்ந்தது. இந்நூலாசிரியரது காலம் 14-ம் நூற்றுண்டின் தொடக்கமாகும்.

பொற்ப தப்பொது வார்புலி யூர்புகழ்
சொற்ப தப்பொரு ளாகுவ தூயவ
ரற்ப கற்றெழு வாழணி கோபுரக்
கற்ப கத்தனி யானைக்கழல்களே.

**End :**

கோக னகன்சொற் கொண்டு புலிக்கான் முனிகோப்
மோகமி லின்பத் தாபதர் மூவர் பிறவோரு
மாகரு மன்றத் தேதனை யாமிங் கினிதுங்கட்
காக வணங்கப் போய்வரு வீரென் றறிவித்து. 68

போதுக வென்றப் புலிமுனி போதன் பொதுமேவுஞ்
சோதியை வந்தித் தருவிர வெய....................

குறிப்பு :

இதில் வியாக்கிரபாதச் சருக்க முதல் நடராச சருக்கம் 68-ம் செய்யுள் வரையில் இருக்கின்றது.

---

### 503. No. 302 கோயிற்புராணம்.

ஏடுகள் 44; Lines 8—11 in a page.

இதுவும் முற்பிரதியைப் போன்றதே. இதில் முதலிலிருந்து திருவிழாச்சருக்கம் 53-வது செய்யுள் வரை இருக்கிறது.

---

### 504. No. 328 அவிநாசிப்புராணம்.

ஏடுகள் 114; அபூர்த்தி Lines 7 in a page.

இது கோயம்புத்தூர் ஜில்லாவிலுள்ள அவிநாசி என்னும் சிவஸ்தலத்தின் மகிமையைக் கூறுவது. 285 b போன்றது. சொன்னயம் பொருணயம் வாய்ந்தது. பாடியவர் பெயர் தெரியவில்லை. அச்சிடப்பட வில்லை.

**Beginning:**

பூமேவு மனைமாட மகலாத கலைவாணி புணர்பூ மானு
மாமேவு மிருண்மானு மழைமானு.........கோ மானு
காமேவு மயமானு மணுகாத வொளிமன்றிற்கருணை ஞானத்
தேமேவு மொழிமானு முடனுடும் பேரொளியைச் சிந்தை செய்வாம்.

குருமவுனர் மருங்காசி கூறுதல மருங்காசிக் கொழுந்து மேவு
மருமைபெறு கனதான மதிலொருவர்க் கனதான மளிக்க மேலாந்

தருமகவா னுறவிலகுஞ் சஞ்சிதங்க ளுறவிலகுஞ்
சைவமூவர்
பெருமொழியும் புக்கொளியும் பேசவுடம் புக்கொளியும்
பிணிகள்யாவும்.

**End:**

சைவமுந் திருவெண்ணீறுந் தங்கிய செல்வங்காண
மொய்வரு மாறுபத்து மூவர்தம் பெருமைகாண
மைவரி முதலையுண்ட மதலைசீரழகுகாணத்
தெய்வவண் கயிலைகாணத் திருவிழி திறந்தா ரன்றே.

குறிப்பு :

இதில் முகவுரைச் சருக்க முதல் சுந்தரச்சருக்க முடிய இருக்கிறது.

---

505. No. 291 (*a*) சிதம்பரபுராணம்.
ஏடுகள் 17;1 Lines 7 in a Page.
இதுவும் 287 (*a*) நம்பரைப்போன்றது.

---

506. (b) சேக்கிழார்புராணம்.
Lines 7 in a page.
இது 255b போன்றது முழுவதுமிருக்கிறது.

---

507. (*c*) திருத்தொண்டர் திருவந்தாதி.
Lines 7 in a page.
இது 252b நம்பரைப் போன்றது. முழுவதும் இருக்கிறது.

---

508. No. 534 சிதம்பரபுராணம்.
ஏடுகள் 118; பூர்த்தி Lines 5—8 in a page.
இது 285-ம் நம்பர் பிரதிபோன்றது முழுவதும்

இருக்கின்றது. இடையிடையே சிதைந்துள்ளது. இதில் 21, 23, 24, 25, 37, 58, 59-ம் நம்பர் ஏடுகளில்லை. இந்தப் பிரதியின் முன்புறத்தில் எழுதப்பட்டிருக்கிற படி இது சமாதி சட்கமென்கிற நூலன்று.

---

## 509. No 621A கோயிற்புராணம்.

ஏடுகள் 6 ; அபூர்த்தி Lines 8—11 in a Page.

இது, 313-ம் நம்பர் போன்றது. இதனை இயற்றியவர் கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியார். இதில் பதஞ்சலிச் சருக்கத்தில் 94 முதல் 99 வரை செய்யுட்களும் நடராசச்சருக்கத்தில் 58 செய்யுட்களும் இருக்கின்றன.

---

## 510. NO. 292 (*a*) அருணகிரிப்புராணம்.

ஏடுகள் 45 அபூர்த்தி Lines 4—5 in a Page.

இதில் மூன்றுபிரதிகள் இருக்கின்றன.

இது திருவண்ணமலையின் மான்மியத்தைக் கூறுவது. சொற்சுவையும் சந்த இன்பமும் வாய்ந்தது. இதனை இயற்றியவர் சைவ எல்லப்ப நாவலர். இவர் பிறந்தவூர் தாழை நகர். இவரும் பிள்ளைப்பெருமாளையங்காரும் ஒருகாலத்தினர் என்பர். இவர் இப்புராணத்தையல்லாமல், செவ்வந்திப்புராணம், திருவிரிஞ்சைப்புராணம், முதலிய தலபுராணங்களும், திருவருணையந்தாதி, திருவருணைக்கலம்பகம், திருவாரூர்க் கோவை முதலிய பிரபந்தங்களும் பாடியிருக்கின்றனர். அன்றியும் சௌந்தரிய லகரிக்கு உரை இயற்றியவரும் இவரே. இதில் திருமலைச் சருக்கத்தில் 80 செய்யுட்கள் மட்டும் இருக்கின்றன. அச்சிடப்பட்டிருக்கின்றது.

**Beginning :**

மிக்க வேத வியாதர் விளம்பிய
விக்கதைக் கியலின்றருள் செய்திட
முக்கண் வெற்பினை மும்மத வாரியைக்
கைக்களிற்றினை [கைதொழு] தேத்துவாம்.

அம்மலைச் சுடரடி தலை தெரியாதயன்மால்
………………அடிதலைதெரியவே விளம்பாய்
கைமலைக்கடக்களிற்றுரி புனைந்திடுங் கயிலைச்
செம்மலைத்தொழுஞ் செல்வ……வவன்செய்யும் 2

பஞ்சபாதக மொருவனப்பதியிலே பண்ண
நெஞ்சினல் நினைந்திடுகினும் நினை………த்
தஞ்சமாகிய முத்தியா மெனமறை சாற்றும்
அஞ்சொ லாலது மொழிந்த பேர்க்கென்ன
பேறரிதோ 3

**End :**

அன்னமிசை வருவானுங் கருடன்மிசைவருவானும
மலமூர்த்தி
வன்னியொளி மறைத்து மற்றை மலைபோலவிருத்தி
யெனமலைதானுகுஞ்
[சென்னியிலே] யொருசோதியனுதினமுந்தெரியவருள்
செய்வாயென்று
றென்னுமந்தவடியவர்க்காய் இறையவனுமிரங்கி யிவை
இயம்பலுற்றன் 80

---

511. (*b*) தேவாரப்பதிகங்கள்.
Lines 5—6 in a Page.

இதில் தேவாரத்தினின்று தேர்ந்தெடுக்கப்பட்ட அடியிற்கண்ட பதினெட்டுப் பதிகங்கள் இருக்கின்றன. அவை :—

1. தோடுடைய செவியன்
2. கூற்ருயினவாறு
3. பித்தா பிறைசூடி
4. மடன் மலிகொன்றை
5. அந்தியு நன்பகலும்
6. பாடிளம் பூதத்தினனும்
7. மெய்யெலாம் வெண்ணீறு
8. பவனமாய்ச் சோடையாய்
9. யாழைப்பழித்தன்ன மொழி
10. உண்டாகிய நஞ்சை
11. துளிமண்டி யுண்டு
12. வீடலால வாயிலா
13. அந்தமாயுலகாதியுமா யினன்
14. விரையார்கொன்றை யினய்
15. உற்றுமை சேர்வது
16. யாமா மாநீ யாமாமா
17. காதலாகிக்கசிந்து (8 பாடல்)
18. கள்ளார்ந்த பூங்கொன்றை

512. No. 293 (*a*) அருணகிரிப்புராணம்.
ஏடுகள் 110 ; பூர்த்தி Lines 5—7 in a Page.

இது முன்பிரதியைப் போன்றது. முழுவதுமிருக்கிறது. ஆனுல் சிற்சில இடங்களில் ஏடுகள் சிதிலமாயிருக்கின்றன.

**Beginning :**

மிக்க வேத வியாதன் விளம்பிய
விக்கதைக் கியலின்றருள் செய்திட
முக்கண் வெற்பினை மும்மத வாரியைக்
கைக்க ளிற்றினைக் கைதொழு தேற்று(த்து)வாம்.

அருணாசலந்துணை.

முதிருஞ்சுவை மதுரம்பெற மொழியுந்தமிழ் விரகன் புகழ்
பதிகம்புனை பவனன்பினர் பவபஞ்சன னமலன்கதி
ருதிரும்படி பகிரண்டமு முடையும்படி யிலகும்படி
யதிரும்படி நடனம்புரி யதிருங்கழ லதிருங்கழல்.

**End :**

புழுகுபனினீ(நீ)ர் களப மனுவளவ தேனுமிறை புனையும் வகை யாலுதவினர்
விழிகுளிர நாடினர்கள்கதிபுகுது வார்களிவை வின வினரும் வீடுபெறுவா

ருழைமருவு பாணியினர் சரிதமது வாழியென வுவகை
யுடனே யுரைசெய்தான்
மொழியுமல ராலயனே முனிவருட னேசனக முனி
புகழ்வி ஞேடுதொழுதான்.

எனதுகிளை யாமிருகமுனதுதிரு மேனிபுக வினியபுழு
காலுமொருபேர்
புனைகவென வேபரவி யுயிர்விடலு நாவிகதி புகுதவிறை
யோனருளினுன்
மனமுருகி யெழுமுனிவ ரிமையவர்கண் மானிடர்கண்
மதிமுடியின் மேலணியவே
யனவரத மான்மதமு மிமசலமு மாலையமுன் னருவி
யெனவே பெருகுமே.

* * * * * *

அஞ்செழுத் தெந்நாளும் வாழி யருணை வாழி யருணை
யான்
கஞ்சமுற்ற சரணம் வாழி கருணை வாழி கருணை போன்
மஞ்சுபெற்ற வானம் வாழி வையம் வாழி வையமேற்
றஞ்சமுற்ற நீறு வாழி சைவம் வாழி வாழியே.

புகைச் சருக்க முற்றும்

ஆகச் சருக்கம் பனிரெண்டுக்குத் திருவிருத்தம் 583.

கிளிவன நாத சுவாமி அழகிய பொன்னம்மை பாதாரவிந்தமே துணை. அழகிய திருச்சிற்றம்பல முடையான் திருவடி வாழ. வெற்றிவேலுற்ற துணை. வேலு மயிலு முன்னடக்க.

**Colophon :**

ருத்திரோத்காரிஞு பங்குனிமீ 19உ ஞாயிற்றுக் கிழமையும் தசமியும் பூச நட்சத்திரமும் பெற்ற நாளில் நமசிவாய பண்டாரத்தின் மகன் முத்துக்குமாரன் அருணசலபுராணம் எழுதி முடிந்தது. திருச்சிற்றம்பலம்.

சரவணபவ. அம்பலவாணர் துணை. இதன் கீழ் இப் புராணத்தோடு சம்பந்தப்படாத இரண்டு பாட்டுகள் காணப்படுகின்றன. அவற்றுள் ஒன்று பட்டினத்தார் பாடல், மற்றொன்று அருணசலேசர் துதி.

---

## 513. (*b*) வீரசைவ மகாத்மியம்.

Lines 9—11 in a page.

இது வீர சைவத்தின் மகாத்மியத்தைக் கூறுவது. இதனைத் தமிழில் செய்தவர் இன்னாரென்று தெரியவில்லை. ஆனால், முதலில் இதனைக் கருநட (கன்னட) பாஷையில் அல்லமையர் செய்தனர் என்பது முதலிரண்டு செய்யுட்களால் விளங்குகின்றது.

**Beginning :**

சோதிபர னிருசரணந் தொழுதுசிர மிசையிருத்தி
நீதிதரு குருலிங்க சங்கமத்தி னிலையெல்லாம்
நாதனுமைக் குரைத்ததனை நயந்துலகெ ணல்லமைய
ரோயதிநற் கருநடத்தின் பயன்றமிழா லுரைத்திடுவாம்.

சீரிசைத்த வீரசைவத் திறமதனை யல்லமைய
ரேரிசைத்த தவமுனிவர்க் கினிமையுட னுரைத்ததை யான்
பாரிசைத்த புன்மொழியாற் பகர்வதுல கேழுமொரு
கீரைவித்தி னடக்கநினைந் திடுமூடர் சிறுநெறியே.

நிலவுலகா யதன்முதலாய் நீடுவயி ரவமீரு
மலகில்பல சமயமுமற் றியாவுமுதித் தொடுங்கிடமா
முலகுபுகழ் வீரசைவ சித்தாந்தத் துண்மையினை
யலையுமனத் தறிவிலியென் றறிந்தபடி மொழிந்திடு வாம்.

**End :**

பாச வஞ்சப் பகையறுத் தாண்டிடுந்
தேசிகன் பதம் வாழிசி வாணையே
யாசி லண்டட மனைத்துஞ் செலுத்திடு
மீச னன்ப ரிணையடி வாழியே.

மாரி நாளின் மதிமுன் னரம்பையி
னீர மாற வுலத்தி யெரித்தமு
தார வூட்டுவ போலென் னவாவினை
சார்வு நீத்தரு டந்தவர் வாழியே.

வீரசைவ மகாத்மியம் முற்றும். தேவஞசித்தேசர் துணை

---

## 514. No. 294 அருணகிரிப் புராணம்.

ஏடுகள் 75 ; Lines 4—7 in a page.

இது 293-ம் நம்பரைப் போன்றது. ஆனுல் கடவுள் வாழ்த்து முதல், பாகம்பெற்ற சருக்கம் ஈருக இருக்கின்றது.

---

## 515. No. 299 வலைவீசு புராணம்.

ஏடுகள் 190 ; Lines 4—7 in a page.

இதில் சிவபெருமான் கைலைமலையில் வீற்றிருந்து ஞானகோசத்தை உமாதேவியார்க்கு உபதேசிக்கும் போது அறுமுகக்கடவுள் வண்டின் உருக்கொண்டு உமையின் கூந்தலில் மறைந்திருந்து கேட்க அதனை அறிந்த சிவபெருமான் அவரை மகரமாகென முனிந்ததும், அதன் பின் உமை, சிவத்தினும் சத்தியே பெரிதெள வாதிக்கச் சிவபெருமான் உமைகையினின்றும் கோசத்தை வாங்கிக் கடலில் எறிந்து நீ பரதவர் மகளாகெனச் சபித்ததும், அவளும் பரதர் மகளாகப் பிறந்ததும், எறிந்த கோசத்தை அறுமுகனுகிய மகர மீன் விழுங்கிக்கடலைக் கலக்கித்திரியக் கண்ட பரதவர் தலைவன் "இம்மீனைப் பிடிப்பவர்க்கு என்மகளைத் தருவே"னெனக் கூறியதும் சிவபெருமானே வலைஞனுகச்சென்று அம்மகரமீனைப்பிடித்து உமையை மணஞ்

செய்ததுமாகிய திருவிளையாடல் கூறப்பட்டுள்ளது. இது விருத்தப்பாவும் அகவற்பாவும் இடையிடையே உரையும் விரவிவரப்பாடப்பட்டுள்ளது. இதனையியற்றியவர் காங்கேயன் என்னும் புலவர். அச்சிடப்படவில்லை.

**Beginning :**

இருண்மலந் தீரநற் போத மெய்தவுந்
தருபல முத்தமிழ்ச் சாரதிப்பெண்ணும்
மருவுபொறகு மூக்கு மருளனேன் ?
குருபரன் பாதமுட் கொண்டு போற்றுவாம்.

அரும்பைவைக்குஞ்சடை நின்மல நாந்த வாண் பனை
யைக்
குரும்பைவைக் கும்படி பாடவல்லார் கொற்கை வேந்
தன் மனம்
திரும்பவைக் குஞ் செஞ்சொற் றிருஞான சம்பந்தன்
செந்தமிழ்நூல்
விரும்பவைக்குங் கொடுபோய் விண்ணுளோர்க்கு மிகப்
பதத்தே.

ஒற்றை மருப்பு மிருபுயமும் ஒளிசேர் நயனமொரு
மூன்றும்
கொற்ற வலங்கற் புயநான்கும்கோலக் கரங்க
ளோரைந்தும்
வெற்றி புனைந்த மதவாறும் விளங்கக் குன்றிற் பிடி
வருந்தப்
பெற்ற களிற்றின் திருநாமம் பேசப் பாசப் பிறப்பறுமே.

தேங்கிய கங்கை சூடுஞ் சிவனொரு படகிலேறி
வாங்கிய வுததி தன்னில் வலைவீசு புராணஞ் சொன்ன
காங்கயன் றன்னை யாளுங் காங்கேயன் கந்த சுவாமி
பாங்குடன் மகரமாய பணிவிடை போற்றி போற்றி.

கலைவீசும் சிறுபிறையும் கடுக்கையுநுண் டுளோயெயிற்
கொலைவீசும் விடவரவும் கொக்கிறகு மொளிவீச [றுக்
அலைவீசும் புனற்சடையார் அலைகடலிற் படவேறி
வலைவீசு திருக்கதையை மண்மீது வகுத்துரைப்பாம்.

**End:**

நன் றியறியாச்சூரன்...... ........வ்ந்தவாறும்
யின்றெளிதை யந்தளக்குச் செவ்வேள் தந்த வியல்
பிறைல் யானுரைத்தேனிதற்கு மேலும்
வென்றிபுனே சூர்தடிந்த தம்பிரானர் விடைகொடுத்த
படியே யான் விளம்பலுற்றேன் (20)
உபதேச சருக்க முற்றும்.

---

516. No. 301 திருநள்ளாற்றுப்புராணம்.
ஏடுகள் 3?; Lines 7 in a page.

இது சோழநாட்டில் திருநள்ளாறு என்னும் சிவஸ்தலத்தின் மான்மியத்தைக் கூறுவது. இத்தலம் பிரஞ்சு இலாக்காவிலுள்ளது. நளனைப்பற்றிய கலி நீங்கிய இடம். சனிபகவானுக்கு ஆலய விசேடமிங்குண்டு. இப்புராணம் பாயிரச்சருக்கமுதல் தீர்த்தச்சருக்க மீருக ஒன்பது சருக்கங்களை உடையது. ஆசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை. இது அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning :**

வருநள் ளாற்றர வாடிய மாயனை
யொருநள் ளாற்றி லுறங்கிட வுய்த்திடுந்
திருநள் ளாற்றுரை செம்பொற் களிற்றைநாங்
கருநள் ளாற்றைக் கடக்க வணங்குவாம்.

சீர்கொண்ட வெழுத்தைந்துஞ் சத்தியைந்துந்
திருமுகங்க ளோரைந்துஞ் செயல்க ளைந்து
மேற்கொண்ட கலையைந்தும் பூத மைந்து
மிமையவர்தந் தருவைந்து மியாக மைந்தும்
பார்கொண்ட நிலனைந்து நிறங்க ளைந்தும்
படைத்தெவையு நிறைந்துபரா பரமாய் நின்ற
நார்கொண்ட தார்கொண்ட சடைவெள் ளாற்று
நள்ளாற்றெம் பெருமானை நயந்து வாழ்வாம்.

பெருவாக நளனெடுவந் தவன்றீர்த்த மாடுதலாற்
பெற்ற பேற்ரு
லொருவரவந் தெம்பெருமா னருள்பெற்று மிகவுமன
முவகை பூப்பக்
கருவாசல் புகார்புகுது நள்ளாற்றுக் கோபுரத்துக் கனக
வச்சிரத்
திருவாச லிடனின்ற மந்தனிரு செந்தளிர்த்தாள் சிந்தை
செய்வாம்.

**End :**

சீரெழுத்திற் பிழையின்றியே தீட்டினர் நற்றவர் செப்
புவா
ரேரெழுத்துக்குமை சாத்துவா ரின்பமுறச் செவி கூட்
டுவா
ராரெழுத்தைந்துணின்ருடிய வாதி நள்ளாற்றுப்
புராணநூ
லோரெழுத்துக் கொருகோடிநா ளொப்பில் சிவன்பதி
சேர்வரே.

தீர்த்தச் சருக்க முற்றும்.

ஆகத் திருநள்ளாற்றுத் தலபுராணச் சருக்கம் 9-க்கு விருத்தம் 304.

நள்ளாறர் துணை ஸ்ரீராமசெயம்.

---

## 517. No. 319 கமலாலயபுராணம்.

ஏடுகள் 114; Lines 5 in a page.

இது திருவாரூர் தலமான்மியம் கூறுவது.

இது, சம்பந்தமுனிவர் செய்துள்ள திருவாரூர்ப் புராணத்திலும் வேருனது. ஆசிரியர் பெயர் முதலி யவை தெரியவில்லை. கலியுகம் 4647 என்பது "ஆண்டு கலியுகத்துக்கு" என்னும் அடியிற்கண்ட பாயிரச்

செய்யுளால் விளங்குகின்றது. ஆகவே, இப்புராணம் கி. பி. 1546-ல் செய்யப்பட்டதாகும். இதில் ஆரம்ப முதல் பத்தாம் சருக்கத்தில் 26-ம் செய்யுள் வரையுமே யிருக்கின்றது. இதனை இயற்றியவர் வைத்தியநாத தேசிகர் எனக் கூறுவர் சிலர். இது அச்சிடப்பட வில்லை.

**Beginning :**

செந்திருவைச் சேரலாஞ் செந்தமிழைப் பாடலா
மித்திரன்போல் வாழ்ந்துண்டிருக்கலா—மந்திரஞ்சேர்
வெற்பகத்தை யூடறுந்த வேலவர்க்கு முன்பிறந்த
கற்பகத்தைக் கைதொழுதக் கால்.

திருவாரும் புண்டரிகத் திகழ்தேவ தீர்த்தமுதல்
செறிந்து தங்குந்
தருவாருந் தண்பொழில் சூழ் திருவாரூர் திருமூலட்
டானந் தன்னுள்
ளுருவாரு முமைமகிழ வளர்வானே யாம்புகழு முரை
கே ளென்றே
மருவாரும் வாதாபி வன்மீக நாதனடி வணங்குவாமே.

ஆண்டு கலியுகத்துக்கு நானூற்று முப்பத்தீ ராயிரத்து
வீண்டியநா லாயிரமு மறுநூறு மெண்ணைந்து மேழுஞ்
செல்லப்
பூண்டபரா பவவாண்டின் மகரத்திற் புத்ததிரயோ
தெசிபூர் வத்திற்
காண்டகுதிங் களின்மானின் மயெந்திரத்திற் கவுல்வ
மென கரணந்தன்னில் 25

பொருவரிய திருவாரூர்ப் புற்றிடங்கொண் டருண்
மூலட் டானனென்னும்
பரமசிவன் பாங்கான சன்னதிக்குவாமதலப் பாகந்
தன்னிற்

றிரமுறுதே வாசிரய மண்டபத்துப் பரமசிவன் வாக்
கைத் தேர்ந்து
தருமமுத னெறியுணர்த்துஞ் சைவரும் வைதிகருஞ்
சங்கந் தன்னில் 26

அருமறைக ளொருநான்கு மாகமங்க ளெழுநான்கு
மங்கமாருந்
திரிவறவா ராய்ந்து சிவன்பரமன் தெய்வமெனத்
தெளிந்த சைவர்
பொருவரிய சிவனூர் புற்றிடங்கொண் டருள்புரிந்த,
புகழையெல்லா
முரைசெய்யு மாரியத்தின் பொருடமிழா லுணர்த்துக
வென்றுரைக்கச் சொல்வாம் 27

புலைச்சியுமன் னியர்மனையிற் புக்கெடுக்கிற் பொரு
டன்னை சோரத்தாலே
........தவள்கை யறுப்பது பாங்கது........யவடன்னை
யன்றிக்கன்றித்
தொலைத்திடுவார் துரிசடைவெண் சுரபி யினைப்பயிரது
வை மேய்ந்ததென்றே
யலைத்தவர்த மருவினையு மடைந்திடுவே னதுகடக்க
வல்லே னல்லேன் 28

குறிப்பு :

இதில் ஆரம்பமுதல் பத்தாவது குலிகேசுரச் சருக்கத்தில் 2ப-ம் செய்யுள் வரை இருக்கின்றது. நூல் அபூர்த்தியாக இருப்பதால் சருக்கமும் செய்யுளும் இத்துணையெனக் காணமுடியவில்லை.

---

518. No. 320 தேரூர்ந்த சோழ புராணம்.

ஏடுகள் 85; Lines 5—6 in a page.

இது மனுச்சோழன் தன்மகனால் இறந்த பசுங்கன்றினுக்காகத் தன் மகனைத் திருவாரூர்த் தெருவிற்

கிடத்தித் தேரூர்ந்ததைக் கூறுவது. விருத்தமும் வண்ணமும் பிறவும் விரவிவர சாதாரண நடையில் எழுதப்பட்டுள்ளது. சிதிலமாயிருக்கிறது. ஆசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை. இது அச்சிட்டிருப்பதாகத் தெரியவில்லை.

**Beginning :**

பாரூர்ப் பசுப்பழிக்குப் பாலன் றனைக்கிடத்தி
தேரூர்ந்த சோழன் றிருக்கதைக்கு—நேராக
நீரூருஞ்செஞ்சடையா னீற்றன் பயந்தெடுத்த
காரூர் கடகளிறே காப்பு.

கொம்பனை யுமைபெறு சிறுவனே குஞ்சரமுகமுடை யொருவனே
நம்பிய நாரணன் மருகனே நந்துமையாள் பெற்ற நாதனே
தம்பியை யுலகினில் வலம்வரும் தந்தையை வலம்வரு சதுரனே
வம்பர் புரிகுழல் மதலையே வந்தடி மலர்கொடு பணிவனே.

வகுப்பு. வம்பைப் பொருமிரு கனதன மரகத
வஞ்சிக் குருவினி லொருபத மருளிய
வஞ்சப்பணியணி படர்சடையரன் மகன்
மன்றற் றொடைபுனை திரிபுர தெகன்மகன்
உம்பர்க் கமுதரு ளரிதிரு மருமகன்
உந்திக் கனைகடல் மறுகிடவிடநிறை
யொண்பொற் கணபணவரியர வடர்பட
வொன்றற் கடகரி வருதிரு வுருவினன்
வின்பச் சுடர்விடு பரிபுர மருவருள்
விந்தைப் பதியுக பணிமுடி புனைகடர்
விஞ்சப் பொழிமத வருவிகள் குதிகொள
வென்றிக் கரிமுகன் விழிநுத லவர்பதி

செம்பொற் பதியுக மதுமல ரதுகொடு
சிந்தித் தடிதொழு மடியவர் கடுவினை
சிந்தித் திருவருள் புரிதரு திருநுதல்
செம்பொற் கணபதி யெனவினைசிதறுமே.

**End :**

குழக்கன்றுக் காகவே குறிப்பாகத் தான்பெற்ற
மதலையைக் கொண்டுசென்று தேர்க்காலிற்
கிடத்திய
செம்பியன் திருக்கதை செறிவாகக் கற்றவர்
கேட்டவர் சிவலோக மடைவது திண்ணமே.
............................................................
......................பராபர............வேலை
யடங்கார் புரமெரித்த வாரூராவீதி
விடங்கா பிரியாவிடை.

**Colophon :**

உதிரோற்காரி ஷூ ......................................
தேரூர்ந்த புராணம் எழுதி முடிந்தது முற்றும்.

---

**519. No. 321 திருவெண்காட்டு ஸ்தலபுராணம்.**
ஏடுகள் 116; பூர்த்தி Line 6—9 in a page.

இது திருவெண்காடு என்கிற சிவஸ்தலத்தின் மான்மியம் உரைப்பது. இது வடமொழியில் சுவேதவனம் எனப் படும். இது 290-நம்பரின் உட்பிரிவாகிய (b) போன்றது. அதைப்பார்க்கினும் சுத்தப்பிரதியாகக் காணப்படுகின்றது. இத்துடன் திருவெண்காட்டுத் தேவாரம் எழுதிய ஏடொன்றும் திருவாசகத்திலுள்ள திருவெம்பாவைக்கு முதனினைப்பு எழுதிய ஏடொன்றும் கோக்கப்பட்டிருக்கிறது.

குறிப்பு :

290-ஆம் நம்பரிலில்லாத இரண்டு செய்யுட்களை அடியிற் காண்க

சூத ரோது சுவேத வனப்பெருங்
காதை தன்னையாங் கட்டுரை செய்திட
மோதகத்தை விரும்பிய மும்மதப்
போதகத்தின் புணைகழல் போற்றுவாம்.

**Colophon:**

திருவளரே விளம்பிதரு கார்த்திகைநா லெனப்படுசந்திர வாரத்திற்
கருவளர்பக் கந்தருதுவாதேசி யிரேபதியாட் கொண்டபூபன்
தருமதலை யாறுமுகச் சைவனுக்கு வெண்காட்டுத் தலபுராண
மிருபோதுந் தெரிந்தறு நூற் றொருபதையும்
வரைந்துநிறை வேற்றினோமே.

290-ஆம் நம்பரில் செய்யுட்டொகை 587
இந்த நம்பரின் படி ,, 610

---

520. No. 322 நல்லூர்ப்புராணம்.

ஏடுகள் 200; பூர்த்தி Lines 5—6 in a page.

இது தஞ்சாவூர் ஜில்லா பாபநாசம் தாலூகாவுக்குச் சமீபத்திலுள்ளதும் தேவாரம்பெற்ற சிவஸ்தலங்களுள் ஒன்றுமாகிய திருநல்லூரின் மான்மியத்தைக் கூறுவது. சொற்சுவையும் பொருட் சுவையும் வாய்ந்த நூல். இருபத்தேழு சருக்கமுடையது செய்யுட்டொகை 1016. இதனை இயற்றியவர் திருவாரூர் வைத்தியநாததேசிகர். இவர் மதுரை நாயகர் வம்ச அரசர்க்குப் பிரதிநிதியாகத் தென்னாட்டை அரசுபுரிந்த மாதைத்திருவேங்கட நாதரால் பெரிதும் பாராட்டப்பெற்றவர். இவரது சிறந்த மாணாக்கர் படிக்காசுப்புலவர். இவரது காலம் 17-ம் நூற்றாண்டின் பிற்பகுதியாகும்.

**Beginning :**

இருவிளைவெண் டிரைமாயக் கருங்கடலைத் தனித்தேற்றி
யெண்ணிலாற்றற்
பொருவருமா ணவச்சேறு கருணைநீ ராற்கழுவிப்
போக்கிப் போகா
நிரதிசயா னந்தநெடு நிலவெறிப்ப வுயிர்முத்த நெடிய
தாம
மருவதன தணியாக மகிழ்காசி வாரணத்தை வணங்கி
வாழ் வாம்.

முள்ளரைய முளரிமலர்த் தவிசிருக்கு நான்முகனு முகுந்
தன் ருனு
முள்ளரிய சோதிமய மாகியநம் பெருமானை யொருபொய்
கைக்கே
கள்வனிவ னெனத்தனது கண்மலர்கள் பிசைந்தழுது
காட்டா நிற்கும்
பிள்ளைமலர்த் தாள்பிறவிப் பெருங்கடற்குப் புணையாகப்
பிடித்து வாழ்வாம்

**End :**

பொன்னெடுஞ் சடிலத்தெம்பிரா னல்லூர்ப் புராண
மாக் காதைசெந் தமிழாற்
கன்னலுந் தேனு மமுதமுமதுரக் கனியும்போற்
கட்டுரை செய்தான்
பன்னுமெய்ப் புகழான் றவவணை முதல்வன் பாரெலாம்
வணங்குதென் கமலை
மன்னவன் கல்விக்கடலெனச் செழித்த வயித்திய நாததே
சிகனே.

27-வது அநீதிநாயனர் சருக்கமுற்றும்.
ஆக திருவிருத்தம் 1076.

**Colophon :**

தவிப்பார்க் குறுதுணை வன்மீக நாதன் றனையனிந்தப்
புவிப்பாற் புலவன் வயித்திய நாதன் புகன்ற செஞ்சொற்

சுவிப்பாகந் தேவர்க் கவிப்பாகம் போலின்பங் காட்டுங் கற்றோர்
செவிப்பாலுள்ளே சென்று சித்தத்தி லேநின்று தித்திக் குமே.

சுபமஸ்து. உதிரோற்கரி ஞூ ஆனிமீ 27 உ புதுப் புத்தூர் திருவாரூர்த் தவவணை முதலி ஒப்பில்லாமணி எழுதி நிறைந்தது. நீடூழிவாழ்க.

---

521. No. 324 திருவிளையாடற்புராணம்.

வசனம்.

ஏடுகள் 404; அபூர்த்தி, சிதிலம், Lines 3—5 in a Page.

இது மதுரையின்கண் சோமசுந்தரக்கடவுள் செய்தருளிய அறுபத்துநான்கு திருவிளையாடல்களையும் கூறுவது. கிரந்தமும் தமிழும் கலந்த மணிப்பிரவாள நடையில் எழுதப்பட்டிருக்கிறது. சாதாரணநடை இது வடமொழி ஆலஸ்யமகாத்மியமே யல்லாது தமிழ்த் திருவிளையாடற் புராணமன்று. இதில் ஆரம்பமுதல் சமணரைக்கழுவேற்றியபடலம் வரையிலிருக்கிறது.

---

522. No. 327(a) திருப்பெருந்துறைப்புராணம்.

ஏடுகள் 248 ; Lines 11—23 in a page.

இது, ஆவிடையார் கோயிலின் மான்மியத்தைக் கூறுவது. இதில் மாணிக்கவாசகர் குருந்தமரத்தடியில் உபதேசம் பெற்றதும், அவர் இயற்றிய திருவாசகச்சிறப்பும், அவர் பொருட்டு சிவபெருமான் புரிந்தருளிய திருவிளையாடல்களும் பிறவும் கூறப்பட்டுள்ளன சொன்னயமும் பொருணயமும் வாய்ந்தது. 59 சருக்கங்களைக்

கொண்டது. செய்யுட்டொகை 2071. இதனை இயற்றி யவர் சுந்தரலிங்க முனிவர். இ வ ர், திருவாவடுதுறை ஆதீனத்து திருச்சிற்றம்பலதேசிகரது மாணவர் என்பதும், இவரது காலத்தில் திருப்பெருந்துறை தேவஸ்தானத் தலைவர் அருணாசலமுனிவர் என்பதும் 'திருவளரும்' 'அலகிலருள்' என்னும் செய்யுட்களால் விளங்கு கின்றன, இவரது காலம் பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியாகும். இதில் 17 முதல் 24-வது வரையி லுள்ள ஏடில்லை. இது அச்சிடப்படவில்லை.

**Beginning:**

பொன்வரைமேற் றூழருவி போலமத தாரைதிகழ் பொரு
வின் வேழ
மன்னுமிளந் திங்களெனக் கிம்புரிதாங் கொருகோட்டு
வள்ளல் முன்னாட்
கன்னியிமா சலையருச்சித் தேத்திவரங் கொள்ளவரு
கடவுளியார்க்கு
முன்னவனும் வெயிலுவந்த கணபதிமுண் டகமலர்த்
தாள் முடிமேற்கொள்வாம்

அழுந்திமிகும் பாதலத்துக் கப்பாலும் புகுமிவேரோங்
காரமாக
வெழுந்திருத்தூர் பணைகவடு நாதவிந்து வாகவற
மிலைகளாகச்
செழுங்கொழுந்து மறையாக வாகமங்கள் மலராகத்
திகழும் வாசந்
தொழுங்கருணைப் பரையாகச் சிவமதுவைத் தருங்குருந்
தைத் துதித்து வாழ்வாம்.

திருவளரும் பெருந்துறைமான் மியத்தையருஞ் செந்தமி
ழாற்றிசைகள் போற்ற
வருளுதவு துறைசையின்வாழ் திருச்சிற்றம் பலகுருவி
னடிமை மேலாய்

மருவியஞா னப்பொருள்சேர் கல்வியின்ற னெல்லை
யுணர் மதுர வாக்கி
யிருநிலத்தோர்க் கமுதெனச் சுந் தரலிங்க முனிவரன்று
னியம்பினனே.

**End :**

அலகிலருட் குருந்திறையோ டெண்ணலுறு முந்நூற்றந்
தணர்கள்வாழ்க
வுலகமெலம் வாழ்கபொன்னித் திருநாடா ளரசுசெங்
கோ லோங்கி வாழ
நலமுதவும் பெருந்துறையீ சற்குரிய தொழிலிறைமை
நாளுந் தாங்கி
மலிவுறவப் பணிசெயரு ணசலமா முனியருளின் வாழ்க
மாதோ.

இதிலுள்ள சருக்கங்களும் செய்யுட்டொகையும்.

| | | |
|---|---|---|
| கடவுள்வாழ்த்து | விருத்தம் | 16 |
| அவையடக்கம் | ,, | 6 |
| திருநாட்டுச்சிறப்பு | ,, | 43 |
| நைமிசாரணியச் சிறப்பு | ,, | 11 |
| புராண வரலாறு | ,, | 52 |
| கைலாசச் சிறப்பு | ,, | 9 |
| தேவிக்கு சிவபுரமகிமையுரைத்தது | ,, | 30 |
| புரூரவாவுக்குத் தவுமியராத்துமநாதர் மகிமையுரைத்தது | ,, | 47 |
| அண்டகோசச்சருக்கம் | ,, | 43 |
| காமதகனச் சருக்கம் | ,, | 26 |
| தேவிக்கு காட்சி கொடுத்த சருக்கம் | ,, | 23 |
| கலியாணம் குமராவதாரம் | ,, | |
| சூரசங்காரச்சருக்கம் | ,, | 66 |
| தேவதீர்த்த சருக்கம் | ,, | 15 |
| ரிஷிதீர்த்த சருக்கம் | ,, | 25 |
| அசுரதீர்த்தச் சருக்கம் | ,, | 72 |
| மானவ தீர்த்தச் சருக்கம் | ,, | 53 |
| வாயுதீர்த்தச் சருக்கம் | ,, | 41 |
| கந்துருவதீர்த்தச் சருக்கம் | ,, | 30 |

தேவிக்கு நாரதர் சிவபுரமகிமை யுரைத்த சருக்கம் ,, 94
பிரமாவுக்குபதேச சருக்கம் ,, 25
குருந்தமூலச் சருக்கம் ,, 22
அக்கினிதீர்த்தச் சருக்கம் ,, 17
தேவிக்கு நாரதர் வனபுரகேத்திரநாம மகிமையுரைத்த சருக்கம் ,, 18
விஷ்ணுவுக்குபதேசச் சருக்கம் ,, 10
நாராயணதீர்த்த சருக்கம் ,, 7
உருத்திரருக் குபதேசச் சருக்கம் ,, 26
சிவதீர்த்த சருக்கம் ,, 31
சிவ துரோகச் சருக்கம் ,, 26
தேவிக்கு நாரதர் தவநிலை கூறி மீண்ட சருக்கம் ,, 23
தேவி தவசுக்குச் சிவபுரத்துக்கெழுந் தருளுய சருக்கம் ,, 14
புரூரவச் சருக்கம் ,, 52
இளன் சருக்கம் ,, 25
அகத்தியச் சருக்கம் ,, 25
வழக்குரைந்த சருக்கம் ,, 79
ஓதுவித்த சருக்கம் ,, 44
மாணிக்கவாசகசாமி திருவவதாரஞ் செய்த சருக்கம் ,, 49
இந்திர தீர்த்தச் சருக்கம் ,, 55
பராசதீர்த்தச் சருக்கம் ,, 22
சூரியசந்திரதீர்த்தச் சருக்கம் ,, 26
இலக்குமி சரஸ்வதி தீர்த்தச் சருக்கம் ,, 5
பாண்டவ கௌதம தீர்த்தச் சருக்கம் ,, 14
பத்ததீர்த்தச் சருக்கம் ,, 41
தலவிசேடச் சருக்கம் ,, 24
இரகசியச் சருக்கம் ,, 12
யோகபீடச் சருக்கம் ,, 20
பத்தர் மகிமைச் சருக்கம் ,, 48
யுகநான்கினும் பூசிப்போர்நாமத்திரைய மகிமையுங் கூறிய சருக்கம் ,, 20
பஞ்சரிச் சருக்கம் ,, 61
கேந்திரமகிமைச் சருக்கம் 28
வெள்ளாற்றுச் சருக்கம் ,, 39
பிட்டுக்கு மண் சுமந்த சருக்கம் ,, 72
மாணிக்கவாசகருக்குத் தலங்கடோறுங் காட்சி கொடுத்த சருக்கம் ,, 39
புத்தரை வாதுவென்ற சருக்கம் ,, 49

| | | | |
|---|---|---|---|
| உபதேசச் சருக்கம் | ,, 121 | மாணிக்கவாசக சுவாமி அயிக்கச் சருக்கம் | ,, 21 |
| குதிரையிட்ட சருக்கம் | ,, 97 | திருவாசகச் சிறப்பு | ,, 28 |
| பரிநரியான சருக்கம் | ,, 18 | பலசுருதிச் சருக்கம் | ,, 17 |

ஆகச்சருக்கம் 59-க்கு விருத்தம் 2079.

---

## 523. (*b*) சிவதருமோத்தரம்.

Lines 11—12 in a page.

சிவதருமங்களை அகத்தியமுனிவர் கேட்க அவற்றிற்கு முருகக் கடவுள் கூறிய உத்தரமாதலால், இது சிவதருமோத்தரம் எனப்பெயர் பெற்றது. இதனை இயற்றியவர் மறை ஞானசம்பந்தர். இவரைச் சிவஞானசித்தியார் சுபக்ஷத்துக்கு உரை செய்தவரென்பர். இது பரம தருமாதியியல், சிவஞானவியல், ஐவகையாகவியல், பலவிசிட்ட காரணவியல், சிவதருமவியல், பாபவியல், சுவர்க்க நரகவியல், சனன மரணவியல், சுவர்க்க நரக விசேடவியல், சிவஞானயோகவியல், பரிகாரவியல், கோபுரவியல் எனப்பன்னிரண்டு இயல்களையுடையது. ஏனைய விஷயங்களை 363-ம் நம்பரில் காண்க. இந்தப் பிரதியில் இந்நூல் முழுவதுமிருக்கின்றது. அச்சிடப் பட்டிருக்கிறது.

**Beginning :**

மலைக்குமகள் பெற்றமகனைக் கயமுகத்தனை மனத்
தெழுதி யான்
னவற்பிணிபிறப்பற வணுக்களை யகத்திய முனிக்கரு
ளிணு
[லுலப்பில் கருணைக்கடலுரு]த்திர னுருத்தனிலுதித்த
குமர
னிலக்குமிய லைக்கலி யிளைக்கவு முரைப்பனுலகிட்ட
முறவே.

**End :**

வடவரைக் கயிலேயும் பொதியமாமலேயுமோ
கடுவிருட் கயிலேயுங் கரைவிதக் கயிலேயும்
படியினுட் பரமர்தென் கயிலேயும் பணிகுவ
முடலிணைக் கடிவமே யொளிர்சிவத் துறைவமே.

ஆகத்திருவிருத்தம் 1240.

திருச்சிற்றம்பலம்.

---

### 524. (*c*) பிராயச்சித்த சமுச்சயம்.
Lines 11—12 in a page.

இது, சைவதந்திரத்துட் கூறிய விதிவிலக்குகளே யோம்பிடாது தவறிச்செய்வதனல் ஏற்படும் பாவங் கட்குப் பரிகாரம் கூறும் நூல். வடமொழியினின்றும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. செய்யுட்டொகை 302. காலம் கொல்லமாண்டு 808. அதாவது இப்பொழு தைக்கு 290 வருடங்களுக்கு முன்னெனவே, கி. பி. 1634-ம் வருடமாகும். இந்நூலாசிரியர் ஞானப்பிரகாச ரது மாணுக்கர் எனத் தெரிகின்றதேயல்லாமல் பெயர் முதலியவை தெரியவில்லே. ஞானப்பிரகாசர் எனப் பெயருடையவர் பலர் இருந்தனராதலால் இந்நூலா சிரியர்கூறும் ஞானப்பிரகாசர் இன்னுரென விளங்க வில்லே. காலம் கி. பி. 1634 எனவே மதுரையை ஆண்ட திருமலே நாயக்கரது (1623—1659) காலமாகும். இது அச்சிடப்படவில்லே.

**Beginning :**

கண்டக் கறையுமொளிவிடு செங்கமலமலரும் கருணே
நகை
மண்டிச் சிறந்த முகமதியும் வரதமபய மழுமானுந்
துண்டப்பிறையும் புரிசடையுஞ் சுரர்மா ளாமனஞ்சமுத
முண்டொப்பரிய கனிவாயு முடையானம்மை யுடை
யானே.

அன்னவர் தந் திருவாக்கென் றலைமேற் கொண்டாண்
டான கொல்ல மெண்ணூற்றெட் டாண்டாங் கீர
மென் னு முறு வருடமுத்தி ராய ணத்தி
லெழிலுறுகும் பத்தில்வளர் பக்கந் தன்னிற்
பன் னுபுத வாரமகம் பருவந் தன்னிற்
பதி ஞானப் பிரகாசன் பாதந் தன்னை
யுன்னியுளத் தறிந்தபடி யுரைத்தேன் கல்வி
யுடையோர்கள் பொருப்பரென முறுதியாலே.

**End :**

அந்தணர் வாழிய நீதி யரசர் வாழ்க
வானினம்வாழ்ந் திடுகமழை பொழிகவேத
மெந்தையருளாகமசாத் திரபு ராண
மெங்குநிறை யெய்துக வேள்விக டழைக்கப்
பந்தமிலி யரன் பூசை யவன்றன் கோயிற்
பணிவிழைவு தருமநெறி படர்கபாரிற்
றந்தியுரி போர்த்தான்ற னடியார் வாழ்க
சைவநெறி நாடோறுந் தழைக்கத்தானே...302
பிராயச்சித்த சமுச்சயம் எழுதி நிறைந்தது.

சிவமயம்.

---

525. No. 356 (1) பக்தவிஜயம் வசனம்.

ஏடுகள் 388 சிறிது சிதிலம், Lines 5 in a page.

இது, விஷ்ணு பக்தர்களின் சரித்திரத்தைக்கூறும் வசன நூல். இதனைச்செய்தவர் கோபால பிள்ளை என ஏட்டின் தலைப்பில் எழுதப்பட்டுள்ளது. அச்சிடப்பட்டிருக்கிறது. இது 57 அத்தியாயங்களை உடையது. ஆறு புத்தகங்களாக எழுதப்பட்டுள்ளது. இதில் 51 & 52 அத்தியாயங்களில்லை முதல் ஏடு சிதிலமாயிருக்கிறது. பிழையதிகமாயிருக்கின்றன.

**Beginning :**

............இப்பேது ஆரம்பம்பண்ணப்பட்ட பக்தி விசையமென்னப்பட்ட கிரந்தம் பரித்தியாயப் பிராப்த மாகுறத்துக்கு ஆதரவு நீங்களேசெ......ட்டுக்கும் அது எப்படியென்ருல் துற்பெலன் வீட்டில் காரிய கிர்த்தியம் பறப்பிஞல் அதுக்கோயுத்திபடிமுபகாரம் ஸ்ரீமந்நான் பண்ணி வக்கிராளே பின்னும் அந்தகனுக்குக் கீர்த்தி யடையவஞன கண்ணுடையவன் கிருபையிஞல் அந்த கனுக்குத் தீர்த்தயாத்திரைபண்ணுவைப்பதெப்படியோ அப்படிக்கு நீங்கள் தங்களுடைய கிருபையிஞலே.......

**End :**

ஆனபடியிஞலே மயிபதி பண்ணிஞளே அத்தியா ரோபமான நிமித்தியம் என்போல் வந்து விழுந்தது என்று அறியுங்கோள் சொஷ்த்த ஸ்ரீபத்திவிசைய கிரந் தத்திஞல் பக்த்தாள் பாவிகாள் மஞேரதம் பூரணமாக்கி விக்கும். இந்த ஒன்பதான அத்தியாயம் கராசாள முடையது தெய்வயோகத்திஞல் எழுதி முடிந்தது முற்றும்.

குறிப்பு :

இதில் ஒன்றுமுதல் 9 அத்தியாயங்களிருக்கின்றன.

---

526. No. 357 (2) பக்த விஜயம்.

ஏடுகள் 378 ; Lines 5 in a Page.

இது முற்பிரதியின் தொடர்ந்த பிரதி. இதில் 10-ம் அத்தியாயமுதல் 18-ம் அத்தியாயமுடிய இருக்கிறது.

---

527. No. 358 (3) பக்த விஜயம்.
ஏடுகள் 360 ; Lines 5 in a Page.

இதுவும் முற்பிரதியோடு தொடர்ந்த பிரதியே. இதில் 19-ம் அத்தியாயமுதல் 30-ம் அத்தியாயம் முடிய இருக்கிறது.

---

528. No. 359 (4) பக்த விஜயம்.
ஏடுகள் 285 ; Lines 5 in a Page.

இதுவும் மேற்பிரதியோடு தொடர்ந்தபிரதியே. இதில் 31-ம் அத்தியாயமுதல் 42-ம் அத்தியாயம் முடிய இருக்கிறது.

---

529. No. 360 (5) பக்த விஜயம்.
ஏடுகள் 287 ; Lines 5 in a Page.

இதுவும் மேற்பிரதியோடு தொடர்ந்த பிரதியே. இதில் 43-ம் அத்தியாயம் முதல் 50-ம் அத்தியாயம் முடிய இருக்கிறது.

---

530. No. 361 (6) பக்த விஜயம்.
ஏடுகள் 254 ; Lines 5 in a page.

இதுவும் முற்பிரதியோடு தொடர்புடையது. இதில் 53-ம் அத்தியாயமுதல் 57-ம் அத்தியாயம் முடிய இருக்கிறது.

**Colophon :**

விரோதிஹு கார்த்திகைமீ 19உ புதவாரத்தில் எழுதி முடிந்தது முற்றும்.

---

## 531. No. 369 நந்தவன மகிமை.

ஏடுகள் 3 ; Lines 6—8 in a page.

இது நந்தனவனச் சிறப்பையுரைக்கும் பத்துச் செய்யுட்களையுடையது. செய்தவர் பெயர் தெரியவில்லை.

**Beginning :**

நகைமலர் சடிலச் சோதி நயந்தருள் சிறப்பு நல்க
வகைமலர்ப் பவனச் செற்றி வழுத்துவான் முழுத்த
வாசம்
முகைமலர் கரிய கூந்தல்முற்றிழை கவுரியீன் ற
புகைமுகத் தவளக்கோட்டில் பொருப்பினைப்போற்று
வாமே. (1)

கயிலையங் காவுமேவுங் கண்ணுதல் மிசையோர்மந்தி
மயல்விநோதத்தால் வில்வமலிதழை நிரைத்தேயின்பம்
பயமுசுகுந்தனுயப் பார்முழுதாண்டானென் றுல்
இயல்மலர் வில்வம் வைப்போன் எய்துபே றியம்ப
லாமே. (2)

**End :**

வழிமதுத் தவளப்போதால் மாலிகை வளைந்துவிற்கும்
இழிதொழிற் புலையன் ஓர்நாள் விலைபெருன் இறைவர்க்
கென்றே
மொழிதலைத் தலைவனுகி முழுதுல களித்தா னென்றுல்
செழுமலர்.................................செப்பலாமே. (10)

---

## 532. No. 370 நந்தவன மகிமை.

ஏடுகள் 3 : Lines 6—8 in a page.

இது முன் பிரதி போன்றது.

---

### 533. No. 368 தேவதாரு வனமகத்துவம். (வசனம்)

ஏடுகள் 29; அபூர்த்தி Lines 5—6 in a Page.

இது தேவதாருவன க்ஷேத்திரமான்மியம் கூறுவது. தமிழுங் கிரந்தமும் கலந்த மணிப்பிரவாள நடையில் எழுதப்பட்டுள்ளது. நூலாசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை.

---

### 534. No. 374 வைத்தியநாதசுவாமி திருவிளையாடல் (வசனம்)

ஏடுகள் 50; அபூர்த்தி Lines 4—6 in a page.

வைத்தியநாத சுவாமியின் மகிமையையுரைப்பது. கிரந்தமும் தமிழுங் கலந்த மணிப்பிரவாள நடையில் எழுதப்பட்டிருக்கிறது. நூலாசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை.

குறிப்பு.

வன்னிவன க்ஷேத்திரமகிமையுமிருக்கிறது.

---

### 535. No. 367 திருவையாற்றுப்புராணம். (*a*) (பஞ்சநதமான்மியம்.)

ஏடுகள் 210; Lines 4—10 in a page.

இதில் இரண்டு பிரதிகள் இருக்கின்றன.

இது, தஞ்சைநகர்க்கு வடக்கில் காவிரியின் வடகரையிலுள்ள சிவஸ்தலங்களில் ஒன்றாகிய திருவையாற்றின் மகிமையைக் கூறுவது. சைவசமயாச்சாரியர் மூவரது தேவாரம் பெற்ற மிகச்சிறந்த சிவ

ஸ்தலங்களுள் ஒன்று. இது தஞ்சையில் கி. பி. 1577—1614 வரை அரசுபுரிந்த அச்சுதப்ப நாயக்கர் காலத்திலும் அவர் குமாரர் இரகுநாத நாயக்கர் காலத்திலும் மந்திரியாக இருந்த கோவிந்த தீக்ஷிதரின் வேண்டுகோட்கிணங்கி சகம் 1527-ம் வருடத்தில் அதாவது கி. பி. 1605-ல் செய்யப்பட்டதாக இந்நூற் பாயிரத்தால் தெரிகின்றது. நூலாசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை. செய்யுள் நடை மிகச் சிறந்தது. இதில் முதல் 3 ஏடுகள் மிகச் சிதைந்துவிட்டன. ஏடுகளின் இருதலைப்பினும் சிதைந்திருக்கின்றது.

கொன்றை வாசமு நறுந்துளாய் வாசமுங் குளிர்பூ
மன்றல் வாசமுங் கற்பக வாசமு மணவாத்
தென்றல் வாசனுந் தொழப்பெருங்குமரவே டிருந்தா
ளின்றை வாசமென் கருந்தலை வாசமா யிருக்கும் (10)

அளக்கர்நீர்த் தகளிநெய் யருக ரிட்டகல்
வளக்கருந் திரியென வமண மாசிரு
டுளக்க வைஞ்செழுத்தெனுந் தூண்டுகோலினால்
விளக்கென விளங்குநா வேந்தைப் போற்றுவாம்.

தேசிகன் ஞான போத மந்திரச் சிறையிற்பட்டுப்
பாசவன் றேலுரித்துப் பவுத்தரா மாலங் கான்று
வாசக மாணிக் கங்க ளுமிழ்ந்துமண் டலத்தி னுடி
யாசில்மன் றகத்தடங்குஞ் சேடனுக் கன்புசெய்வாய்.

மாவிபுனல்சூழ் சோணாடு தஞ்சையிற் காத்திடு மரசர் மதியமைச்ச
னெலிமறைதேர் கோவிந்த தீக்ஷதரய்யன் திருவாக் குடைமையாலே
கலியுகத்துச் சகனாண்டு மூவைஞ் ஞூற்றிருபதின்மெற் காணு மேழாய்ப்
பொலி வருடத் தையாற்றுப் புராணவட மொழிதமிழாற் புகலலுற்றேன்.

**End :**

இன்னபிரம கைவத்தத் தெம்மான் றிருவை யாற்றியல்
போற்
சொன்னபலவற்றுளுமில்லைச் சொலத்தக்க துவுமினி
யிலையா
னன்னறிவுக் கறிவாகு நாதன் பாதந் தொட்டதெனத்
தன்னதொருகை வானீட்டித் தவத்தோர்க்குரைத்தான்
சத்தியமே 58

குறிப்பு,

இதில் முதலும் கடைசியும் இல்லாமையால் சருக்கம் அத்தியாயம் முதலியவற்றை இத்துணையெனத் தெரிந்து கொள்ளமுடியவில்லை.

---

536. (*b*) சிவதருமம்.

Lines 5—6 in a page.

இது வடமொழியிலுள்ள சிவதருமத்தின் மொழி பெயர்ப்பு. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. அச்சிடப்பட வில்லை.

**Beginning:**

அம்பொ னம்பலமுறை யானைந்தாடுவார்
தம்பொரு ளெனுஞ்சிவ தருமங் கூறவே
கும்பசெம் பீரமாய்க் குஞ்ச ரத்தினைச்
செம்பொனின் சரமே சிந்தை செய்குவாம்.

…………ணர்ந்து நந்தி சனற்குமரற் குரைத்த
வடமொழியாஞ் சிவதரும வண்பெயரா கமத்தி
னுரியபொருள் செந்தமிழாந்ரெுடுத்தடைவு வகுத்தே
உலகுளோ ரறிந்துவப்ப உரைத்திடென்று முன்னை
யிருநிலமேன் மெய்கண்டான் றென்பணையூர் வாழு
மெழில் ஞானப் பிரகாசனெனு முருவா வந்து
புரையறவே யருள்செய்ய வவரருளின் படியே
புல்லறிவி னுலொருநூல் புகன்றிடுவன் யானே.

**End :**

தண்டுல மெட்கடுகு புனல்பால் குசைபுற்
றயிர்விரவு மருக்கியமுத் தமனு
.........தவிர்ந் துருத்திரன் றன் பதத்திற்
பதினுருயிர வருடம் பயின்று வாழ்வர்
கொண்டைமர மண்செம்பு வெள்ளி செம்பொன்
............................ னென்றுக்
கெண்டொகுபத் தொருநூருயிர விலக்க
மெய்துபலன் கோடியென வியம்புநூலே 55

---

537. No. 366 (*a*) திருவையாற்றுப்புராணம்.
(பஞ்சநதமான்மியம்.)
ஏடுகள் 211 ; Lines 5 in a page.
இது முன்பிரதியைப் போன்றது.

**Beginning :**

உடனிமிர்ந்துகண் மூக்கிடைநுனியுற வுச்சி
மிடறு மேலெழத் தோள்சரி கரிந்துகை விடாமற்
றிடமுறும்பது மத்தின்மேற் சிந்தையின் முக்கட்
கடவுளைத்தி யானம் பெறு (22)

**End :**

......................—.........சைவந் தழைக்க
ஞான நீடுக நான்மறை..................—
வானமாரி மன்னர்செங் கோல்வள
மேனையாவர்க்கு மின்பஞ் சுரக்கவே

**Colophon :**

ஆறுமுகந்துணை. இது எழுதினது வாசுதேவபிள்ளை பேரன் லெட்சுமணபிள்ளை கையெழுத்து.

குறிப்பு :

திருவையாற்றுக்கு ஞானக்கூத்த சிவப்பிரகாசர் ஒரு புராணம் செய்திருக்கின்றனர். அப்புராணத்திலும் இது வேறு.

---

## 538. (b) சிவதருமம்.

Lines 5 in a page.

இது 367(b)நெ. போன்றது. இதில் ஆரம்ப முதல் 55-ஆம் செய்யுள்வரை இருக்கின்றது.

---

## 539. No. 378 ஆதித்தபுராணம்.

ஏடுகள் 57 ; Lines 4 in a page.

இதில், இரண்டாவது பிரம அத்தியாயமும் மூன்ருவது நளன் சருக்கமும் மட்டும் இருக்கின்றன. முதலும் ஈறும் இல்லாமையால் சருக்கமும் செய்யுளும் இத்தனையெனத்தெரியவில்லை. அன்றியும் இது ஆதித்தபுராணம் எனத்துணிவதற்கு எவ்விதமான ஆதாரமும் காண்பதற்கிடமில்லை. இதிலுள்ள செய்யுட்களை ஆராய்கின்றபொழுது காவிரியின் வடகரையினுள்ள பாடலிவனக்ஷேத்திரமகிமையாகக் காணப்படுகின்றது. ஆசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை.

**Beginning :**

சுரர்பணி பிரமலோகத் தெய்திய தூயோர்க் கந்தப்
பிரமனு ரன்பு செய்த வாறெனப் பிரமனுர்க்கே
திரமுனி வாண ரன்பு செய்தவா றென்ன நன்றே
பரநெறியுணர்வரந்தப் பான்மையாம் பகரக்
கேண்மின்

* * * * *

ஆதிபூ ரணைக்கானவத் தலந்தனையறையிற்
சீதநீர்த் திருக்காவிரிக் குத்தர திசையில்
வேத நாயக வமுதவிந்துவினிடை விளங்கித்
தாத ளாவிய பாடலி வனமெனத் தகுமால்.

**End :**

கறையடி யுரித்துப் போர்த்த கடவுள ரருளி னுலிங்
கிறையவ ரென்பால்மேவ யானுமென் கிளையுள்ளோருங்
குறைவறு புனித ராமே மென்றெதிர் கொண்டுபோற்றி
யறைகழ லிலங்கு தாளான் விதர்ப்பகோ னகம
கிழ்ந்தான் 56

---

540. No. 379 ஏகாதசிப்புராணம்.

ஏடுகள் 25 ; சிதிலம் Lines 4—5 in a page.

இது, ஏகாதசி விரத மகிமையையும் அதனை அனுஷ்டித்த உருக்குமாங்கதன் பெருமையையும் கூறுவது. மிகவும் சாதாரண நடை. 107 செய்யுளுடையது. ஆசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை. இது அச்சிட்டிருப்பதாகத் தெரியவில்லை.

**Beginning :**

காதலா லேகா தேசிக் கதைதனைப் புராண மாகத்
தீதிலா வடவன் செம்மை செந்தமி ழோர்கள்
தங்கள்
மாதமே தலைமேற் கொண்டு பரிவுடன் அன்பர்க்
காக
ஆதர வுடனே தோணும் ஐங்கரன் பதமே காப்பு.

பாரினிலுருக்கு மாங்கன் பருதிதன் குலத்திற் றோன்றிக்
காரியஞ் செங்கோ லோச்சிக் காசினி யாளு நாளில்
..................ந்த வானந் தேவர்க்கே யாகுமென்று
தூரிய வினைகள் போகத் தொழில் செய்யப் பண்ணு
வித்தான்

**End :**

புண்ணிய விருதத்தாலே பூமியிலுள்ளோ ரெல்லாம்
மன்னவன் ருக்கு மாங்கன் வாழ்கயி லாயத் தேகித்
திண்ணமாஞ் சிவபதத்தில் திருவடி விளங்கி நன்ருய்
பண்ணிய பாவந் தள்ளிப் பரகதியடைந்தார் தாமே 107

**Colophon :**

மாசிலாமணி ஏகாதசிப்புராணம் எழுதிமுகிந்தது
முற்றும்.
ஹரிஓம்.

---

541. No. 689 (*a*) கேதாரகௌரி விரதமகத்வம்.

ஏடுகள் *90* ; Lines 8—*9* in a page.

இது கேதார கௌரிவிரத மகிமையை உரைக்கும் அகவற்பா. இதனை இயற்றியவர் பெயர் தெரியவில்லை. முதலேடும் மற்றைய ஏடுகளின் ஓரமும் சிதைந்திருக்கின்றன. இது அச்சிடப்படவில்லை.

**Beginning :**

செக்கர்ச் சடையிற் சிறுபிறை முடித்த
முக்கட் பரமன் முதல்வியோ டிருந்த
கயிலை யாகிய சயிலநற் பாங்கரி
லிடமுடைத் தாகிய வடகீழ் பாலிற்
போதாடு சோலை கேதார மாமலை.

**End :**

பொன்னெயிற் கச்சிச் சென்னியர் கோமா
னென்றனைப் பயந்த தந்தை யென்ருய்
பைந்தொடி பாக்கிய வதியெனப் பகரக்
கையா லணைத்து மெய்யுறத் தழுவி
யாக்கிய வன்பிற் பாக்கிய வதியைச்

சிவிகையிற் கொண்டு கவினகர் புகுந்து
முன்னினும் விரும்பி யின்புற் றிருந்தான்
பொருகட லுடுத்த விருநிலந் தன்னிற்
பஞ்ச பாதக ராயினும் செஞ்சடை

தழைத்த கொன்றைச் சங்கர னடியரைப்
பழித்த கொள்கைய ராயினும் பழிப்பற
யாவ ராகிலுமிந் நோன்பு நோற்றவர்
தேவர் கோயிலுஞ் செல்வ ராகுவரே.

---

542. (*b*) சமாதிலிங்கப் பிரதிஷ்டை விளக்கம்.

Lines 10—11 in a page.

இது, சிவஞானிகளை அடக்கம் செய்துள்ள சமாதியின்பேரில் இலிங்கபிரதிஷ்டை செய்யும் விதத்தைக் கூறும் நூல். இதில் சிவஞானிகளின் இலக்கணம் இது எனவும் அவர்கள் சுமையெென விடுத்த உடலைப் பால் தயிர் பஞ்சாமிர்தம் முதலியவற்றுல் அபிஷேகித்துப் புனிதமான இடங்களில் சமாதி செய்து இலிங்க பிரதிஷ்டை பண்ணிச் சிவமாகக்கருதி வழிபடவேண்டு மெனவும், தீயிலிட்டால் நாட்டில் பஞ்சம் நோய் முதலிய தீமை உண்டாகும் எனவும், அவர்கள் சமாதிஸ்தலம் காசி முதலிய புண்ணியஸ்தலம் போல்வ தெனவும் கூறப்பட்டிருக்கிறது. இயற்றியவர் பெயர் தெரியவில்லை. 87 செய்யுட்களிருக்கின்றன. அச்சிடப் படவில்லை.

**Beginning :**

வானப் பிள்ளை மதிச்சடை வார்கவுட்
டானப் பிள்ளை தனை நிக ராகிய
மோனப் பிள்ளை முருகன்முன் வந்தருள்
ஞானப் பிள்ளை பதாம்புயம் நாடுவாம்.

ஆதியருள் காமியமு மானரவ ரவமும்
அணியார்சிந் தியம்விசுவ மாதியவா கமங்க
ளோதியநல் விதிகளுட னுயர்சைவ புராண
மொழுங்குடைய பானம் புராணந்தரு மோத்தர
மோர்

தீதில்திரு மந்திரசீர் சிவஞான சித்தி
தெரித்தவிதி களுந்திரட்டிச் செய்விருத்தம்யாவு
மீதினிதென் சமாதிலிங்கப் பிரதிட்டை விளக்கம்
என்றுரைப்பான் கற்றுவல்லோ ரின்னருளினாலே.

* * * *

அமலவா னருளியவே தாகமங்கள் புராண
மங்கவே தாங்கமுத லானவெல்லா முணர்ந்து
சமலசம யம்பொருணூல் கீழ்ப்படமேற் படுமோர்
தலைவனுயிர் பாசவிதங் கண்டருள்சற் குருவால்
விமலவருள் பெற்றதுவாய் விளைந்த சிவாநந்த
மேவுநிசா னந்தமுமே மிகப்பருகிப் பருகிக்
கமலமல ரடியிணைக்கீழ்க் கலந்திரண்டற் றோங்குங்
கதிரவனை ஞானியெனக் கழறிடுமா கமமே.

**End :**

அரிசிவ ஞானி சமாதித்தலந்தான் காசி
யானதல மென்று மந்தச் சமாதிலிங் கந்தான்
கரியமுகில் தொழும்விசுவ நாதலிங்க மென்றுங்
கருது சுயம் புத்தானந் தெரிசனஞன் முத்திப்
பெரியலிங்க மென்றுமா மற்றையவென் றெண்ணும்
பேதையர்க ளொருகோடி பிரமகற்ப மளவும்
விரியழல்வெந் நரைகடைவ ரென்றுசிவாகமங்கள்
விளம்பியிடு மீதறியார் வீணுறைவ ரந்தோ.

---

## 543. (c) திருவிடைமருதூர் மும்மணிக்கோவை.

Lines 8—10 in a page.

இது, திருவிடைமருதூரின் கண் எழுந் தருளியிருக்கின்ற சிவபெருமான் தோத்திரம். அகவற்பா, வெண்பா, கலித்துறை என்னும் மூன்றுபாக்களும் அந்தாதியாக மண்டலித்துத் தம்மில் மணிபோல் விரவிரத் தொடுக்கப் பட்டிருத்தலின் இப்பெயர்பெற்றது. இதனை இயற்றியவர் பட்டினத்துப்பிள்ளையார். இவர் காவிரிப்பூம் பட்டினத்திருந்த ஒரு துறவி. வணிகர் மரபிற் பிறந்தவர். இவரைக் குபேரனது அவதாரமெனக் கூறுவர். இவரது காலம் பத்தாவது நூற்றாண்டாகும். இவர் இயற்றிய செய்யுட்கள் பதினோராந்திருமுறையிற் சேர்க்கப் பட்டுள்ளன. இப்பிரதியின் ஓரங்களில் பூச்சியரித் திருக்கிறது. அச்சிடப்பட்டுள்ளது.

**Beginning :**

தெய்வத் தாமரை செவ்வியின் மலர்ந்து
வாடாப் புதுமலர்த் தோடெனச் சிவந்து
சிலம்புங் கழலு மலம்பப் புனைந்து
கூற்றி னுற்றன் மாற்றிப் போற்றுது
வலம்புரி நெடுமா லேன மாகி
நிலம்புக் காற்றலி னகழத் தோற்றுது நிமிர்ந்தும்
பத்தி யடியவர் பச்சிலை யிடினு
முத்தி கொடுத்து முன்னின் றருளியும்
திகழ்ந்துள தொருபாற் றிருவடியகஞ் சேந்து
மறுவில் கற்பகத் துறுதளிர் வாங்கி
நெய்யிற் றோய்த்த செவ்வித் தாகி
நூபுரங் கிடப்பினு நொந்து தேவர்
மடவரன் மகளிர் வணங்குபு வீழ்த்த
சின்னப் பன்மலர் தீண்டிடச் சிவந்து

   

மருதிடங் கொண்ட வொருதனிக் கடவுணின்
றிருவடி பரசும் யாமே நெடுநாள்
இறந்தும் பிறந்து மிளைத்தன மறந்துஞ்
சிறைக்கருப் பாசயஞ் சேரா
மறித்தும் புகா வாழ்வுபெறற் பொருட்டே (1)

(வெண்பா)

பொருளுங் குலமும் புகழுந் திறனு
மருளு மறிவு மனைத்து—மொருவர்
கருதா வென்பார்க்குங் கறைமிடற்ருய் தொல்லை
மருதாவென் பார்க்கு வரும்.

(கலித்துறை)

வருந்தே னிறந்தும் பிறந்து மயக்கும் புலன்வழிபோய்ப்
பொருந்தே னரகிற் புகுகின்றி லேன்புகழ் மாமருதிற்
பெருந்தேன் முகந்துகொண் டுண்டு பிறிதொன்றி
லாசையின்றி
யிருந்தே னினிச்சென் றிரவே ளுெருவரையா
தொன்றுமே (3)

**End :**

கரத்தினில் மாலவன் கண்கொண்டு நின்கழல்
காட்டநல்ல
வரத்தினை யீயு மருதவப்பா மதியொன்று மில்லேன்
சிரத்தினுமாயென்றன் சிந்தைய தாய்வெண்சாடனென்
னுன்
தரத்தது மாயது நின்னடி யாந்தெய்வத் தாமரையே 30

---

544. *(d)* கோயில் நான்மணிமாலை.

Lines 8— 10 in a page.

இது, சிதம்பரத்தில் கோயில்கொண்டருளிய நடரா ஜப்பெருமான்மீது தோத்திரம். வெண்பா, கலித்துறை,

விருத்தம், அகவல் என்னும் நான்கு பாக்களும் அந்தாதியாக மண்டலித்து வரத்தொடுக்கப்பட்டிருத்தலின் இப்பெயர் பெற்றது. இதனை இயற்றியவர் பட்டினத்துப்பிள்ளையார்.

**Beginning :**

பூமே லயனறியா மோலிப் புறத்ததே
நாமே புகழ்ந்தளவு நாட்டுவோம்—பாமேவு
மேத்துகந்தான் றில்லையிடத்துகந்தா னம்பலத்தே
கூத்தகந்தான் கொற்றக் குடை. (க)

குடைகொண்டிவ் வையமெல் லாங்குளிர் வித்தெரி
போற்றிகிரிப்
படைகொண் டிகல்தெறும் பார்த்திப ராவதிற்
பைம்பொற் கொன்றைத்
தொடைகொண்ட வார்சடை யம்பலத்தான்
தொண்டர்க் கேவல்செய்து
கடைகொண்ட பிச்சைகொண்டுண்டிங்கு வாழ்தல்
களிப்பு டைத்தே (௨)

களிவந் தமுதூறிக்கன்மனத்தை யெல்லாங்
கசியும் படிசெய்து கண்டறிவா ரில்லா
வெளிவந் தடியேன் மனம்புகுந்த தென்றல்
விரிசடையும் வெண்ணீறுஞ் செவ்வானமென்ன
வொளிவந்த பொன்......தொன்னடமுங் காட்டு
முடையா னுயர்தில்லை யம்பலமென் றல்லா
வெளிவந் தினிப்பிறர்பாற் சென்றவர்க்குப் பொய்கொண்
டிடைமிடைந்த புன்மொழியா லிச்சையுரையேனே
(௩)

**End :**

சதுமுகன் றந்தைக்குக் சதிர்விடு கடவு
ளாழி கொடுத்த பேரருள் போற்றி
முயற்றியொடு பணிந்த வியக்கர் கோனுக்கு
மாநிதி யிரண்டு மாளுப் பெருவளத்
தளகை யொன் றுந் தளர்வின் றி நிறுவிய
செல்வங் கொடுத்த செல்வம் போற்றி
தாணிழ லடைந்த மாணிக் காக
நாண்முறை பிறழ்ந்து கோண்முறை வலித்துப்
பதைத்துவரு கூற்றைப் படி மிசை தெறிக்க
வுதைத்துயி ரளித்த வுதவி போற்றி
குலை குலை குலைந்த நிலையாத் தேவர்
படுபேரவல மிடையின் றி விலக்கிக்
கடல்விட மருந்திய கருணை போற்றி

* * * *

தில்லை மாநகர் போற்றி தில்லையுட்
செம்பொ னம்பலம் போற்றி யம்பலத்
தாடு நாடகம் போற்றி யென் றுங்
கென் றும் போற்றினு மென் றனக் கிறைவ
வாற்ற கில்லேன் போற்றி யாயினும்
போற்றி போற்றிநின் பொலன்பூ வடிக்கே.

---

## 545. (*e*) திருமுருகாற்றுப்படை மூலம்.

Lines 9—11 in a page.

இது, முருகன் தோத்திரம். இது சங்கத்தாராற் றெகுக்கப்பட்ட பத்துப் பாட்டுகளில் முதற்பாட்டு இதனை இயற்றியவர் மதுரைக் கணக்காயனுர் மகனுர் நக்கீரனுர். இதற்கு நச்சினுர்க்கினியர் உரை செய் திருக்கின் றனர். இது உரையுடன் அச்சிடப்பட்டிருக் கிறது.

**Beginning :**

ஒருமுரு காவென்றென் னுள்ளங் குளிர வுவந்துடனே
வருமுரு காவென்று வாய்வெரு வாநிற்பக் கையிங்ஙனே
தருமுரு காவென்று தான்புலம் பாநிற்பத்
தையல்முன்னே
திருமுரு காற்றுப் படையுட னேவருஞ் சேவகனே.

நூல்

உலக முவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்
கோவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி
யுறுநர்த் தாங்கிய மதனுடை நோன்றாட்
செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை
மறுவில் கற்பின் வாணுதல் கணவன்

* * * *

குரூஉமயிர் யாக்கைக் குடாவடி யுளியம்
பெருங்கல் விடரளைச் செறியக் கருங்கோட்
டாமா நல்லேறு சிலைப்பச் சேணின்
றிழுமென விழிதரு மருவிப்
பழமுதிர் சோலை மலைகிழ வோனே.

**End :**

அஞ்சுமுகந் தோன்றி லாறுமுகந் தோன்றும்
வெஞ்சமரந் தோன்றில் வேல்தோன்றும்-நெஞ்சில்
ஒருகால் நினைக்கி லிருகாலும் தோன்று
முருகாவென் றோதுவார் முன்.

---

546. (*f*) விபூதி மகத்துவம்:
Lines 8 in a page.

இது; விபூதியின் தோற்றமும் அதன் மகிமையையும் கூறுவது. 6 செய்யுட்கள் இருக்கின்றன.

**Beginning :**

எந்தை யனுதி நிட்களமே சகளீ கரித்தின் றிறைவியையு
முந்தை முதல்வி யைந்தொழிலு முறையினீயே யளித்தி
யெனத்
தந்த முதல்வன் சுயேட்சையா யிருந்தா னந்தத் தனி
முதல்வி
யைந்து தொழிற்குங் காப்பாய்நின் னடையாளந்தந் தரு
ளென்ருள்.

**End :**

நீறு பூத்ததன் னழல்வடி வியற்கை வெண்ணீற்றைப்
பேறு நல்குவோன் மூலகா ரணம்பெரி திதெனு
வீறு பல்லுயிர் நரகுரு வாறு மேன்மருந்தாய்க்
கூறினன்கரத் தால்வழித் தம்மைகைக் கொடுத்தான்.

(6)

---

## 547. (g) அன்னதானம்

Lines 8 in a page.

இது இன்னவர்க்கு அன்னமளிப்பது மிக்க விசேடம் என அன்னதானத்தின் பெருமையைக் கூறுவது. இரண்டு செய்யுட்களுள்ளன.

**Beginning :**

அதிதியர் கோடி துய்ப்பதி லதிக மரனடிக் கன்புளோன்
றுய்த்தல்
துதியுறு மவனிற் கோடி மெஞ்ஞானச் செயலுளோ
ஞெருவன் றுய்த்திடுதல்
பதியுறு ஞான வானினுங் கோடி பரத்தொடு
மயிக்கவான் றுய்த்தல்
கதியுறு மன்னங் கொடுப்பவர்க் குமையுங் கடவுளுந்
தொண்டு செய்திடுவார்.

**End :**

குடும்பியாய் வந்த வதிதியர்க் கன்னங் கொடுத்
தொருவற் சரம்புரக்கி
விடும்பை தீரவிழுக் கொவ்வொராண்டாகக்
கயிலைவாழ்ந் தெய்துவர் முத்தி

நெடு[ம்பெ]ருஞ் செல்வ மெய்தினர்க்கீதல் [நீணிதி]
கொடுத் துவாங்குதலா
மடும்ப னல்குரவா லே[ற்றவ]ர்க்கீதலாயிர மடங்கு
நற்பயனும்.

---

548. *(h)* சமயந்தோன்றின முறைமை.

Lines 6—9 in a page.

இது, சிவபெருமானுடைய திருமுகங்களினின்றும் மதங்கள் உற்பத்தியானவிதம் கூறும் வசனநூல். அபூர்த்தியாயிருக்கிறது அச்சிடப்படவில்லை.

**Beginning :**

சத்தியோசாதத்தில் பாசுபதம், வாமதேவத்தில் மாவிரதம், அகோரத்தில் காளாமுகம், தற்புருஷத்தில் சைவம், ஈசானத்தில் வயிரவம், அதோர்முகத்தில் வாமமும், புறச் சமயம் ஆறுந் தோற்றம். முகமாறுக்கு மூர்த்தியினுடைய அவதரப் பேரறியும்படி.

சத்தியோசாதம் நின்ற மூர்த்தம்
வாமமிருந்த மூர்த்தம்
அகோரம் சதாசிவ மூர்த்தம்
தற்புருஷம் எழுந்தருளியிருந்த மூர்த்தம்
ஈசானம் நடன மூர்த்தம்
அதோமுகம் நித்திரை மூர்த்தம்.

**End :**

நித்த முத்தி கன்மயோகிகள் விவேகமுத்தி எல்லாத்
தையும்
அறிகிறதே மாயாவாதி, பரவுமுயிர் கெடுமுத்திபாற்
கரியன்
சித்த முத்தி சித்தர்களென்பர், பாடாண.........திதிவை
சேஷிகன்

## 549. (*i*) விநாயகரகவல்.

Lines 6—9 in a page.

இது, விநாயகர் தோத்திரம். இதனை இயற்றியவர் அவ்வையார். அச்சுப்பிரதிக்கும் இதற்கும் பாடபேதம் காணப்படுகிறது. அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning :**

கணபதி யென்றிடக் கலங்கும் வல்வினை
கணபதி யென்றிடக் காலனுங் கைதொழுங்
கணபதி யென்றிடக் கருமமு மாதலால்
கணபதி யல்லதெக் கருமமு மில்லையே

நூல்.

சீதக் களபச் செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு பலவியல் பாடப்
பொன்னரை ஞாணும் பூந்துகி லாடையும்
வன்ன மருங்கில் வளர்ந்தழ கெறிப்பப்
பேழை வயிறும் பெரும்பாரக் கொம்பும்

* * * *

அணுவுக் கணுவா யப்பாலைக் கப்பாலாய்க்
கணுமுற்றி[நின்ற கரும்]புள்ளே காட்டி
வேடமு நீறும் விளங்க நிறுத்திக்
கூடிய தொண்டர்[குழாத்]துடன் கூட்டி
யஞ்சக் கரத்தி னரும்பொரு ளுணர்த்தி
நெஞ்சக் [கரத்தி னி]லை தெளி வித்துத்
தத்துவ நிலைமையுந் தந்தெனை யாண்ட
வித்தக [விநாயக]ன் விரைகழல் சரணே.

**End :**

மதுர மொழியு முமையாள் சிறுவன் மலர்ப்பதங்கள்
முதிர நினையவ லார்க்கரிதோமுகில் போல் முழங்கி
யதிர வருகின்ற வானையுந் தேரு மதன்பின் வந்த
குதிரையுங் காதங் கிழவியுங் காதங் குலமன்னனே.

### 550. (j) திருவெம்பாவை.

Lines 6 in a page.

இது, திருவாசகத்தின் ஒருபகுதியாகும். இதனை இயற்றியவர் சைவசமயாசாரியார் நால்வருள் ஒருவராகிய மாணிக்கவாசகர்.

இதில் 'முத்து நற்றாமம் பூமாலை' என்னும் செய்யுள் முதல் 'மையமர் கண்டனை வான நாடர்' என்னும் செய்யுள் முடிய இருக்கிறது. இதில் 5-வது ஏடு இல்லை.

குறிப்பு,

இவைகளை அல்லாமல் சிவஸ்தோத்திரம் கிரந்தத்தில் எழுதிய ஒரு ஏடும் இருக்கிறது.

---

## XII. கதைகள்.

---

### 551. No. 20 மாயாராவணன் கதை.

ஏடுகள் 33 ; மிகவும் சிதலமாயிருக்கிறது அச்சிடப்படவில்லை Lines 5—7 in a page.

இதில் இராம இலக்குமணரைப் பெட்டியில் வைத்து எடுத்துப் பாதாள உலகம் சென்ற மாயாராவணனை அனுமான் கொன்று அவ்விருவரையும் மீட்டுவந்ததும், அனுமான் தன் வெயர்வையை உட்கொண்ட மச்சத்தின் வயிற்றினின்று பிறந்த மச்சமுகனோடு போர் புரிந்ததும் பிறவும் அந்தாதியாகக் கூறப்பட்டுள்ளது. இரண்டு அருகும் மிகச் சிதிலமாயிருக்

கிறது. முழுவதுமில்லாமையால் செய்யுட்டொகை காணமுடியவில்லை. ஆனால் இந்தப்பிரதியில் ௨05 செய்யுட்கள் இருக்கின்றன. இது மயில்ராவணன் கதை எனவும் விளங்கும்.

இதனை இயற்றியவர் பெரியநாயகன் என்னும் புலவர். இவர் பெத்துநாயகன் குமாரர் என்பதும் கண்டிவளநாட்டைச்சார்ந்த மாந்தை நகரிலிருந்தவ ரென்பதும் அடியில் வரும் செய்யுளால் விளங்கு கின்றது.

**Beginning :**

......புயங்கந்தொட்டதெனவே செயராமனைக்கொண்டு
மாயராவணன்
..................நகரேக வப்பதியிலனுமனு மரையிருளிலேகி
எங்குமென வேயவனை யங்கைகொடுதாக்கி... னைபுங்
குணந்தெவருமிடர்தீரப்
பொங்கு சயனத்தின் மிசை வைத்தகதை பாடப்புந்தித...
அத்திமுகவோனே.

பொறை வடிவு தானன சீராம ராமனைப்
புயலனைய மேனியனை மயன் மகனிராவணன்
கறையிருளில் வெகுமால்கை.........னைந்திடு
பெருந்திறல் கதைதனை யுரைத்தான்
மறையனைய வாசகன் கண்டிவள நாடான்
மாந்தைநக....................................வாழ்
பிறைமுடி யகத்தீசர் பாதமற வாதான்
பெத்து நாயகனருள் பெரியநாயகனே.

எனநினைந்தே அஞ்சாதே யென்னுடனே சமர்பொருதா
யுனதுபதி பேரேது ஒளியாம லுரையென்ன
அனுமனருள் புத்திரனன் ஆர்வரினும் போகவொட்
டேன்
எனதுபேர் மச்சமுக னிப்பொரவா...

**End :**

படிகள் நடுங்கிட அந்தகனுர் பாசமெனும்படி வாலத
கடுகியே வீசி......க்கட்டினன் மிக்க கழுத்திறுக [ஊக்
முடுகியுரத்து நிலத்திடையே மோதினன் வால்கொடு
மோதியபின்
......த்து மிதித்து மகிழ்ந்தண்டர் நடுங்க முழங்கினனே
205

---

552. No. 51 (*a*) குயில் ராமாயணம்.

ஏடுகள் 59; அபூர்த்தி சிதிலம் Lines 4 in a page.

இது 'கூவாய் குயிலே' என்பதை மகுடமாக அமைத்து இராம சரிதத்தைக் கூறுதலின் குயில் ராமாயணம் எனப்பெயர் பெற்றது. இப்பெயருடையனவாக மூன்று புத்தகங்களுள்ளன. மூன்றும் ஒன்றன் பிரதியே. செய்யுள் நடை மிகச் சாதாரணமானது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. சிறிதும் பயன்படாத விதமாகச் சிதைந்திருக்கின்றது. இப்பிரதியைப் படிப்பதும் செய்யுட்டொகை காண்பதும் கடினமாயிருக்கிறது.

---

553. (*b*) கம்பராமாயணம்.

**Lines 4 in a page.**

இதில் பாலகாண்டத்தினின்றும் தேர்ந்தெடுத்த 126 செய்யுட்கள் எழுதிய 27 ஏடுகள் இருக்கின்றன.

வெற்றேடுகள் கடைசியில் கோக்கப்பட்டுள்ளன.

---

### 554. No. 52 குயில் ராமாயணம்.

ஏடுகள் 28; அபூர்த்தி.சிதிலம் Lines 4 in a page.

இது 5 (*a*) போன்றது. பெரும்பாலும் சிதிலமாயிருக்கின்றது.

---

### 555. No. 53 குயில் ராமாயணம்.

ஏடுகள் 42; பூர்த்தி Lines 5 in a page.

இதுவும் முன்பிரதிபோன்றது

இதில், 128 செய்யுட்கள் இருக்கின்றன.

ஆயினும் சிறிது சிதிலமாயிருக்கிறது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. அச்சிடப்படவில்லை.

**Beginning:**

செங்கதி ரவன் குலவன் நெஞ்ச மரபுங்கவன்
  செஞ்சிலையில் விஞ்சு மதிதீரன்
எங்கள்குல கங்கள்தொழும் எங்களுட தம்பிரான்
  இன்பமுள ராமகதை பாட
கங்கையொடு திங்களணியுஞ் சடைபடைத்தவன்
  கண்டமது கன்றுவிட முண்டோன்
மங்கையுமை பங்கனுயிர் மந்திமுகன் தந்திமுகன்
  வந்துமுன்னடைந்தருளக் கூவாய்-குயிலே. 1

திருவளரு மணிமார்பன் திருக்கடலடைத்தவன்
  செருக்கிடு மரக்கர் குல காலன்-குயிலே
வரியரவிலே துயிலு மாயனுங் கேளந்த
  மாபலியைச் சிறையில் வைத்த வள்ளல்-குயிலே
அரியமறையோர்களும் பெரியபெருமாளெங்க
  ளணியரங்கேசரபிராமன் -குயிலே
கரியமுகில் மேனியன் பரமனிவனே யென்று
  கருணையுடன் காத்தருளக் கூவாய்-குயிலே. 5

மேருவில் பெரியவன் தீரரில் புவிபுகழ்
வீரரில் பெரியதொரு தீரன்-குயிலே
வாரியைக் கடையுமிருமார்பு பொற்புயமுடைய
வாலியைக்கொல்ல வென்று சொல்லி-குயிலே
தாரையைப் புணருமணி மார்பில் குறைநிறை
கொள்
தாருவிலத்தரு கொளித்து நின்று-குயிலே
நீரலைத்துருகுமுனை வாளிதொட்டிட வல்ல
ராம லட்சுமணர் வரக் கூவாய்-குயிலே. 76

கவரான கணைவந்து பட்டவுடனே நெஞ்சம்
கன்னி(றி)யவன் மெத்தவே நொந்து-குயிலே
அபராத மில்லாதிருந்திடவே நீர்முந்தி
அனியாய மெனையெல்லாமோ-குயிலே
உவராழி உலகுதன்னில் ஒளித்துநின்றே யெய்யும்
உங்கள் குலமுறைமையோ வென்றான்-குயிலே
புவியரசு புகழ்வாலிமிக நொந்து சொற் கேட்கும்
புயல்மேனி ராமன் வரக்கூவாய்-குயிலே. 77

**End :**

நாடியவன் வார்த்தை தொருநாலு பேருங்கூடி
நாராயண............................ன்று
நீடுபுகழ் தென்னிலங்கை விபீஷணருக்கே யளித்த
வீர ரகுநாதன் வரக் கூவாய்-குயிலே. 128

**Colophon:**

வெங்கட்டராமன் கோகிலராமாயணம் எழுதிமுடிந்தது முற்றும்.

வெங்கிட்டராமன் கையெழுத்து.

---

556. No. 100 குசலவன்கதை.
ஏடுகள் 80 அபூர்த்தி; (1) Lines 3 in a page.

இது ஸ்ரீராமரது புத்திரர்களாகிய குசன் லவன் என்

பவர்களின் சரிதத்தைக் கூறுவது. செய்யுட்கள் சாதாரண நடையில் அமைக்கப்பட்டுள்ளன. இதில் 153 செய்யுள் இருக்கின்றன. இதனைச் செய்தவர் வினைதீர்த்தான் என்பவர். இந்தப் பிரதி சிதிலமாயிருக்கிறது. அச்சிடப்படவில்லை.

**Beginning :**

நாடிய பொருள்கை கூடும் ஞானமும் புகழு முண்டாம்
வீடியல் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கு
நீடிய வரக்கர்சேனை நீறுபட் டழிய வாகை
சூடிய சிலையி ராமன் தோள்வலி கூறுவோர்க்கே.

சீரணி யுலகை யாள்வர் செல்வமும் புகழுண்டாகும்
நாரண னிருபதத்தை நன்மையாய்ச் சொல்ல லாகும்
காரணி ராமச் சந்திரன் கருணையாய்ப் பெற்ற மைந்தர்
பேரணி குசலவன்றன் பெருங்கதை கூறுவோர்க்கே.

பேரான குசலவன்றன் பெருங்கதை சொன்னவரா
றென்னில்
சீரியனூர் வேடப்பிள்ளை செழிக்கு மழகப் பெருமாள்சேய்
தீராதவல் வினைதீர்த்தவன் செப்பிய சொல் கவிப்பிழை
கள்
ஆராய்ந்து தமிழ்ப்புலவோர் அடியேனை மிகவுங் காப்
பார்.

**End :**

வீரிய குசனும் நின்று விளம்புவான் பால ருக்கு
சூரிய குலத்து மன்னன் சுதனல்லோ நானு மின்று
ஆரணமுனிவர் பெற்ற அன்புள்ளபாலா நீங்கள்
தூரவே நின்று பாரும் தொடுத்ததோர் பாணமெல்
லாம். 153

---

557. No. 101 குசலவன் கதை.
ஏடுகள் 38; பூர்த்தி (2) Lines 4—5 in a page.

இது முற்பிரதியைப்போன்றது. ஆனால் இதிலுள்ள செய்யுட்கள் மேற்பிரதியிலுள்ள செய்யுட்களினும் வேறுபட்டவைகளாக இருக்கின்றன. ஆசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லை. செய்யுட்டொகை 94. கடைசி ஏடும் இரண்டாவது ஏடும் பாதிபாதியாக முரிந்துவிட்டன. பிரதி சிதிலமாயிருக்கிறது. அச்சிடப் படவில்லை.

**Beginning**

சூரியன் குலத்தில் ராமன் சுந்தரி வில்லினாலே
ஆரியனாகச் சென்று ராவண வேட்டையாடி
சீரிய அயோத்தி தன்னிற் சீதையை மீட்டுவந்து
பாரினில் விண்ணோர் போற்றப் பண்பிலர் வாழு
நாளில்

**End :**

சந்திர னிரவி தானும் தன்குலம் வாழ வென்று
பந்தடி வணங்கி...................................
அந்தரந் தன்னில் வந்து அவற்குடன் சிறந்து நிற்க
சிந்தையில் துயரந் தீர................................ 94

**Colophon:**

ஹரி ஓம் நன்ருக. ஆங்கிரஸ ஆவணிமீ 7உ மாசிலாமணி குசலவராமாயணம் எழுதி நிறைந்தது முற்றும்.

---

558. No. 102 குசலவன்கதை.
ஏடுகள் 56; பூர்த்தி (3) Lines 6—7 in a page.

இது 100-ஆம் நம்பர் பிரதியைப் போன்றது. முழுவதுமிருக்கிறது. அதற்கும் இதற்கும் பாடபேதமும்

காணப்படுகின்றது. இதில் 103-ம் நம்பரைவிட 126 செய்யுட்கள் அதிகமாக இருக்கின்றன. செய்யுள் தொகை 298. சிதிலமாயிருக்கிறது.

**Beginning :**

சீரணி யுலகை யாள்வார் செல்வமும் புகழு முண்டாம்
நாரணன் விளையாட் டெல்லாம் நன்மையாய்ச் சொல்ல
லாகுங்
காரண ராம சந்திரன் கருணையால் பெற்ற மைந்தர்
[பேரணி] குசலவன் பெருங்கதையைக் கூறினபேர்
களுக்கே

பேரணி குசல வன்தன் பெருங்கதை கூறினேனும்
மேரணி அயனூர் வாழு மியல்புனை வேடப்பிள்ளை
ஆரணம் பொருந்திவாழும் மழகன்சேயருள் தீத்தான்
சொல்
பூரண மான புன்சொல் புலவர்கள் பொறுக்கவேணும்.

**End :**

திங்கள் மும்மாரி பெய்கத் திருநகர் வாழ வாழப்
பொங்கியே செல்வ முண்டா.........................
மங்கலகீதம் பாட மாமறை யோர்கள் வாழ
சங்கமு மாழிவாழத் தயரத ராமன் வாழ. 298

---

559. No. 103 குசலவன்கதை.
ஏடுகள் 32; அபூர்த்தி (4) Lines 6—7 in a page.

இது 102-ஆம் நம்பரைப்போன்றது. இதில் 272 செய்யுட்கள் இருக்கின்றன. 100-ம் நம்பரைவிட 119 செய்யுட்கள் அதிகமாயிருக்கின்றன.

## 560. No. 104 தமிழறிமடந்தைகதை.

வசனம்.

ஏடுகள் 35; Lines 4—6 in a page.

இது உறையூரில் அரசாண்ட சோழன் மகளாகிய தமிழறியும் பெருமாளின் சரிதத்தைக் கூறும் வசன நூல். இதில் 5 முதல் 11 வரையிலுள்ள ஏடுகள் இல்லை. நூலாசிரியர் பெயர் தெரியவில்லை. அச்சிடப்பட்டிருக்கிறது. அச்சுப்பிரதிக்கும் இதற்கும் வேறுபாடு மிக உண்டு.

**Beginning :**

காலனுர் பாசக் கயிற்ரு லெனைக்கட்டிச்
சூலமதுகொண்டு துடராமுன் —வேலனே
பந்தங் கொண் டிங்கித முடுகிய பஞ்சின்கண்
ணஞ்சன மெழுதிய
தந்தந்தன நெஞ்சிடு மடியிணை தான்.

கோழியென்பா னென்ருெரு ராசா. கோழிப்படை வீடென்ருெரு படைவீடு. அந்தப்படை வீட்டை சூழ வலிகாந்தத்திஞலே கோட்டையிட்டிருக்கும். அந்தக் கோட்டைக்கு மெழுகு சீலையிஞலே உறைபோட்டிருக்கும். அந்தக் கோட்டையின் பேரிலே மாத்தான் வந்தால் உறைகழத்திப்போட்டால் மாத்தானையுந் துரத்தி அவர்களிட ஆயுதம் பறித்துக்கொள்ளும். இப்படிச் சூட்சமாகச் சிறிது காலம் நடந்துவருகிற நாளையிலே பதின்காத வழிக்கப்பாலே சோழன் ராச்சிய பரிபாலனம் பண்ணிக்கொண்டு இருக்கிற காலத்திலே இந்தக்கோட்டையுட வத்தமானங்கேட்டு ஏணிகளும் சவதரித்துக்கொண்டு வெகுபதாதி சேனையுங்கூட்டி ஆரம்பியாமல் உறைகழித்து முன்னே சென்று நாலு வாசலும் ஏணியை சாத்தி ஏறி விழுந்து கோழியென்பானென்கிற ராசாவையும் வெட்டிப்படை வீட்டையுமழித்

துக் கோட்டையுறை யிட்டிருந்த படியினாலே உறையூர்ச் சோழ னென்று பேருமுண்டாய்.

**End :**

விறகு தலையனென்கிற பேருமாற்றி அவனுக்கு உறையூர்க்குமார னென்கிற பட்டமுங் கட்டிவித்து அவளுக்கு தமிழறியும்பெருமா ளென்கிற பேருமாத்தித் தில்லைப் பெருமா ளென்கிற பட்டமுங் கட்டுவித்து அவளுக்கு வரிசை மானியமும் உம்பிளிக்கையுங் கட்டளையிடுவித்து நக்கீரதேவரை ஆனைமத்தகத்திலே வைத்துப் பட்டணப் பிரவேசமாக வரச் சொல்லி வந்த பிறகு சோழனலு நக்கீரதேவர்க்குப் பல்லக்குமிட்டு வெகுமானத்துடனே மதுரைக்கனுப்பினர். நக்கீர தேவரும் மதுரையில் சென்று பாண்டியனுக்கும் சங்கத் தார்க்கும் தமிழறிமடந்தையின் (வர்த்தமா)ன மெல் லாஞ் சொல்லி இருந்தாரென்றவாறு.

ஹரிஓம் நன்ருக. ஆங்கிரஸ ஆடி-மீ 3-உ தமிழறிவாள் கதை எழுதி முகிந்தது முற்றும்.

சிவகாமி அம்மைதுணை ராமசெயம்.

---

561. No. 229 (*a*) தமிழறிமடந்தை கதை.
ஏடுகள் 180 ; Lines 4—6 in a page.

இது மேற்பிரதியைப்போன்றது.

**Colophon.**

விரோதிஸ கார்த்திகைமீ 12உ சனிவாரநாள் தமிழறிவாள் கதை எழுதிமுடிந்தது முற்றும்.

---

562. (*b*) கம்பராமாயணம் உரையுடன்.

Lines 6—7 in a page

இதில் யுத்தகாண்டத்தில் அங்கதன் தூதுப்படலத்தில் 42 செய்யுட்களும் நிகும்பலையாகப்படலத்தில் 129 செய்யுட்களும் உரையுடன் இருக்கின்றன.

---

563. (*c*) வீரமாறன் கதைவசனம்.

Lines 5 in a page.

இதில் விசயநகரத்தரசன் வீரசூரதுங்கன் என்பவன் மகன் வீரமாரன் வரலாறு கூறப்பட்டுள்ளது. இக்கதையில் வசனமும் விருத்தம் வெண்பா முதலிய செய்யுட்களும் இடையிடையே காணப்படுகின்றன. 10-வது முதல் 35 வரையில் ஏடில்லை. ஆசிரியர் பெயர் தெரியவில்லை அச்சிடப்படவில்லை.

**Beginning :**

வெய்ய புகழ்பரவும் வீரமாறன் கதையைப்
பையவே செந்தமிழாற் பாடுதற்குச்—செய்யில்
மருமருவும் ராசை வளர்மெய்க்கு மன்றன்
திருவடிகள் காப்பாந் தினம்.

தன்னிக ரில்லா வீர மாறனுர் சரிதை தன்னைப்
பன்னியான் பாரின் மீதே பரிவுடனுகந்து பாடக்
கன்னல்சேர் மொழிபாள் வள்ளிகணவனு மயனு மாலும்
நன்னெரி யுள்ள மெய்க்கு நாயகன் நன்மை செய்வாம்.

வசனம்.

விசயனகர மென்றொரு பட்டணம். அந்தப் பட்டணத்துக்கு வீரசூரதுங்க னென்றொரு ராசா. அந்த ராசாவின் வாசலிலே தத்துவப்பிரகாச புத்தியுள்ள மந்திரியென்று ஒருவனுண்டு. அந்தப்பட்டணத்துக்கு

இரும்பிலே கோட்டையும் பாதாள தேசமாகிய அகிழும் நாலுவாசலுக்கும் நாலுநூருயிரம் கிங்கிலியரும் மாகா மேருப்போலத் தோன்றியிருக்கப்பட்ட சட்ட சாள்......
ட்டிலாத தேசமும் கவன துரகமும்......................

* * * * * *

சதுரங்க சேனையோடுமீறி இந்திர பதவியாயிருக்கின்ற நாளையில் மந்திரிபேச்சொழிய மன்னன் பேச்சில்லை. மன்னனும் அந்தநாள்வரை மந்திரிக்கு ஏவல்கேட்டு ராசா ஆக மெல்லாம் குன்றி அரசிழந்திருக்கிற நாளையில்.

**End :**

அதன்பிறகு வீரசூரதுங்கராசா தன்னுடைய குமாரன் வீரமாற ராசனுக்குத் தன்கையினுலே பட்டாபிஷேகம் சூட்டிவிச்சு ரதகசதுரக பதாதிப் பிரளயமான சேனையோடும் இந்திரபதவியோடு மார்ராச்சிமணி நாவசையாமல் ராச்சிய பரிபாலனம் பண்ணிக்கொண்டிருந்தான்.

எ-று

அச்சுதன் பதத்தைப் போற்று மதிகமாம் வீர மாறன்
வச்சிர மகுடனுன மதனவேள்போலும் ராசன்
உச்சித மான பாடலுகந்துடன் படித்தோர் கேட்டோர்
மெச்சி யேழுலகுமாண்டு விஷ்ணுவின் பாதஞ் சேர்வார்.

ஹரிஓம் நன்ருக குருவேதுணை.

**Colophon :**

சர்வதாரி ஸு அற்பசி மீ 11 வ சுக்கிரவாரநாள் கலியுகராயப்பிள்ளை குமாரன் திருவநாதன் வீரமாறன் கதை துவாதேசிப்பலனில் எழுதி முடிந்தது முற்றும்.

---

### 564. No. 105 (*a*) பஞ்சதந்திர வசனம்.

ஏடுகள் 41; Lines 5—9 in a page.

இது பாடலிபுரத்தை அரசுபுரிந்த சுதரிசனன் என்னும் அரசனது புத்திரர்களுக்குப் புத்தி புகட்டுதல்

காரணமாக விஷ்ணுசன்மா என்னும் வேதியனுற் சொல்லப்பட்டது. மித்திரபேதம், சுகிர்லாபம், சந்தி விக்கிரம், லப்தஹானி, அசம்பிரேக்ஷ்ய காரியத்துவம் என்னும் ஐந்து தந்திரங்களை விளக்கும் கதைகள் இதில் கூறப்பட்டிருத்தலின் இது பஞ்சதந்திரக்கதை எனப் பெயர் பெற்றது. நடை மிகச் சாதாரணமாகக் காணப் படுகின்றது. இது செங்கற்பட்டு ஜில்லாவில் நியாயாதி பதியாக இருந்த தாண்டவராயமுதலியார் இயற்றிய பஞ்ச தந்திர வசனமன்று.

பாடலிபுர மென்று ஒருபட்டணமுண்டு அந்தப்பட்டணம் ஆளுகிறவன் சுதரிசனன் என்னும் ஒரு ராசா அந்த ராசாவின் குமாரர்கள் அஞ்சுபேர் உண்டு ........ சிலம்பம் படியாமல் துர்புத்தியாய்த் திரியச்சே அந்த ராசா விசாரப்பட்டு என்னுடைய குமாரர்களை புத்திமான்களாக வித்தியாப்பியாச......த்தியங்களும் படிப் பிச்சு என்னுடைய விசாரந்தீர்க்கின்றபேர் உண்டானுல் பாதி ராச்சியமும் குடுக்கிறே மென்னச்சே விஷ்ணு சருமா என்கிற பிராமணன் ராசாவைப்பார்த்து நீர் ஏதுக்கு விசாரப்படுகிறீர் உம்முடைய குமாரர்களுக்கு சகல வித்யாப்பியாசமும் நீதிமார்க்கமாக அறியப்பண்ணி ஒரு மாதத்திற்குள்ளே விசாரந்தீர்க்கிறேன் என்ன

* * * *

அவன் கம்பிளி முக்காடு இட்டுக்கொண்டு வரப்பின்பேரில் மண்டிபோட்டுக்கொண்டு இருக்கச்சே கழுதை யெப்போதும்போல வந்து கம்பிளி முக்காடு பார்த்து கொளிகைக் கழுதையாக்கிலு...... கூப்பிடச்சே பார்த்துக் குடியானவன் பயந்தீர்ந்து கழுதையை விழ விடுத்தினுன். அந்தப்படியே வாயைச் சும்மாவைத்துக் கொண்டிராமல் நம்முடவர்கள்.

குறிப்பு :

இதில் மித்திர பேதமும் சுகிர்லாபமும் முழுவதும் இருப்பதுடன் சந்தி விக்கிரகத்திற் சிறிது பாகமும் இருக்கின்றது.

---

565. (b) திருப்பதிவேங்கடேசர்பதிகம்.
Lines 5 in a page.

இது திருப்பதியிற் கோயில் கொண்டுள்ள வேங்கிடேசர் தோத்திரம்.

**Beginning :**

பூதலம் நிறைக்குந் தோளான் புவிதனை யளந்த பாதம்
வேத நாராயணனே மூர்த்தி வித்தாக விண்ணோர்
போற்றும்
சீதரா முகுந்தா ராமா திருப்பதியில் வாழும்
மாவா வேங்கடேசா வந்தெனை ரட்சிப்பாயே 1

**End:**

கங்கை கோனேரி யாடி கண்டுள மகிழ்ந்தே யுன்றன்
பங்கமாம் சித்திர கூடம் ப..................செ......
பொங்கமா மலையில் வாழும் புகழ்திரு அலர்மேலு
மங்கை
பங்கனே வேங்கடேசா வந்தெனை ரட்சிப்பாயே.

குறிப்பு:

கடைசி ஏட்டில் 'பொல்லாத புல்லர்' 'எடுத்தாலும்' என்னும் முதல் நினைப்பினையுடைய இரண்டு செய்யுட்கள் மிகச்சிதிலமாக எழுதப்பட்டுள்ளன.

---

566. No. 106 பஞ்சதந்திர வசனம்.
ஏடுகள் 59; அபூர்த்தி Lines 5—8 in a page.

அயவரி பாலனென்னும் ஒரு அரசன் தனக்குத்தினமொரு பெண்பார்த்து மணஞ்செய்விக்கவேண்டு

மென்று தன்மந்திரிக்கு உத்திரவு செய்திருந்தான். மந்திரியும் அரசன் கட்டளைக்குப்பயந்து அவன் விருப் பப்படி நடந்துவருகையில் ஒருநாள் பெண் கிடைக்க வில்லை. அதனுல் மனம் வருந்தியிருக்கையில் அம் மந்திரி மகள் தந்துரு என்பவள், தன் தந்தை மனம் வருந்துதற்கு ஏற்பட்ட காரணத்தை அறிந்து, தன்னை அரசனுக்கு மணஞ்செய்விக்க வற்புறுத்தி அவ்வாறே மணந்து, பல தந்திரமடங்கிய கதைகளைத் தினம் ஒவ்வொன்ருகப் பொழுது விடியுமளவும் சொல்லி, அன்றன்றைக்கு முடிக்காமல் 365-ம் நாள் முடித்து, அவனது எண்ணத்தை மாற்றி, அவனேடு வாழ்ந்திருந் தனள் என்னும் கதையைக் கூறுவது. ஆதலால், இது 105-ம் நம்பரில் கூறியுள்ள பஞ்சதந்திரக் கதையினும் வேறுபட்டது.

**Beginning :**

அயவழிய பாலனென்கிற ராசா அகண்டாகண்ட பிரதிவிக்குட்பட்ட நாகலோக பெருந்தீவில் உண்டாகிய வருணுசிரம தர்மத்தில் சங்கரசாரிக்குள்பட்ட கீரீட மாந்தாதிகள் ராசராசாக்கள் சகல சனங்களும் கப்பங் கட்டிக்கொண்டு சேவித்துவர மேனகை ரம்பை உருவசி திலோத்தமை அப்சர ஸ்திரிகள்.

**End :**

ஆனுல் நீ போகவேண்டாம் காயில்லையென்ருன். பரிவாரமும் தோட்டமுற்றும் பார்த்து பிஞ்சுகாயின்றி யிலே பூத்துக்கிடந்தது வென்று ராசாவின் பக்கல் வந்து சொன்னுர்கள். ராசாவு மொருகாயுங் கண்ட தில்லையோ வென்ன இல்லையென்ருர்கள். ராசாவும் மரத்தின் மறைவிலே ஒரு அந்தகனிருக்கின்ருன் அவனை அழையுமென்ன அவனை அழைத்து வந்து ராசாவின் முன்னே நிறுத்தினுர்கள். ராசாவு மந்தகனைப்

பார்த்து, அந்தகனுய் இருந்தாய். உன்னுடைய மகனைப் போக வேண்டாங் காயில்லை யென்றுய் அதனைச் சொல் லென்ன மகராச.

குறிப்பு :

முதல் ஏட்டில்,

ஆனைமுகவனை
மேனிபயுழனை
ஞானமொடு தொழ
ஊன மகலுமே

என்னும் பாட்டெழுதப் பட்டிருக்கிறது.

---

## 567. No. 107 பஞ்சதந்திரம் செய்யுள்.
### ஏடுகள் 60; அபூர்த்தி Lines 5 in a page.

இது 105-ம் நம்பர் போன்றது. விருத்தப்பாவில மைந்துள்ளது. இதனை இயற்றியவர் வீரமார்த்தாண்ட தேவர் என்பவர். இவரைப்பற்றிய விவரம் தெரியவில்லை. முதலேட்டின் தலைப்பு முரிந்துவிட்டது. அச்சிடப்பட் டுள்ளது.

**Beginning :**

திருவளர் கமல வாவி திகழ்புலி யூரிற் செம்பொன்
மருவிய பொது விலாடும் வள்ளலைப் போற்றி செய்தே
பெருகிய வுபாய நீதி பேரறிவுடைய நீரார்
கருவிய பஞ்ச தந்திரக் கதையை யான் கூறலுற்
றேன் (1)

பாடலிபுரத்து மன்னன் சுதரிசன னென்பார் பாலர்
மூடராய்த் திரிவதாலே யவர்கள்மேல் கொள்கை நீங்கி
வாடியிங் கிவர்களாலே பலனென்ன மலடா வொப்பாம்
பீடிலர் பிறந்தார் மன்னே பிள்ளை யெண்ணிக்கைக்
கென்றுன் (2)

விஞ்சுமா மறையோன் மாற்றம் வினவியே யரசர் கோமா
னெஞ்சக மகிழ்ந்து மிக்க நிதியொடு மக்க டம்மைக்
கொஞ்சமில் களிப்பி ேனுடுங் கொடுத்தலுஞ் சோம
சன்மா
பஞ்சதந் திரத்தி னுலே பாலரை வணங்க வெண்ணி (7)

பஞ்ச தந்திரம தென்னும் பான்மையே துரைக்க
வஞ்சமா மித்திர பேத சுகிரி லாபம் [வென்ன
விஞ்சுமா நிலத்தில் சந்தி விக்கிரகம் வத்த நாசம்
அஞ்சலி லசம்பி ரேக்ஷ்ய காரியந் துவமென்ருகும். (9)

**End :**

காரிய முயற்சி பண்ணல் காலமு மிடமு மோர்தல்
சீரிய தனமு மாளுந் தேடுத லொருவன் செய்த
காரிய மிரண்டிற் கேற்ற [காரியந்] தானுஞ் செய்தல்
[பாரிலே சமாதானங்கள் பண்ணலைந் தாகு மாமே]

குறிப்பு :

இதில் முதலிலிருந்து சுகிர்லாப முடிய இருப்பதோடு சந்தி விக்கிரகத்தில் 21 செய்யுளும் இருக்கின்றன.

---

568. No. 108 பஞ்சதந்திரம் செய்யுள்
ஏடுகள் 32 ; அபூர்த்தி Lines 6—8 in a page.

இதுவும் முன் பிரதியைப்போன்றது. இதில் சந்தி விக்கிரகமும், லப்த நாசமும் முழுவதுமிருப்பதுடன் அசம் பிரேக்ஷ்ய காரியத்துவத்தில் 52 செய்யுட்களும் இருக்கின்றன.

---

569. No. 109 பஞ்சதந்திரம் செய்யுள்.
ஏடுகள் 112 ; பூர்த்தி Lines 6—8 in a page.

இதுவும் முற்பிரதி போன்றது. இதில் ஐந்து தந்திரங்களும் இருக்கின்றன. ஆனுல் சிதிலம் அதிகமா

யிருக்கிறது. ஏடுகள் இருபுறத்திலும் அரிக்கப்பட்டும் முரிந்தும் இருக்கின்றன.

| | | | |
|---|---|---|---|
| மித்திரபேதம் | செய்யுள் | ,, | 217 |
| சுகிர்லாபம் | | ,, | 86 |
| சந்தி விக்கிரகம் | | ,, | 141 |
| லப்த நாசம் | | ,, | 42 |
| அசம்பிரேக்ஷ்ய காரியத்துவம் | | ,, | 60 |
| | | | 546 |

---

570. No. 705 (*a*) பஞ்சதந்திரம் செய்யுள்.
ஏடுகள் 72 ; அபூர்த்தி Lines 4—5 in a page

இது முற்பிரதியைப் போன்றது. இதில் 4-ம் செய்யுள் முதல் 142-ம் செய்யுள் முடிய இருக்கிறது. முதலாவது 18-வது ஏடுகளில்லை.

---

571. (*b*) வருண குலாதித்தன் மடல்
Lines 6 in a page.

இது 222-ம் நம்பர் போன்றது. அபூர்த்தி. இதன் கடைசியில் வெற்றேடுகள் 18 உள்ளன.

---

572. (*c*) கம்பராமாயணம் உரையுடன்
Lines 5 in a page

இதில் யுத்தகாண்டத்தின் ஒரு பகுதியாகிய நிகும்பலையாகப்படலம் ஆரம்பமுதல் 43 செய்யுள்கள் உரையுடன் இருக்கின்றன. உரை சிறந்ததன்று.

**Beginning:**

நாடிய பொருள்கை கூடும் ஞானமும் புகழு முண்டாம்
வீடுயர் வழிய தாக்கும் வேதியன் கமலை நோக்கும்
நீடிய வரக்கர் சேனை நீறுபட் டொழிய வாகை
சூடிய சிலையி ராமன் தோள்வலி கூறு வோர்க்கே.

…………………யயந் தீர்த்தான் வீடணன் றன்னை
மெய்யோ டார்வ முயரு மொன்ற அழுந்துறத் தழுவி
அய்யந்தீர…………………ருளோ இன்பநீ யுள
தெய்வ முண்டு மாருதியுளனன் செய்த தவமுண்டு
வரிய முண்டால்

என்றது ராமபத்திர சுவாமியானவர் விபீஷணரைப் பார்த்து நாம் நினைத்த காரியம் செயமாகத் தக்க தேவதை நீ யிருக்க நாட……தினலே அனுமனுமிருக்க நினைத்தபடியே முடியுமென்று ராகவேசுரன் சொன்னரென்றவாறு.

**End :**

நாடிய நெய்யோடு நறவுமூற்றிய
சாடிய ளங்கியிற் சரிதல் போலவே
கோடியள் பல்படுங் குழாங்க ளங்களாய்
ஆடிய அறுகுன்ற மறுகு மா………

என்றது. நெய்ச் சாடியளானது ஓம குண்டத்திலே விழுந்து அக்கினிக்கொழுந்து எப்படி எழுந்து கிளம்புமோ அப்படிப்போல அநேக நூ……குறைத்தலைப் பிணங்கள் எழுந்திருந்து உதிரமாரி சொரிய மாடித் தென்றவாறு. (43)

காலெனக் கடுவெனக் கழுங்க மமமியர்
நூ……யிறபொறை நுடந்த நோயெனப்
பாலுறு மோரது கலந்து பன்முறை
மேலுறு சேனையைத் துணித்து வீழ்த்தினர்.

என்றது………………………………

## 573. (*d*) சூடாமணி நிகண்டு.
Lines 6—7 in a page.

இது, 522-ம் நம்பர் போன்றது. இதில் விலங்கின் பெயர்த் தொகுதிமாத்திரம் இருக்கிறது.

குறிப்பு :

இதை யல்லாமல் இரத்தினகிரியய்யர் வண்ணமும் முருகர் தோத்திரங்களும் இருக்கின்றன. அபூர்த்தி யாய்ப் பெயர் தெரியாத ஒரு வண்ணமும் இருக்கின்றது.

---

## 574. No. 110 வள்ளியம்மை கதை.
ஏடுகள் 45; சிதிலம் அபூர்த்தி Lines 4—6 in a page.

இது, வள்ளியம்மை மான் வயிற்றிற் பிறந்து வேடர் மனையில் வளர்ந்து புனங்காத்திருக்கையில், வேலவர் காதலித்துக் களவொழுக்கம் நிகழ்த்த அதனை அறிந்த வேடுவர் அவ்வம்மையை அவர்க்கே திருமணம் செய்து கொடுத்த வரலாற்றை அம்மானையாற் கூறுவது. இதில், வேடர் மனையில் வள்ளி வளர்ந்து புனங்காத் திருக்கையில் பாங்கி கொடுப்ப வேலவர் வள்ளியைக் கொண்டு சென்றவரையுமிருக்கிறது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. அச்சிடப்படவில்லை.

**Beginning :**

செங்கைமுகி லாகருணை செவ்வேள் குறமாதின்
பங்கையஞ்சே ரம்மானை பாடுதற்குத்—துங்கக்
குடவயிறன் கீர்த்திக் குகன்துயரந் தீர்க்குங்
கடவிகட வாரணமே காப்பு.

மணமருவு பூங்குழலாள் வள்ளியம்மை கதைபாடக்
கணபதிநன் பொற்பதமே காப்பு.

சீரார் பழனிவருஞ் செவ்வேளை யான்பாடக்
காராணை மேனிக் கணபதியே முன்னடவாய்

பச்சை முகில் நாரணன்தான் பண்டொரு நாளண்ட
ரெல்லாம்

வெட்சிதிருக் கொய்ய விரைந்து சென்று ரம்மானை

வையகமேன் தேவரெல்லாம் வந்து படை செய்திடவே
துய்ய திருச் சங்கைத் தொனித்தனர்கா ணம்மானை

மேவுதிரு மாலுடனே விண்ணோர் படை செய்திடவே
பாவையர்கள் வந்தபடை பார்த்தனர்கா ணம்மானை

சேலொத்த கண்விபுதை தெய்வக்குலக் கொடிதான்
மாலுக்கு மாலாய் மயங்கினர்கா ணம்மானை

கோங்கார் முலைவிபுதை கொண்டமயல் கண்டு
கண்ணன்
பூங்காவனத்தில் புகுந்தனர்கா ணம்மானை

மாது விபுதை வயிற்றி லவதரித்துப்
பேதைக்குமரி பிறந்தனள் காணம்மானை

இன்னும் பிரம னெழுதிய பூங்கொடிக்கு
அன்ன மின்னார் பொன்னூச லாடினர்கா ணம்மானை.

ஆறு முகம்பாடி ஆலிக்கும் வேல்பாடி
கூறு மயில்பாடிக் கோழிக் கொடிபாடி
மாணிக்க முத்து மரகதங்கொண் டண்டரெல்லாம்
காணிக்கை யிட்டிறைஞ்சிக் கந்தன் கழல்பாடி
திட்டமனத்துடனே தெய்வச் சிறைமீட்டு
வெட்டி யசுரர்களை வென்ற களம்பாடி.

**End :**

ஆரிருந்தும் வள்ளிதுய ராற்றுவா ராரறியோம்
சுற்றத்தா ராயிருப்போர் சூழ இருந்தாலும்
மற்றொரு நோய்க் காப்பார் மயலாற்ற மாட்டார்கள்
கூட நடவுமென்று கூறினாள் கொம்பனையாள்

---

தேடுபுகழ் மன்னருமுன் சித்தமென்றார் சேயி
மையை
வைத்து முந்திப் பாங்கி மனை புகுந்தார்.

---

575. No. 111 வள்ளியம்மை கதை.
ஏடுகள் 51; அபூர்த்தி Lines 5 in a page

இது முன் பிரதியைப் போன்றது. இதில் அதை விட அதிகமாயிருப்பதுமல்லாமல் பாடபேதமுங் காணப் படுகின்றது.

---

576. No. 408 (*a*) வள்ளியம்மை கதை.
ஏடுகள் 133; அபூர்த்தி Lines 5—6 in a page.

இது முற்பிரதி போன்றது. பழனிவேல ரம்மானை யன்று.

---

577. (*b*) சித்திரபுத்திரனார் கதை.
Lines 4—6 in a page.

இது 400-ம் நம்பர் போன்றது. இதைப்பற்றிய விவரங்களை அங்குக் காண்க.

குறிப்பு :

| | | |
|---|---|---|
| வள்ளியம்மை கதை | ஏடுகள் | 40 |
| சித்திரபுத்திரனாரம்மானை | ,, | 93 |
| | | 133 |

---

578. No. 112 நாலுமந்திரிக் கதை.
ஏடுகள் 44; பூர்த்தி Lines 4—8 in a page.

இது தேவேந்திரன் என்னும் அரசன் தனக்கு மந்திரிமார்கள் இல்லாமற் கவலையுற்றிருக்கையில்

ஒட்டகத்தைக் கண்ணுற் காணுமலே அதன் அடிச் சுவட்டைக் கொண்டு அதனது அங்க அடையாளம் முழுவதும் உரைத்த போதவாதித்தன், போத சந்திரன், போத பூஷணன், போத வியாபரன் என்னும் நால்வரின் புத்தி நுட்பத்தைக் கண்டு வியந்து அவர்களைத் தன் பால் மந்திரியாக வைத்துக்கொண்ட கதையை அம் மானையாற் கூறுவது. இதனைச் செய்தவர் பஞ்ஞால நாதர். அச்சிட்டிருப்பதாகத் தெரியவில்லை.

**Beginning :**

சீரணியு மந்திரிமார் தேவேந்திரன் தன்னுடனே
தாரணியை ஆண்டிருந்த தன்ம திருக்கதையை
வழுதி முனிவனன்று வடநூலிற் செய்தது
எழுதி அருந்தமிழை ஏழையேன் செய்தகதை
ஆராய்ந்து பூவுலகி லம்மானை பாடுகின்றேன்
சீராக வந்துதவாய் செல்லக் கணபதியே.

* * * *

சிவஞான பண்டிதனார் சீர்பாதம் போற்றிடுவோம்
தவஞான புண்ணியங்கள் தங்கமிளையான் புதல்வன்
பஞ்ஞால நாதர் பணிந்துரைத்த புன்சொலதை
மெஞ்ஞானமாக விளம்பீர் பெரியோரே.

* * * *

அந்நால்வர் பேரும் ஆண்மைகளுஞ் சொல்லுகிறேன்
முன்னாள் மறுமை யிம்மை முறைமைகளுந் தானுரைத்து
போதவாதித்தன் நல்ல போத சந்திர னொருவன்
போத பூஷணன் பெரிய போத வியாபரனும்
இந்நாலு மந்திரியும் ராசாவின் வாசலிலே
சொன்னு லொருவரைப்போல் தோன்றும் வகை யுரைத்து
ஆளுக்கொரு சாமம் அவன் வாசல் காப்பார்கள்.

**End :**

ராசாவைத் தேற்றியபின் னல்வரையுந் தான் தேற்றிக்
கூசாமல் வாழ்ந்து குலாவியிருந்தனர் காண்.

விருத்தம்,

செய்யதோர் நால்வர் வாழி தேசமெண் பூமிவாழி
மையல்சேர ரம்பை வாழி மணிமுடி வேந்தர்வாழி
பையவே படித்தோர் கேட்டோர்.........
.......................................க மெங்கும்.

நாலு மந்திரிக் கதை.

ஆறுமுகம் துணை. செங்கமல நாச்சாரம்மன் துணை. வேங்கிடேசுர சுவாமி துணை. அலர்மேலு மங்கையம்மன் துணை.

---

579. No. 113 விக்கிரமாதித்தன் கதை.
வசனம்.
ஏடுகள் 18; அபூர்த்தி Lines 7—8 in a page.

இது விக்கிரமார்க்கனுக்குப்பின் சிம்மாசனத்தில் ஏறச்சென்ற போசராஜனுக்கு அச்சிம்மாசனத்தின் முப்பத்திரண்டு படிகளிலிருந்த பதுமைகள், விக்கிரமார்க்கனது பெருமைகளை எடுத்துரைத்து அதில் இவனை ஏறவொட்டாமல் தடுத்த கதை. இதற்கு முப்பத்திரண்டு பதுமை கதை எனவும் பெயர் வழங்கும். ஆசிரியர் பெயர் தெரியவில்லை. அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning :**

இராச பரமேசுரன், இராசமாத்தாண்டன், இராச கோபாலன் இராச கெம்பீரன், சகல சாம்பிராணி இலட்சுமிணிவாசன் சகலகுண சம்பன்னன், சகலகலை மாத்தாண்டன், சரபன்ன பாஷாபி தெட்சணன், அஷ்ட அயிசுரிய சம்பன்னன், துட்டராட்டந் தவிர்த் தான் மறு மன்னியர் கண்டன், குறுமன்னியர் திலதன்,

சுத்த ரண வீரன், நித்திய கலியாணன் சூராதி சூரன், வீராதி வீரன், பரதளவிபாடனன், பர ராசசிங்கம், அதர சூர வீர விக்கிரமாதித்தன் பட்டியுந் தானுமாக ஐஞ் நூற்றிருபத்திரண்டு பாளையக்காரரும் நூற்றிருபது மந்திரிமாரும் நாலாயிரமியானையும் முப்பதினாயிரம் குதிரையும் நாலு லட்சம் காலாளும் முந்நூற்றிருபது சுரதானியரும் அஞ்ஞூற்று நாற்பது வேவுகாரரும் ஆயிரத்து முந்நூறு துரைமக்களும் சில புரோகிதரும், சில ஒட்டக்காரரும் சில வரிசை ஊழியக்காரருமாக திருவிராச்சியம் பண்ண இரத்தின முடிசூடி வீர சிங்காதனமேறி.—

**End :**

மற்றப் பெண்களோடே வந்த சீதனங்களோடே தோழிப் பெண்கள் ஆனை குதிரையுள்படக் கூட்டிக் கொண்டு பல்வாச்சிய முழங்க விருது குறிச்சுக் கொண்டு தன்னுடைய சேனாதிபதிகளும் மந்திரிமாரும் சதுரங்க சேனைகளும் தரும துரைமக்களும் புரோகிதரும் வேவுகாரரும் வரிசை ஊழியக்காரருமாகப் பட்டி சொற்படி உக்கிரமாகாளிப் பட்டணத்திலே வந்து திருவிராச்சியம் பண்ணிக்கொண்டிருந்தான். அந்த விக்கிரமாதித்தன் சிங்காசனம் நீயோ ஏறுகிறவனென்று போசராசாவோடே அந்தப் பதுமைகள் சொல்லிச் சிங்காசன மேறுதபடி விலக்கின கதை.

இராம செயம். ஆறுமுகம் துணை.

---

**580 No. 114 (*a*) வேதாளக்கதை செய்யுள்**
**ஏடுகள் 424 ; பூர்த்தி Lines 5 in a page.**

முன்னொரு காலத்தில் கைலாசத்தில் சிவபெருமான் உமாதேவி யாருக்குச் சொல்லிய கதைகளை ஒளிந்திருந்து கேட்டு ஊரார் அறியும்படி செய்த குற்றத்திற்காக வேதாளமாகும்படி சாபம் பெற்றான் ஓர் அந்தணன்.

அவன் பின் சிவபெருமானை வணங்கி அச்சாபம் நீங்கும் படி வேண்டினன். அப்பெருமானும் நீ காட்டில் சஞ்சரித்திரு, விக்கிரமாதித்தன் அக்காட்டின் வழியாக ஒரு நாள் இரவில் வருவான்; அச்சமயத்தில் அவனைப் பற்றிக்கொண்டு இக்கதை முழுவதும் சொல்லுவையாயின் இச்சாபம் நீங்கிடும் என்று அருளினர். அவ்வாறு சாபம் பெற்ற அந்தணனாகிய வேதாளம் விக்கிரமாதித்தனுக்குச் சொல்லிய கதை இதுவாதலின் இப்பெயர் பெற்றது. இதில் இருபத்தைந்து கதைகளிருக்கின்றன. அவற்றுள் அந்தணன் வேதாளமாகச் சாபம்பெற்ற வரலாறு முதலாகமம் எனவும், அது விக்கிரமாதித்தனை சந்தித்தது முதல் நடந்த வரலாறு இரண்டாம் ஆகமம் எனவும் பெயர்பெறும்.

இதனை இயற்றியவர் கவிக்களஞ்சியம் என்னும் புலவர். இவர் புதுப்பாகை என்னும் ஊரிலிருந்த கருப்பன் என்பவரது புதல்வர். இந்நூலை தினம் 50 செய்யுள் விழுக்காடாகப் பாடி முடித்தனர் என்பது 117-ம் நம்பர் 42-ம் செய்யுளால் விளங்குகின்றது.

**Beginning :**

சீரிதாக வித் தேசத்திற் றிங்கள்மும்
மாரிபெய்க மறைகள் விளங்கவே
ஆரும் வாழ்க அறங்கள் தழைத்திடப்
பார விக்கதைப் பாடலுற் றுமரோ.

புவிக்கு ளெண்புதுப் பாகை மந்திராதிபன்
கவிக்க ளஞ்சியஞ் சொல்லுங் கவியது
நவைச்சொல் லாயினு நன்றல்ல வாயினு
மெவர்க்குங் கேட்க மரபுள தென் சொல்லே.

பண்டு பாரில் பலர றியாததா
யுண்டு நல்லதிங் கோர் கதை கேளென

அண்டர் போற்று மரனுமை யாளுடன்
கண்ட நீதிக் கதை சொலும் போதிலே.

சாற்றினன் கதை தான் சொலக் கேட்டுநீ
தூற்றி யெங்கனுஞ் சொன்னப ராதத்தால்
ஏற்ற பேயுரு வெய்தி வனத்திலே
வீற்றிருந்தருள் வேறியா வென்றனன்.

வேந்தருக்குளோர் விக்கிரம கேசனற்
சாந்த சீலன் தனியிர விவ்விடை
வாய்ந்த விக்கதை யத்தனையுஞ் சொல்லி
யீந்த சாபம் விட் டெய்துவை யிங்கென்ருன்.

**End :**

துய்யமா முனிவர் போற்றச் சுரரெல்லாந் திரண்டுபாடச்
செய்யமா மறைக ளேத்த திருச்சின்ன முன்னே யூத
வெய்யவர் போற்ற வெள்ளை விடையின்வா கனத்து
மீதே
தய்யலோர் பாகன் போயே தான்சிவ லோகம் புக்கான்.

இருபத்தைஞ்சாவது விக்கிரம கேசரி கதை முற்றும்.

வேதாளக் கதை எழுதி நிறைந்தது முற்றும்.

வேதாளக்கதை

| | செய்யுள் | | செய்யுள் |
|---|---|---|---|
| முதலாகமம் | 24 | தீரகய கேசரி கதை | 61 |
| இரண்டாமாகமம் | 25 | கள்ளன் கதை | 44 |
| பதுமாபதி கதை | 39 | தெய்வசுவாமி கதை | 49 |
| மந்திராபதி கதை | 14 | சீமூதவாகனன் கதை | 73 |
| கிளியின் கதை | 43 | யுனமாபதிக் கதை | 39 |
| வீரபரன் கதை | 35 | இந்திரஞாலக் கதை | 23 |
| கூர்மக் கதை | 14 | சந்திரப்பிரபன் கதை | 42 |
| சூரன் கதை | 25 | அனங்கமஞ்சரி கதை | 21 |
| தலைவழக்குக் கதை | 19 | சந்திரலோசனன் கதை | 35 |
| காற்படிகன் கதை | 33 | சிங்கத்தின் கதை | 19 |
| இரத்தினபதி கதை | 30 | கூடுவிட்டுக் கூடு பாய்கிற கதை | 19 |
| மதனசேனை கதை | 41 | முறை தெரியாக் கதை | 15 |
| மிருகாங்கபதி கதை | 9 | விக்கிரமகேசரி கதை | 25 |
| அருச்சுனசுவாமி கதை | 20 | | |

குறிப்பு :

'வேதமாநெறி சேரும்' 'திருவாக்கும் செய்கருமம்' 'அல்லல் போம்' என்னும் செய்யுட்களும் ஆரம்பத்தில் எழுதப்பட்டுள்ளன. இவைகள் வேதாளக் கதையைச் சேர்ந்தவைகளல்ல.

---

581 (*b*) கும்பகோணப் புராணம்

Lines 5 in a page

இது கும்பகோணத்தின் மகிமையை யுரைப்பது. சகஜிராஜன் காலத்தில் தொண்டைநாட்டு அரசூரிலிருந்த சொக்கன் என்னும் புலவர் இயற்றியது. முழுதும் இருப்பினும் சிதைந்திருக்கிறது. இதைப் பற்றிய விவரத்தை 283-ம் நம்பரில் காண்க.

முற்றும்

குறிப்பு :

| | | |
|---|---|---|
| வேதாளக்கதை | ஏடுகள் | 188 |
| கும்பகோணப் புராணம் | ,, | 236 |
| | | —— 424 |

---

582. No. 115 வேதாளக்கதை செய்யுள்

ஏடுகள் 150 ; அபூர்த்தி மிகவும் சிதிலம்

Lines 5 in a page

இது முன்பிரதியைப் போன்றது. இதில் இருபத்து நான்கு கதைகள் இருக்கின்றன. 25-ம் கதையில் 30 செய்யுட்களே இருக்கின்றன. ஆரம்பத்திற் சில செய்யுட்களில்லை.

---

583 No. 116 வேதாளக்கதை செய்யுள்.

ஏடுகள் 131 ; அபூர்த்தி மிகவும் சிதிலம்

Lines 6—7 in a page

இதுவும் மேற் பிரதியைப் போன்றது. 24 கதைகள் இருக்கின்றன. 25-ல் 41 செய்யுட்களிருக்கின்றன. முதலில் 4 ஏடுகளில்லை.

584. No. 117 வேதாளக்கதை செய்யுள்.
ஏடுகள் 126; பூர்த்தி சிதிலம் Lines 5—7 in a page.

இது 114 ம் நம்பரைப்போன்றது. ஆனால் இதில் அதைவிட செய்யுள் அதிகமாயிருப்பதோடு பாடபேதமும் காணப்படுகிறது.

**Colophon :**

ஹரி ஓம் நன்ருக குருவாழ்க.

நள ஷு சித்திரைமீ 6வ ஆண்டியப்ப பிள்ளை மகன் திருவேங்கிட வாத்தியார் எழுத்து.

சோமசுந்தரி சகாயம்

---

585. No 118 வேதாளக்கதை செய்யுள்
ஏடுகள் 114; அபூர்த்தி அதிக சிதிலம்
Lines 4—7 in a page

இதுவும் முன் பிரதியைப் போன்றது. 23 கதைகள் இருக்கின்றன.

---

586. No. 119 வேதாளக்கதை செய்யுள்.
ஏடுகள் 104; சிதிலம் அபூர்த்தி Lines 5 in a page.

இதுவும் முன் பிரதி போன்றது. 22 கதைகள் இருக்கின்றன. முதல் 9 ஏடுகளின் தலைப்பில் பூச்சி அரித்திருக்கிறது.

---

587. No. 120 வேதாளக் கதை செய்யுள்
ஏடுகள் 25; சிதிலம் அபூர்த்தி Lines 5—7 in a page.

இதுவும் முற்பிரதி போன்றது. முதல் 3 கதைகள் இருக்கின்றன. 4 ஆவதில் 6 செய்யுட்களிருக்கின்றன.

குறிப்பு :

முதலேட்டில்

'கோதி னறுமுத்தம் குணத்தி னெறிநீதி
மேதினியி லுற்றவரும் மேன்மை யெனவேதான்
ஞதனுமை மெச்சவருள் நற்கதை தனக்கே
போதக முகத்தனிரு பொற்பத நினைப்பாம்'.

என்னும் காப்புச் செய்யுள் எழுதப்பட்டிருக்கிறது.

---

588. No. 121 வேதாளக்கதை செய்யுள்
ஏடுகள் 138 ; சிதிலம் பூர்த்தி

இது 114-ம் நம்பர் போன்றது; முழுவதுமிருக்கிறது.

---

589 122 முப்பத்திரண்டு பதுமை கதை
ஏடுகள் 60 ; அபூர்த்தி Lines 5—6 in a page.

இது போசராசன் சிங்காசனத்திலேற வேணு மென்றபோது அச்சிங்காசனத்திருந்த பதுமைகள் முப்பத்திரண்டும் சொன்ன கதை.

**Beginning :**

பரமேசுபரனும் பாறுவதியு......பருவத்திலே யிருக்கிறபோது தன்மகதையான ஒரு கதை சொல்லுமென்று பரமேசுபரனை அம்மை கேழ்க்க அப்போ யீசுபரியாரு... சொன்னகதை. பூலோகத்திலே ஒரு சிங்காதனமுண்டு அதிலே முப்பத்திரண்டு பதுமைகளும் முப்பத்திரண்டு கதை சொல்லி......க்கு பூலோகத்திலே அந்த சிங்காதனம் வந்தவாறு யீசுபரியார் கேழ்க யீசுபரன் சொல்லு

வார் பத்திரகுரி என்குர ராசா.........யிளங் கேழ்வி விசாரித்துக்கொண்டு யி.........ன் ஒரு மந்திரி அந்த மந்திரகுரி என்குற ராசாவுக்கு.........புர மென்கிற பட்டணத்திலே மாகாளி என்ருெரு தேவியுண்டு அந்தக் கோவிலிலே ஒரு பிராமணன் தவசுபண்ணி ........................................க்கு வேண்டின வரங் கேளென்று சொல்ல அப்போ யிந்த பிராமணன் ஒருக் காலுஞ் சாகாதவரம் வேணுமென்று கேட்டான் அப்... ...தைக் கொண்டு வந்து இந்த மாம்பழத்தினாலே அனேகம் காலம் சாகாமலிருக்கலாமென்று சொல்லி அந்தப்பழத்தைக் கொடுத்தான்......வாங்கிக் கொண்டு வந்து தன்னுட மகளுக்குச் சொன்னான் அவனு டைய மகள் பரியாசகம் பண்ணி இப்படிக்கொத்த வரமும் உண்டோ.....அதின் பிறகு அந்த மாம்பழத்தை பத்திரகுரி என்கிற ராசாவின் கையிலே கொடுத்து யிந்த மாம்பழத்தினிட மகிமையுஞ் சொல்ல தின்னச் சொல்ல.

**End :**

முப்பத்திரெண்டாங் கதை:—வாராய் போசராசனே ..........................மாக இருக்கும். உன்னிட கிருபையி னாலே நாங்கள் முப்பத்திரெண்டு பேரும் மோகனிக..... கள் அப்போ போசராசன் அது என்ன விபரமென்று கேழ்க அந்தப் பிறுதுமைகள் சொன்னது நாங்கள் முப்ப.........தந்த பிறுதுமை, 'கையதவள், தப்பிரபை, வித்தியாதரி, சந்திரமதி, அத்தியாலாதரி, சுகப்பி......... தெய்வமோகினி, ஆயிரிபை, பசுகெதி, சந்திரிகை, குசமோகினி, சனமத்தொகை, பொகுல......மோகினி, பரம பாக்கம், பரம கன்னிகை, பபிறீசுரை, நீகறி சனனெ, தர்மவீறினி, ...................ரூபவதி யிப்படிக் கொத்த.....................யிருக்கப்பட்ட முப்பத்திரண்டு பெண்கள் நாங்கள்.................த்திலே ரத்தின சிங்கா தனத்திலே எழுந்தருளியிருக்கிற போது யிப்படிக்

கொத்த பரமேசுரன் கைலாய.........ருக்கு......யீப்படிக் கொத்த பரமேசுவரனைப் பத்தாவாக அனுபவித்தா லன்றோ நல்லது என்று மனசி.......த்துகைய......ட்டும் பொரகவிருப்போம் அப்போ பாருபதியாரும் ஈசுவரனும் எங்களிட மனதிலே யிருந்த......சிங்காதனத்திலே மரப் பாவையாக யிருங்களென்று சபித்தார் அப்போ நாம் முப்பத்திரண்டுபேரும் நமஸ்கா........

| பக்கம் | நெ. | பக்கம் | நெ. | பக்கம் | நெ. |
|---|---|---|---|---|---|
| 8 | முதல்பதுமை | 31 | 13-ம் கதை | 46 | 23-ம் கதை |
| 12 | 3-ம் கதை | 33 | 14-ம் கதை | 47 | 24-ம் கதை |
| 14 | 4-ம்பிறுதுமை | 34 | 15-ம் கதை | 48 | 25-ம் கதை |
| 15 | 5-ம் கதை | 36 | 16-ம் பதுமை கதை | 50 | 26-ம் கதை |
| 18 | 7-ம் கதை | 38 | 17-ம் பதுமை சொல்லுகிறகதை | 51 | 27-ம் கதை |
| 21 | 8-ம் கதை | 42 | 20-ம் கதை | 53 | 28-ம் கதை |
| 22 | 9-ம் கதை | 44 | 21-ம் கதை | 55 | 29-ம் கதை |
| 25 | 10-ம் கதை | 45 | 22-ம் கதை | 60 | 32-ம் கதை |
| 26 | 11-ம் கதை | | | | |
| 28 | 12-ம் கதை | | | | |

குறிப்பு :

கிரந்த ஸ்லோகங்கள் உரையுடன் எழுதிய இரண்டு தலைப்பு முரிந்த ஏடுகள் கடைசியில் கோக்கப் பட்டுள்ளன.

---

## 590. No. 123 விபீஷணன் புத்தி.

ஏடுகள் 31; சிதிலம் அபூர்த்தி Lines 4 in a page.

இது சீதாபிராட்டியை சிறைவிடுக்க வேண்டி விபீ ஷணன் இராவணனுக்குரைத்த நீதியாகும். செய்யுள் நடை சாதாரணமானது. செய்யுட்டொகை விருத்தப்பா 100. காப்புச் செய்யுளில் 'தேரெழுந்தூரன் சொன்ன கதை' என வந்திருப்பதைக் கொண்டு இதனை இயற்றி

யவர் தேரழுந்தூரன் எனக் கொள்ளலாம். இதில் இரண்டு பிரதிகள் உள்ளன. அச்சிடப்படவில்லை.

**Beginning :**

நாடிய பொருள்கை கூடும் ஞானமும் புகழு முண்டாம்
வீடியல் வழியதாக்கும் வேதியன் கமலநோக்கும்
நீடிய வரக்கர்சேனை நீறுபட்டொழிய வாகை
சூடிய சிலையிராமன் தோள்வலி கூறுவோர்க்கே.

மதத்தினால் வலிய வீரன் மன்னனுக் கிளையதம்பி
விதத்தினா லிலங்கை யாண்ட விபூஷணன் சொன்னபுத்தி
செகத்தினால் வேந்தர்கேட்கத் தேரெழுந்தூரன் சொன்ன
கதைக்குநான் முகத்தோன் மாதுங்கந்தனுங் காப்புத்
தானே. (1)

**End :**

இன்றுநீ ராமனோடே யெதிர்த்தமர் செய்வேனென்றாய்
அன்றுநீ அனுமன்கையா லறையுண்டா யரக்கர்கோவே
சென்றுமுன் ஞானசேனைத் தேருடன் புரவி காலாள்
கொன்றது இயமனூரில் குடியுனக்குறுதி யென்றான். 97

பாசியும் நீரும்போலப் பலவித மிருக்குங்காலம்
நேசமும் நீரும் நாமு மென்பரே நேசத்தோரே
ஆசையும் பிரிந்துபோமே அவன் கையிற் பொருளு
மாண்டால்
நேசமும் நீரும் நாமு மென்பரே என்று சொன்னார். 98

**Colophon :**

ஆங்கிலஸு ஆனிமீ 21உ

591. No. 124 விபீஷணன் புத்தி.

ஏடுகள் 20; Lines 4—6 in a page.

இதுவும் முன்பிரதி போன்றது. இதில் 100 செய்யுட்களிருக்கின்றன. ஆனல் பாட பேதமும் காணப்படுகின்றது.

**Colophon :**

செயஞு மாசிமீ 13உ ஸ்ரீ அண்ணுவய்யங்கார் குமாரன் கோபாலய்யங்கார் விபீஷெணன் புத்தி எழுதினது முற்றும்

—— ——

592. No. 202 அரிச்சந்திரன் கதை.

ஏடுகள் 165; அபூர்த்தி Lines 4—5 in a page.

இது அரிச்சந்திரனது சரித்திரத்தைக் கூறுவது. நல்லூர் வீரகவிராயர் செய்துள்ள அரிச்சந்திர புராணத்திலும் இது வேறு. செய்யுட்டொகை 511. இதனை இயற்றியவர் பெரியான் பிள்ளை என்பவர். இவர் சோழ நாட்டில் மாந்தை நகர் ஆக்காட்டில் வேளாளர் குலத்தில் பிறந்தவர். இதில் 8-12 செய்யுளில்லை. ஏடுகள் பூச்சி அரித்து மிகச் சிதைந்துள்ளன.

**Beginning :**

கங்கு லகற்றுங் கதிரோன் குலத்துதித்தோன்
செங்கையரிச் சந்த்ரன் திருக்கதைக்குத்—துங்கவட
வெற்பகத்திற் பாரதத்தை வெங்கோட்டினுலெழுதுங்
கற்பகத்தின் பொற்பதமே காப்பு.

* * * * *

தருவடரும் பொன்னிநதித் தண்டலைசூழ் நன்னுட்டில்
அருணமணி மாந்தைநகர் ஆக்காட்டிற் கூற்றமுள்ளோன்

பெருந்துங்கா குலதீபன் பெற்றபெரு மானருளால்
வருபெரியா னுரைத்தகதை வையகத்தோர் கேட்
டருளீர்.

**End :**

வேதவியாசர னுரைத்த மெய்வசனங் கேட்டவுடன்
தார்திகழுந் தருமருடன் தம்பியருமே மகிழ்ந்து
நீதிநெறி யெமக்குரைத்த நின்னையல்லா துண்டோ
வென்
றுதரவினால் முனிவனருள் புரிந்தே வாழ்ந்திருந்தார். 511

---

593. No. 203 அரிச்சந்திரன் கதை.

ஏடுகள் 96; பூர்த்தி Lines 4—5 in a page.

இது, முற்பிரதியைப்போன்றது. முழுவதும் இருக்கிறது. இடையிடை பூச்சியரித்தும் சிதைந்திருப்பினும் நல்ல நிலைமையிலிருக்கிறது. 32-ம் ஏடுமுதல் 42-ம் ஏடு வரையுள்ள ஏடுகளின் நுனிகள் எலி கடித்துச் சிதைந்துள்ளன.

**Colophon :**

ஆங்கிரஸ ஆனிமீ 21உ

அரிச்சந்திரன் கதை மாசிலாமணி எழுதி முகிந்தது. முற்றும்.

---

594. No. 204 அரிச்சந்திரன் கதை.

ஏடுகள் 96; அபூர்த்தி Lines 4—5 in a page.

இதுவும் முன்பிரதியைப் போன்றது. ஆனால் 437 செய்யுட்கள் இருக்கின்றன. சிற்சில இடங்களில் பூச்சி அரித்திருக்கிறது.

---

595. No. 205 அரிச்சந்திரன் கதை.

ஏடுகள் 56; அபூர்த்தி Lines 3—6 in a page.

இதுவும் முன்பிரதியைப் போன்றது. இதில் 174

செய்யுட்களே இருக்கின்றன. கடைசி ஏடுகள் எலி கடித்துச் சிதைந்திருக்கின்றன.

---

596. No. 206 அரிச்சந்திரன் கதை.
ஏடுகள் 117; பூர்த்தி Lines 5—6 in a page.

இது 203-ம் நம்பர் பிரதி போன்றது முழுவதுமிருக்கிறது. 115-ம் ஏடு இல்லை. 114-ல் இடையிடையே பூச்சி அரித்திருக்கிறது.

**Colophon:**

அரிச்சந்திரன் கதையை ஒப்பிலாதி ஆண்டியப் பிள்ளை எழுதி முடிந்தது. சித்திரபானு ஸு புரட்டாசி மீ 1௳

---

597. No. 207 (*a*) அரிச்சந்திரன் கதை.
ஏடுகள் 43: அபூர்த்தி Lines 6—7 in a page.

இது 303-ம் நம்பர் பிரதிபோன்றது. நல்லூர் வீர கவிராயர் இயற்றியது. இதில் பாயிரமுதல் விவாக காண்டத்தில் 107-ம் செய்யுள் வரை இருக்கிறது.

ஆதரிக்குந் திண்டோள் அரிச்சந் திரன்கதையைக்
காதலித்துக் கொண்டோருங் கற்றோரும்—போதப்
பெரும்பாவந் தீர்க்கும் பெருநெறிக்கே சேர்க்கும்
திரும்பாவந் தீர்க்கும் சிவன்.

என்னும் செய்யுள் முதலேட்டில் எழுதப்பட்டுள்ளது.

---

598. (*b*) பராசத்தி தோத்திரம்.
Lines 4—5 in a page.

இதில் 15 செய்யுட்களிருக்கின்றன. ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

**Beginning :**

பித்தடு மைக்கண் படிநெடுமாலைப் பிராணையன்பு
வைத்தடு மைக்கொளு நாயகி யேநின் மலரடிக்கீழ்ப்
புத்தடு மைக்குடி யன்றுகண் டாயெங்கள் பூருவமாய்க்
கொத்தடு மைக்குடி காணடி காணுங் குடியிருப்பே.
துதிக்குங் கவுணியக் கன்றுக்குஞ் சேய்க்குஞ் சுரந்து வெண்பால்
குதிக்குந் துணைமுலைக் கோமளமே கொள்ளை யாண்டந் தந்த
விதிக்குஞ் சிவனுக்கு மாலுக்குந் தாழ்விணையேற்கு மொக்கப்
பதிக்கும் பதாம்புயத் தாள்பர மாய பராபரையே. (1)

**End :**

காதர் குழைக்கங்கை செஞ்சடைமீது கரந்துநமக்
கேதாய் விளையு மெனவெண்ணி யேயண்டத் தெவ்வுயிர்க்கும்
ஆதார நாதன் திருக்கரத் தாலெடுத் தம்மிவைத்த
பாதார விந்தத்த ளேபர மாய பராபரையே. (15)

குறிப்பு :

இவைகளை யல்லாமல், 'நாலிரண்டிதழாலே கோலிய ஞானமுண்டகம்' என்னும் திருப்புகழ் எழுதிய ஏடு ஒன்றும் இருக்கிறது.

---

**599. No. 215 தேரூர்ந்த சோழன் கதை.**
**ஏடுகள் 20 : பூர்த்தி Lines 4 in a page.**

இது திருவாரூரில் அரசுபுரிந்த மனுச்சோழன் தன் மகன் பசுங் கன்றைக் கொன்ற குற்றத்திற்காக அவனைத் தேர்க்காலில்ஊர்ந்து மனுமுறைசெய்த சரிதத்தைக்கூறும் வசனநூல். ஆசிரியர் பெயர் தெரியவில்லை. அச்சிடப்படவில்லை,

**Beginning :**

... ... ... ... ... ...த்தழுகும்
பேருருமான பெருமையே —ஆரூரில்
தேருர்ந்த சோழன் ... ... ... குக்
காரானை மாமுகத்தோன் காப்பு.

... ... ..லத்திலே தோன்றப்பட்ட ராசவங்கிசத திலே சோழன் மரபிலே குலோத்துங்கசோழ னென்றும் ... ... ... ... சோழ னென்றும் இராஜேந்திர சோழ னென்றும் கெங்கைகொண்டசோழ னென்றும் மனுச்சோழ னென்றும் ஆறிலொன்று கடமைகொண்டசோழ னென்றும் ஆளப்பிறந்த சோழ னென்றும் ... ... ... னென்றும் இப்படி தோன்றப்பட்ட சோழன் மரபிலே ஒரு ராசா தன்மகளை நகளைக் கேட்டு

* * * *

**End :**

அன்பு சோதிக்கவந்தோர் ராசாவே நீரும் தேவியும் குமாரனும் மந்திரியும் கயிலாயமே வாருங்கோ ளென்று இந்திர விமானத்தில் ஏற்றிக்கொண்டு பரமேசுவரனும் பார்வதியாரும் கயிலாயமே எழுந்தருளினார்கள். ஆகை யினாலே இந்தத் திருவிளையாடலை[ப் பார்த்த] பேர் கேட்ட பேர் இந்த ராசாவும் தேவியும் குமாரனும் மந்திரியும் பெத்த பேறு பெறுவார்கள் என்றவாறு.

குறிப்பு :

ஏடுகள் இருபுறத்திலும் பெரும்பாலும் சிதைந்துள் ளன.

---

600. No. 216 அனுமந்தவாசகம்.

வசனம்

ஏடுகள் 25 : பூர்த்தி Lines 4 in a page.

இது, அனுமான், சீதாபிராட்டியாரைத் தேடிச்சென்று

கண்டு திரும்பி வந்தவரையும் நடந்தவற்றை இராமரிடத்தில் விண்ணப்பம் செய்ததைக் கூறுவது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இதனை அச்சிட்டிருப்பதாகத் தெரியவில்லை.

**Beginning :**

தேவரீர் சீர்பாதம் திக்குநோக்கித் தெண்டன் பண்ணி அடியேன் அனுமான் தெண்டனிட்டு விண்ணப்பஞ் செய்யப்பெறத் தேவரீர் திருவிளப் பிரஸாதமுண்டானபடியினலே திருவிளம்பற்றி அருளின ஊழியம்செய்து போதாநின்றேன். அடியோங்கள் நீலன் குமுதன் அங்கதன் சாம்புவான் அடியேனுடனே அஞ்சு பேரையு மழைத்து திருக்கரத்தில் வாழும் திருவாழி மோதிரமும் அடியேன் கையிலேறத் திருவிளம்பற்றி சீதாதேவியம்மனை தேடிக்கொண்டுவரச் சொல்லித் திருவுளம்பற்றி அருளச் செய்து.

**End :**

சமுத்திரக் கரையே வந்தேன் தேவரீருடைய திருவுளமுண்டானபடியினலே திருஅட்ட அபிசேஷமான பண்(ஞ்) சாட்சரத்தையு மனதிஞல் உச்சரித்துக் கொண்டு சமுத்திரம் ஆயிரக்காதமும் இலங்கைப்பட்டணமும் ஓங்கிப் பாய்ஞ்சேன். தேவரீருட தலைவன் சுக்கிரீபன் காவலான சிங்கார வனத்துக்குள்ளே வந்து பூந்தேன். தேவரீருடைய சீர்பாதமும் ஸ்வாமி லெட்சுமணப்பெருமாள் ஸ்வாமியுட சீர்பாதமும் அங்கித்தயில பரிகலப் பிரசாதமும் கொள்ள வருகிறேன். ஆகையாலே இந்தச் சேதிக்கு விண்ணப்பஞ் செய்துவரக் காட்டினேன். அடியேன் செய்யும் பணிவிடைக்குப் புத்தி கற்பித்து குருபாதந் திருவுளம் பற்றி அருளவும். வேணும் விண்ணப்பம்.

அனுமார்வாசகம் முற்றும்.

---

## 601. No. 217 இராமரம்மானை.

ஏடுகள் 160 ; Lines 4—8 in a page.

இது இராம சரிதத்தை அம்மானையாற் கூறுவது. நடை மிகச் சாதாரணமாக இருக்கிறது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. அச்சிட்டிருப்பதாகத் தெரியவில்லை.

**Beginning :**

அம்மானை அம்மானை ஆடியசீ ரம்மானை
ஆரையினிப் பாடி ஆடுவோ மம்மானை
சீரார் பனிமதியுஞ் செங்கதிரு முள்ளளவும்
வாரீ ருலகில் மழைபொழியு மண்ணிலுள்ளோர்
ஆராரும்வாழ வென்று அம்மானை பாடுகிறேன்
அரியதமிழ் தெரிந்து அம்மானை பாடுகிறேன்
கரிய முகமுடைய கற்பகமே முன்னடவாய்
கச்சிநக ரார்க்குக் கண்ணுன புத்திரனர்
வரதன் சிறுவன் சொன்னன் வானனவனியிலே
சீருமிகப் பெய்யும் தேசத்தில் பள்ளியிலும்
கண்டுமிகக் களித்துக் கம்பனிட தன்கதையில்
மொண்டுகொண்டு சத்தேமு கிந்தாப்போலே......

* * *

நேரும் விளையாட்டும் நின்றிளமான் கன்ருக
மற்பொருதிண் டோளான் மாரீசன் மான்வடிவால்
மானலக்கான் வந்ததிது மாயங்காண் வானுதலே
கொப்பொழிய தாண்டிக் குழையைப் பொரும்விழியாள்
எப்படியு மானைப் பிடித்துவர வேணுமென்ருர்
வண்டாருஞ் சீர்துளசி மாலை யணிமார்பன்
தண்டா மரையார்க்குத் தம்பியரைக் காவல்வைத்து
வெள்ளிச் சிலையெடுத்து வேந்த ரவர்தாமும்
துள்ளிவரு மானைத் துடர்ந்தனர்கா ணம்மானை

**End :**

அதிகாயன் சேனையுட னக்ஷய குமாரனையும்
மூலபலத் தாரும் மோதுங் கரிபரியும்
சேரவுக முடித்துச் சேனையெல்லாந் தாண்மாண்டு
காரணைய கையான் கருவறவே கொன்றுவிட்டு
கோசல நாடுடையான் குரக்குத் தளத்துடனே
... ... ... அயோத்திக் கெழுந்தருளி

குறிப்பு :

கடைசிப்பாகம் சிதைந்துவிட்டமையால் முடிவு தெரியவில்லை.

---

602. No. 218 இராமரம்மானை.

ஏடுகள் 85; பூர்த்தி Lines 6—9 in a page.

இது 217-ம் நம்பர் போன்றது. முழுதும் நல்ல நிலைமையிலிருக்கிறது.

**Colophon :**

சுக்கில஡ மார்கழிமீ 15உ உகாந்தாச்சி சீராமரம் மானை முகிந்தது முற்றும்.

---

603. No. 219 இராமரம்மானை.

ஏடுகள் 76; அபூர்த்தி Lines 3—8 in a page.

இது முன்பிரதியைப் போன்றது. இதில் சேது கட்டவருணன் வழிவிட்டது வரையுமிருக்கிறது.

---

604. No. 226 தேசிங்குராசன் கதை.

ஏடுகள்; 190 அபூர்த்தி Lines 4 in a page.

இது செஞ்சிநகரை அரசுபுரிந்த தேசிங்குராசன் சரிதத்தைக் கூறுவது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இதில் பூர்த்தியாக இல்லை, அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning** .

மாதவத் தாலேஇந்த வையகமெல்லாஞ் செங்
நீதமாய் நடத்தி மக்கள் நெறிதவரு ...... [கோல்
பூதலந் தனிலே செஞ்சி புரந்தரனை மன்னன்
காதல் தேசிங்குராசன் காத்தருள் கமலத்தோனே.

ஆர்க்காடான ரெத்தின கூடமே நபாப்பு சதிரய்யா
இரத்தினகூட மண்டபத்தில் நபாப்பு கொலுவிருந்தான்
தீன் சல்லி உ சன் சாயா| சதிருக்கு வரச்சொன்னான்
வந்தவாசி உசன்சாயபை சதிருக்கு வரச்சொன்னான்

**End:**

அந்த அதிசயங் கண்ணாலே கண்டான் நபாபுசய்துல்
தானதர்மம் செய்தாரய்யா நபாபு சய்துல்கான் [கான்
ஆர்க்காட்டுக்கு வந்தாரய்யா நபாபு சய்துல்கான்
இந்தக் கதையை யெழுதிக்கொண்டார் நபாபுபாளைய
முடம்.

---

605. No. 345 திரௌபதை அலங்காரம்.
ஏடுகள் 85; அபூர்த்தி Lines 8—9 in a page

இது திரௌபதையின் சரிதத்தையும் சிறப்பையும் உரைப்பது. சாதாரண நடையையுடையது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இதில் முதலில் 5 ஏடுகளில்லை. அச்சிடப்பட்டிருக்கிறது.

**Beginning:**

... ... ... ... கையுந்தான் பார்த்து
... ... ... நேரத்தில் வந்தோ சிலுகிடுவாய்
தையல் மயலாகிடுவாள் தார்வேந்தன் மீதிலப்போ
ஆரடிதாதி யழையடி தன் பரையை
தாய்போல் வளர்த்தெடுத்த தாதியருங் கூறுவாள்
விளங்கியசீர் மாதவத்தி மின்னகையைத்தான்
பார்த்து

தாய்போல் வளர்த்தெடுத்த தாதியெடுத்துரைப்
பாள்
அக்குரோணி வெள்ளஞ்சேனை யாயபெருத்தளங்
மட்டத்த சேனை மகாதளங்க ளத்தனையும் [கள்

**End :**

தாம முடியானுந் தாயித்துத் தானணிந்து
வண்டாடு புன்னை மகிள மணமாலை
கொண்டாடு தாழை குடமல்லிகை சண்பகப்பூ
சேறனைஞ்ச செங்கழுநீர் செவ்வியுள செண்பகப்பூ
மாரனைஞ்ச புன்னை மகிள மணமாலை
குறுகத் தொடுத்த கொழுந்தி லிளமாலை
வேறுங் கொழுந்துகளும் விசையவர்தாமெடுத்து
வார்கா துருவி வயிரக்கடுக்க னிட்டார்.

---

606. No. 396 கஞ்ச னம்மானை.

ஏடுகள் 148 ; அபூர்த்தி சிதிலம் Lines 4—9 in a page.

இது, கண்ணபிரானது சரிதத்தை உரைப்பது. நடை சாதாரணமானது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. அச்சிடப்படவில்லை.

**Beginning :**

சீரளந்த செல்வத் திருவரங்கிற் கண்டுயிலும்
பாரளந்தார்க் கம்மானை பாடவே—ஆரம்
பணிமதி பொங்கரவம் பாற்சடையோன் பெற்ற
கணபதி யைந்துகரன் காப்பு.

சீர்ப்பாற் கடற்றுயிலுஞ் சீதரனுக் கோர்குடுவை
நீர்ப்பாற் காணிக்கை நீட்டுதல்போல்—பார்ச் ?
சொன்மாலை சூடுந் துழாய்மாலை யான் றனக்கே
புன்மாலை சூட்டப் புகல்.

சீர்மடந்தை கேள்வன் திருவுந்தி யோன்படைத்த
பார்மடந்தை வாழ்வுதரப் பல்லுயிரெல்லாம்
பிழைக்க
தன்மம் பெருகத் தவஞ்செய்வோ ரீடேறக்
கன்மங் கரியக் கலியும் புறஞ்சாய
எம்மாதந் தோறும் எழிலிமழை சுரந்து
மும்மாரி பெய்ய முடிவேந்தர் தான்சிறக்க
வேதம் விளங்க விருமா மிகத்தழைக்க
கோதனங்க ளெல்லாம் குளுந்துமடைப் பால்
பெருக
ஆரணன் தந்தை யுந்தன் அம்மானை யான்பாடக்
காரணன் தந்த கணபதியே முன்னடவாய்
தேவகியார் பெற்ற செழுமணியை நான்பாட
நாவக முற்றிலகு நாகனே முன்னடவாய்.

**End :**

மாய்த்து பவுண்டரீக வாசுதேவன் றனையும்
வீயத் தலைதுணித்து மீண்டதுகா ணம்மானை
அன்னோன் தலையை யறுத்தந்த சக்கரமும்
தன்னயகன் பதத்தில் தான்வணங்கி நின்றதுவாம்.

குறிப்பு :

இதில் கண்ணன் பிறப்புமுதல் பவுண்டரீகன் வதை முடிய இருக்கிறது.

---

## 607. No. 397. கஞ்சனம்மானை.

ஏடுகள் 161 ; பூர்த்தி சிதிலம் Lines 7—10 in a page.

இது முன்பிரதி போன்றது. பூர்த்தியாக இருக்கிறது.

**Colophon :**

தாதுஸ்ரீ கார்த்திகைமீ 4உ கஞ்சனம்மானை யெழுதி முடிந்தது.

---

608. No. 398 கஞ்சனம்மானை.

ஏடுகள் 178; பூர்த்தி சிறுபான்மை சிதிலமாயிருக்கிறது Lines 6—8 in a page.

இதுவும் முன்பிரதிபோல முழுவதுமிருக்கிறது.

**Colophon:**

சுபானுஸ்ரீ புரட்டாசிமீ 27வ பட்டுக்கோட்டையிலிருக்கும் மலையப்பபிள்ளை குமாரன் ராமகுட்டியாபிள்ளை கஞ்சனம்மானை எழுதி முடிந்தது முற்றும்.

குறிப்பு :

இதில் சீரங்கராசரம்மானை முடிந்தது என்றும் எழுதியிருக்கிறது.

---

609. No. 399 கஞ்சனம்மானை.

ஏடுகள் 189; பூர்த்தி Lines 7 in a page.

இதுவும் முன்பிரதி போன்றது. நல்ல நிலையிலிருக்கிறது.

குறிப்பு :

கடைசியில் சீரங்கராசர் அம்மானை முகிந்தது முற்றும் என்று எழுதப்பட்டுள்ளது.

---

610. No. 400 சித்திரப்புத்திரர் அம்மானை.

ஏடுகள் 209; பூர்த்தி Lines 5 in a page.

இது சித்திரகுத்தனது சரிதத்தைக் கூறுவது. இவன் ஆன்மாக்கள் செய்யும் புண்ணிய பாவங்களை உணர்ந்து யமனுக்கு அறிவிப்பவன். இதனைச் செய்தவர் சிதம்பரநாதன் என்பவர். இவர், அதிவீரராமன்பட்டினத்

தில் வணிகர் குலத்தில் பிறந்தவர். துறைசைமாணிக்கக் கூத்தர் என்பவரது மாணுக்கர். இது அச்சிட்டிருப்ப தாகத் தெரியவில்லை.

**Beginning :**

சித்திர புத்திரனுர் தெய்வத் திருக்கதையைக்
கற்றவரும் நோற்றவருங் காசியினி—லுற்றிருந்து
கேட்டவரு மென்றுங் கிளைவாழ வாழ்ந்திருப்பார்
காட்டானை மாமுகனே காப்பு.

அத்திமுகனே யறுசடையோன் புத்திரனே
விக்கின விஞயனே வேறுவினை வாராமல்
அப்பம திரசந்தேன் அவல்பொரி யெள்ளுண்டை
யெப்பொழுதும் யான்தருவே னென்வினைகள் தீத்
தருள்வாய்
என்வினைதீர்த் தருள்வா யிந்திரனுர் புத்திரற்கு
செந்தமிழை யான்பாடத் திருவாக்குத்தந் தருள்
வாய்.

* * * *

துய்ய மறையோதுந் துறைசை நகராதிபதி
சைவகுல மாமுனிவர் சற்குருவாசாரியர் கோன்
மாணிக்கக்கூத்தர் மலர்த்தாள் தொழும் சீஷன்
ஆணிப்பொன் மார்ப னதிவீர ராமயண்ணன்
பட்டிணத்தில் வாழ்வசிகன் பார்பதினெண் விசயன்
சிட்டபரி பாலன் சிவனுர் திருப்பேரன்
ஆரமுற்ற செல அவனி நயினருள்சேர்
சீரகத்தார் மார்மன் சித்ம்பரனுதன் மகிழ்ந்து
ஓதுந் திருக்கதையை யுத்தம்மா மென்றுகந்து
நாதன் திருவருளால் நன்றியுடன் கேட்டருள்வீர்.

**End :**

அய்ய ரருளாலே யதிகசம்பத் துண்டாவார்
ஈச ரருளாலே யினிதூழி வாழ்ந்திருப்பார்
உற்றவரும் பெற்ருரு முறவின் முறையாரும்

சுற்றத்தார் கூடச் சொர்க்கலோகம் பெறுவர்
அய்யரருள் பெறுவர் அஞ்சுடையார் சீர்பெறுவர்
அய்யரையும் போல வனைத்துலகும் ஆண்டிருப்
பார்
சத்துருக்கள் முன்னே சகுனியர்கள் தங்கள்முன்
னே
தண்டேறிவாழ்த் தருவர்பத மாளுடை — —

**Colophon :**

பார்த்திபஹு மாசிமீ 3உ மகா ராச ராச ஸ்ரீ சரபேந் திர மகாராசா அவர்கள் சரஸ்வதி மாலில் சித்திரபுத்திர நயினாரம்மானை எழுதி முடிந்தது. ஆதிமூலம்.

---

611. No 401 சித்திரபுத்திரனா ரம்மானை.
ஏடுகள் 133; அபூர்த்தி Lines 5 in a page.

இதுவும் முன்பிரதியைப் போன்றது.

குறிப்பு :

இதில் ஆரம்பமுதல் 'அறுக்கிற கத்திகொண்டு ஆரணியந் தற்சூழ—கருக்கருவாள்கொண்டு காலடிகள் தற்சூழ' என்னும் வரையிலிருக்கிறது.

---

612. No. 402 சித்திரபுத்திரனாரம்மானை.
ஏடுகள் 121; அபூர்த்தி Lines 5—7 in a page.

இதுவும் முன் பிரதி போன்றது.

இதில் ஆரம்ப முதல் 'சோமாசி தன் வயிற்றில் சென்மித்தாள் தூயமொழி—தானவர்க்கு மேலாந் தவ முடைய மாப்பிள்ளைக்கு' என்பது வரையிலுமிருக் கிறது.

613. No. 403 சித்திரபுத்திரனம்மானை.
ஏடுகள் 165; அபூர்த்தி Lines 5—6 in a page.

இதுவும் முன் பிரதி போன்றது. இதில் ஆரம்ப முதல் 'மின்னனையார்க் கிவ்வடவே மெய்வரிசை செய்யு மென்றூர்—மைந்தன் பிறப்புக்கு என்ன வரிசை செய் வோம்' என்னும் வரையிலிருக்கிறது.

---

614. No. 404 (*a*) சித்திரபுத்திரனம்மானை.
ஏடுகள் 189; பூர்த்தி சிதிலம் Lines 6—10 in a page.

இது *400*-ம் நம்பர் பிரதி போல முழுவதுமிருக் கிறது.

**Colophon:**

கீலகஸூ வைகாசிமீ 16வ தஞ்சாவூரிலிருக்கும் ஒதியத்தூர் பிள்ளையவர்கள் அண்ணுமலையப்பப் பிள்ளை யவர்கள் சித்திர புத்திரர் கதை எழுதினது. இது எழுதினபடிக்கு முத்து வீரப்ப முதலியார் கையெழுத்து. இது எழுதின மேற்பாடம் தஞ்சாவூரில் ா. தேவோசி ஞயக்கரவர்கள் அரமனை நோட்டம் வீரன்செட்டியார் சுவடி.

---

615. (*b*) இராமரம்மானை.
Lines 8—10 in a page.

இது 219-ம் நம்பர் போல அபூர்த்தியாயிருக்கிறது. ஆனல் பாடபேதமும் காணப்படுகின்றது. இதில் ஆரம்பமுதல் 'எட்டுப்படியைக் கடவாதே மானே யென்றூர் எட்டுப்படியைக் கடந்தீரே யாகில், என்னும் வரையிலு மிருக்கிறது.

616. No. 405 (*a*) இராமய்யன் அம்மானை.
ஏடுகள் 20; அபூர்த்தி Lines 4—5 in a page.

இது மதுரையின்கண் அரசு புரிந்திருந்த திருமலை நாயக்கரது ஆணையை மீறி நடந்த இராமநாதபுரம் சேதுபதிகளில் ஒருவராகிய சடக்கத் தேவரை, நாயகரது மந்திரியும் தளவாயுமாகிய இராமையர் என்பவர் போர்க்களத்தில் வென்று சிறை கொண்ட கதையைக் கூறுவது. இதனை இயற்றியவர் பெயர் முதலியவை தெரியவில்லை.

**Beginning :**

தாரணியே ராமன் சடக்கன் தனைப்பிடித்துப்
பாரறிய வந்தபடை பண்பாக—மாமதுரை
சித்தி வினாயகனே செங்கண்மால் தன்மருகா
புத்திமிக வேணுமே போற்றி.

கதிர் கரி வருமமுருகர்—கழலிணைகள் சரணம்.

ஆலவாய்ச் சொக்கர் அருள்காணு முண்டாகச்
சீலமுள்ள திருமலேந்திரன் செங்கோல் தழைத் தோங்க
திங்களில் மூன்றுமழைத் திறம்மாகத் தான்ப்பொழிய
பொங்குகலி நீங்கிப் பூமியெல்லாந் தான் தழைக்க
எண்ணரிய மாதவரும் யெவ்வுலகி லுள்ளோரும்
கண்ணீறு வராமல் காசினியோர் வாழ்க வென்று
அம்மானைப் பாடுகிறேன் ஐங்கரனே முன்னடவாய்
கைமான் மழுவுடைய கண்ணுதலோன் தானளித்த
வெண்டாமறையாளே விரைந்து வந்து முன்னடவாய்
தண்டாமரை மார்பன் சடக்கன் தனைப்பிடித்து
வாரணத்தின் மேலேறி மதுரையிலே கொண்டுவர
தாராருந் தையல்புனை தற்ம்மத் திருமலேந்திரன்முன்

பாரோரும் பார்த்திருக்க பண்டொரு நாள் வந்தகதை
நான்ந்தா னுரைத்திடுவே நகரி உள்ளோதான் கேளீர்

* * * *

மதுரை நகர்வாழும் மன்னவனே நீ கேளாய்
ஞலு திக்கு மெட்டும் பதிஞலு கோண மெல்லாம்
திக்கடங்க வெட்டித் திறை கொண்டேன் தானுமின்னு
வணங்காத மன்னர் தம்மை நீணிலத்தில் வெட்டி......
கட்டாத கற்பமெல்லா கட்டிவித்தே நின்னருளால்
தஞ்சாவூர் கோர்ட்டை தவுடுபொடி ஆக்கிடுவேன்
எனக்கு விடைதாருமென கேட்டான் ராமயனும்
வீண் புகழீராம நீ வீரியங்கள் பேசாதே

**End :**

கச்சித் திருமலேந்திரனைக் காண்பித்த ரம்மானை
நாருசி நாடுதனில் நல்ல மணியம் வைத்தான்
தேவர்கள் கொண்டு துலுக்காணந் தானடந்தான்
திருநகரி தன்னிலே சேரவங்கே தான்கூட்டி
சென்று வளைந்து செந்துப் பிடித்து வந்து
கொண்டு வந்து நகந்தனி லேத்திவித்த கொத்தவர்
காண்
ஈரோடு தன்னில் என்ன வொண்ணுக் கோடிமன்னர்
கங்கையை மண்ணுடி கதித்தமிச.....................டன
கோட்டை ..................................................................

---

617. (*b*) பார்வதிக்கும் இலக்குமிக்கும் ஏசல்

Lines 4 in a page.

இதில் இரண்டு ஏடுகளே இருக்கின்றன.

**Beginning :**

......................................................................னல்லோடி
தாடகைதன் பெண்பழியைச் சற்று மெண்ணுமலத்
தாண்டியாடல் செய்தா னுங்களாண்டை
யல்லோடி

வாடி முகமனுண வொரு மாதினுடனே
வாது செய்தா னுங்களிட னுதனல்லோடீ
பாலை னொருவனுக் கங்கேவ லாளாகிப்
பாயல் சுமந்தா னுங்களிட மாயனல்லோடீ
தாவு புனலப்புல விற்குமண்ணு மன்றியே
சாணகஞ் சுமந்தா னுங்கள் தாணுவல்லோடீ

* * * * * *

மட்டுப்படாத துட்டத்தனஞ் செய்த சோதைதன்
மத்தடி யுண்டா னுங்கள் மத்தனல் லோடீ
பிட்டுக்கு மண்சுமந்து பாண்டியன் கையாற்
பிரம்படி பட்டா னுங்கள் மாரனல் லோடீ
ஆட்டுக்காலுக்காசையாகு மோட்டுப் பண்ணியாய்
அன்றுதேடிச் சென்றவ னுன்னுண்டையல் லோடீ
மோட்டுப் பன்றியாக நின்று குட்டிதனக்கே
முலையுங் குடுத்தா னுங்கள் முத்தனல் லோடீ

**End :**

பெற்ற கரி முகவனுக் குற்ற பரியாய்ப்
பெருச்சாளி யளித்தானுன் பிரானல் லோடீ
வாவிதன்னில் மேவு மொருவன் கழுவின்மேல்
வண்டுருவ மானுனுங்கள் விண்டு.....................

---

618. No. 407 காஞ்சிமன்னனம்மானை.
ஏடுகள் 91; பூர்த்தி Lines 5—8 in a page.

இது காஞ்சி நகரத்தில் அரசாண்ட காஞ்சிப் பெருமாள் என்னும் ஒரு அரசன் உருமாறிச் சென்று மதுரையில் அரசு புரிந்திருந்த ஒரு பாண்டியன் மகளை மணஞ்

செய்த விஷயத்தைக் கூறுவது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. அச்சிடப்படவில்லை.

**Beginning :**

வாஞ்சையுடன் பூவுலகில் மன்னுபுல
வோர்கள்புகழ்
காஞ்சிய னம்மானைக்குக் காப்பதாம்-தோஞ்சதயிர்
நெய்பால் மிகவருந்து நேயன் மருகனைந்து
கைவா ரணமுகனே காப்பு.

சீரார் கமலத் திருமாது சேர்புயத்தான்
தாராரு மார்பன் தமிட்காஞ்சி மன்னவன்தான்
காரார் குழலணங்கைக் கலியாணஞ் செய்தகதை
வாராழி சூழுலகில் வண்மையுடன் பாடுதற்கு
வீராகரனை விஞயகனைப் போற்றுகிறேன்
எந்தன் வினைதீர்க்கும் ஈசுரனர் தான்பயந்த
கந்த னறுமுகனைக் காப்பாக வைத்தேனே.

* * * * * *

கந்துலவுங் காஞ்சிப் பெருமாள் கதைநெறியைப்
இந்துலகிற் பாடினே னெல்லோருங் கேளுமென்றே

* * * * * *

சீராருந் தென்மதுரைத் தென்னவன் கோமான்
பயந்த
பேராற் பெரியபுகழ் பெண்கொடியார் தம்முடைய
காரார் குழலணங்கைக் கலியாணஞ் செய்தகதை
வாராழி சூழுலகில் வண்மையுடன் பாடுகிறேன்.

**End :**

குங்குமச் சோலை குளிர்ந்த நிழல் சோலையிலே
நல்லடக்கஞ் செய்து நரபால பூபதியும்
குறத்தி யழகுதன்னைக் குறைவறவே தானெழுதி

காஞ்சி மடலெழுதிப் போனனே காவலனும்
கானக் குறமாதுங் காத்தங்கே நின்றுளே.

**Colophon :**

ரௌத்திரி-ஞு பங்குனி-மீ 24-உ காவரிக்கரை அருகான கிள்ளியூரிலிருக்கும் வேளாளரில் பிரம்பிரி......... பிள்ளை மகன் கோனேரியப்பா பிள்ளை மகன் ஆனையப்பப் பிள்ளை மகன் நாகநாத பிள்ளை காஞ்சியன் கதை முகிந்தது முற்றும்.

---

**619. No. 694 (*a*) காஞ்சிமன்னனம்மானை.**
**ஏடுகள் 70; அபூர்த்தி Lines 4 in a page.**

இது 497-ம் நம்பரைப் போன்றது. கடைசியில் சில ஏடுகள் இல்லை. சிதிலமாயிருக்கிறது.

---

**620. (*b*) செண்டலங்காரப் பிள்ளை வண்ணம்.**
**Lines 3—5 in a page.**

இது இராசை என்கிற மன்னார் கோவில் செண்டலங்காரப் பிள்ளை மீது பாடப்பட்ட வண்ணம். இவர் மீது கோவையும் தூதும் தனிப்பாடல்களும் காணப்படுதலின், இவர் தமிழபிமானியும் பிரபுவுமாக இருந்திருக்க வேண்டும். ஆசிரியர் பெயர் தெரியவில்லை. அச்சிடப்படவில்லை.

**Beginning :**

செகரட்சக ரியன்ற கருணைக் கடலனந்த சயனத்தினர்
விளங்கு மொரு சக்கிரபாணி

திண்டிற லால்நர சிங்கமதாயிசை யும்படியே
திற்கும் பெருந்தூணி
லுசிதத்துட னெழுந்து முரணுற்றிரணி யன்றன்
மணிநற்குடல் பிடுங்கியொடு ரத்தபான
மும்பசி யாறிய செங்கனி வாயின ரம்பிகை
சோதர பங்கசன் ருதை
சிகரக்கிரியை யந்த மழையிற் கவிகை யென்று
சுரபிக்கிடர் துரந்த ஒருமைச் சகாயர்
சிந்துர நேயர் முகுந்த ரிராசை யிலெம்
பெருமான் மருவுறு செழுந்தாளை
அருமையுடனே யணிய வருகரா

* * * *

மறிகேப்புலிகள் கண்டு சுரபிக்கண மொரண்டை
யதனிற் புனலுகர்ந்து பகைசற்றிலாமல்
வங்கணமாக மிகும்பொது மாதர் நடந்திடு
போது கண்டுடன் தோகை
யதுகற்றிட விரங்க மடுவிற்கலை களைந்து
முழுகிக்குலவு பெண்கள் விழியுற்றுவாளை
யங்கெளி தாவிரு கெண்டையி தாமென
வுஞ்சுழல் காவிரிபொன் பொலிந்தேறு
வயல்சுற்றிய தடங்கள் மிசையிற் புதிய செண்ப
கம்மெய்த்தரு வினங்கள் மொய்த்துவீசு
வண்டுவராபதி வந்த தியாக னுகந்தருள்
மானிதி செண்டலங்காரன்
இனிய புகழே அணியும் வரைவாய்

**End :**

உடலிற் புளகரும்ப உபரிகித்திகை விரும்பி
மதனப்பயலை வென்று முவகைப்பிரவாக

முந்திய தோர்சன தங்கொடு பாடுவன் நிந்தனை
சூடுவன் பந்தயம் போடு
மௌமெச்சிடுவள் சிந்துநொடியிற் சொலுவள்
கொஞ்சி
யிகலிக்கொளுவள் தந்த முறைமுத்திரைசடார
மின்றலவோசுக மின்றலவோகதி
யின்றலவோ தமியென்ற லங்கார
முனமுப்பு வள்விளைந்த சுரதப்பிரளைய சிந்துசம
நிறைத்து சுகநித் திரையாகி
யொண்களை வேடை தெளிந்திரு வோர்கள்
பரம்பரையாக நடந்த சம்போக
கலவிதனையே அயர...

குறிப்பு :

இவ்வண்ண மல்லாமல் இச்செண்டலங்காரன் மீது கலிப்பா, விருத்தம், கலித்துறை, அம்மானை, வண்ணமும் இருக்கின்றன.

---

621. No. 59 பாரத அம்மானை.
ஏடுகள் 253, பூர்த்தி Lines 5 in a page.

இது பாரதக் கதையை அம்மானையாற் கூறுவது. இதனை இயற்றியவர் கிருஷ்ணன் என்பதும் வல்லம்பர் நாட்டுச் செஞ்சை நகரத்தினர் என்பதும் புத்தூர் பெரிய தேவன் என்பவரது மாணவர் என்பதும் இந்நூல் அவையடக்கத்தால் விளங்குகின்றது. இதில் ஐந்து பிரதிகள் இருக்கின்றன.

**Beginning :**

மேருதனில் முன்னாள் விநயகனார் தாமெழுதும்
பாரதத்தை யம்மானை பாடவே—யோரணைய

வேயகமே யானகர வேழமுக னேதமிட்டு
நாயகமே முன்னடவாய் நயந்து.

* * * *

வன்ன மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
உன்னிச் சிறகை விரித்தாட லுற்றதுவே
யீசனுடன் முன்னுளி லெண்ணமல் வந்தெதிர்த்த
வாசமுடை மதனன் பே......ரொத்ததுவே
யொன்று மறியே னுரைத்த தொருவார்த்தை
மன்றிலுள்ளோ ரெல்லோரு மனதாரக் கேட்டருளீ
பஞ்சவரு நூற்றுவரும் பாராண்ட காரணிக்கம்
அஞ்சிலொன்று போதா தடியே னுரைத்ததுதான்
ஈதுஞ் சிறிதெனக்கு இயன்ற மாறு பாதியுங்கள்
பாதந் தொழுமடியேன் பாடிவிட்டேன் பாவலரே.

* * * *

மெரு தன்னில் முன்னுள் விநயகனுர் தாமெழுதும்
பாரதத்தை நூல்வழியே பண்பாய்த் தெரிந்தெடுத்த
வாசமிகு மீச னய்ய னருளாலே
காசினியோர் மெச்சக் கலியுகத்திற் பாடிவிட்டேன்
சங்கையுற்ற வண்மைத் தனிபுண்ணுன் தன்புதல்வன்
செங்கைமுகில் மால் பெரியான் சேனை மிதித்தவன்காண்
சேர்ந்தவர்க் கினியான்காண் செஞ்சைக்கு
நாயகன்காண்
பூந்தாமரையாள் புயத்திருக்கும் புண்ணியன்காண்
மூத்தவனும் வேலவனு முக்கணனு மாலயனுங்
காத்தருள வேசிறிது கற்றவன் காணம்மானை
பேரான புத்தூர்ப் பெரியதேவன் கமலச்
சீரடி போற்றும் சீர்கிருஷ்ணன் காணம்மானை.

**End :**

மாவேறு பூவுலகில் வாழ்ந்து முகித்தோரும்
சேவேறு மீசனடி சேருவர் காணம்மானை

பதினெட்டா நாளிற் பதினைஞ்சு நாழிகையில்,
பதினெட்டா நாளைப் படைப்போர் முடிந்ததுவே.

**Colophon:**

விசையஞு மாசி மீ 24உ வியாழக்கிழமையும் உத்திராட நட்சத்திரமும் ஏகாதசியுங் கூடிய புண்ணிய தினத்திலும் அயினிசு சிவாஜி மகாராஜா சாயபு அவர்கள் அரசு செலுத்திப் பரிபாலனம் பண்ணி வரும் நாளிலும் பாரத அம்மானை அப்பாசாமி வாத்தியார் கைப்பட எழுதி முடிந்தது முத்தும்

**விசாரணை வாசுதேவ பிள்ளையவாள்.**

---

**622** No. 60 பாரத அம்மானை.
ஏடுகள் 131; **அபூர்த்தி** Lines 4—7 in a page.

இதுவும் முற்பிரதி போன்றது. 1—7-ஏடுகளின் நுனிப்பாகம் சிதைந்துள்ளது. இடையிலும் சிலஏடுகள் சிதைந்திருக்கின்றன. 179 நெ. ஏடில்லை.

---

**623** No. 61 பாரத அம்மானை.
ஏடுகள் 97; **அபூர்த்தி** Lines 6—7 in a page.

இதுவும் முற்பிரதியைப் போன்றது. சிற்சில பாகங்கள் சிதைந்துள்ளன.

---

**624** No. 62 பாரத அம்மானை.
ஏடுகள் ; 199 **பூர்த்தி** Lines 6—7 in a page.

இது 59-ம் நம்பரைப் போன்றது. நல்ல நிலைமையிலிருக்கிறது. 78-ம் நெ. ஏட்டில் ஒன்றும் எழுதப்படவில்லை.

625 No. 63 பாரத அம்மானை.

ஏடுகள் 58; அபூர்த்தி Lines 6—9 in a page.

இதுவும் முன் பிரதி போன்றது. ஆனால் அபூர்த்தி யாயிருப்பதோடு கடைசியில் சிதைந்திருக்கிறது.

---

626 No. 67 அர்ச்சுனன் தவநிலை.

ஏடுகள் 43 பூர்த்தி Lines 8—10 in a page.

இது பாரதத்தின் ஒரு பகுதியாகும்; அருச்சுனன் சிவபெருமானிடத்தில் பாசுபதாஸ்திரம் பெறுவதற்காகத் தவஞ் செய்வதைக் கூறுவது. இதிற் காணப்படும் கதைப்போக்கு வில்லிபுத்தூராழ்வார், நல்லாப்பிள்ளை முதலியோர் செய்துள்ள பாரதக் கதைப் போக்கினும் வேறுபட்டுள்ளது. 440 விருத்தங்களை உடையது. செய்யுள் நடை சிறந்ததன்று. இதனை இயற்றியவர் பெயர் முதலியவை தெரியவில்லை. அச்சிடப்படவில்லை.

**Beginning :**

தெங்கிள நீரோடும் தேனு மாங்கனியும் பாலும்
அங்கையில் நிறைய வாங்கி யமுதுசெய் தருளுவானை
யெங்கள் நாயகனை யேக மருப்பனை யானைக் கன்றைக்
கங்குலும் பகலும் போற்றக் கடுவினை கழிந்து போமே.

பருப்புக் கலந்த பருவரிசி பாலுந் தேனு மாங்கனியும்
வருக்கைக் கருப்புக் கட்டியுடன் கதலிப்பழத்தோ டெள்
[ளுண்டை
விருப்புற்றளவும் வேண்டளவும் வாரிவிழுங்கும்விநாய
[கனே
யிருப்பி லிருக்கு மெம்பெருமானே யெட்டா மலர்கொண்
[டிறைஞ்சுவனே.

* * * *

பூசுவது நீறுடைய புனிதனா ரப்பொழுது
பாசுபதத் தேவர்தம்மைப் பரிவுடனே வரவழைத்து
நேசமுடன் பாத்தனுக்கு நிலைநிற்கும் படிசெவியி
லோசையுள்ள மந்திரத்தையுபதேசம்பண்ணுமென்றார்
410

**End :**

திங்கள்மும் மாரி பெய்யத் திருமக ளினிதி ருப்ப
கொங்கலர் சோலை நாடன் குருகுலத் தரசர் கோமான்
தங்க[ளி லருச்சுனன் செய்]தவநிலை கற்றோர் கேட்டோர்
சங்கர னருளே பெற்றுத் தரணியில் வாழ்வர்தாமே
(440)

**Colophon :**

தாதுஞூ கார்த்திகைமீ 10வ அர்ச்சுனன் தவநிலை எழுதி முடிந்தது முற்றும். இந்தச் சிவடி யெழுதினது பெருமாள் நயினுன் கையெழுத்து. இந்தச் சிவடி பிள்ளையள் வைத்துப்படித்திருக்கவும்.

விக்கினேசுரனும் குமாரருந் துணை.

---

627 No. 314 நாசிகேது சரித்திரம்.
ஏடுகள் 46: Lines 3—4 in a page.

இது வீயாங்கன் என்னும் ஒரு மகரிஷியின் புத்திரனாகிய நாசிகேதுவின் கதையைக் கூறுவது. இதில் புண்ணிய பாவங்கள் இன்னவை யென்பதும், அவற்றுள் பாவஞ் செய்தவர் யமலோகத்தில் இன்ன இன்ன தண்டனை பெறுவர் என்பதும்,யமகிங்கிலியர்கள் நாசிகேதுக்குணர்த்தியதாகக் கூறப்பட்டுள்ளது. இது ஒரு வசன நூல். ஆசிரியர் பெயர் தெரியவில்லை. அச்சிடப்படவில்லை.

**Beginning:**

ஆக்குவிக்குங் கல்வி(தரும்) அரும்பாவ வல்வினையைப்
போக்குவிக்குஞ் செல்வம் புகுவிக்கும்—நோக்கரிய

வொண்ணுதலாள் பாக முடையான் விடையேறு
கண்ணுதலான் இக்கதைக்கோர் காப்பு.

தேவர்களில் மிக்கோரெல்லாஞ் சிறிது தன்மங் கேட்டு இருந்த விடத்து தேவதேவன் திருமறு மார்பன் பாவநாசன் பவுத்திர மூர்த்தி சக்கிரபாணி சததண்ட நாயகன் புண்டரீக புருஷோத்தமன் ஆதி நாராயணன் அனந்தனென்னும் மகாநாகமே சயனமாக யோகநித்திரை கொண்டருளுகின்ற காலத்து நாராயண சுவாமியைத் தெண்டன் பண்ணித் துதி செய்து

* * * *

நாசிகேது கேட்கக்கிங்கிலியன் சொல்லுவான் வழிபறித்துண்டாரும் பெண்கொலை சூழ்ந்தாரும் திருநந்தவனமழித்தாரும் அம்பலங்களழித்தாரும் எளியாரை வலி பேசி அடித்தாரும் தன்மங்களை யழித்தாரும் தயவில்லா திருந்தாரும் இவர்கள் காணும் இந்த வாதைப் படுகிற வர்களென்று சொல்ல,

**End :**

இப்பொழுது தன்மமும் பாவமுமிரண்டையும் அனுபவித்தவர்களைக் கண்டு நீயங்குப் போய் சொன்னால் அங்குள்ளார் தன்மமே செய்தால் சொற்கமே வந்து பெறுவார்கள். ஆதலால் இவ்விடத்து நரகம் பாழாம் இவிடத்துக்கு ஒன்றுமில்லை. உன்னுடைய பிதாவாகிய தெய்வங்கமான நன்மையிலே நீயும் இவ்விடத்துக்கு தன்ம பாவங்களைப் பாத்துக்கொண்டு போகின்றாய் அங்குள்ளார் தன்மமே செய்தால் சொற்கமே பெறு வார்களென்றவாறு.

நாசிகேது புராணம் எழுதி நிறைந்தது முற்றும். பிலவங்கஞு மீ 9உ நாசிகேது புராணம் எழுதி முடிந்தது.

628. No. 344 குருக்ஷேத்திரமாலை.
ஏடுகள் 44 ; Lines 6—7 in a page.

இது பாண்டவர்கள் வனவாசத்தினின்று மீண்ட பிறகு குருக்ஷேத்திரன் என்பான் உமிழ்ந்த மரகதம் தவம் புரிந்த கண்ணன் கையில்விழ அதற்கவன் கோபிக்க அதனை அர்ச்சுனன் மாற்றினன் என்பதைக் கூறுவது. இதனைச் செய்தவர் முதலியவை தெரியவில்லை. அச்சிடப்படவில்லை.

**Beginning :**

மன்னவர்கள் தன்மர் வனவாசத் தேயிருந்து
நன்னெறிசேர் குருக்ஷேத்திரன்னாரணற்குச் செய்த குற்றம்
அன்னதரு வானதன்மர் அருச்சுனனார் காத்தபுகழ்
கன்னல் புகள் கணபதியே காப்பு.

கற்றன் திருமகனே காரானை மேனியனே
சத்திக் கணபதியே சண்முகற்கு மூத்தோனே
வள்ளி மடமயிலாள் மாருட்டம் பேசினதை
தெள்ளிய தோர் வேலவற்குச் சேர்ந்த விநாயகரே.

*　　*　　*　　*

**End :**

மன்றில்ப் படித்தவரும் வாகாகக் கேட்டவரும்
இன்று புகழ்பெத்து இனிதூழி வாழ்ந் திருப்பார்
சத்துருக்க ளன்றிச் சகல சம்பத்துண் டாவார்
புத்திரரைப் பெத்துப் புகழ்பெறவே வாழ்ந்திருப்பார்
பச்சைமால் பாதம் பரகெதியுஞ் சேருவரே
இச்சையுடனே யினிதூழி வாழ்ந்திருப்பார்
ஆல்போலத் தழைத்து அறுகதுபோல் வேரோடி
மூங்கில்ப் போல்ச் சுற்ற முகியாமல் வாழ்ந்திருப்பார்.
பயிரவனாத சுவாமி துணையாக வேணும்.

629. No. 602 சுபத்திரை கல்யாணம்.
ஏடுகள் 67; அபூர்த்தி Lines 3 in a page.

இது, அர்ச்சுனன் சுபத்திரையைக்கல்யாணஞ் செய்துகொண்ட கதையைக் கூறுவதெனினும் அகவல், தருவிருத்தம், சிந்து முதலியன விரவி நாடகம்போற் செய்யப்பட்டுள்ளது. ஏடுகள் ஒடிந்தும் சிதைந்தும் இருக்கின்றன. ஆசிரியர் நன்னிலம் நாராயணன் என்பவர். அச்சிலில்லை.

**Beginning :**

ஸ்ரீதரமூர்த்தி வாசுதேவ நாராயணர்க்குச்
சோதரியான ஞான சுபத்திரை கல்யாணம் பாட
மாதவன் நன்னிலத்தில் மதுவனநாதர் பெற்ற
காதலனான செல்வக் கணபதி காப்புத்தானே.

வாழிநிலத் தனியில் வெற்றிமருவும் அர்ச்சுன
மஹாராசன்
தோளினில் மாலே போட்ட சுபத்திரை கல்யாணம் பாட
நாளுமா மறையோர் வாழும் நன்னிலந் தன்னிலென்னை
ஆளும் வேலாயு தேசர் அருளடி பரவினேனே.

**End :**

ஆதிபலபத்திர ராமதீரனும் எதுகுல ருத்தம வாசு
தேவரும் வழியோட
அருள்பெறு வுக்கிர சேனர் யாவரும்
சதுமறை வித்தக ரானபேர்களும்? யாணி அக்குரர்
நாதரோடுள்ள
சகல சனத்தரு மேவுகாவ.........................................
.................தோர்சபை விழிகள் களிப்போடு காண
வேமலர்
...............................வேளதி..................யாவர் போலே
வதுவை மணத்திரு மேனி மேலழ கொழுகு சுபத்திரை
மருவு மருச்சுன ராமபூபதி தொழுதானே.

# XIII. சரித்திரம்

## 630. No. 214 சிவாஜி சரித்திரம்

ஏடுகள் 180 ; பூர்த்தி Lines 5 in a page.

இது சிவாஜி மகாராஜாவின் சரித்திரம் கூறுவது. சாதாரண நடை. பிழையும் அதிகம். இதனைச் செய்தவர் கவீந்திரர் என்பவர். அச்சிடப்படவில்லை.

**Beginning :**

ஸ்ரீ விக்கினேசுரருக்கும் ஸ்ரீ சரஸ்வதி அம்மனுக்கும் ஸ்ரீ குருபாதத்துக்கும் சாஷ்டங்கமாய் நமஸ்காரம் பண்ணி இந்த சிவபாரத சரித்திரம் சொல்லுகிறோம். பூருவத்திலே பரமானந்த சர்மா என்றுவொருபிராமணோத்தமன். அவர் தீர்த்த யாத்திரைக்குப் புறப்பட்டுக் காசிக்கு வந்தார். சகல சீவராசிகளுக்கும் மோட்சத்தைக்குடுக்கிற மகாக்ஷேத்திரம் ஸ்ரீ விசுவேசுரர் தாரக பிரம உபதேசம் பண்ணுகிற அந்த க்ஷேத்திரத்திலே அந்தப் பிராமணன் ஸ்தானவிதியள் பண்ணிக்கொண்டு ஸ்ரீ விசுவேசுரர் தெரிசம் பண்ணிக்கொண்டு அந்த கங்காநதிக் கரையிலே சகல தர்மங்களும் தெரியப் பட்டவர். பத்மாசனம் போட்டுக்கொண்டு

* * * *

அப்படிப்பட்ட பிராமணுளே யிந்த பரமானந்தர் வெகு உபசாரம் பண்ணினார். அந்தப் பிராமணுள் கவியீந்தருடைய சமீபத்திலே உட்கார்ந்து கொண்டு மகாபரிசுத்தமாயிருக்கிற சிவாஜிராசாவினுடைய சரித்திரம் கேட்கவேணுமென்று யோசனை பண்ணிக்கொண்டு

**End :**

அந்த நகரத்து செனங்களுக் கெல்லாம் அபயத்தைக் குடுத்தார். ஓடிப்போன செனங்களெல்லாரும்

திரும்பவந்து எப்போதும் போல சுகமாயிருந்தாள். அதன்பிறகு அந்த ராச்சியத்தை திரும்ப சுபாஸ்தகர னுக்கு குடுத்து காத்துளானபடியினலே சிவாசிராசா அந்த சிங்காரபுரத்திலே தானேயிருந்தா ரெண்ணு புத்தி மனத்தாளாயிருக்கப்பட்ட பிராமணுளுக்கு கவீந்திரர் சொன்னர்.

---

631. No. 540 பரமானந்த யோகி சரித்திரம்.
ஏடுகள் 34; பூர்த்தி Lines 4 in a page.

இது வல்லத்துக் கோட்டையில் வசித்திருந்த பர பிரமானந்த யோகிகள் தம் மாணுக்கர் பூரணப் பிர மானந்த யோகியுடன் தஞ்சைக்கு வந்து அதனை ஆண் டிருந்த சாசிராசிபார் என்பவரது தேகத்தை சமாதி வைக்கச் சொல்லியும் செய்யாததால் நாட்டிற்குப் பல தீங்கு விளைந்ததாகக் கூறுவது.

**Beginning :**

பரப்பிருமானந்த யோகீசுரர் சீஷன் பூரணப் பிருமானந்த யோகி குருவும் சீஷனும் வல்லத்துக் கோட்டையிலே வாசமாயிருந்தது சாசிராசி பார் சரீர வாசம் விட்டுத் தவலோகஞ் சேருகிற முன்பாகப் பரப் பிரமானந்த யோகீசுபரரும் பூரணப் பிரமானந்த யோகி யும் வல்லத்திலே யிருந்து தஞ்சாவூருக்கு வந்து சீதாப் பராவு அவல்தாரைக் கண்டு அவருடனே குருசுவாமி யவர்கள் சொன்ன சேதி சாசிராசிபார் சரீர வாசம் விட்டுத் தவலோகம் போருர் அவர் நமக்கு ஆத்தும பந்து அவர் வாசம் பண்ணின கோயில் மந்திர பிண்ட மான படியினலே அவர் கோயிலான மந்திர பிண் டத்தை சமாதியிலே வையுங்கோள். தகனம் பண்ண வேண்டாமென்று திருவுளம் பற்றினர்கள்.

**End :**

அடியேன் தானே வெளியே புரப்பட்டு யாதியுங் குடுத்து அனுப்பி அரமனையிலே உத்தாரம் வாங்கிக் கொண்டு தபசுலே யிருக்க வேணும் என்று வந்தேன். சுவாமியவர்கள் தயவு பண்ணி உத்தாரங் கொடுத்துச் சந்தோஷகரமாய் நடப்பிச்சுக் கொள்ள கட்டளை யிடவும்.

குறிப்பு :

சிவயோகிகளின் தேகத்தைத் தகனம் செய்யக்கூடா தென்பதற்கு திருமந்திரத்தினின்று சில செய்யுட்கள் கடைசியில் எழுதப்பட்டுள்ளன.

---

## XIV. பரத சாஸ்திரம்.

### 632. No. 598 பரத சாஸ்திரம்.

ஏடுகள் 44; அபூர்த்தி Lines 4—7 in a page.

இதில் 108 தாள லக்ஷணமும் அஸ்த லக்ஷணமும் பரதவகையும் பிறவும் கூறப்பட்டுள்ளன. இதில் செண்டலங்காரன் என்னும் பிரபுவைச் சிறப்பித்திருத் தலால் இந்நூல் அவரது வேண்டுகோட்கிணங்கிச் செய்யப்பட்டதுபோலும் என்று யோசிக்கலாம், இயற் றியவர் பெயர் தெரியவில்லை. சிதிலமாயிருக்கிறது.

**Beginning :**

அய்ங்கரன் அயன் அரன் அமரர்களுடன்
ஆகண்டலன் அயிலன் காரியோடயிராணி.
சக்கிரன் கதிர் சந்திரன் அங்காரனும்
அமர் புதனேர் பொன் சுக்கிரன் சனி

இராகு கேது காமன் அக்கினி
யமன் நிருதியும் வருண ேனாடனில குபேரன்
பொங்கிய ஈசானன் திறல்சேர் புருடா மிருகம்
ஆண்பூதம் பெண்பூதம் பார்வதி பகவதி பூமகள்
புவிமான்
பொதுமகள் கற்புடைமகள் சுரநதி புகல் சரசுவதி
துர்க்கை மயேசுரி பிரமாணி நாராயணி
ஊர்வசி புகழ் சாமுண்டி
பைங்குழ லிந்திராணி வராகி பகர் மோடி யோடே
கவுமாரி
பாங்கன் மூங்கன் மைத்துனனே பரவிய கலதி பவநரகம்
அகற்றுந் தருமம் பர சொற்கத்தினர் ஐம்பூதம்
பல்லுயிரேனை யரிவர் முதலினர் பரவி யிறைஞ்ச
மங்கையுரா ராமா மாலே வரநரசிங்கா
நேமிக்கிரிமா மேருவை நிகர் குய மரகதவல்லி மணாளா
வண்டுவரைச் செண்டலங் கார மன்ன வீரையில்
நாரணனேவந்துதித்திடு நாத முனிக்கருள் வழங்கிய
மாலே.
விநாயகன் பிர்மா விட்டுணு ஈசன் இராமன் தேவர்கள்
தேவேந்திரன் குமார சுவாமி அய்யனார் பார்வதி பகவதி
இலட்சுமி பூமிதேவி கங்கை நரசிங்கம் குலஸ்திரி
பரஸ்திரி
சுக்கிரன் சரசுவதி விந்தை மூதேவி காடுகாள்
பிரமாணி நாரணி
கவுமாரி வராகி இந்திராணி மயேசுரி சாமுண்டி சூரியன்
சந்திரன் அங்காரகன் புதன் வியாழம் வெள்ளி சனி
நாயிறு திங்கள் ராகு கேது மூங்கன் மன்மதன் இந்திரன்
அக்கினி இயமன் நிருதி வருணன் வாயு குபேரன்
ஈசானன்
ஆண்பூதம் பெண்பூதம் மகமேரு சக்கர வாளகிரி
பஞ்சபூதம்
புண்ணியம் பாவம் சொர்க்கம் நரகம் மைத்துனன்
தோழன்
புருடா மிருகம் ஆண்பொது நிலை ஒன்று பெண்பொது

நிலை ஒன்று ஆக அறுபத்து நான்கையும் தேவர்கள்
நிலை

சச்ச புடமே வக்கிர மிரண்டும்
பொற்புடன் லகுவும்புலுதமுமாமே (க)

சாசபுடமே நடுவிரண்டுலகுப்
பேசியமுன் குருப்பின் சிலை வருமே (உ)

சற்பிதாவுந் தலை கடை புலித
முட்கடை யவண துடனிரு கோலே (ங)

சம்பைக் கொட்டந் தலைகடை புலித
மும்பர் புரஞ்சிலை யுள்கிடந் தனவே
(ச)

உள்கட்டிதஞ் சிலை யொண்புர மாகி (ரு)

நல்கிய ஆதி.........வொன்றெனுமே (சா)

தற்பண மிருசுழி தன்னுடன் வக்கிர
நிற்பது மேழாய் நின்ற தென்றனரே. oo o (எ)

சச்சரி விந்துத் தயங்கிய விராமம்
வட்டமுங் கோலும் வருமுறை யெட்டே oo|oo|oo|oo|oo|oo|
oo|oo| (அ)

சிங்க வீலை செழுங்கணை சுழி தமிழ்
நங்கணக யேகம் நயந்தது நவமே. |oooo| (கூ)

* * * *

இரு சுழியுங் கோலொன்று மின் துரித மூன்றுலகு
வொருசுழியின் லகுதுரித மோரிரண்டும்—தெரியலகு
துரிதலகு விரண்டு மான்விழியுங் கோலொன்றுந்
தருமதுவும் லட்சுமி தாளம் oo|ooo|o|oo| oo| (கஉரு)

ஒற்றைக் கையே யுரைக்கிற் பதாகை
மத்திரி பதாகை மற்றது கத்திரிகை
மன்னும் பிறையே மான வாரளம்
சுகதுண்டம் முட்டி நல்ல சிகரம்

* * * *
* * * *

முடிவிற் கையிவை முப்பது மூன்றின்
வடிவுஞ் செயலும் வழங்கு மினியே.

**End :**

கன்னி சுத்த தாளகசங்கீன்ற தாளம். இனம் பெற்று.........ன் கேட்டால் புனைந்த விரல் மூன்று மிரண்டேயிரண்டரையே மூன்றென...சாற்றும் கமலத் திலவி...ல்பு எது என்றால் கஞ்சத்தாள லக்கணம் வருமாறு.........றகு மிழ மிழொன்றென்றே கால் பொத் தொன்றரை விரல் களமுற வுளுந்து கண......ளை மாத் திரம் வார்க்க வலமால் கபித்த மாதித்தன் வட்டங் கமலை குமிழ்

குறிப்பு :

இந்நூலைப் பிரதிசெய்த 11 ஏடுகள் கடைசியில் கோக்கப்பட்டிருக்கின்றன. இருதலைப்பினும் சிதைந் திருக்கிறது. வெற்றேடுகள் 17 கோக்கப்பட்டுள்ளன.

---

633. No. 621 (*a*) தாள சமுத்திரம்
உரையுடன்.

ஏடுகள் 34; அபூர்த்தி Lines 4—5 in a page.

இது தாள லட்சணமும் பிரமாணமும் சாதி விவர மும் கால லட்சணமும் லய விபரமும் பிறவும் கூறுவது.

இதனை இயற்றியவர் பரத சூடாமணி என்பவர். இதில் செய்யுள் தோறும் பெரும்பாலும் சொக்கநாதர் பேர் காணப்படுதலின் இதனைச் சொக்கர் பரதத்தின் வழி நூலாக ஊகிக்கலாம். இது சிற்சில இடங்களில் சிதைந் துள்ளது. இதில் 57 வெண்பாக்கள் இருக்கின்றன. அச் சிடப்படவில்லை.

**Beginning :**

வேழமுகத்து விநாயகனைத் தொழ
வாழ்வு மிகுத்துவரும்

ஆளவருந் துரித திரியக்கண் ணுமலைவாய்த்
தாள சமுத்திர நூற்....................நாளுந்
தடத்தவள்த் தந்தத் தருண கிரணக்
கடக்கவளக் கைக்களிறே காப்பு.

திண்மை பெரிய திருவடிநா யன்மங்கை
...............இருங்கென் வளநாடன்—மண்மகள்சேர்
தோள்துணை வன்பர சூடா மணியுரைத்தான்
தாள சமுத்திரநூல் தான்.

தென்றல் வடிவுஞ் சிவனுர் திருவடிவு
மன்றல் வடிவு மதன் வடிவுங்—குன்ருத
வேயி னிசைவடிவும் வேதவடி வுங்காணி
லாயதா ளங்காண லாம்.

* * * *

எய்ந்தநெடுந் தாள மிரண்டெழுத்தின் சீர்பேர்கள்
சேந்த அளவுருவந் தெய்வங்கள்—வாய்ந்தகுணம்
பேர்பெறவே யேத்துபிர மாணங் கணஞ்சாதி
பேர்சதுர மேருப் பிறப்பு.

தாள மிரண்டெழுத்தின் றன்பெருமை தன்னைமிக
வாளகிரி சூழு மகிதலத்தோர்—கேளுந்
தகரவுருச் சொக்கர் தனியாளகரம்
பகரங்க யற்கணியார் பற்று.

என்பது தாளமென்கிற இரண்டெழுத்தில் தகாரச் சொரூபம் அழகிய சொக்கநாதர் ளகாரச் சொரூபம் அங் கயற்கண்ணியார். உபயச் சுரூபம் கூட்டுறவாலே தாள மென்று பெயராயிற்று.

வாய்ந்தகா லங்கிரிகை மான மிவைகூடி
ஆய்ந்து வரில்தாள மாமென்ருர்—பூங்கொடியே
கட்டுபெறுங் காலங் கணுதியொத்து கைக்கிரிகை
நட்டநடு மானமென நாட்டு.

என்பது, காலம் கிரிகை மானம் கூடித் தாள மென்று பெயராயிற்று. காலமென்பது கணுதிகளாக வருகிற காலவடிவின் பேர்கள். கிரிகையென்பது ஒத் துதல் ஒத்திச் சுழித்துத் தூக்குதல் இடம் வலம் மேல் கீழ் கைகாட்டல், மானமென்பது ஒத்து முதலாகிய கிரிகைகளுக்கு நடு நடு வருகிற சூனிய காலங்களாம் என்றவாறு.

**End :**

ஆன பலமார்க்க மாறு வகையாகு
மானமுயர் தெக்கணமே வார்த்திகமே—தேனனையாய்
சித்திரமே சித்ரதரஞ் சித்ரசமஞ் சேந்தயதி
சித்திரமா மென்றே தெளி.

என்பது மார்க்கபேத மாறு வகையாகும். அவையா வன தெக்ஷணம் வார்த்தீகம்

———

## 634. (*b*) சங்கீத ரத்ஞகர வகுப்பு.

Lines 4 in a page.

**Beginning :**

தேங்கமழ் துளபத் திருமா லடிதொழத்
தேங்கிய பரத முரைத்த வடநூற்
சேதியாற் றெரிந்துரைத்த செந்தமிழா திரைசெப்பில்
ஓதிய அங்க முபாங்க முரைத்திடில் பிரத்தியாங்கந்
தீதிலாச் சிரமுதற் பாதம் செப்பிடி லங்கமாறு
நீதிசே ருபாங்கமாறு நீள்பிரத் தியாங்கமாறு
சீர்மையாற் சிரத்தின் பேதத்தொரு பத்துமூன்று
காதடிக் கண்ணின் பேதங் கருதிடில் முப்பத்தாறு
சோதிசேர் சுவாச நிட்டை சொல்லுகி லொன்பதாகும்

* * * *

**End:**

வழிமுறை வட நூல் மொழியெழுகையும் இரண்டுட
[னிருபத்தொருகையு
மெழிற்கையாகிய நிறக்கையும் தொழிற்கையாகிய சர
[ளயந்தானும்
பொருட்கையாகிய தன தன பேதமுன்னறி நமஞ
[வகைக்கு இது
முன்னே விலக்கை முன்னூற் றெண்பத்தொன்பாம்.

---

## 635. (*c*) பூமிலட்சண வகுப்பு.

Lines 5 in a page.

**Beginning :**

அம்பிகை வேதனுடனே உதித்திடும் அண்டமெங்கும்
செம்பொன் வடிவம் சதுரம தாகும் சிறந்திடுமோ

உம்பருலகங்கள் பாதாளங் கீழெல்லை யுத்தநடு
இம்பருலகம் இதுவே புவியென் றியம்பு வரே.

அகோ தெப்படி யென்றால் அந்திர லோகம், சொற்கலோகம், தவலோகம், பிரம்ம லோகம், விஷ்ணு லோகம், தெய்வ லோகம், குமார லோகமு மாயிருக்கும். அந்தப் பிரம்மண்டத்துக்கு நடுவாகிய பூமி நூறு கோடி யோசினை விசாலமாயிருக்கும். சத்த துவீபாயி ருக்கும். அதுக்கு நடு நாகத்து விபு லட்சம் யோசனை அதுக்கு நடு மகாமேரு. அந்த மகா மேருவைச் சூழ நவகண்டம்.

* * * *

சாரதி பாடல் செய்ய சந்திரன் சதி தாளம் ஒத்தச்
சூரியன் மத்தளத்தைத் தூக்கியே தக்கினிற்க
பார்வதி யீசன் தாளில் பரிவுடன் போற்றி செய்யச்
சீரிய கரங்கள் தூக்கிச் செந்திருப் போலே நின்றாள்.

* * * *

**End :**

சூழுமலர் குழல் தோகை யனையாள்
நாடுதற்சனி முதலாய வற்திதம் ஆ பெட்டிதம்.

என்றது திரும்பிக் கும்பிட்டது. ஆரையென்றால்

தீதிலா மணியை நோக்கி செந்திரு வனத்தை நோக்கி
கோதிலா அரனை நோக்கிக் குருபரன் தன்னை நோக்கி
தீதிலா அட்டதிக்கும் திசையுடன் நவகோணங்கள்
பா……..த்தான—திரும்பிப் பரமனைக் கும்பிட்டாளே.

——

## 636. (*d*) அரங்கு.

Lines 4—5 in a page.

ஆடவேற் காளி தன்னை யமையு மென்றுஉமையுரைக்க
வாடி மிகத்தாலுடை தாரந்தனை வகுக்கத்
தேடுதமிட் சிங்கார சசீர முலை கச்சுடையும்
பாடலுடன் தான்வகுக்கப் பரதவிதமானதுவே.

---

## 637. (*e*) புட்பாஞ்சலி.

Lines 3 in a page.

பையவே வந்து நின்று பதாகைக் கை இருபால் தூக்கி
துய்ய புட்பாஞ்சலிக்குத் தொட்டுப்பொன் பூனீர் சூடத்
தெய்யென அஞ்சலித்துச் சென்னிமேற் கொடு
போயந்தத்
திரிபதா கை யாக்கிக் கமல வரதனை யைக் கொள்ளே.

---

## 638. (*f*) சக்கணி நிலை.

Lines 3—4 in a page.

**Beginning :**

ஆரியக் கூத்துத் துலுக்கு துலுக்கச்சி அங்கதற்பின்
சீரியதாகுந் தரவேசி சக்கணி சேர்ந்த நிலை
பேரியல் தானஞ் சதிசிந்து ராகம் பிறகு மண்டி
கூரிய ஆயுதம் முன்னோர் சொல்நூல் வழி கூறுவமே.

**End :**

வகுத்துச் சொல்லாயுதங் குஞ்சந் தடி தப்பு வண்சிறகு
மிகுத்த சிங்காடி போந்தகைக் கோபரிசையும் வெட்டு
கைவான்
பகித்திடு னோர் சங்கடற் சமுதாடு படைக்கல மாய்த்
தொகுத்து நவின்றனர் முன்பரதாகமஞ் சொல்பவரே.

### 639. (*g*) நூற்றெட்டுத் தாளம்.

Lines 4 in a page.

**Beginning :**

சச்ச புடமிரு தனுவுடனொருகோல்
வைச்ச பின் புலுதம் மாத்திரை யொன்றே. | | |

சாச புட மிருகலை நடுவே
பேச விருகோல் பெறுமாத் திரையே. | || |

**End :**

உட்கட் டிதமே வில்லொரு மூன் ருஞ்
சொற்கோட் புலவீர் சொல்லாறு மாத்திரை. | | |

---

## XV. நாடகம்.

---

### 640. No. 170 (*a*) பாண்டி கேளிவிலாச நாடகம்.

ஏடுகள் 56 ; Lines 3—5 in a page.

இது பாண்டியன் ஒருவனது சரிதத்தை நாடக ரூபமாகக் கூறுவது. தஞ்சை நகரை அரசாட்சி செய்த சிவாஜி மகாராஜா விருப்பத்திற் கிணங்கி நாராயண கவி என்பவராற் செய்யப்பட்டது. இது அச்சிடப்பட்டுள்ளது.

**Beginning :**

நீர்மேவு வையைநதி வளம்பெருகிச் செந்நெல் மிக
நிறைந் தெந்நாளும்
சீர்மேவு பாண்டியதே சந்தனிலே மதுரையிற் செங்
கோல்நடாத்தி

தார்மேவு பாண்டியன்றன் லீலா விலாசமதைச் சாற்று
தற்கு
ஏர்மேவிச் சுகம்பெருகச் சித்திவிநா யகன்பதத்தை
யிறைஞ்சுவோமே

கதா சங்கிரகம்.

திருவளர்ந் தோங்கிச் செழித்துமே மலர்கள்

* * * *

பாண்டிய ராஜன் பட்சமா யின்பம்
பூண்டுவாழ்ந் தேமகிழ் பொங்குமிச் சரித்திரம்
ஆழிசூழ்ந் திலகும் அவனியிற் சிறந்த
சோழநா டதனைச் சுகமுடன் புரக்கும்
சத்திர பதியாஞ் சீருவ பூமன்
எத்திசை யோரு மிசைக்குங் கீர்த்தியான்
போசல குலமது புகழுடன் விளங்க
வாசவ வைபவன் மன்னர் சிகாமணி
சித்தச னெனவே சேயிழை மாதர்
நத்தியே துடரும் நன்மையாம் அழகன்
சிந்தா மணியுந் தேவர் கற்பகமும்
புந்தியில் நாணப் புலவர்கட் கெல்லாம்
பொன்னும் மணியும் பொருந்தவே கொடுத்து
எந்நாளும் விஜயம் எய்திடுந் தீரன்
செந்திரு மார்பன் சிவாஜீந்திர பூபதி
யிந்தநல் விலாச மியம்புவீ ரென்ன
பிள்ளைசொல் மழலையைப் பெற்றவர் கேட்டு
வுள்ளத்தி லின்ப முற்றிடல் போல
இத்தமிழ்க் கவிதை யியம்பிடக் கேட்டு
சித்த மகிழுமவர் சீருள்ள கவிகள்
என்பதால் நாராயண கவி யியம்பிய
தன்புட னனைவரும் ஆனந்த முறவே.

**End :**

சிவகங்கை செல்வ ரகுநாதன் நல்ல
செயங்கொண்ட பெரிய வுடையப்ப தேவன்

ஆருரு வட்டகை வீரன் துரை
அசையாத வுய்யப்பன் வீரகோடாலி

இப்படி முந்நூறு சேர்வை அவ
ரெல்லோரும் தளகர்த்த ருடனே வருக

மகாராஜன் பாண்டிய துரை வந்து நல்ல
மங்களமாகவே பூஞ்சோலை தன்னில்

வாச புஷ்பங்களைத் தரிந்து துரை
மனது மகிழ்ந் தானந்தமா......க்கின்றார்.

— —

641. No. 601 புரூரவச் சக்கரவர்த்தி நாடகம்.
ஏடுகள் 27; அபூர்த்தி Lines 5 in a page.

புரூரவன் சந்திர வம்சத்து அரசருள் முதல்வன். இவன் மனைவி மக்களை இழந்து பலவிதமான துன்பங்களை அடைந்து பிறகு அரசாட்சி பெற்றவன். இவன் சரிதம் துரியோதனனோடு சூதாடி நாடிழந்து காட்டில் வசித்திருந்த பாண்டவர்களுக்கு அங்கு வந்த வேத வியாசரால் கூறப்பட்டது. அச்சரித்திரமே இங்கு நாடகமாகக் கூறப்பட்டுள்ளது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. அச்சிட்டிருக்கிறது.

**Beginning :**

பிள்ளையார் வருகிற தரு.

துசாவந்தி.

பல்லவி.

கணபதியே சரணம் செயாமகா
கணபதியே சரணம்.

அநுபல்லவி.

கணபதியே அடியார்க் கதியே அமிர்த குணபதியே
வல்லபைக் கொருபதியாய் வந்தருள். கணபதியே.

சரணம்.

வானவர் பணிவோனே முகில் வண்ணன்
வனமாலி மருகோனே
தீனதயாபரனே செவ்வேள் சகோதரனே
ஆனைமுகத்தோனே அக்ஞானந் தவிர்த்தோனே.
கணபதியே.

**End :**

பாலர்கள் பசித்து மெத்த பரதவித் தலறுகின்ற
மாலையைப் போலே வாடுமக்களைப் பார்த்து என்றன்
சீலமும் வீறுஞ் சொம்பொன் சிறப்பையும் போக்க வந்த
காலமிப்படியோவென்று கணவனைப் பார்த்துச்சொல்
வாள்

(வசனம்) சிற்பிரபை இரண்டு பிள்ளைகளும் பசியால் வாடியதைப் பார்த்து எனது பாக்கியம் போனது மல்லாமல் காலமிப்படி செய்யுமோ வென்று கணவனைப் பார்த்து விசனப்படுகிருள்.

குறிப்பு :

இதில் 8 வெற்றேடுகள் கடைசியில் கோக்கப் பட்டுள்ளன.

---

642. No. 603 அரிச்சந்திர நாடகம்.
ஏடுகள் 52; அபூர்த்தி Lines 4—7 in a page.

இது, அரிச்சந்திரன் சரித்திரம். நாடக ரூபமாகப் பாடப்பட்டுள்ளது. இடையிடையே கிரந்த எழுத்துக் களும்விரவி வர எழுதப்பட்டிருக்கிறது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. நடை மிகச் சாதாரணம். அச் சிடப்படவில்லை.

**Beginning :**

மாடமா ளிகைகள்சூழ வாழ்நக ரயோத்தி தன்னில்
தேடரிச் சந்திர ராஜன் சீர்பெறு கதையை யென்று
நாடக மாகச் சொன்னே ஞவிலோர் குற்றந் தன்னைப்
பாடின தமிழை யிந்தப் பாவலர் பொறுத்திடிரே.

(தரு)

மாடை நவமணி வச்சிரம் விளங்கும்
மகுடமணி யொளிக ளெழு வானவர் துலங்க
தேடுபுகழ் முப்பத்து முக்கோடி தேவருடன்
தேவேந்திரன் வந்து கொலு விருந்தானே

கின்னரர்கள் கிம்புருடர் கெந்தருவர் பாட
கிரண மொடு அரிவையர்கள் பரத வகையாட
தென்னுரையு முப்பத்து முக்கோடி தேவர்தொழ
தேவேந்திரன் வந்து கொலு விருந்தானே.

**End :**

பாரிழந்தார் தாரிழந்தார் பாக்கியங்கள் தானிழந்தார்
ஊரிழந்தார் மைந்தனென்றே கடியாம விருந்தலேயே
சீரிழந்தார் பாரிழந்தார் சிங்காதனந் தானிழந்தார்
காட்டில் விறகொடித்துக் கட்டிடுவாய் தற்பைதன்னில்
வீட்டில் வரமுன்பின் விதிவசம் பட்டாயோ.

மரித்த மகனை வாரியெடுத்து மசானக்கரையி......போய்
ஒருத்தியாக இரவில் விறகு ஒடித்துக் கடுகி யடுக்கினள்
ஆரடி மானடி சவமும் கொண்டு அர்த்ல மகாராத்திரி

குறிப்பு :

இதில், பாம்பு கடித்து இறந்த மகனைச் சந்திரமதி எடுத்துக் கொண்டு மயானத்தை அடைந்து விறகடுக்கி அதன் மீது அவனை வைத்தது வரைக்கும் உள்ளது.

---

643. No. 604 அரிச்சந்திர நாடகம்.

ஏடுகள் 28. பூர்த்தி Lines 5—6 in a page.

இதுவும் அரிச்சந்திர நாடகமெனினும் 603-ம் நம்பரினும் வேருனது. இதனை இயற்றியவர் வீரை லிங்க பாரதி என்பவர் மறையவற் குலத்திற் பிறந்தவர். ஏடுகளில் சிற்சில இடங்களில் பூச்சி அரித்துள்ளது. 141 செய்யுட்களை உடையது. அச்சிடப்படவில்லை.

**Beginning :**

மதிவளர் குடையான் செங்கோல் மனுவென நடத்தி வாய்மை
அதிசெயம் படைத்த கோமான் அரிச்சந்திரன் கதையைப் பாடத்
துதிசெயப் பொருளு மீய்ந்து தொண்டர் வெவ்வினையுந் தீர்த்துக்
கதிதரும் விட்டவாசல் கணபதி காப்புத்தானே. (1)

அன்னபார் புரக்கும் வேந்த னரிச்சந்திர நாடகத்தைச்
சொன்ன பாவலரநேகர் சொல்லினு மதுரப் பாடல்
மன்ன பாரதி செஞ் சொல்லால் வடித்துரை யென்ன வீரை
பன்னுமா மறையோன் லிங்க பாரதி பாடினனே. (3)

**End :**

இந்திரன் சபையில் சொன்ன இருடிசோ தனையாலுந்தன்
சந்திரமதியைக் கொண்டோன் தானுமக் கினியேகண்டாய்
வந்துனைக் கொண்டோனீசன் மறலிநீ காக்கு மீமஞ்
செந்தழல் யாக சாலை திருமுடி சூடுவாயே. (140)

அடிமறு மன்னர் போற்று மரிச்சந்திர நாடகத்தை
முடிவுறக் கற்ருேர் வாழி மொழிகதை கேட்டோர் வாழி
வடிதமிழ்ப் புல்வோர் வாழி மன்னபாரதியும் வாழி
படி புகழ் வீரை லிங்க பாரதி வாழி தானே. (141)

**Colophon:**

முத்தய்யன் துணே.

ஹரி ஓம் நன்ருக குருவாழ்க குருவே துணே.

எழுத்து முத்து கிஷணப்பன்

---

644. No. 605 அரிச்சந்திர நாடகம்.

ஏடுகள் 15; அபூர்த்தி Lines 5—7 in a page.

இது, 604-ம் நம்பர் போன்றது. முதல் ஏட்டின் தலேப்பில் அரிச்சந்திரன் கதை யென்றெழுதப்பட்டுள்ளது. இதில் 74 செய்யுட்களிருக்கிறன.

---

645. No. 616 சிறுத்தொண்டர் நாடகம்.

ஏடுகள் 20; அபூர்த்தி Lines 5—7 in a page.

இது, சிவனடியார் அறுபத்து மூவரில் ஒருவராகிய சிறுத்தொண்டரது சரித்திரத்தை நாடக ரூபமாகக் கூறுவது. இந்நூல் நடையை நோக்கும்போது 604-ம் நம்பரை இயற்றியவரே இதனேச் செய்தவராக இருக்கலாம் எனத்தோற்றுகிறது. ஏடுகளின் ஓரங்கள் எலி கடித்துச் சிதைந்துள்ளன. கடைசி ஏடு முரிந்திருக்கிறது. அச்சிட்டிருப்பதாக தெரியவில்லே.

**Beginning:**

மாதவம் புரியுஞ் சைவ மறையவர் திலதமாகும்
தீதிலா குணத்தான் மிக்க சிறுத்தொண்டன் கதையைப் பாட
.......................................................... ரீன்ற
காதலன் விட்டவாசல் கணபதி காப்புத் தானே.

**End :**

இடபவாகனத்தி லேறி எம்பிரான் தோன்றினனே.......
மன்று புலம்புமென் அஞ்சலென மீளவிடையேறி
பொன்னின் மணி வீதி யிடை
னன்னுடைய பதமு மின்ப முறவித்தே சிலம்போசை
யஞ்ச லஞ்ச லென
டியும் புனையும் வெண்ணீறு மழுமானு மீரிருவரைப்புயமு
மேழை
யடியேன் யினிமீள விடுமோ காண வந்தெரிங் கயமுகா
சூரனை.

---

## 646. No 600. மதன சுந்தர பிரசாத சந்தான விலாசம்.

ஏடுகள் 18 பூர்த்தி Lines 3—5 in a page.

இது, தஞ்சையில் அரசுபுரிந்த ஒரு சோழன் தன் மக்கள் நோய்ற்ற வாழ்வும் குறைவற்ற செல்வத்துடன் வாழ்ந்திருக்க வேண்டி மதன சுந்தரேசுவரரை வழி பட்டு வரம் பெற்றதாகக் கூறும் நாடகம். இதனைச் செய்தவர் அருணசலகவி என்பவர். இது தஞ்சை நகரி லிருந்த மகராட்டிர அரசர் சிவாஜியின் உத்திரவின் பேரில் இயற்றியதாக 'சித்த மகிழ்ந்து சிவாஜீராஜேந்திரன், உத்திரவுபடி யுலகினி லோங்கிட, அருணசலக்கவி அன் புடனுரைத்த திருவளர் நாடகம்' என்னும் அடிகளால் விளங்குகின்றது. சிவாஜியின் காலம் கி. பி. 1833 முதல் 1855 வரை யாதலால் இவ்விலாசம் பத்தொன்ப தாம் நூற்றுண்டிற் செய்யப்பட்டதாகும். அச்சிடப் பட்டுள்ளது.

**Beginning :**

சீர்மேவு மதன சுந்தரேஸ்வரர் தன் கிருபையினல்
ஜெயப்பிரதாபன்
தார்மேவு கீர்த்திவான் சோழராஜன் சந்தான பாக்கியங்
கள் தழைத்தே யோங்கும்
ஏர்மேவு சரித்திரத்துக்கன்பதாக எந்நாளும் அருள்
செயும் ஈஸ்வரியாள் பெற்ற
கார்மேவு மும்மதஞ் சேர் நாதனுன கணபதியும் பட்ச
முடன் காப்புத்தானே.

* * * *

நிரந்தர மாக நிரைந்துறைழ்ந் திருக்க
வரந்தரு வாயென வணங்கிய போது
மதனசுந்த ரேஸ்வரர் மகிழ்ந்திந்த வரங்கள்
இதமுட னருளிய வின்பவிஸ் தரிப்பை
மன்னவர் மன்னன் மணிமுடி தரித்தோன்
போச குலத்தில் புகழுட னுதித்த
ராச சரபேந்திர ரமணிய பாலன்
சித்த மகிழ்ந்து சிவாஜீ ராஜேந்திரன்
உத்திரவுப்படி யுலகினி லோங்கிட
அருணு சலக்கவி அன்புட னுரைத்த
திருவளர் நாடகம் செழிக்கவே வாழி.

**End :**

சார்வபூ மேந்திரனே நீர் செய்த பக்திக்கு வுகந்து சகல வரங்களும் அருள் புரிந்தோம் நீயும் உன் மனைவியரும் புத்திரரும் நித்தியானந்தமாய் சந்தத சுகத்துடனே தீர்க்காயுசாய் சித்திகளெல்லாம் பலித்து மங்களமும் ஜெயமும் மகிழ்ச்சியும் கீர்த்தியும் கல்யாண சுபங்களும் குலவிர்த்தியும் நோயற்ற வாழ்வும் குறைவற்ற செல்வமுமாய் செங்கோல் நடத்திவைத்து சகல சாம்பிராச்சியமும் ராஜியாதி பத்தியங்களும் பெறுக ஒன்னலர் பணியும்படியாய் ஜெய சந்தோஷத்துடனே வாழ்வீர்களாக.

குறிப்பு :

இதில், கழற்சிக்காய் விளையாட்டு, யானைப்பந்து, குதிரைப்பந்து, கிட்டிப்பந்து, சில்லாட்டம் உப்புக் கோடு, கொண்டான் முதலிய சிறுவர் விளையாட்டுக்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

---

647. No. 610. சாரங்கதர நாடகம்.

ஏடுகள் 32 ; அபூர்த்தி Lines 5 in a page.

இது, இராச மகேந்திரபுரத்தரசனாகிய இராச நரேந்திரன் தன் மூத்த மனைவியாகிய ரத்தினாங்கியிடம் பிறந்த சாரங்கதரனை தனது இளைய மனைவியாகிய சித்திராங்கி காதலித்துப் பலவாறு முயன்றும் அவன் இணங்காமையால், அவள் தன்னை பலவந்தஞ் செய்தானெனப் பொய்க் குற்றஞ் சாட்டி அவனைக் காட்டில் ஓட்டிக் கைகால்களை அறுப்பிக்க, அவன் ஒரு பெரியவரது அருளால் வெட்டுண்ட உறுப்புக்கள் வளரப்பெற்று இராச்சியத்தை அடைந்து வாழ்ந்த வரலாற்றைக் கூறுவது.

**Beginning:**

...............................................செய்தநற்றவத்தால் வந்த
தாரணி புகழுங் கீர்த்திச் சாரங்கன் கதையைப் பாட
வாரணி முலையாள் செம்பொன் ...................................
......................ன செல்வக் கணபதி காப்புத் தானே.

* * * *

சொல்லுவ தேது கேளாய் சுமுகசா ரங்க வேளே
வல்லவர் புவியி லென்னை வஞ்சகஞ் செய்வா ரில்லை
வில்லினு லுயர்ந்த மாரன் விடுகணைக் கிலக்கா யுன்றல்
நல்லுயிர் வீணே போமே நயந்திடாய் நயந்திடாயே.

* * * *

நச்செனும் விழியார் வேளே நரேந்திர வேந்தே கேளாய்
மெச்சுமுன் மகன்சா ரங்கன் மேல்விழுந்துடை நெகிழ்த்
தான்
கச்சையும் புருவு மிந்தக் கத்தியு மரந்து போனுன்
நிச்சய மினி நானுவி நீக்குவேன் நீக்கு வேனே.

**End :**

இந்தநல் வகைக ளார்ப்ப எழில்பெறு நரேந்திர ராசன்
அந்தமா வனத்திற் சென்று அரசனு மகனைக் கண்டு
உந்தனுக் கொப்பாரில்லை உண்மைசா ரங்கா எந்தன்
மைந்தனே யென்று நரேந்திரன் வாழ்த்தியே கட்டிக்
கொண்டான்.

குறிப்பு :

இதில் வெட்டுண்ட கால் கைகள் வளரப்பெற்ற தைக் கேள்வியுற்ற நரேந்திரன் கானகமடைந்து சாரங்க தரனைத்தழுவிக்கொண்டது வரையும் இருக்கின்றது.

---

648. No. 611 சாரங்கதர நாடகம்.

ஏடுகள் 27 ; பூர்த்தி Lines 5—7 in a page.

இது முற்பிரதி போன்றது. இதில் வெட்டுண்ட அவயவங்கள் வளரப்பெற்ற சாரங்கதரனை நகரத்துக்

கழைத்துச் சென்று நரேந்திரன் சித்திராங்கியை ஆக்கினை செய்து காட்டில் துரத்திவிட்டு அவனுக்கு அரசாட்சியைக் கொடுத்துச்சுகமாக வாழ்ந்திருந்த வரையும் கூறப்பட்டுள்ளது.

---

649. No. 612 சாரங்கதர நாடகம்.

ஏடுகள் 34 ; பூர்த்தி Lines 5—6 in a page.

இதில் 611-ம் நம்பரைப்போல் முழுவது மிருக்கிறது. ஆனால் முதல் 2 ஏடுகள் இல்லை.

---

